

    

ஸ்ரீ: ॥

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ।

# ஸ்ரீ ரங்கநாதபாதுகாஸஹஸ்ர

## ஸடிப்பணீ ப்ரதிபதார்த்தாநுவாதஸஹித: ॥



(ச்லோக) உதித்விஷஸ்தே ரங்கேந்த்ரபாதாவநி பஹிர்மணீந் । அந்தர்மணிரவம் ச்ருத்வா மந்யே ரோமாஞ்சிதாக்ருதீந் ॥

ஹே ரங்கேந்த்ரபாதாவநி-ஸ்ரீரங்கநாதனுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! உத்-நீட்டிக்கொண்டிருக்கிற, த்விஷ:-காந்தியையுடைத்தாயிருக்கிற, தே-உன்னுடைய, பஹிர்மணீந்-வெளியிலிருக்கிறரத்னங்களை, அந்தர்மணி-உள்ளேயிருக்கிறரத்நங்களுடைய, ரவம்-சப்தத்தை, ச்ருத்வா-கேட்டு, ரோமாஞ்சித-மயிர்க்கூச்சலடைந்த, ஆக்ருதீந்-சரீரத்தையுடையனவாக, மந்யே-எண்ணுகின்றேன்.

(கருத்து) ஏபாதுகையே! உன்மேலிழைத்திருக்கிற ரத்தினங்களுடைய காந்தியானது கம்பிகம்பியாகத்தெரிகிறது. அதைப்பார்த்தால், உன் குமிழிற்குள் சிலரத்னங்கள் போட்டிருக்கிறது அதின் சப்தத்தைக்கேட்டு மேல்ரத்நங்களுக்கு மயிர்க்கூச்சல் உண்டாயிருக்கின்றனபோலிருக்கிறதென்று நான்நினைக்கிறேன். பாதுகையென்று ஆழ்வாரையும் ரத்னமென்பது அவர் பாசுரத்தையும், காந்தியென்பது அதின் தாத்பரியத்தையும் ஸாதிக்கிறார். ஆழ்வார் பாசுரங்களை அநுஸந்திக்கிறகாலத்தில் மயிர்க்கூச்சலடைகிறார். (1)

(சஅஉ) விஜயஸ்வ மணிபாதுகே த்வம் விபதி
காலே மயி ரஸ்மிஜாலை: | ஸமீபதாஸ்தக கிங்
கராணாம் விஹ்வலநாத்யுச்ச்ரிதாவிசேஷாந் ||

மணிபாதுகே-பெருமாளுடைய, மணிபாதுகே-வாராய் கல்வி
ழைத்த பாதுகையே! த்வம்-நீ, மயி-நான், விபதி காலே-ஆபத்தை
யடைந்தபொழுது, (அதாவது-செத்துப்போகிறகாலத்தில்) ஸமீ
பதாம்-கிட்டவந்திருக்கிற, கிங்கராணாம்-யமனுடையவேலைக்
காரர்களுக்கு, விஹ்வலநாத்-பயமுறுத்துகின்ற, உச்ச்ரிதாவி
சேஷாந்-உயர்ந்தகொடிப்பிரம்புகளை, ரஸ்மிஜாலை:-ரத்னகிரண
ங்களுடைய கூட்டங்களாலே, விஜயஸ்வ-உண்டுபண்ணவேண்டும்.

(கருத்து) ஏபாதுகையே! நான்மரணமாகுங்காலத்தில் யமதூ
தர்கள் என்னிடம் வருவார்கள். அச்சமயத்தில் நீ எழுந்தருளி
ஸேவை ஸாதிக்கவேண்டும், உன்னுடைய ரத்னகிரணங்களைப்பார்
த்து பிரம்புகள் என்று நினைத்து அவர்கள் ஓடிப்போகவேண்டும்.
கடைசிகாலத்தில் ஆசாரியர்களும் பெருமாளும் எனக்கு ஸேவை
ஸாதிக்கவேண்டும். (2)

(சஅரு) ரங்கபதிபாதாவநி மத்யநாட்யா மூர்த்தந்யயா நி
ஷ்க்ரமதோ முமுக்ஷோ: | ஸூர்யஸ்தலோகாக்ரமண
ப்ரலம்பம் ரத்நாநி தே ரஸ்மிகணம் ஸ்ருஜந்தி ||

ஹே ரங்கபதிபாதாவநி-பெருமாளுடைய திருவடியைக்
காப்பாற்றுகிற பாதுகையே! தே-உன்னுடைய, ரத்நாநி-இரத்னங்
கள், மூர்த்தந்யயா-தலையிலிருக்கிற, மத்யநாட்யா-நடுநாடியினு
லே, நிஷ்க்ரமத:-வெளிக்கிளம்பாநின்றிருக்கிற, முமுக்ஷோ:-கர்
மத்தை அடியோடு தொலைக்கவேணுமென்று எண்ணமுடையவனுக்கு
(பரமபதத்தை அடையவேணுமென்று ஆசையுள்ளவனுக்கு) ஸூ
ர்யஸ்தலோகாக்ர-ப்ரம்மலோகம்வரைக்கும், அவலம்பநாய-
பிடிப்புக்காக, ரஸ்மி-கிரணங்களாகிற, ரஸ்மி-கயிறுகளினுடைய,
கணம்-கூட்டத்தை, ஸ்ருஜந்தி-உண்டுபண்ணுகின்றன.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற ரத்
தினங்களுடைய காந்திகள் சூரியமண்டலம்வரையில் கம்பியாகப்

போகின்றன. அவைகளைப்பார்த்தால் மனுஷியனுடைய ஹிருதயத்தில் அனேகநரம்புகள் இருக்கின்றனவாம். நாலுபக்கத்திலும் சில இருக்கின்றனவாம். ஹிருதயத்தின் அடியில் சில தொங்குகின்றனவாம். ஹிருதயத்தின் நடுவிலிருந்து உச்சந்தலைக்கு ஒருநரம்பு போகின்றதாம்; அதனால்போனால்தான் பரமபதத்துக்குப் போகலாமாம். அதினால் போகிறவனுக்கு பிர்ம்மலோகம்வரையில் பிடிப்பதற்குக் கயிறுமாதிரி இருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களில் ஸாதித்திருக்கிற அர்த்தங்களை நம்பினவர்கள் பரமபதத்திற்குப் போகிறார்கள். (3)

(சஅச) அஸூர்யபேத்யாம் ரஜநீம் ப்ரஜாநாம் ரத்நரோசிஷைவ
நிவாரயந்தீ । அநாவிலவ்ருத்திர் மணிபாத
ரக்ஷே முரத்விஷோ மூர்த்திமதீ தயா த்வம் ॥

மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! அஸூர்யபேத்யாம்-சூரியனால் போக்கடிக்கமுடியாமலிருக்கிற, (நம்முடைய ஆசாரியர்களைத்தவிர வேறு ஒருவரால் போக்கடிக்கமுடியாமலிருக்கிற) ப்ரஜாநாம்-ஜனங்களுடைய, ரஜநீம்-அஞ்ஞானமாகிற ராத்திரியை, ரத்நரோசிஷைவ-ரத்னங்களின்காந்தியினாலேயே, (உன்னையவர்கள் பார்த்தமாத்திரத்தினாலேயே, நீ அவர்களைப்பார்த்தமாத்திரத்தினாலேயே) நிவாரயந்தீ-போக்கடியாநின்றிருக்கிற, அநாவில-வீண் இல்லாமலிருக்கிற, வ்ருத்தி:-வியாபாரத்தைஉடைய, த்வம்-நீ, முரத்விஷ:-முரன்என்கிற அஸுரனுக்குச்சத்துருவான பெருமாளுடைய, மூர்த்திமதீ-சரீரமுள்ளதான, தயா-தயையாக, அஸி-ஆகிறாய்.

(கருத்து) வபாதுகையே! ஜனங்களுக்கு இந்தஉடம்பில் நித்யமாய் ஜீவன் என்று ஒன்றிருக்கிறது என்றும் அதற்கு யஜமானனாக பெருமாள் இருக்கிறார் என்றும் இவைமுதலான ஸங்கதிகள் தெரியவில்லை. இவைகள் சூரியன் புறப்பட்டமாத்திரத்தினால் தெரியாது. நல்ல ஆசாரியர்களுடைய அனுக்கிரஹத்தாலும் உபதேசத்தாலும்தான் தெரியும். அப்படிப்பட்ட அஞ்ஞானம் உன்னை அவர்கள் பார்த்தாலும் ஸரி அவர்களை நீ கடாக்ஷித்தாலும் ஸரி (உன்னுடைய ரத்னகாந்தி அவர்களின்மேல் பட்டாலும் ஸரி) அதி

னால் போய்விடுகிறது. அப்படிப்பட்ட உன்னைப்பார்த்தால் ஸகல காரியத்தையும் ஸாதிக்கக்கூடிய தடங்கல் இல்லாத பெருமாளுடைய தயையே சரீரத்தை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறதுபோலிருக்கிறது. ஆழ்வார் ஆசாரியர்கள் பெருமாளுடைய தயையின் அவதாரம். அவர்களை ப்ரீதியோடு நினைத்தமாத்திரத்தில் ஸகல அஞ்ஞானமும் போய்விடும். (4)

(சஅரு) ரத்நபாதாவநி தாவகாநாம் ரத்நாவளீநாம்
ப்ரபாதயஃ பாந்தி । ச்ரேயஃபலாநாம் ச்ருதிவ
ல்லரீணாம் ப்ரவாளபாஜ இவ நிஷ்ப்ரத்யூஹாயாஃ ॥

ரத்நபாதாவநி-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாவநி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! தாவகாநாம்-உன்னுடைய, ரத்நாவளீநாம்-ரத்னக்கற்களினுடைய, ப்ரபாதயஃ-காந்திகள், ச்ரேயஃ-ஸகலக்ஷேமங்களையும், பலாநாம்-பழமாக உடைத்தாயிருக்கிற, ச்ருதி-வேதமாகிற, வல்லரீணாம்-கொடிகளுக்கு, நிஷ்ப்ரத்யூஹாயாஃ-அழிவில்லாமலிருக்கிற, ப்ரவாளபாஜ இவ-கொழுகொம்புகள்போல, பாந்தி-விளங்குகின்றன.

(கருத்து) ஏபாதுகையே! உன்னுடைய ரத்னகாந்திகள் நீட்டிக்கொண்டிருக்கின்றன. அவைகளைப்பார்த்தால் தர்ம்மார்த்தகாமமோக்ஷம் என்கிற நான்குபலன்களையும் கொடுக்கிற வேதமாகிற கொடிகளுக்கு கொழுகொம்புகள்மாதிரி இருக்கின்றன. லோகத்தில் அவரை, புடல்முதலிய பயிர் கொடிகள் பந்தலில் ஏறுவதற்கு ஒரு கம்பு சொருகுவதுவழக்கம். அதற்குக் கொழுகொம்பு என்று பெயர். ஆழ்வார் ஸாதித்த திருவாய்மொழியாலே வேதங்களின் அர்த்தங்கள் தெரிகின்றன. (5)

(சஅசு) கலாவி பாம்ஸஃ கநகாபகாயாஃ
பாவநே ஸைகத பாந்திநே ஸமாஜேஃ ।
ஸவைபவத்வத்ருஷ்ணிபாதுகே தவம்
ஸம்பாதயத்யேவ பதம் கவேரஃ வேஷஃ ॥

சௌரிபாதுகே-வாராய்பாதுகையே! கநகாபகாயாஃ-காவேரியினுடைய, பாவநே-பரிசுத்தமான, பாஸிநே-மணல்

ர்ன்றிலே அதாவது ஸ்ரீரங்கவிமானத்தில், ஸலீலம்-விளையாட்டாடு, ஶயாநே:-படுத்துக்கொண்டிருக்கிற, கஸ்யாபி-இன்னார் என்று சொல்லமுடியாத, பும்ஸ:-புருஷனை ரங்கனாதனுடைய, ஸமீபவர்த்தி:-ஸமீபத்தில் இருப்பை உடைத்தாயிருக்கிற, த்வம்-நீ, ஸ்வஸ:-தன்னுடைய, கரை:-கிரணங்களாகிற கைகளாலே, பதம்-திருவடியை, ஸம்வாஹயந்தீவ-பிடிக்கிறவள்போல, அஸி-இருக்கிறாய்.

(கருத்து) ஏபாதுகையே! ஸ்ரீரங்கவிமானத்தில் பெருமாள் சயனித்துக்கொண்டிருக்கிறார். அவர் திருவடிவாரத்தில் நீ இருக்கிறாய். உன்னுடைய ரத்னகாந்தி அடிக்கிறது. அதைப்பார்த்தால் அந்த கிரணங்களாகிற கைகளாலே அவர் திருவடியைப் பிடிக்கிறாய்போலிருக்கிறது. (6)

(௬அஎ) தித்ருக்ஷமாணஸ்ய பரம் நிதாநம் ஸ்நேஹாந்விதே
யோகத்ஶாவிஶேஷே। ஸம்வித்ப்ரதீபம் மணிபாது
ரக்ஷ ஸம்துக்ஷயந்தீவ மரீசயஸ்தே ॥

மணிபாதுரக்ஷே-வாராய் கல்விழைத்தபாதுகையே! ஸ்நேஹாந்விதே-ப்ரீதியோடுகூடிக்கொண்டிருக்கிற, யோகதஶாவிஶேஷே-உயர்ந்ததான த்யானம்பண்ணுகிறஸமயத்தில், பரம்-ரொம்ப உயர்ந்ததான, நிதானம்-பெருமாளாகிறபுதையலே, தித்ருக்ஷமாணஸ்ய-பார்க்கவேணுமென்று ஆசைப்பட்டவனுடைய, ஸம்வித்-ஞ்ஜானமாகிற, ப்ரதீபம்-நல்லவிளக்கை, தே-உன்னுடைய, மரீசய:-காந்திகள், ஸந்துக்ஷயந்தீவ-தூண்டிவிடுகின்றனபோல.

(கருத்து) ஏபாதுகையே! ஒருவன் மிகுந்தஆசையோடு பெருமாளை த்யானம் பண்ணிப்பார்க்கவேணுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறான். அவனுடைய பார்ப்பதற்கு உதவியான ஞ்ஜானமாகிறவிளக்கைதூண்டிக்கொண்டிருக்கிற உன்னுடையரத்னகாந்திகள் தூண்டிவிடுகின்றனபோலிருக்கிறது. பகவானைப்பார்க்க வேணுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறவனுக்கு ஆழ்வார் ஸாதித்த திருவாய்மொழியாலே நல்ல ஞ்ஜானமுண்டாகி சீக்கிரத்தில் ஸேவை உண்டாகிறது. (7)

(௬அஅ) ஸமாயிஸாஜாம் தநுதே கஷீயா ரங்கேஶபாதா வநி ரத்நபங்க்திः । ஸ்தாநம் ப்ரயாதும் தமஸः பரம் தத்தீபக்ருத்யம் ப்ரபயா மஹத்யா ॥

ரங்கேஶ-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாவநி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே, த்வதீயா-உன்னுடையதான, ரத்நபங்க்திः-ரத்னங்களுடைய வரிசையானது, மஹத்யா-ரொம்பஉயர்ந்ததான, ப்ரபயா-காந்தியாலே, ஸமாயிஸாஜாம்-த்யாநத்தை அடைந்தவர்களுக்கு, தமஸः பரம்-ப்ரகிருதிக்கு அப்புறமிருக்கிற, தத்-ப்ரஸித்தமான, ஸ்தாநம்-பரமபதத்தை, ப்ரயாதும்-அடைவதற்கு, தீபக்ருத்யம்-தீவட்டியினுடைய காரியத்தை, தநுதே-பண்ணுகிறது.

(கருத்து) ஏபாதுகையே! உன்மேலிழைத்திருக்கிற ரத்னங்களினுடைய காந்தி பெரியவெளிச்சம்மாதிரி இருக்கிறது. அதைப்பார்த்தால் த்யாநம்பண்ணி பரமபதத்தை அடையவேணுமென்றிருக்கிறவர்களுக்கு ப்ரகிருதிமண்டலம்இருட்டாகஇருப்பதாலே நீ பெரியவெளிச்சம் காண்பிக்கிருய்போலிருக்கிறது. இருள்தருமாஞாலம் என்கிறபடி இந்த ப்ரகிருதிமண்டலம் ஸகலஜனங்களுக்கும் வித்வான் முட்டாள்முதலான தாரதம்மியமில்லாமல் நல்லது பொல்லாது தெரியாமல் பண்ணுகிறபடியாலே ஆழ்வாராசாரியர்கள் பாசுரங்களைக்கொண்டு அவர்களனுக்ரஹத்தினாலே நல்லது பொல்லாததுகளை அறிந்து ஒருஜீவன் பகவானுடைய நித்யமான இடத்தை அடைகிறான். (8)

(௬அக)பத்ராவலி ரங்கேஶ்வரபாதரக்ஷே மணிப்ரயாஹம் மணிரஶ்மிஜாலைः । ஸேவாநதாநாம் த்ரிதஶேஶ்வராணாம் ஶேஷாபடீம் ஶேகரஸங்க்ருஷ்டாம் ॥

ரங்கேஶ்வர-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதரக்ஷே-வாராய்பாதுகையே, த்வம்-நீ, மணி-ரத்னங்களுடைய, ரஶ்மி-கிரணங்களுடைய, ஜாலைः-கூட்டங்களாலே, ஸேவாநதாநாம்-ஸேவிக்கிறதற்காக வணங்கியிருக்கிற, த்ரிதஶேஶ்வராணாம்-தேவஸ்ரேஷ்டர்களுடைய ஶேகரஸங்க்ருஷ்டாம்-கிரீடங்களுக்கு கிட்டியிருக்கிற, ஶேஷா

படீம்-பெருமாள் சாத்திக்களைந்தவஸ்திரத்தை, (அதாவது பரியட்டத்தை) யதார்ஹம்-தகுந்தபடி, பத்நாஸி-கட்டுகிறாய், (இதி-என்று) தர்கயே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்தில் ரத்னகாந்தி வீசுகிறது. அதைப்பார்த்தால் உன்னை தலையில் ஸாதித்துக்கொள்வதற்காக கிட்டவருகிற தேவதைகள் தலையில் பரிபட்டம் கட்டுகிறாப்போலிருக்கிறது. எல்லாரும் பகவானிடத்தில் போகவேணுமென்று ஆழ்வார் திருவாய்மொழியை ஸாதித்தார். அந்தந்த ஜீவர்களுடைய ஸுக்ருதத்துக்குத் தகுந்தபடி அவரவர்களுக்கு அதின் அர்த்தம் தெரிகிறது.

(9)

(௪௯௦) ஸஜந்தி ரங்கேஶ்வர பாதரக்ஷே ப்ரஸுவந்தோ விவிதாந் புமர்த்தாந் । உதக்ரத்விஷஸ்த்வஞ்சிந்தயதாம் ஜநாநாம் சிந்தாமணித்வம் மணயஸ்த்வதீயா: ॥

ரங்கேஶ்வர-ஸ்ரீரங்கநாதருடைய, பாதரக்ஷே-வாராய் பாதுகையே! விவிதாந்-அனேகவிதமான, புமர்த்தாந்-புருஷார்த்தங்களை, (அதாவது தர்மார்த்தகாமமோக்ஷங்களை) ப்ரஸுவந்த:-உண்டுபண்ணுகின்றிருக்கிற, உதக்ர-நீட்டிக்கொண்டிருக்கிற, த்விஷ:-காந்தியைஉடைத்தாயிருக்கிற, த்வதீயா:-உன்னுடைய, மணய:-ரத்னங்கள், விசிந்தயதாம்-நினைக்கிற, ஜநாநாம்-ஜனங்களுக்கு, சிந்தாமணித்வம்-சிந்தாமணிஎன்கிற ரத்னமாயிருக்கையை, ஸஜந்தி-அடைகின்றன.

(கருத்து) சிந்தாமணி என்று ஸ்வர்க்கலோகத்தில் ஒருரத்னமிருக்கிறதாம். அது நினைத்ததைக்கொடுக்கிறதாம். அதேமாதிரி உன் ரத்னங்கள் த்யாநம் பண்ணுகிறவர்களுக்கு கேட்டதைக்கொடுக்கின்றன, ஆழ்வாருடைய பாசுரங்களை மகான்களுடைய அனுக்ரஹத்தை முன்னிட்டு அவர்கள் உபதேசத்தினால் ஸரியான அபிப்பிராயத்தை அறிந்தவர்களுக்கு ஸகலபலன்களும் கிடைக்கின்றன.

(10)

(௪௯௧) நாதஸ்ய தத்தே நகராஜகந்யா பாதம் ஸமாஹாத்ய பாதநவேத்ராஸ்ரிது । மணிப்ரபாபி: ப்ரதிபந்நவர்ணாம் பக்ஷாம் ஶ்யாமா சகோரீவ பாதுகே த்வாம் ॥

பாதுகே-பாதாய் பாதுகையே! நதீராஜகந்யா-ஆறுகளுக்கு ராஜாவான ஸமுத்திரத்தினுடைய பெண்ணான மகாலக்ஷ்மியானவள், நாதஸ்ய-பெருமாளுடைய, மநோஹர-இன்பமான, பாத-திருவடியினுடைய, நக-நகங்களாகிற, இந்து-சந்திரனுடைய, ரஶ்மி-கிரணங்களை, பாதும்-சாப்பிடுவதற்கு, மணி-ரத்னங்களுடைய, ப்ரபாபிஃ-காந்திகளாலே, ப்ரதித-உடையப்பட்டிருக்கிற பக்ஷாம்-சிறகைஉடைத்தாயிருக்கிற, த்வாம்-உன்னை, லீலா சகோரீமிவ-விளையாட்டுக்காக இருக்கிற பெண்சகோரபக்ஷியைப் போல, ததாதி-கொடுக்கிறாள்.

(கருத்து) ஏபாதுகையே! மஹாலக்ஷ்மி உன்னை பெருமாள் திருவடியில் ஸமர்ப்பிக்கிறாள். உன்பேரில் இழைத்திருக்கிற ரத்ன காந்திகள் இரண்டுபக்கத்தில் பரவுவதைப்பார்த்தால் சிறகுமாதிரி இருக்கிறது. பெருமாளுடைய திருவடிநகங்களாகிற சந்திரனுடைய நிலாவை சாப்பிடுவதற்கு பெண்சகோரபக்ஷியைக்கொடுப்பதுபோலிருக்கிறது. ஒருஜீவனுக்கு தாயாருடைய அனுக்கிரஹத்தினாலே பெருமாளுடைய திருவடித்யாநம் உண்டாகிறது. (11)

(சகூ) ஜநஸ்ய ரங்கேஶ்வரபாதுகே த்வம் ஜாதாநுகம்பா ஜநயஸ்ய யத்நாத் । ஆக்ருஷ்ய தூராந்மணி ரஶ்மிஜாலைரநந்யலக்ஷாணி விலோசநாநி ॥

ரங்கேஶ்வர-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுகே-பாதாய் பாதுகையே! த்வம்-நீ, ஜாதா-உண்டாயிருக்கிற, அநுகம்பா-தயையை உடையவளாய்க்கொண்டு, ஜநஸ்ய-லோகங்களுடைய, விலோசநாநி-கண்களை, மணி-ரத்னங்களுடைய, ரஶ்மி-கிரணங்களாகிற கயிறுகளாலே செய்யப்பட்ட, ஜாலைஃ-கூட்டங்களால், (வலைகளால்) அயத்நாத்-பிரயாசமில்லாமல், தூராத்-ரொம்பதூரத்திலிருந்து, ஆக்ருஷ்ய-இழுத்து, அநந்யலக்ஷாணி-வேறொருஇடத்தில் பார்வையில்லாதவைகளாக, ஜநயஸி-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏபாதுகையே! ஜனங்களிடத்தில் நீ ரொம்பதயவு செய்து உன்னுடையரத்னகாந்திகளாலே ஜனங்களுடையகண்ணை ரொம்பதூரத்திலிருந்து இழுத்து உன்னையே (அல்லது பெருமா

ளையே) பார்க்கும்படி செய்கிறாய். ஸகலமான ஜனங்களும் பெருமாளை நினைக்கவேண்டுமென்று ஆழ்வார் தயையினால் மிகப்பிரயாசைப்பட்டிருக்கிறார். நல்ல ஆசாரியாளுடைய அனுக்கிரஹத்தாலும் உபதேசத்தாலும் திருவாய்மொழியின் அர்த்தத்தையறிந்தவன் பெருமாளையும் ஆழ்வாரையும் நினைத்துக் கொண்டிருப்பான்.

(௧௩) ரங்கேஶபாதாவநி தாவகீநை: ஸ்ப்ருஷ்டா: கதா
சிந்மணிரஶ்மிபாதை:। காலஸ்ய கோரம் நபஜ
ந்தி பூய: காராக்ருஹாஶ்லேஷகஶாபிகாதம்॥

ரங்கேஶ-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாவநி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே! தாவகீநை:-உன்னுடையதான, மணி-ரத்னங்களுடைய, ரஶ்மி-காந்திகளாகிற, பாதை:-கிரணங்களாலே, கதாசித்-ஒருக்கால், ஸ்ப்ருஷ்டா:-தொடப்பட்டவர்கள், பூய:-மறுபடியும், கோரம்-பயத்தை உண்டுபண்ணுகிறதாயிருக்கிற, காலஸ்ய-யமனுடைய, காராக்ருஹ-சிறைச்சாலையினுடைய, ஆஶ்லேஷ-ஸமீபங்களில், கஶா-சாட்டையினுடைய, அபிகாதம்-அடியை, நபஜந்தி-அடைகிறதில்லை.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னுடைய ரத்நகாந்தி எப்பொழுதாவது ஒருகால் ஒருவர் மேல்பட்டால் அவர்கள் மறுபடியும் யமனுடைய சிறைச்சாலையில் சாட்டைப்பால் அடிபடுகிறதில்லை. அதாவது அவர்களுக்கு யமலோகமுமில்லை, நரகமுமில்லை. திருவாய் மொழியின் தாத்பரியத்தை ஒருவர் ஒருக்கால் கவனித்தாலும் அவர்கள் பெருமாளைத்தியானித்தோ சரணாகதிபண்ணியோ பெருமாளுடைய பரமபதத்துக்குப் போய் விடுகிறார்கள். அவர்களுக்கு நரகமில்லை, (13)

(௧௪) ரத்நாநி ரங்கேஶ்வரபாதரக்ஷே த்வதாஶ்ரிதாநி
ப்ராப்தாநி வைஶிஷ்ட்யமவை: ஸ்வைஶ்வர்யஷீணாம் ஶ்ரு
திஸர்வஷீணாம் விதந்வதே வர்ணநிவேஶமுக்ஷ்மீ:॥

ரங்கேஶ்வர-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதரக்ஷே-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! த்வதாஶ்ரிதாநி-உன்னை

டைந்திருக்கிற, ரத்நநிரத்னங்கள், ஸமுத்கதைஃ-தடங்கலில் லாமலிருக்கிற, பிரபைஃ-காந்திகளால், ஸமேஷிணாம்-ஸமீபத்தில்வந்திருக்கிற, ச்ருதி-வேதங்களாகிற, ஸுந்தரீணாம்-ஸ்திரீகளுக்கு, வர்ண-அனேகவர்ணங்களோடுகூடிய, நிசோளம்-ரவிக்கையினுடைய, லக்ஷ்மீம்-சோபையை (அழகை), விதந்வதே-செய்கின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன் பேரில் அனேக ரத்னங்கள் இழைத்திருக்கிறது உன்னேஸேவிப்பதற்கு வேதமாகிற ஸ்திரீகள் சமீபத்தில் வருகிறார்கள் அப்போதுஅவர்கள்உடம்பில்இந்த காந்திபடுகிறபோதுஅனேகவர்ணங்களால்செய்தரவிக்கைப்போட்டாப்போலிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்கள் தான் வேதங்களாகிற பொம்மனாட்டிக்கு துணி உடுத்தி அவமானத்தைப்போக்கின, வேதங்களுக்குப் பெருமை கிடைத்தது. (14)

(சகரு) நித்ராரஸக்ருணயிநோ மணிபாதரக்ஷே
ரங்கேச்வரஸ்ய ஸவிதம் ஸ்ருதிவத்யஸி த்வம் ।
சய்யாஸநம் சுசிதோ பவதீ விதத்தே
ரத்நாம்சுபிர்யவநிகாமிவ பார்ச்வயோஸ் தே ॥

மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! நித்ரா-தூக்கத்தினுலுண்டான, ரஸ-ஸந்தோஷத்திலே, ப்ரணயிநஃ-ஆசையுள்ளவரான, ரங்கேச்வரஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, ஸவிதம்-ஸமீபத்தை, ஸ்ருதிவத்யஸி-அடையாளனின்றிருக்கிற, பவதீ-நீயானவள், ரத்நரத்னங்களுடைய, அம்சுபிஃ-காந்திகளாலே, சய்யாஸநம் சுசிதஃ-படுக்கையான ஆதிசேஷனுக்கு நாலு பக்கத்திலும், பார்ச்வயோஃ-பார்க்கத்தகுந்ததாயிருக்கிற, யவநிகாம்-திரையை, விதத்தே இவ-செய்கிறாய்போல.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் சயனித்துக்கொள்ளுகிறபோது திருவடிவாரத்தில் நீ இருக்கிறாய். உன்னுடைய நாநாவர்ணங்களான ரத்ன காந்திகள் நாலுபக்கத்திலும் திரைபோட்டாப் போலிருக்கின்றன. ஆழ்வாருடைய அனேக வித்யமான

பாசுரங்களுடைய அர்த்தத்தை நினைத்துக்கொண்டு பெருமாள் பரம ஸந்தோஷத்தை அனுபவிக்கிறார். (15)

([illegible]) [illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

[illegible]-வாராய் கல்லிழைத்த பாதுகையே! [illegible]-நீ, [illegible]-தன்காந்தியாலே, [illegible]-உன்னுடைய, [illegible]-எடுக்கிறஸமயத்திலே, [illegible]-வணக்கப்பட்டிருக்கிற, [illegible]-உடம்பைஉடைத்தாயிருக்கிற, [illegible]-மஹாலக்ஷ்மிக்குத் துணையான பெருமாளுடைய, [illegible]-வேலைக்காரஸ்திரீகளுடைய, [illegible]-நழுவியிருக்கிற, [illegible]-வஸ்திரத்தைஉடைத்தாயிருக்கிற, [illegible]-ஸ்தனத்தை, [illegible]-பட்டுவஸ்திரங்களாலே, [illegible]-மறைக்கிறாய்போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னை எழுந்தருளப்பண்ணுவதற்குப்பெருமாளுடைய வேலைக்கார ஸ்திரீகள் அவசரப்பட்டு குனிகிறார்கள். அந்த சமயத்தில் மார்பு வஸ்திரங்கள் விலகி விடுகிறது. அப்போது உன்னுடைய காந்தி மார்பில் அடிக்கிறது. அதைப்பார்த்தால் பட்டு வஸ்திரங்களாலே மார்பை மறைக்கிறாப் போலிருக்கிறது. லோகத்தில் ஜனங்கள் பெருமாளிடத்தில் பக்தியாக இருக்கிறார்கள். ஒரு சமயத்தில் கலங்கிப்போகிறார்கள். அதை ஆழ்வார்களுடைய ஸூக்திகளை ஸேவித்து அதைத் தெளிவித்துக்கொள்ளுகிறார். (16)

([illegible]) [illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

மணிபாதுகே-வாராய் பாதுகையே, ரங்கபதே:-ரங்கவி மானத்தை இருப்பிடமாகவுடைய, தைவஸ்ய-பெருமாளுடைய, புரத:-முன்னே, ப்ரஸ்ருதை:-பரவியிருக்கிற, மணி-ரத்னங் களுடைய, ரஸ்மி-கிரணங்களுடைய, ஜாலை:-கூட்டங்களாலே, உத்ஸ்ருஷ்ட-போக்கடிக்கப்பட்டிருக்கிற, விஸ்வ - எல்லாவுலகத்தினு டைய, திமிரம்- அஜ்ஞாநமாகிற இருளையுடையவளான, த்வாம்- உன்னை, மதீய-என்னுடையதான, ஹ்ருதய-மனதாகிற, நூதந- வீட்டிலே, ப்ரவேஸ-உள்புகுவதாகிற, மங்கலஸ்ய-மங்களத்துக்கான, தீபகணிகாம்-சிறியவிளக்காக, மந்யே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே ! உன்னைப் பெருமாள் சாத்திக் கொண்டு எழுந்தருளுகிறார். உன்பேரில் இருக்கிற ரத்னங்களின் காந்திகளாலே எதிரில்இருட்டெல்லாம்போகிறது. அப்பேர்ப்பட் உன்னைப் பார்த்தால் பெருமாள் என் மனஸில் புதியதாக எழுந் தருளுகிறார். அந்தக்கல்யாணத்துக்கு விளக்குமாதிரி இருக்கிறது. புதிதாக வீடுகட்டி நல்ல வேளை பார்த்து குடிபோனால் அந்த வீடுகளிலே விளக்கேத்தி வைப்பார்கள். ஆழ்வார்ஸாதித்த திரு வாய்மொழியை நல்ல மஹான்களிடத்தில் அர்த்தத்தோடுகேட்ட வர்களுக்கு மனஸிலிருக்கிற அழுக்கெல்லாம் போய்விடுகிறது. அப்போது அந்த பெருமாள் மனஸில் எழுந்தருளிவிடுவர். (17)

(சகூஅ) ஸ்தீர்ணப்ரரத்ந நிகராம் மணிபாதுகே த்வாம்
ரங்கேஸ்வரஸ்ய ருசிராம் விபணிம் ப்ரதீம: ।
யத்ஸம்ஸ்ரயேண லபதே ஸ்திரபக்திமூல்யம்
கைவல்யமத்ர ஜநதாம் க்ரயவிக்ரயார்ஹம் ॥

ஹே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! ஸ்தீர்ண-பரப்பப்பட்டிருக்கிற, ப்ரரத்ந-ரத்னங்களுடைய, நிகரம்- கூட்டத்தையுடைத்தாயிருக்கிற, த்வாம்-உன்னை, ரங்கேஸ்வரஸ்ய- ரங்கநாதனுடைய, ருசிராம்-நிரம்ப அழகான, விபணிம்-கடைத் தெருவாக, ப்ரதீம:-நினைக்கிறோம். யத்-யாதொரு உன்னுடைய, ஸம்ஸ்ரயேண-அடைந்ததினாலே, அத்ர-இந்தலோகத்திலே, ஜந தாம்-ஜனங்களுக்கு, ஸ்திர-நிலையான, பக்தி-பக்தியாகிற, மூல்யம்-

விலையை உடைத்தாயிருக்கிற, கைவல்யம்-மோக்ஷமானது, க்ரயவி க்ரயார்ஹம்-விற்கவும் வாங்கவும் தகுந்ததாக, ஸம்வ்ருத்தம்-ஆகிறதோ.

(கருத்து) ஏ பாதுகையே! அனேகரத்னங்களாலே நிரம்பியிருக்கிற உன்னைப்பெருமாள் ஏற்படுத்தியிருக்கிற ஒரு கடைத்தெருவாக நினைக்கிறேன். பெருமாளை அதிக நாள் தியானம் பண்ணி அடைய வேண்டியதான மோக்ஷத்தை ஜனங்கள் இந்தக் கடைத்தெருவில் வந்து விற்கிறார்கள் வாங்குகிறார்கள். பெருமாள் ஆழ்வாரை பூமியில் அவதரிக்கும்படி செய்தார். எதற்காக வென்றால் இவரை ஆச்ரயித்தவர்கள் மோக்ஷத்தை அடைவதற்காகவும் அன்னியர்களை மோக்ஷத்தை அடைவிப்பதற்காகவும்.

(சகூக)வ்யஞ்ஜகம் க்ஷமம் ஭கவதோ ஜகதீஸ்வரத்வம்
வஜ்ராங்குசத்வஜஸரோருஹசக்ரசிஹ்நம் ।
ஆஸ்லிஷ்ய நிர்பரருசிம் மணிபாதுகே த்வா
மாஸீதநாகலிதநர்தநமம்புஜம் தத் ॥

மணிபாதுகே-ரத்னங்கள் இழைத்தபாதுகையே! ஜகதீஸ்வரத்வம்-லோகங்களுக்கெல்லாம்ராஜாவாகஇருக்குகையை, வ்யஞ்ஜகம்-பிரகாசப்படுத்துவதற்கு, க்ஷமம்-தகுந்ததாயிக்கிற, வஜ்ர-வஜ்ராயுதமென்ன, த்வஜ-கொடிஎன்ன, ஸரோருஹ-தாமரைப்பூவென்ன, சக்ர-சக்கிராயுதமென்ன இவைகளை, சிஹ்நம்-அடையாளமாக உடைத்தாயிருக்கிற, ஭கவத:-பெருமாளுடைய, அம்புஜம்-தாமரைப்பூப்போலிருக்கிறதிருவடியானது, நிர்பர-பூர்ணமாயிருக்கிற,ருசிம்-காந்தியைஉடைத்தாயிருக்கிற, ஆசையைஉடைத்தாயிருக்கிற, த்வாம்-உன்னை, ஆஸ்லிஷ்ய-அடைந்து, அநாகலிதநர்தநம்-ஒருவிதநகைபோட்டுக்கொள்ளாமல் அழகாக, ஆஸீத்-இருந்தது.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளுடைய திருவடிகளில் அனேகவிதமான கோடுகள் இருக்கின்றன. அந்த மாதிரியான கோடுகள் இருந்தால் லோகத்துக்கெல்லாம் ராஜாவாகயிருப்பன் என்றுசொல்லப்பட்டிருக்கிறது. அப்பேர்பட்ட பெருமாளுடைய திருவடியில் அனேகரத்னங்கள் இழைத்த உன்னைச்சாத்தினால்அந்

தத்திருவடிக்கு ஒரு நகையும் சாத்தாமல் போனாலும் அழகாக இருக்கிறது. பெருமாள் பக்தர்களைத்தான் நகையாக நினைத்துக் கொண்டிருக்கிறார். ஆழ்வாருக்குச் சமானமான பக்தர்கள் ஜகத்தில் கிடையாது. அவர் பெருமாளை அனுபவிக்கிறபோது பெருமாளுக்கு வேறு ஒருவரையும் பிடிக்கவில்லை. (19)

(௨௦) रत्नप्रभापटलवृत्तमनोहरा त्वं
पद्मारुणं पदमिदं त्वयि रङ्गभर्तुः ।
मन्ये तदेतदुभयं मणिपादरक्षे
चक्राब्जमण्डलमकिञ्चनरक्षणार्हम् ॥

हे मणिपादरक्षे - வாராய் கல்லிழைத்தபாதுகையே! त्वं-நீ, रत्न-ரத்னங்களுடைய, भा-காந்தியினுடைய, वृत्त-வட்டமாயிருக்கிற, पटल-கூட்டத்தினாலே, मनोहरा-அழகாக இருக்கிறாய். त्वयि-உன்னிடத்திலிருக்கிற, रङ्गभर्तुः-ஸ்ரீரங்கநாதனுடைய, इदं-இந்த, पदं-திருவடியானது, पद्मा-செந்தாமரைபோல, अरुणं-சிவந்ததாகஇருக்கிறது. तत्-இந்த उभयं-இரண்டையும், अकिञ्चन-பெருமாளை ஆராதிக்க தத்காலத்தில் தகாதவர்களுடைய, रक्षणार्हं-காப்பாத்தனுக்குத்தகுந்ததான, चक्राब्जमण्डलं-சக்ரமான கோட்டுக்குநடுவில் தாமரைப் பூப்போட்ட ஒருஸன்னிவேசமாக, मन्ये-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் ரத்தினங்கள் இழைத்திருக்கிறது, அதன் காந்தி உன்னைச்சுற்றி வர்த்துளமாய் இருக்கிறது. உன்பேரிலிருக்கிற பெருமாளுடைய திருவடி செந்தாமரைபோலிருக்கிறது, இவ்விரண்டையும் பார்த்தால் அர்ச்சக ஜாதியில் பிறந்தவர்கள் பெருமாளை ஆராதிப்பதற்கு யோக்யதைக்காக சக்கிரமாக ஒருகோடுபோட்டு அதில் தாமரைப்பூ எழுதி சில காரியங்கள் செய்கிறார்கள், அதுமாதிரியாக இருக்கிறது. எம்பெருமானை எப்போதும் தியானித்துக்கொண்டிருக்கிற ரத்னம்போன்ற பாசுரங்களோடுகூடிய ஆழ்வாரை ஸேவித்தமாத்திரத்தாலேயும் நினைத்தமாத்திரத்தாலேயும் ஜனங்களுக்குப்பெருமாளை அனுபவிக்கத் தகுதியுண்டாகிறது. (20)

(௫௦௧) த்ராஸாத் ஸ்வயம் ப்ரணமதாம் தநுஜேஶ்வராணாம்
ஸம்க்யே விக்ருத்தஶிரஸாம் ச கிரீடரத்நை: ।
ஆயோஜயத்யநுகலம் மணிபாதுகே த்வாம்
ஶௌரே: ப்ரஸாதிகேவ முரவைரிக்ருபாணதாரா ॥

ஹேமணிபாதுகே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! முர வைரி-முரன் என்கிற அஸுரனுக்குச் சத்துருவானபெருமாளுடைய, க்ருபாண-கத்தியினுடைய, தாரா-நுனியானது, ப்ரஸாதிகேவ - அலங்காரம்பண்ணுகிறவள்போல், த்வாம் - உன்னை, த்ராஸாத்-பயத்தினாலே, ஸ்வயம்-தானே, ப்ரணமதாம்-வணங்காநின்றிருக்கிற, தநுஜேஶ்வராணாம்-அஸுரசிரேஷ்டர்களுடையவும், ஸம்க்யே-சண்டையிலே, விக்ருத்த-அறுக்கப்பட்டிருக்கிற, ஶிரஸாம்-தலையைஉடைத்தாயிருக்கிற அஸுரர்களுடையவும், கிரீட-கிரீடத்திலிருக்கிற, ரத்நை:-ரத்னங்களோடு, அநுகலம்-அடிக்கடி, ஆயோஜயதி-சேர்க்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே ! பெருமாள் கத்தியை எடுத்துக் கொண்டு வெளியில் கிளம்புகிறார். சில அஸுரர்கள் பயந்து கிரீடங்களை பாதுகையில் கொண்டுவந்து ஸமர்ப்பிக்கிறார்கள். சில பேரை யுத்தம்பண்ணி தலையை அறுத்து அந்தக் கிரீடங்களைப் பாதுகையில் கொண்டுவந்து சேர்த்துவிடுகிறார். ஸாத்விகப்ரக்ருதியாக இருக்கிறவர்கள் பாபங்களுக்குப் பயந்து பெருமாளை ஆசிரயிக்கிறார்கள். முரட்டுப் பிரக்ருதிகளைப் பெருமாள் சிக்ஷித்து திருவடியில் கொண்டுவந்து சேர்த்துவிடுகிறார். (21)

(௫௦௨) ஸ்ப்ருஷ்டாநி விபுதேந்த்ரஶிகாமணீநாம்
த்வாமாஶ்ரிதாந்யஸுரஸூதநபாதரக்ஷே ।
ரத்நாநி தே ஸ்துதிஸுவர்ணபரீக்ஷணாய
நூநம் பஜந்தி நிகஷோபலதாம் கவீநாம் ॥

அஸுரஸூதந - அஸுரர்களைக்கொல்லுகிற பெருமாளுடைய, பாதரக்ஷே-வாராய் திருவடியைக் காப்பாத்துகிறபாதுகையே! விபுதேந்த்ர-தேவச்ரேஷ்டர்களுடைய, ஶிகா-தலையிலி

ருக்கிற, மணீநாம்-ரத்னங்களை, க்ருஹ்ணாதி-இழுக்கிறதாயிருக்கிற, ஸ்வாம்-உன்னை, ச்ரிதாநி-அடைந்திருக்கிற, ரத்நாநி-ரத்னங்கள், கவீநாம்-கவனம்பண்ணுகிறவாளுடைய, தே-உன்னுடைய, ஸூக்தி-ஸ்தோத்திரமாகிற, ஸுவர்ண-நல்லஎழுத்தினுடைய (தங்கத்தினுடைய) பரீக்ஷணாய-நல்லது பொல்லாது பார்க்கிறவிஷயத்திலே, நிகஷோபலதாம்-உரைகல்லாயிருக்குகையை, பஜந்தி-அடைகின்றன. நூநம்-நிச்சயம்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரிலிருக்கிற ரத்தினங்கள் தேவதைகளுடைய கிரீடத்து ரத்தினத்தையெல்லாம் இழுக்கின்றன (அதாவது அவர்கள் வந்து ஸேவிக்கிறார்கள்.) அவைகள் கவிகள் பண்ணுகிற ஸ்தோத்திரம் நல்லதா பொல்லாததா? என்று பார்க்கிறதற்கு உரைகல்லாக இருக்கிறது. அதாவது—பாதுகையின் ரத்தினத்தைப் பற்றிய ஸ்தோத்திரம் நல்ல எழுத்து. பெருமாளைப்பற்றியும் ஆசாரியாளைப்பற்றியும் இவர்கள் ஸாதித்த கிரந்தங்களைப்பற்றியும் ஸ்தோத்திரம்பண்ணினால் அந்த ஸ்தோத்திரம் எல்லாருக்கும் ஸகல க்ஷேமத்தையும் கொடுக்கக்கூடியது. மற்ற ஸ்தோத்திரங்களைப் பண்ணினவனுக்கும் கேட்டவனுக்கும் ஸௌக்கியமில்லை. (22)

(௨௰௩) பாதாவநி ப்ரணயிநாம் ப்ரதிபாதநாய
க்ரீடாஸரோஜமிவ பாஸி பவத்ஸமக்ஷம் ।
ப்ரத்யக்ஷயந்தி கமலப்ரதிபந்நஸாரம்
பஞ்சாத்மரோஹணமிரோபயிதேவதாம் ஸ்வாம் ॥

ஹே பாதாவநி-வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ப்ரணயிநாம்-பாசிக்கிறவர்களுக்கு, பக்தியுள்ளவர்களுக்கு, ப்ரதிபாதித-கொடுக்கப்பட்டிருக்கிற, சதுர்ணாம்-பணத்யுடையவளாயும், நான்கு புருஷார்த்தங்களையுடையவளாயும், ப்ரதிபாதித-தெரிவிக்கப்பட்டிருக்கிற, சதுர்ணாம்-இந்து அர்த்தங்களையுடையவளாயும், அதாவது ஜீவன், பெருமாள், பெருமாளையடைவதற்கு உபாயம், அடைவதற்கு விரோதி, (இடைஞ்சல்) அடைவதற்குப் பலம்) க்ரீடா-விளையாட்டுக்காக இருக்கிற, ஸரோஜமிவ

தாமரைப்பூபோல, ஶௌரிபதம்-பெருமாளுடைய திருவடியை, வஹந்தீம்-தரித்திருக்கின்றவளாயும், வ்யதிஷக்த-இழைக்கப்பட்ட, ரத்நநிகர-இரத்தின ஸமூஹங்களாலே, ப்ருதிபஸௌபாகாம். அடையப்பட்டிருக்கிற பளபளப்பையுடையவளாயுமிருக்கிற, த்வாம்-உன்னை, ரோஹணகிரே:-ரத்தின மலைக்கு, அதிதைவதாம்-அதிஷ்டான தேவதையாக, மந்யே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! கேட்கிறவர்களுக்கு வேண்டிய பணங்களைக் கொடுக்கிறவளும், பெருமாள் திருவடியாகிற தாமரைப்பூவைக் கையிலே விளையாட்டுக்கு வைத்துக்கொண்டும் எல்லையில்லாத ரத்னங்களாலே இழைக்கப்பட்டும், நிரம்ப பளபளப்பாயிருக்கிறவளுமான உன்னைப் பார்த்தால், ரத்நமலைக்கு அதிஷ்டான தேவதை போலிருக்கிறாய் என்று நினைக்கிறேன். வெள்ளிமலை கைலாஸம், தங்கமலை மேரு, ரத்நமலைக்கு ரோஹணமென்று பெயர். நல்ல ஆசார்யர்களிடத்தில் மனப்பூர்வமாகபக்தி பண்ணினால் இந்த உலகத்தில் ஒன்றும் குறைவில்லை. பெருமாளையடைய வேண்டிய ஜ்ஞானங்களும் செய்கைகளும் பூர்ணமாகவருகிறது. நல்ல ஆசார்யர்களுக்குப் பெருமாள் சொன்னபடி கேட்பார். அவர்களிடத்தில் தயை, பொறுமை, ஸத்யம், வணக்கம், நல்லறிவு, தன்னை மிகத் தாழ்த்தி நினைப்பது, கர்வம், கோபம்முதலிய கெட்ட குணங்களில்லாமை இவை முதலிய உயர்ந்த ஸங்கதிகள் தவாமலிருக்கும். அவர்கள் தன்னை அடைந்தவர்களுக்கு உபதேசித்தாலும் தங்கள் கவலையாலும் கீழ்ச்சொன்ன நற்குணங்களை உண்டாக்குகிறார்கள். (23)

(௨௪) யாசேவ ரத்நகிரணைஸ் தவ பாதரக்ஷே
ஸந்த்யாவதே ஜநஹ்ருதாம் ஸவதீர் விதத்தே ।
ஸங்க்ராந்திதைவதபிவாமணிரஜ்ஞாவபி
ஸ்தாசேவ தேவ கடயந்தி விதேஸஹிவ்யாம் ॥

ஹே மணிபாதரக்ஷே-அரங்கல் இழைத்த பாதுகையே! ஸீ-நீயானவள், ரத்நகிரணை:-ரத்தினங்களுடைய காந்திகளால், ஜநஹ்ருதாம்-எந்தப் பிராணிகளுடைய, ஸந்த்யாவதே-கலையிலே, யாசேவ-எந்த அழுகையே, விதத்தே-உண்டுபண்ணுகி

ஞ்யோ, தே-அவர்கள், மஹேந்த்ராதி-இந்திரன் முதலான, தைவத-தேவதைகளுடைய, ஶிரோ-தலையிலிருக்கிற, ரத்னங்களா லே, ரஞ்ஜிதா: பத:-விளங்கப்பண்ணப்பட்டிருக்கிற, பதை:-திரு வடிகளாலே, தாம் தவைவ-அந்த உன்னையே, ப்ரகாஶ யந்தி- பிரகாசப் படுத்துகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! எந்தப் பிராணிகள், உன்னைத் தலையில் வைத்துக்கொண்டு, உன்னுடையரத்னங்களால் பளபளப் பையடைந்தார்களோ, இந்திரன் முதலான தேவர்களால் அந்தப் பிராணிகள் ஸேவிக்கப்படும்போது, இந்திராதிதேவர்களுடைய தலையிலுள்ள கிரீடங்களாலே, அந்தப் பிராணிகளுடைய திருவடி யில் அந்தப்பளபளப்பு உண்டாகிறது. பாதுகையை ஸேவித்தவர் கள் தேவதைகளுக்கும் ஸேவிக்கத் தகுந்தவர்களாக ஆகின்றன ரென்படி. ஒருவன் நல்ல ஆசாரியனையடைந்து உயர்ந்த அறிவு செய்கை முதலிய நல்ல ஸங்கதிகளையறிந்தால் ஸகலதேவதைக ளும் அவன் காலில் விழுகிறார்கள். ஆனால் நல்ல ஆசார்யர்க ளும், அவர்களால் நன்கு திருத்தப்பட்ட சிஷ்யர்களும் அகப்படு வது அதி துர்லபம். (24)

(உரு) ரத்நாங்குரைர் நிரவிராம் மணிபாதரக்ஷே
ஸ்ரீரங்கநாதத்வயசத்த ரப்ரகாஷோகரக்ஷகா மருகஷகா ||
தை வைந ரங்கபதிநா ஜகதாம் விபூத்யை
கேதாரிகேவ ரசிதா பவிகல்பிதா த்வம் ||

ஹே மணிபாதரக்ஷே-ரத்னம் இழைத்த பாதுகையே! ரத்ந-ரத்ந காந்திகளாகிற, அங்குரை:-முளைகளாலே, நிரந்தரா- நெருங்கியிருக்கிற, த்வம்-நீ, ரங்கபதிநா-ஸ்ரீரங்கநாதனுகிற, தை வேந-பிரபுவினாலே, ஜகதாம்-உலகங்களுடைய, விபூத்யை- ஐசுவர்யத்தின் பொருட்டு, ஆகோர்த்வை:-சீக்கிரத்தில் பலிக் கப் போகின்ற, புருஷார்த்த-தர்மார்த்த காம மோக்ஷங்களா கிற நான்கு பிரயோஜநங்களாகிற, ஸஸ்யை:-பயிர்களாலே, ஸமி த்தா-நிரம்பப்பட்டிருக்கிற, கேதாரிகேவ-வயல் போல, க்ருப யா-கயையினால், பரிகல்பிதா-ஏற்படுத்தப்பட்டாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்தில் அனேக ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் நீண்டிருக்கிற காந்திகளைப் பார்த்தால் ஸ்ரீ ரங்கநாதன் எல்லாலோகங்களும் எல்லா க்ஷேமங்களையும் அடைவதற்காகத் தயையினாலே எல்லாபுருஷார்த்தங்களும் சீக்கிரத்தில் ஒருவித இடஞ்சலன்றி விளைகிற பயிர்களோடுகூடிய ஒரு வயலை ஏற்படுத்தியிருக்கிறாரென்று தோன்றுகிறது. எல்லா ஜீவர்களும் பெருமாளுடைய குழந்தைகள். இவர்கள் படும் எல்லையற்ற கஷ்டத்தைப் போக்குவதற்காக தயையினால் பெருமாள் ஸ்ரீ ஆழ்வார் முதலான உயர்ந்தஆசார்யர்களைப் பூமியில் அவதரிப்பித்தார். அவர்களை முறைப்படி அடைந்தால் ஸகலபுருஷார்த்தங்களும் கிடைக்கும். (25)

(௨௰௬) நிர்தூ₄தமோஹதிமிராஸ்தவ ரத்நதீ₃பை-
நிர்விஶ்யமாநவிப₄வம் நத₃ராஜபுத்ர்யா ।
த்₃ரக்ஷ்யந்தி நிக₃மஶிரநிகூ₃ட₄மர்த₂ம்
பாதா₃வநி த்வயி நிவேஶிதபா₄வப₃ந்தா₄: ॥

ஹே பாதா₃வநி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! த்வயி-உன்னிடத்தில், நிவேஶித-வைக்கப்பட்டிருக்கிற, பா₄வப₃ந்தா₄:-கெட்டியானபக்தியையுடைவர்கள், தவ-உன்னுடைய ரத்ந-ரத்தினங்களாகிற, (அதாவது) நல்ல வார்த்தைகளாகிற, தீ₃பை:-விளக்குகளாலே, நிர்தூ₄த-நன்றாக போக்கடிக்கப்பட்டிருக்கிற, மோஹ-அஜ்ஞானமாகிற, திமிரா:-இருட்டையுடைத்தானவர்களாய்க் கொண்டு, நத₃ராஜபுத்ர்யா-க்ஷீரஸமுத்திரத்தின் பெண்ணான மஹாலக்ஷ்மியினாலே, நிர்விஶ்யமாந-அநுபவிக்கப்பட்டிருக்கிற, விப₄வம்-ஸகல ஸம்பத்துக்களையுமுடைத்தாயிருக்கிற, நிக₃மஶிர-உபநிஷத்துக்களில், நிகூ₃ட₄ம்-மறைந்திருக்கிற, அர்த₂ம்-பொருளான பெருமாளை, த்₃ரக்ஷ்யந்தி-கண்ணாலே பார்க்கிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்தில் பூர்ணமாகப் பக்திபண்ணுகிறவர்கள், உன்னுடைய ரத்னங்களாகிறகோடிஸூரிய பிரகாசமான விளக்குகளாலே அஜ்ஞானமாகிற இருளனைத்தும் போக்கப்பட்டவர்களாய், மஹாலெக்ஷ்மியினால் அனுபவிக்

கப்பட்ட உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட பெருமாளை கண்ணாலே பார்க்கிறார்கள். லோகத்தில் நல்ல ஆசாரியர்கள் எப்பொழுதும் மனதால் பெருமாளை நினைத்து வாக்கினால் அவர் குணங்களைச் சொல்லியும் சரீரத்தினால் அவர் காரியத்தைச்செய்து கொண்டு வேறு ஒரு காரியமுமில்லாமல் இதே காரியமாயிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களை ஒருவன் ஆச்ரயித்து நல்லபக்தி உண்டாகி அதேமாதிரியான நல்ல ஸங்கதிகளை அடைந்தால் உபநிஷத்துக்களாலே கண்டுபிடிக்க முடியாத பெருமாள் தாயாருடன் கண்ணுக்கு எதிராக ஸேவைஸாதிக்கிறார். ஆசாரியன் செய்யவேண்டிய காரியத்தையும் சிஷ்யன் செய்யவேண்டிய காரியத்தையும் சரியாய் அறிந்துச் சரியாய் நடத்துவது இக்காலத்தில் மிக துர்லபமாயிருக்கிறது. ஸ்வரூபம் உபாயம் புருஷார்த்தம் இந்த மூன்றும் தெளிந்தவன் தான் ஆசாரியன். இவை தெரிந்தால் சில ஸங்கதிகள் உண்டாகுமென்று ஸ்ரீ தேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாதித்திருக்கிறார். அந்த ஸ்வநிஷ்டாபிஜ்ஞானம் தமக்கில்லையேயென்று நினைக்கிறவர்கள் கூட இல்லை.

(௫௦௭) ரத்நாவளீப்ரகரஸம்பவ ஏஷ தூரக:
ரங்காதிராஜசரணாவநி தாவகீந: ।
ஆர்த்ராபராதபரிகேததியாம் ப்ரஜாநாம்
ஆச்வாஸநாயஇவ பாதி கரப்ரஸார: ॥

ஹே ரங்காதிராஜசரணாவநி-வாராய் ரங்கநாதனுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ரத்நாவளீ-ரத்நக்கல்லுகளுடைய, ப்ரகர-கூட்டத்தினின்றும், ஸம்பவ:-உண்டாயிருக்கிற, தூரக:-வெகு தூரம் போயிருக்கிற, ஏஷ:-இந்த, தாவகீந:-உன்னுடையதான, கரப்ரஸார:-கிரணங்களுடைய, பரம்புதலானது, ஆர்த்ர-ஈரமாயிருக்கிற, அப்போது பண்ணப்பட்டதான, அபராத-குற்றங்களாலே, பரிகேத-வருத்தத்தையடைந்திருக்கிற, தியாம்-புத்தியையுடைத்தாயிருக்கிற, ப்ரஜாநாம்-ஜனங்களுடைய, ஆச்வாஸநாய-ஸமாதானத்துக்காக இருக்கிற, கரப்ரஸாரஇவ-கையை நீட்டுகிறது போல, பாதி-விளங்குகின்றது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரிலிழைத்த ரத்னங்களின் காந்தி வெகுதூரம் பரவுகிறது. அதைப்பார்த்தால் அனேக தப்பிதங்களைச் செய்து உடனே மிகவருத்தப்படும் ஜனங்களைகையை நீட்டிச் சமாதானம் பண்ணுவது போலிருக்கிறது. ஜனங்கள் தாங்கள் பண்ணின தப்பிதங்களை நினைத்து நல்ல ஆசாரியரிடத்தில் அதைச் சொல்லி வருத்தப்பட்டால் அவர்கள் நல்ல வார்த்தைகளைச் சொல்லி ஸமாதானம் பண்ணுவார்கள். (27)

(உஅ) வ்யாகூர்ணதோ விஷயிபாலஹரிணாந் மதீயாந்
ஸம்ஸாரவஹ்நிஜநிதாஸு மரீசிகாஸு ।
பாதாவநி ப்ரசுரரத்நமயூகஜாலை-
ராக்ருஷ்ய விந்யஸ கேசவகாந்திஸிந்தௌ ॥

ஹே பாதாவநி-வாராய் பாதுகையே! த்வம்-நீ, ஸம்ஸார-பிறப்பது இறப்பது என்கிற ஸம்ஸாரமாகிற, வஹ்நி-கோடையினாலே, ஜநிதாஸு-உண்டு பண்ணப்பட்டிருக்கிற, மரீசிகாஸு-கானல் ஆறுகளில், வ்யாகூர்ணத:-மயங்கியிருக்கிற, மதீயாந்-என்னுடையதான, விஷயி-இந்திரியங்களாகிற, பாலஹரிணாந்-குட்டிமான்களை, ப்ரசுர-ரொம்ப உயர்ந்தவைகளான, ரத்ந-ரத்தினங்களுடைய, மயூக-காந்திகளுடைய, ஜாலை:-கூட்டங்களாலே வலைகளாலே, ஆக்ருஷ்ய-இழுத்து, கேசவ-பெருமாளுடைய, காந்தி-காந்தியாகிற, ஸிந்தௌ-ஸமுத்திரத்தில், விந்யஸ-இவைப் பாத்தி வைக்கவேண்டும்.

(கருத்து) ஏ பாதுகையே! என்னுடைய கண் முதலிய இந்திரியங்கள், பிள்ளை பெண்டாட்டி பணம் முதலிய சங்கதிகளையே நினைத்து மயங்கி அனுபவிக்கிற கஷ்டங்களுக்கு எல்லையில்லை. அந்த இந்திரியங்களாகிற மான் குட்டிகளை உன்னுடைய ரத்னங்களாகிற வலையினாலிழுத்து பெருமாளுடைய அழகாகிற ஸமுத்திரத்தில் சேர்த்து ஸுகத்தையுண்டுபண்ணவேண்டும். ஆழ்வார் ஸாதித்திருக்கிற பாசுரங்களின் அர்த்தங்கள் மனதில் பட்டால் பிள்ளை பெண்டாட்டி முதலான ஸுகங்கள் மனதில் ருசிக்காது. திருவாய்மொழி அர்த்தங்களையெல்லாம்நாம் வாயாலே சொல்லுகிறோமே யொழிய துளியாவது மனதில் படவில்லை. அதற்காக

அந்த ஸங்கதிகள் மனதில் படும்படி ஆழ்வாரைப் பிரார்த்திக்கும்படி ஸாதிக்கிறார். (28)

(ருOகூ) அந்தர்நியம்ய முநிபி: பரிரக்ஷ்யமாணா
மாத்மீயரஶ்மிஸந்திதாம் அங்க்ரிரக்ஷே |
ரங்கேஶபாதகமலப்ரதிபந்நமுத்ராம்
மௌலிமவைமி பவதீம் நிகமாந்தரத்நாம் ||

அங்க்ரிரக்ஷே-வாராய் பாதுகையே! முநிபி:-பெருமானைத்தியானம் பண்ணுகிறவர்களாலே, அந்த:-மனதில், நியம்ய-வைத்து, பரிரக்ஷ்யமாணாம்-காப்பாற்றப்பட்டவளாயும், ஆத்மீய-தன்னுடையதான, ரஶ்மி-காந்திகளாகிற கயிறுகளாலே, ஸந்திதாம்-கட்டப்பட்டவளாயும், ரங்கேஶ-ஸ்ரீரங்கநாதனுடைய, பாத-திருவடியாகிற, கமல-தாமரைப்பூவினாலே, ப்ரதிபந்ந-அடையப்பட்டிருக்கிற, முத்ராம்-அடையாளத்தையுடைத்தாயிருக்கிற, பவதீம்-உன்னை, நிகமாந்தரத்நாம்-உபநிஷத்துக்களாகிற ரத்னங்களுடைய, மௌலிம்-முடிச்சாக, அவைமி-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னை ருஷிகள் தவறாமல் மனதிலேயே வைத்துக்காப்பாற்றுகிறார்கள். உன்பேரிலிழைத்த ரத்னங்களின் காந்திகள் உன்னைக் கட்டுகிற கயிறுபோலிருக்கிறது. உன்பேரிலிருக்கிற பெருமாள் திருவடிகளைப் பார்த்தால் முத்திரை வைத்திருக்கிறது போலிருக்கிறது. ஆகையால் உன்னைப் பார்த்தால் உபநிஷத்துக்களாகிற ரத்னங்களினுடைய முடிச்சு போலிருக்கிறது. நல்ல ஆசாரியர்கள், உபநிஷத்துக்களில் ரொம்ப ஸாரமான திருமந்திரம் முதலியவைகளில் உயர்ந்த அர்த்தங்களுடன் தியானிக்கிறார்கள். ஸ்ரீ பெருமாள் ஆசாரியாளிடத்தில் பக்தியாகிற கயிற்றால் கட்டப்பட்டுப் பெருமாளைவிட்டு நகரமுடியாமல் இருக்கிறார்கள். பெருமாள் அவரிடத்திலேயே எழுந்தருளியிருக்கிறார். அவர்களை ரொம்ப பெரியவர்கள் எல்லாம் எப்போதும் தியானிக்கிறார்கள். (29)

(ருகo) ராகவ்யராஜ்யவஸதௌ ப்ரணதாநுஶாஸ
காஷ்டாம் கதாம் ஸ்வபவ நபாவநதாம் ப்ரயாதா |
பாதாவநி ப்ரதிமாஹ்ருதயோநிவேஶா
ஸம்ஸாரஸந்தரணஸேதுரஸி ப்ரஜாநாம் ||

ஸேவாஸவநீ-வாராய் பாதுகையே! ரகுவம்சேசர்ஸ்ய மானத்தை இருப்பிடமாயுடைத்தாயிருக்கிற, ராமஸ்ய-ஸ்ரீராம னுடைய, சரண-திருவடியினுடைய, ஸம்பர்க்க-ஸம்பந்தத்தினு லே, காஷ்டாம் பதாம்-உயர்த்தியை, பதாம்-அடைந்திருக்கிற, ஜகத்பாவநதாம்-உலகங்களைப்பரிசுத்தம் பண்ணுகிறதென்கிற ஸங்கதியை, ஆயாதா-தரியாநின்றிருக்கிற, த்வம்-நீ, ப்ரவர-மிக அதிகமான, ரத்நசிலா ரத்நக்கல்லுகளாலே, நிபத்தா-கட்டப்பட் டிருக்கிற, ப்ரஜாநாம்-ஜனங்களுடைய, ஸம்ஸாரஸாகர-சாவது பிறப்பதாகிற ஸமுத்திரத்தினுடைய, ஸந்தரண-தாண்டுவதற்கு, ஸேது: கஸி-அணையாக ஆகிருய்.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீராமன் ஸமுத்திரத்தைத் தாண்ட அணைகட்டினர். அது ஜனங்கள் ஸம்ஸார ஸமுத்திரத் தைத்தாண்ட உதவுகிறது. அதைக் காட்டிலும் நீ மேல்பட்டிருக் கிருய். என்னவென்றால், எப்போதும் உன்னிடத்தில் பெரு மாள் திருவடியை வைத்துக்கொண்டிருக்கிருர். உன்னைப்போல உலகத்தைப் பரிசுத்தி பண்ணுகிற வஸ்து கிடையாது. உன்னை ரத்னங்களால் இழைத்திருக்கிறது. உன்னை நினைப்பதாலும் தலை யில் சாதித்துக் கொள்வதினாலும் ஸகல ஜனங்களுக்கும் ஸம்ஸாரம் போய்விடுகிறது. நல்ல ஆசாரியர்கள் எப்பொழுதும் பகவானைத் தியானித்துக் கொண்டுப் பெருமாளை ஸ்வாதீனம் பண்ணியிருக் கிறபடியால் தன்னையடைந்தவர்களுக்கு அநுக்கிரஹத்தினாலும் நல்ல ஸங்கதிகளை உபதேசிப்பதினாலும் ஸம்ஸாரத்தைப்போக்கி விடுகிருர்கள். (30)

(௩௧) விபுதகிரீடகோடிஸஞ்சரஸ்யோ: ப்ரசுரதேஜ
ஜணிவாதிகெ ப்ரகாசா: । விபி ரகுபதேஃபதோ
ஸ்வாயம்பு விததா வதநாந்நிகேவ ஹாதி ॥

ஸேமணிவாடிகே-வாராய்கல்லிழைத்தபாதுகையே! விபு தக-தேவதைகளுடைய, கோடீ-கிரீடங்களில், ஸஞ்சர ஜ்யா:-ஸஞ்சரியாநின்றிருக்கிற, தே-உன்னுடைய, ப்ரசுரா:-ரொம்ப அதிகமாயிருக்கிற, ப்ரகாசா:-ரத்ந காந்தியானது, ரகு பதே:-ஸ்ரீரங்கநாதனுடைய, ஸேஹாஸ்வாயம்பும்-பெரியஉத்ஸவத்

திற்காக, திவி-ஆகாயத்தில், விததா-பரப்பப்பட்டிருக்கிற, வந்தநமாலிகேவ-தோரணம்போல, பாதி-விளங்குகிறது.

(கருத்து) கருப்பு சிகப்பு முதலிய அனேக ரத்னங்களால் இழைக்கப்பட்ட உன்னை தேவதைகள் தங்கள் கிரீடங்களில் வைத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்தில்போகிறார்கள். அப்போது பரவுகின்ற உனது காந்திகளைப் பார்த்தால், ஸ்ரீ ரங்கநாதனுடைய உத்ஸவத்திற்காக பச்சை சிகப்பு முதலிய அனேகவர்ணங்களோடு கூடிய தோரணம் கட்டியிருக்கிறாப்போலிருக்கிறது. ஸ்ரீ பெருமாள் வீதியில்எழுந்தருளுகிறபோது ஸ்ரீவைஷ்ணவர்கள் திவ்ய பிரபந்தங்களை அநுஸந்திக்கிறார்கள். அந்தப் பாசுரங்கள் ஸ்தோத்திரமும் வெசவும், அழுகையும் சிரிப்புமிவைமுதலிய அனேகவிதங்களான சப்தங்களோடு கூடியதாக இருப்பதால் அலங்காரங்களான தோரணங்கள் போலிருக்கின்றன. தோரணம் கண்ணுக்கு இன்பமாக இருக்கிறது. சப்தங்கள் காதுக்கும், அர்த்தங்கள் மனதிற்கும் இன்பமாக இருக்கின்றன. (31)

(௩௨) ப்ரபவந்தி தவீயஸாம் ஸ்வபாவாத்தவ ரத்நாநி
முகுந்தபாதரக்ஷே | அயஸாமிவ ஹந்த லோஹ
காந்தா: கடிநாநாம் மநஸாம் விகர்ஷணாய ||

ஹே முகுந்தபாதரக்ஷே-வாராய் பெருமாளுடைய பாதுகையே! தவ-உன்னுடைய, ரத்நாநி-ரத்தினங்கள், ஸ்வபாவாத்-ஸ்வபாவமாகவே, லோஹகாந்தா:-அயக்காந்தங்கள், அயஸாமிவ-இரும்புகளுடைய போல, தவீயஸாம்-ரொம்பதூரத்திலிருக்கிற, கடிநாநாம்-கெட்டியான, மநஸாம்-மனஸ்ஸுக்களுடைய, விகர்ஷணாய-இழுப்பதின்பொருட்டு, ப்ரபவந்தி-ஸமர்த்தமாகின்றன ஹந்த-ஆச்சர்யம்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் உயர்ந்த இரத்தினங்கள் இழைத்திருக்கின்றன. அயக்காந்தங்கள் இரும்பை எத்தனை தூரத்திலிருந்தாலும் இழுப்பதுபோல் அந்த ரத்தினங்களுக்கு ரொம்ப கெட்டியான மனஸுக்களை இழுப்பதே ஸ்வபாவமாயிருக்கின்றது. உலகில் ஆழ்வாருடைய பாசுரங்களை சில ஸ்ரீ

வைஷ்ணவ ஜாதியாரும் இதர மதக்காரர்களும் பரிஹாஸம் பண்ணுகிறார்கள். மிகத்தெரிந்தவர்களான பக்தர்கள் முகமாக ஒரு பாசுரத்தை ஒருகால் கேட்டார்களேயானால் எவ்வளவு கடுமையாயிருந்தாலும் மனது உருகிப்போகும். இப்படி உருக்குவது அந்தப் பாசுரங்களுக்கு ஸ்வபாவமாயிருக்கிறது. (32)

(௫௩௩) பரிபஶ்யதி தேவி ரங்கநாதே ரஹஸி த்வம்
ஸவிதே நிவிஶ்ய லக்ஷ்ம்யா: । பரிவர்ஷஸி ரத்ந
தாமபி: ஸ்வைரருணஸந்த்யேவ ஸுகோஷ்ணம் சந்தநம் ॥

ஹே தேவி-விளங்காநின்றிருக்கிற பாதுகையே! த்வம்-நீ, ஸ்வை:-தன்னுடைய, ரத்நதாமபி:-ரத்னகாந்திகளாலே, ரஹஸி ஏகாந்தத்திலே, லக்ஷ்ம்யா:-இலக்ஷ்மியினுடைய, ஸவிதே-ஸமீபத்தில், நிவிஶ்ய-இருந்து, ரங்கநாதே-ஸ்ரீரங்கநாதனானவர், பரிபஶ்யதி-கடாக்ஷித்துக் கொண்டிருக்கிறபோது, அருணஸந்த்யேவ-அருணஸந்த்யையைபோல, ஸுகோஷ்ணம்-மிக இன்பமான, சந்தநம்-சந்தனத்தை, பரிவர்ஷஸி-சாத்துகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே உன்பேரில் அனேகவித ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. பெருமாளும் தாயாரும் ஏகாந்தமாக எழுந்தருளியிருக்கும் காலத்தில் தாயார் பேரில் அந்த ரத்னகாந்திகள் அடிக்கிறபோது அருணஸந்த்யை சீதைக்குச் சந்தனம் பூசினது போலிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களைப் பெருமாளும் தாயாரும் திருச்செவி சாத்தும்போது ஒருவருக்கொருவர் அபாரமான ப்ரீதி உண்டாகிறது. (33)

(௫௩௪) தவ ரத்நகராவகுண்டிதம் நவீநம் பரிக்ருஹ்ய ஸ்திர
ஸுகோஷ்ணம் । ஜரதம்ஸுககல்பமேவ தேஹம்
க்ருதிந: கேஶவபாதுகே த்யஜந்தி ॥

ஹே கேஶவபாதுகே-பெருமாளுடைய பாதுகையே! க்ருதிந:-புண்ணியம் பண்ணினவர்கள், தவ-உன்னுடைய, ரத்ந-ரத்தினங்களுடைய, கர-கிரணங்களாகிற கைகளாலே, அவகுண்டிதம்-கொடுக்கப் பட்டிருக்கிற, நவீநம்-புதிதாயிருக்கிற, ஸுகோஷ்ணம்-ரொம்ப இன்பமாயிருக்கிற, ஸ்திரம்-நிலையாயிருக்

கிற, ஸம்வ்யாநம்-வஸ்த்ரத்தை, பரிதத்ய-உடுத்திக்கொண்டு, தேஹம்-சரீரத்தை, ஸாவேதந-ப்ரயாஸமில்லாமல் (ஸந்தோஷமாக) ஜரத்ஸம்வ்யாநவத்-கிழிந்த துணியைப் போல, த்யஜந்தி-விடுகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் காந்தி எவர்மேல் படுகிறதோ, அவர்களுக்கு தேஹம் போகும் ஸமயத்தில் ஒரு தொந்திரவு இல்லாமல் சரீரம் போகிறது. ஆழ்வாருடைய பாசுரங்களின் அபிப்பிராய மறிந்தவர்கள், பகவானை பக்தியோ சரணாகதியோ செய்து இத்தேஹத்தை விடுகிறகாலத்தில் அதாவது பரமபதத்திற்குப் போகிற ஸமயத்தில்,ஒருவன் பழைய துணியை அவிழ்த்து எறிந்து புதுத்துணியை ஸந்தோஷத்துடன் கட்டிக்கொள்வது போல பிரயாஸமில்லாமல் பரமஸந்தோஷத்துடன் போகிறார்கள். மூட ஜனங்கள் 'ஐயோ! போகிறேனே, எல்லாவற்றையும் விட்டு விட்டுப் போகிறேனே' என்று சொல்வார்கள். இந்த ச்லோகத்தை நித்யமாக அநுஸந்தித்து வந்தால் கஷ்டமில்லாமல் தேஹத்தை விடலாம். (34)

(௩௫) ஸமந்ததோ மணிபாதுகே நிபத்தை꞉
க்ருதஸம்ஸ்காரவிசேஷமாத்மரத்னை꞉ ।
கரோஷி ஸதீ பதம் முராரே꞉
கடினேঽஸ்மிந் ஹ்ருதி மே நிவேசயோக்யம் ॥

ஹே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! ஸதீ-நீயானவள், ஸமந்தத꞉-நான்கு பக்கத்திலும், நிபத்தை꞉-இழைக்கப்பட்டிருக்கிற, ஆத்மரத்னை꞉-தன்னுடைய ரத்னங்களாலே, க்ருத-செய்யப்பட்டிருக்கிற, ஸம்ஸ்காரவிசேஷம்-உயர்ந்த பழக்கத்தை யுடைத்தாயிருக்கிற, முராரே꞉-பெருமாளுடைய, பதம்-திருவடியை, கடினே-மிகவும் கெட்டியான, அஸ்மின்-இந்த, மே-என்னுடைய, ஹ்ருதி-மனதில், நிவேசயோக்யம்-வைக்கத் தகுந்ததாக, கரோஷி-பண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேல் அனேகவித ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. மிகவும் கடினமான அந்த ரத்னங்களில் பெருமாள் திருவடியை வைத்துப் பழக்கம் பண்ணியிருக்கிறபடி

யால், மிகக்கடினமான என் மனதில் திருவடியை வைக்கிறார். நம்முடைய மனதில் இருக்கிற ஆசை கோபம் பொறாமை த்வேஷம் இவை முதலிய கெட்ட குணங்களுக்கு எல்லையில்லை. நாம் ஒருகாலும் பெருமாளை நினைக்கமாட்டோம். ஆசாரியாள் தவித்து தவித்துப் பெருமாளைப் பிரார்த்திக்கிறபடியாலே அவர்களுடைய கிருபையாலே பெருமாளை நினைக்கிறோம். (35)

(௫௩௬) நிஜரத்நகராங்குரைர்மதீயா
நபராதாநபநீய தத்தஸாம்யா ।
ரமயா ஸஹிதஸ்ய ரங்கபர்த்து:
பதயோரர்பய பாதுகே ஸ்வயம் மாம் ॥

ஹே பாதுகே-வாராய் பாதுகையே! ஸ்வயம்-தானே, நிஜ-தன்னுடையதான, ரத்ந-இரத்தினங்களுடைய, கர-கிரணங்களுடைய, அங்குரை:-நுனிகளாலே, மதீயாந்-என்னுடையதான, அபராதாந்-குற்றங்களை, அபநீய-போக்கடித்து, தத்த-கொடுக்கப்பட்டிருக்கிற, ஸாம்யா-தன்னைப்போலிருக்குமையையுடையவளாய்க்கொண்டு, ரமயா-மஹாலக்ஷ்மியோடு, ஸஹிதஸ்ய-கூடிக்கொண்டிருக்கிற, ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, பதயோ:-திருவடிகளிலே, மாம்-என்னை, அர்பய-சேர்ப்பிக்க வேண்டும்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்த ரத்னங்களின் காந்திகளை என்பேரில் படும்படி செய்து என்னுடைய குற்றங்களைப்போக்கி உன்மாதிரி பண்ணித்தாயார் பெருமாள் திருவடிகளிலே என்னை நீயே சேர்ப்பிக்கவேண்டும். நல்ல ஆசாரியர்கள் தன்னையடைந்தவர்களைத் தங்கள் மனக்கவலைகளாலும் நல்ல ஸங்கதிகளைப் பலதடவைச்சொல்லிக்கொடுப்பதாலும் அவர்களுடைய கெட்ட குணங்களைப் போக்கி பெருமாள் திருவடியில் சேர்ப்பிக்கிறார்கள். (36)

(௫௩௭) ரஶ்மிஜாலபரிவேஷவத்தயா
ரங்கப்ருத்விபதிரத்நபாதுகே ।
விஶ்வமோஹநவிஹாரஹாரிணீ
வாகுரேவ விததா விராஜஸே ॥

ஹே ரஙகஸம்ருத்தித பாதுகே-வாராய் ஸ்ரீரங்கநாதனுடைய கல்லிழைத்த பாதுகையே! ரச்மி-கிரணங்களுடைய, ஜாலவர்ஷ-வர்த்துளமாக இருக்கிற கூட்டங்களாலே, ஸாந்த்ர-இன்பமாக இருக்கிற, த்வம்-நீ, விச்வஜனந-எல்லா லோகங்களுடைய கண்ணாகிற, விஹங்கமாலினீ-பக்ஷிகளைப் பிடிக்கிறதாயும், விததா-விரிக்கப்பட்டதாயு மிருக்கிற, வாகுரேவ-வலைபோல, விராஜஸே-விளங்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரிலிழைத்த உயர்ந்த காந்தி உன்னைச்சுற்றிச் சக்கிரமாக இருக்கிறது. அதைப்பார்க்கிறபோது உலகங்களுடைய கண்களாகிற குருவிகளைப் பிடிப்பதற்கு வலை வீசியிருப்பதுபோலிருக்கிறது. நல்ல ஆசாரியர்கள் முகத்தில் பிரும்ம தேஜஸ்ஸு, வாக்கில் இனிமையான சப்தம், தயை, பொறுமை, பக்தி முதலிய உயர்ந்த குணங்கள் இவைகளால் நிரம்பியிருக்கிறார்கள். அவர்களை எந்த ஜனங்கள் பார்த்தாலும் ராம கிருஷ்ணாதிகளை ஸேவித்தாப்போல மிகுந்த ஆச்சரியத்தை யடைகிறார்கள். (37)

(ருஅ) ஸநஸாம் ஸ்வஜவிகாஸஹேதுபி:
ஸேவிதா மணிமயூகைர் ஹாஸகைர் ஸ்வேத: ।
பாதுகே பஜஸி ஸத்பிராச்ரிதாம்
தேவி விஷ்ணுபதஸம்பதம் நவாம் ॥

ஹே தேவி பாதுகே-விளங்காநின்றிருக்கிற வாராய் பாதுகையே! மநஸ-மனஸ்ஸுக்களாகிற, ஸ்வஜ-தாமரைப்பூக்களுடைய, விகாஸஹேதுபி:-மலர்ச்சிக்குக் காரணமாயிருக்கிற, மணிமயூகை:-ரத்தினக் கூட்டங்களாகிற, ஹாஸகைர்:-சூரியர்களாலே, ஸேவிதா-அடையப்பட்டும், ஸத்பி:-பெரியோர்களாலே, நக்ஷத்திரங்களாலே, ஆச்ரிதா-அடையப்பட்டிருக்கிற, த்வம்-நீ, நவாம்-புதிதாயிருக்கிற, விஷ்ணு-பெருமாளுடைய, பத-திருவடியினுடைய, ஆகாசத்தினுடைய, ஸம்பதம்-சோபையை, பஜஸி-அடைகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரிலிழைத்திருக்கிற ரத்னங்களை ஸேவித்தால் சூரியனைக்கண்ட தாமரைப்பூபோலே மனது மலர்ந்து விடுகிறது. எத்தனையோ பெரியவர்கள் உன்னை க்ஷேமத்துக்காக அடைந்திருக்கிறார்கள். உன்னால் பெருமாளுடைய திருவடிக்கு அழகு முதலிய அனேக சம்பத்துக்கள் ஏற்படுகின்றன. பிரபாகரன் என்று சூரியனுக்குப் பெயர். காந்தியுள்ளது என்றும் அர்த்தம். ஸத் என்றால் நக்ஷத்திரத்திற்கும் பெயர். சூரியனும் நக்ஷத்ரமும் ஒரே காலத்தில் சேர்ந்த ஆகாசம் போலிருக்கிறாயென்று ஒரு அர்த்தமாகிறது. ஆழ்வார்கள் முதலான ஆசாரியர்களுடைய ரத்னம்போன்ற பாசுரங்களையும் நல்ல குணங்களையும் அநுபவித்தால் எவ்வளவு கெட்ட மனதை யுடையவர்களாயிருந்தாலும் மஹாலக்ஷ்மி விளங்கும்படியான தாமரைப்பூப்போலாய்விடும். ஆகையால் அவர்களை எல்லோரும் வந்து ஆச்ரயிக்கிறார்கள். ஆகாயத்தில் சூரியன் புறப்பட்டு உலகத்துக்கு இருட்டைப் போக்குவதுபோல ஆசாரியர்கள் பூமியில் அவதரித்து எல்லாருடைய அக்ஞானமாகிற இருட்டைப்போக்கடிக்கிறார்கள்.

(௫௧௧) ஶயிதரி ஃபணீஶ்வரதல்பே ஶௌரே:
ஸ்வயம் ஶ்ரிதபதோபதாநபார்ஶ்வா।
மணிசயஜுஷா கரேண ஶநை:
ஸ்ப்ருஶஸி பதாவநி பதயோர்யுக்மம் தத்॥

ஹே பதாவநி–வாராய் பாதுகையே! ஶயிதரி–படுத்துக் கொள்ளப்பட்டிருக்கிற, ஃபணீஶ்வரதல்பே–ஆதிசேஷனையுடைத்தாயிருக்கிற, ஶௌரே:–பெருமாளுடைய, ஶ்ரித–ஏறப்பட்டிருக்கிற, பதோபதாந–திருவடித்தலையணையினுடைய, பார்ஶ்வா–பக்கத்தையுடைத்தாயிருக்கிற, த்வம்–நீ, ஸ்வயம்–தானாகவே, மணிசயஜுஷா–ரத்னங்களுடையகூட்டத்தையடைந்திருக்கிற, கரேண–கிரணமாகிற ரத்னங்களை யடைந்திருக்கிற கையினாலே, தத்–அந்த, பதயோ:–திருவடிகளுடைய, யுக்மம்–இரண்டை, ஶநை:–மெள்ள, ஸ்ப்ருஶஸி–தொடுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீ ரங்கநாதன் ஆதி சேஷன் மேல் சயனித்துக்கொண்டிருக்கும்போது, நீ திருவடித்தலையணை

யின் பக்கத்திலிருக்கிறாய். உன் பேரிலிருக்கிற ரத்னகாந்திகள் திருவடியில் படுகிறது. அதைப்பார்த்தால் கைகளால் திருவடியைப் பிடிப்பது போலிருக்கிறது. நல்ல ஆசாரியர்களுடைய மனோவாக்கியங்களுடைய வியாபாரமெல்லாம் ஸ்வபாவமாகவே எப்பொழுதும் பெருமாளைப்பற்றினதாகவே இருக்கிறது. (39)

(௪௰) பவத்யந்தே த்வாம் ப்ரணதஸ்ய ஜந்தோ
ததோகோऽக்ரஜ்வலனம் த்வத்ரத்னபாஸா: |
யதோ நாட்யா மத்யமயா விநிர்யந்
கதிம் விந்தேத் கேசவபாதரக்ஷே ||

ஹே கேசவபாதரக்ஷே-வாராய் ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகையே! அந்தே-கடைசிகாலத்தில், த்வாம்-உன்னை, ப்ரணதஸ்ய-வணங்கியிருக்கிற, பக்தியாவது, சரணாகதியாவது பண்ணியிருக்கிற, ஜந்தோ:-பிராணியினுடைய, தத்-பிரஸித்தமாயிருக்கிற, ஓக:-ஹ்ருதயமென்கிற இடமானது, த்வத்ரத்னபாஸா:-உன்னுடைய ரத்னகாந்திகளாலே, அக்ரஜ்வலனம்-நுனியில் வெளிச்சத்தையுடையதாக, பவதி-ஆகிறது. யத:-யாதொரு வெளிச்சத்தினாலே, மத்யமயா-நடுவிலிருக்கிற, நாட்யா-நாம்பினால், விநிர்யந்-வெளிக்கிளம்புகிறவன், கதிம்-அடையவேண்டிய இடமான பெருமாளை, விந்தேத்-அடைவானே.

(கருத்து) பெருமாளிடத்தில் பக்தி பண்ணுகிறவனும் சரணாகதி பண்ணுகிறவனும் கடைசிகாலத்தில் இச்சரீரத்தைவிட்டுக் கிளம்பும் போது, ஹ்ருதயத்திலிருந்துத் தலைக்குப்போகிற நாடியால் கிளம்பினால் பரமபதத்துக்குப் போவதாகச் சொல்லியிருக்கிறது. உன் பேரிலிருக்கிற ரத்னகாந்தியாகிற வெளிச்சத்தினால் நடு நாம்பு ஜீவனுக்குத்தெரிந்து அவ்வழியாகப் பரமபதத்துக்குப் போகிறான். ஆசாரியாளுடைய அநுக்கிரஹத்தினால் தான் பகவானாலே வெளிச்சம் காட்டப்பட்டு ஜீவன் முக்தியை அடைகிறான். (40)

(௫௰௧) அஶிதிலகுணபத்தா ரஶ்மிஜாலைர்மணீநாம்
துரதிகமதடம் ந: பாரமாரோபயந்தீ ।
கமலநயநநாதம் கர்ணதாரம் ததாநா
பவஸி பவபயோதௌ பாதுகே போதபாத்ரீ ॥

ஹே பாதுகே-வாராய் பாதுகையே, மணீநாம்-ரத்னங்களுடைய, ரஶ்மி-கிரணங்களுடைய, ஜாலை:-கூட்டமாகிற கயிற்றின் கூட்டங்களாலே, அஶிதில-தளராமல், பத்தா-கட்டப்பட்டும், துரதிகமதடம்- ஒருவராலும் கஷ்டப்பட்டும் அடையமுடியாமலிருக்கிற, பாரம்-ஸம்ஸாரத்திற்கு அக்கரையான பரமபதத்தை, ஆரோபயந்தீ-ஏற்றிவைக்கிறவளாக இருக்கிற, ஆத்யம்-எல்லாவுலகத்திற்கு முன்புள்ளவரான, கமலநயநம்-தாமரைப்பூபோன்ற திருக்கண்களையுடைய பெருமாளாகிற, கர்ணதாரம்-ஓடக்காரனை, ததாநா-தரியாநின்றிருக்கிற, த்வம்-நீ, ந:-எங்களுக்கு, பவ-ஸம்ஸாரமாகிற, பயோதே:-ஸமுத்திரத்திற்கு, போதபாத்ரீ-ஓடமாக, பவஸி-ஆகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப்பார்த்தால் நாங்கள் ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு ஒரு ஓடம் மாதிரியிருக்கிறது. உன்பேரிலிருக்கிற ரத்நகாந்தி கயிறுபோலவும் உன்பேரில் எப்பொழுதுமிருக்கிற ஸ்ரீ ரங்கநாதனைப்பார்த்தால் ஓடக்காரனாகவுமிருக்கிறது. பெருமாள் உயர்ந்த குணமுள்ளவர்களாயும் தன்னை ஸ்வாதீநப் படுத்திக்கொண்டவர்களாயுமிருக்கிற ஆசாரியர்களைக் கொண்டு இஜ்ஜீவர்களைப்பரமபதத்துக்கு அழைத்துக்கொண்டு போகிறார்கள். (41)

(௫௰௨) மணிகிரணகணைஸ்தே கல்பிதே கர்பகேஹே
ஶ்ரமயரிவ கர்ஜ்ஞசவாம் பார்க்ஷ்ரஸ்ய ஸௌரி:
பரதி சரணரக்ஷே பக்திபாஶாவபத்தம்
ஹ்ருதயஹரிணயூதம் ப்ராணிநாம் ரங்கநாத: ॥

ஹே சரணரக்ஷே-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே! ரங்கநாத:-ஸ்ரீ ரங்கநாதனானவர், தே-உன்னுடைய, மணி-ரத்தினங்களுடைய, கிரண-காந்திகளுடைய, கணை:-

கூட்டங்களால், க்லுப்தே-ஏற்படுத்தப்பட்டிருக்கிற, முஞ்ஜகுல்மே-ஒருவிதமான புதரிலே, ம்ருகயு:-வேடனானவன், ஸத்ரம்-தகுந்ததான, ஸாரங்கீவ-பெண்மானைப்போல, ஸத்ரம்-க்ஷேமத்தைப் பண்ணுகிறவளான, த்வாம்-உன்னை, புரஸ்க்ருத்ய-முன்னிட்டு, பக்தி-பக்தியாகிற, பாஶ-கயிற்றினாலே, ஸம்பத்தம்-கட்டப்பட்டிருக்கிற, ப்ராணிநாம்-ஜனங்களுடைய, ஹ்ருதய-மனஸ்ஸுக்களாகிற, ஹரிணயூதம்-மான்களுடையகூட்டத்தை, ஹரதி-பிடிக்கிறார்.

(கருத்து) ஏ பாதுகையே! ஒரு வேடன் புதரில் உட்கார்ந்து அங்கே ஒரு பெண்மானை அங்கே காட்டி மற்றமானைப்பிடிப்பதுபோல, அனேக வர்ணமுள்ள உன் காந்தியாகிற புதரிலே பெருமாள் இருந்துகொண்டு பக்தியாகிற வலையில் அகப்பட்டுக்கொண்ட ஜனங்களுடைய மனதாகிற மான்களைப் பிடிக்கிறார். பெருமாள் இந்தப் பிரகிருதி மண்டலத்தில் பிள்ளை பெண்டாட்டி பணம் இவை முதலிய விஷயசங்கதிகளைக் கண்டு மயங்கிக்கிடக்கிற ஜீவர்களை ஆழ்வார் முதலான நல்ல ஆசாரியர்களைக் கொண்டு ஜீவன், பெருமாள் ஸம்ஸாரம் இவர்களின் ஸங்கதிகளைத் தெரிவித்துத்தன்னிடத்தில் பக்தியுண்டு பண்ணிப் பரமபதத்திற்கு அழைத்துக் கொண்டு போகிறார். (42)

(௫௨௩) பரிசிதபதபத்மா பாதுகே ஶௌரேஸ்த்வம்
வஸதி புஜமத்யே கௌஸ்துபோயம் ததாபி|
ஸ்வபதி ஸ்ப்ருஹயஸ்த்ராத்தேஜஸா ஸ்வைரஸாந்த்ர
ஶலபிததுரிதாநாம் தாவகாநாம் மணீநாம் ||

ஶௌரேர்-ஸ்ரீ ரங்கநாதனுடைய, பாதுகே-வாராய் பாதுகையே! த்வம்-நீ, பரிசித-பரிசயம் பண்ணப்பட்டிருக்கிற, பத-திருவடியினுடைய, பத்மா-அடியையுடைத்தாயிருக்கிறாய், அயம்-இந்த, கௌஸ்துப:-கௌஸ்துப ரத்னமானது, புஜமத்யே-திருக்கைக்கு நடுவான திருமார்பிலே, வஸதி-இருக்கிறது. ததாபி-அப்படியிருந்தாலும், ஶலபித-விளக்கு வெட்டுப்பூச்சியாகப் பண்ணப்பட்டிருக்கிற, துரிதாநாம்-பாபத்தையுடைத்தாயிருக்கிற, தாவகாநாம்-உன்னுடையதான, மணீநாம்-ரத்னங்களு

டைய, ஸவ்ய-ரொம்ப அதிகமான, ஸம்ருத்தி-பெருமையையுடைய, தேஜஸா-காந்தியினாலே, ஸூப்ரம்-மிகவும், சயஸ்தா-கீழே, ஸவதி-இருக்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே! நீ பெருமாளுடைய திருவடியிலிருக்கிறாய். கௌஸ்துப ரத்நம் திருமார்பிலிருக்கிறது. இருந்தாலும் ஸகல பாபத்தையும் போக்குவதான உனது ரத்ன காந்தியினால் நீ அதற்கு மேல் பட்டிருக்கிறாய். ஆழ்வார் என்பவர் சூத்திர ஜாதியில் அவதரித்தாலும் ஜ்ஞானபக்திவைராக்கியம் முதலான உயர்ந்த குணங்களாலே நித்யஸூரிகளுக்கெல்லாம் மேலானவராக இருக்கிறார். (43)

(ருஉச) கஷ்யேண பூரிநகவயிணதளெ ஜனதுஜாநெ
ஹவஸதெஷ விஷ்வகநெஷ ஜகதி தமஸா பாதுகெ
தாஹுஸெட | ஸ்தாநாநொகெஷு ஸணிமணெ
வனுாவஸெஹயஹீவாஸ்வஷ்ணெ ஸஹகுமயா
ஜாமரவிகஸ்ய யதிநஃ ॥

ஹெ பாதுகெ-ஹராய் பாதுகையே! கஷ்யேண-பிரும்மாவின் நாள்களுடைய கூட்டமாகிற, பூரிந-பகலினுடைய, வயிணதளெ-முடிவிலே, (அதாவது ஸாயங்காலத்திலே) ஜனது-பிராணிகளுடைய, ஜாதெ-கூட்டமானது, ஹவஸதெ-பெருந் துக்கத்தை அடைந்தபோது, தாஹுஸெட-அப்பேர்ப்பட்டதான, (அதாவது பெரியதான) தமஸா-இருளாலே, ஜகதி-லோகமானது, விஷ்வக்-நாலுபக்கத்திலும், வ்யாப்தெ-வியாபிக்கப்பட்டபோது, ஸஹயாஸஹ-மஹாலக்ஷ்மியுடன்கூட, ஜாமரவிகஸ்ய-விழித்துக்கொண்டிருக்கிற, யதிநஃ-பதினெட்டு வயதுள்ளவனான ரங்கநாதனுடைய, வாஸவெஹ-இருப்பிடத்தினுடைய, ஹீவாஃ-விளக்குகள், ஸ்தாந-பரித்த, ஷோணெகெஃ-பிரகாசத்தையுடைய, தவ-உன்னுடைய, ஸணிமணெஃ-ரத்நக்கூட்டங்களாலே, ஸம்வக்ஷ்ணெ-ஏற்படுகின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! இப்போது நடக்கிற யுகங்களில் ஆயிரம் சதுர்யுகம் பிரும்மாவுக்கு ஒரு பகல். அதே மாதிரி ராத்திரியும். பிரும்மாவின் அஸ்தமயகாலத்தில் இந்த உலகமும்

இவ்வுலகத்திலுள்ளவை அனைத்தும் போய் விடுகின்றது. ஒரே இருள் மூடிவிடுகிறது. அந்த சமயத்தில் மஹா லெக்ஷ்மியுடன் பெருமாள் எழுந்தருளியிருக்கிறார். அவருக்கு உன்னுடைய பிரகாசமான ரத்தினங்கள் விளக்குகளாக இருக்கின்றன. கலிகாலத்தில் பெருமாளுக்குச்சரியாக ஆராதனம் நடைபெறவில்லை. எல்லாரும் மிகக்கெடுதலுள்ளவர்களாக இருக்கிறார்கள். இராக் காலங்களில் பெருமாளை தேவதைகள் ஆராதனம் பண்ணுவதாகச் சொல்லியிருக்கிறது. ஸ்ரீரங்கநாதனுக்கு வருஷத்தில் ஒரு நாள் ஸ்ரீ விபீஷணாழ்வான் ஆராதனம் பண்ணுவதாகச் சொல்லுகிறார்கள். அதேமாதிரி உலகில் பெருமாளைக் கொண்டாடுவதற்குக் கலி தோஷத்தினால் ஜனங்களுக்கு யோக்யதை இல்லாதபோது ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்களைக் கேட்டுத் தாயாரும் பெருமாளும் ஸந்தோஷப்படுகிறார்கள். கலியுகத்தில் நல்ல ஸங்கதிகள் ஒன்றும் தெரியாமலிருக்கிறபோது ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியில்லாதபோனால் பெருமாளிருக்கிற இடமே தெரியாது. (44)

(௫௨) ஸ்ரீரங்கேந்தோ³ஶ்சரணகமலத்³வந்த்³வஸேவாஸக³ர்வ
பாதா³ரூடா⁴யாம் த்வயி ஸுரஜாநாநதாநு கிரீட
ஸீமாஸு ! தேஷாம் மௌளிமணிபி⁴ரநகை⁴ஸ்தாவ
காநாம் மணீநாம் லேஶாலேஶோபி ஸம்ப⁴வதி விஶ்லேஷா
ஸம்ஸர்க³தோ³ஷோஜ்ஜி²தாநாம் ॥

ஹே பாதுகே-வாராய் பாதுகையே! த்வயி-நீயானவள், ஸ்ரீரங்கேந்தோ:-ஸ்ரீரங்கவிமானத்துக்கு சந்திரன்போன்ற ரங்கநாதனுடைய, சரணகமல-தாமரைப்பூப்போன்ற திருவடிகளுடைய த்³வந்த்³வ-இரண்டினுடைய, ஸேவா-ஸேவிக்கிறத்தினாலே உண்டான, ஸகர்வா-கர்வத்தினாலே, ஆநதாநு-வணங்கியிருக்கிற, ஸுரஜாநாம்-தேவதைகளுடைய, கிரீடஸீமாஸு-கிரீடப்பிரதேசங்களை, ஆரூடா⁴யாம்-ஏறினபோது, தேஷாம்-அந்த தேவதைகளுடைய, அநகை⁴:-குற்றமில்லாமலிருக்கிற, மௌளிமணிபி⁴:-தலையிலிருக்கிற ரத்நங்களோடு, ஸம்ஸர்க³-பயத்தினுடைய, (ரத்ந தோஷத்தினுடைய) லேஶ-கொஞ்சத்தினாலே, உஜ்ஜி²தாநாம்-விடப்பட்டிருக்கிற, தாவகாநாம்-உன்னுடையதான, மணீநாம்-

ரத்நங்களுக்கு, மிடிஃ-ஒன்றுக்கொன்று, கெஶாகெஶி-மயிர்பிடிச் சண்டையானது, ஸூலவதி-உண்டாகிறது.

(கருத்து) பாதுகையே! நீ பெருமாள் திருவடியில் இருக்கி ரேனென்கிற கர்வத்தினாலே வணங்கின தேவதைகள் கிரீடத்தில் ஏறினபோது உனது ரத்னங்களுக்கும் அந்தக் கிரீடங்களின் ரத் னங்களுக்கும் ஒன்றுக்கொன்று பயமில்லாமல் சண்டையுண்டா கிறது ஆழ்வார், பெருமாளுடைய பரிபூர்ண கடாக்ஷத்தினாலே ஸகல விஷயங்களையுமுள்ளபடி நேர அறிந்தவராகையாலே அவ ருடைய பாசுரங்கள் வேதம் முதலியவைகளோடு தைர்யமாக சண்டை போடுகிறது. வேதம்போல்கொண்டாடப்படுகிறது.(45)

( ௪௬ ) ஸவத்ரு ஶ்ரூவஶுரஶ்ரிவஹ்ஜுரதநாதூணம் ஷிரம் விஹுதொ ஊதமஹாயவவாஃகெ நதாவா நஹுவெஷூஷாஶாதகவெெஃ । உரொக்ஷூ உராஜூஜிஹஙவிஷ ஆஃவாருகொவாநயஜாஶ ஷிதூகமொரவெதூஷதிகாஷ்த்ராஷுவஜும் வவாஃ ॥

ஊதஃ-தாயாரான, ஊயவவாஃகெ-பெருமாளுடைய பாது கையே! ஷிரம்-நிலையாயிருக்கிற, வஹ்ஜுர-கூடுபோலிருக்கிற, ஸவக-உன்னுடைய, ரத்நவஶ-ரத்நக்கல்லுக்களுடைய, ரஶ்மி- காந்தியாகிற, தநாதூணம்-கவசத்தை,(சட்டையை) விஹுதஃ- போட்டுக்கொண்டவர்கள், உரொ-நிரம்ப அதிகமாக, உக்ஷூ-கர்வ த்தையடைந்திருக்கிற, உராஜு-கெட்டப் பணக்காரர்களாகிற, ஜிஹஙு-பாம்பினுடைய, விஷ-புத்தினுடைய, ஜாஶுதி-ஜ்வாலைக் குத் தோழனுகயிருக்கிற, அதுபோலிருக்கிற, கமொர-கெட்டி யாக இருக்கிற, வெதூஷதிகா-கொடிப்பிரம்பினாலே, உத்த-கொடுக் கப்பட்டிருக்கிற, கஷுவம் உரு-சந்திரகலைபோல கழுத்தில் வைக் கிற ஒரு விதமானகையினுடைய ஸன்னிவேசத்தை உடைத்தா யிருக்கிற, வவாஃ-சரீரத்தை, ஆகாவெெஃ-பாபரப்புள்ளதான, ஹஙெஷஃ-கைகளாலே, வாநஃ-மறுபடி, நதாஷூஶஷி-தொடு கிறார்களில்லே.

(கருத்து) ஏ பாதுகையே! உனது ரத்னகாந்திகளை சட்டை மாதிரி த்ருடமாய்ப் போட்டுக்கொண்டவர்கள், கர்வம் முதலிய

கெட்டகுணங்கள் நிறைந்திருக்கிற கெட்ட பணக்காரர்களுடைய வீடு வாசல்களில் போய் வாசற்காப்பான் அதிக கோபத்தோடு பிரம்பைக் கழுத்தில் வைத்துத் தள்ளப்பட்டவர்களுடைய உடம்பைத் தொடுகிறதில்லை. ஆழ்வாருடைய பாசுரத்தின் தாத்பரியத்தை நன்ருய் அறிந்து அந்தப்படி அனுஷ்டிக்கிறவர்களுக்கு அதிக கெட்டகுணங்களோடு கூடிய கெட்ட பணக்காரன் வீட்டு வாசல்களில் போய் அவமானப்பட்டவனைத் தொடுவதற்குப் பிடிக்கிறதில்லை அதற்கு முன் தொட்டிருக்கலாம். அவனைப் பற்றி இப்போது கவலைப்படுகிருர்கள். விவேகிகளுக்குப் பணமே வேண்டாம். வேண்டுமானல் இருந்தவிடத்திலேயே வரும். பணத்துக்குப் போவதாக இருந்தாலும் எத்தனையோ நல்ல பணக்காரனிருக்கிருன். மிகுந்த கெட்டவனிடத்தில் போய் அவமானப்படுவது மகாசபலத்தின் கொடுமை. (46)

(௪௭) ஸம்வர்தோதித ஸூர்ய கோடி ஸத்ருசீம் ரங்கேசபாதாவநி வ்யக்தம் வக்ஷி வத த்யதந்தர நிகர ஜ்யோதிஷ்டடோத்தாம் ஸ்பு டாம் । தந்நோ தத்பர நாரதாதி பரிஷந் மத்யே நிவேசாய ந: ஸர்வோர்த்வாஸ்பதஸீம ஸந்மதி ஸஹிஷ்ணும் த்வதீயம் ஸ்வகம் தம: ॥

ரங்கேசபாதாவநி-ரங்கநாதனுடைய பாதுகையே! த்வம்-நீ, ஸம்வர்த-பிரளயகாலத்தில், உதித-உண்டாயிருக்கிற, ஸூர்ய கோடி-கோடி ஸூர்யர்களுக்கு, ஸத்ருசீம்-ஸமானமாயிருக்கிற, உத்தாம்-நிரம்ப அதிகமாக இருக்கிற, வ்யக்த-அலங்காரமாக இருக்கிற, ரத்ந-ரத்நங்களுடைய, நிகர-கூட்டங்களுடைய, ஜ்யோதி:-காந்தியினுடைய, படாம்-கூட்டத்தை, வஹஸி-உண்டுபண்ணுகிருய், யத்-என்பது யாதொன்றுண்டோ, தத்-அதை, தத்பர-அந்தப் பெருமாளைத் தவிர வேறு ஒருவரை நினைக்காமலிருக்கிற, ஸூரி-அநந்தன், கருடன் முதலானவர்களுடைய, பரிஷத்-கூட்டத்தினுடைய, மத்யே-நடுவில், ந:-எங்களுடைய, நிவேசாய-வைப்பதற்காக, தாத்ருக்-அப்பேர்ப்பட்டிருக்கிற, (மிக உயர்ந்ததான) ஸ்தாந-பரமபதத்திலிருக்கிறத் திருவேயுண்டான, ஸந்மதி-ஸந்தோஷத்தில்கூட, ஸம்யம்-ஒன்றும் தெரியாமல் பண்ணுகிற, ஸ்வகம்-எங்களுடைய, தம:-

அஜ்ஞானத்தை, த்வாந்தம்-போக்கடிப்பதற்கு என்று, உத்ப்ரே-க்ஷிக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேல் உயர்ந்த ரத்னங்களிழைத்திருக்கின்றன. அதன் காந்தி பிரளயகாலத்தில் உதிக்கும் கோடி ஸூர்யர்களின் காந்திபோலிருக்கிறது. நீ அவ்வளவு காந்தியை யுண்டுபண்ணுகிறது எதற்காகவென்றால் இங்கப் பிரகிருதி மண்டலத்தில் எல்லையில்லாத யாதனையை அநுபவித்துக்கொண்டிருக்கிற ஜனங்களை "ஒருவித கஷ்டமில்லாமல் பரம ஸுகத்தைக்கொடுக்கக்கூடிய பரமபதமென்று ஒரு இடமிருக்கிறது. அவ்விடத்துக்கு உங்களை யழைத்துக்கொண்டு போகிறேன்" என்று பெருமாளும் அவர்கள் பக்தர்களும் எவ்வளவு சொன்னாலும் அது மனதிற்குப் படமாட்டேனென்கிறது. அவ்வளவு பெரிய இருட்டைப் போக்கடிப்பதற்காகவென்று நினைக்கிறேன். ஆழ்வார் ஜீவர்களுக்கிந்த உலகில் வெறுப்பையும், பரமபதத்தில் ஆசையையுமுண்டுபண்ணுவதற்காக நான்குப் பிரபந்தங்களிலும் பலவிதமாக எல்லையில்லாமல் ஸாதிக்கிறார். (47)

(௩௨அ) ஸலீலம் விந்யஸ்ய த்வயி சரணரக்ஷே நிஜபதம்
யத்ருச்சாநிக்ஷிப்தே விஹரதி ஹரௌ ரங்கரஸிகே ।
திசாமஷ்டௌ ஸௌதாந் ஜநயஸி ததா நிஸ்துலருசி
மணிச்சாயாச்சாயாஸமதிகஸமித்கேதுவ்ருதிகாந் ॥

ஹே சரணரக்ஷே-காராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! ரங்கரஸிகே-ரங்கவிமானத்தில் ஆசையுள்ள, ஹரௌ-பெருமாள், த்வயி-உன்னிடத்தில், நிஜபதம்-தன் திருவடியை, ஸலீலம்-விளையாட்டுடன், விந்யஸ்ய-வைத்து, யத்ருச்சாநிக்ஷிப்தே திடீரென்று கிளம்பி, விஹரதி-விளையாடுகிறபோது, த்வம்-நீ, ததா-அந்த ஸமயத்தில், அஷ்டௌ-எட்டான, திசாம்-திக்குகளுடைய ஸௌதாந்-உப்பரிக்கைகளை, நிஸ்துல-பூர்ணமாக, ருசி-சேர்ந்திருக்கிற, மணி-ரத்நங்களுடைய, சாயா-காந்திகளுடைய, சாயா-வியாஜத்தினாலே, ஸம-அதிகமாக, ஸமித-சேர்க்கப்பட்டிருக்கிற, கேது-த்வஜங்களுடைய, வ்ருதிகாந்-சம்பந்தத்தையுடைத்தானதாக, ஜநயஸி-பண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உயர்ந்த ரத்தினங்களிழைத்த உன்னைச் சாற்றிக் கொண்டுப் பெருமாள் வீதியில் எழுந்தருளுகிறார். உனது ரத்ன காந்திகள் ஆகாசமெல்லாம் பாவியிருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் அநேக வர்ணங்களோடு கூடிய த்வஜங்களை ஆகாசத்தில் நாட்டியிருக்கிறாப் போலிருக்கின்றன. ஒரு ஜீவனுக்கு அஜ்ஞாத ஸுக்ருதம் முதலியவைகளை முன்னிட்டு நல்ல ஆசாரிய கடாக்ஷமும் பகவத் கடாக்ஷமும் வந்தால் அவனுடைய நற்குணங்களும் நல்வார்த்தைகளும் நற்செய்கைகளும் ஸகல திக்குக்களிலும் விசேஷ கீர்த்தியை யுண்டுபண்ணிக் கொண்டு பரவுகின்றன. (48)

(௪௯) மஹார்கை4ராச்லிஷ்டாம் மணிபி4ரவதூ4தத்3யு
மணிபி4: ப்ரயத்நாத் க்ஷேத்ரஜ்ஞைரதி4க3தபதா3ம் அம்ப
ப4வதீம் | முகுந்தே3ந த்ராதும் பத3கமலயோ: பதே3 வி
நிஹிதாம் நிராபாயாம் மந்யே நிதி4மநவத்3யாநாம்
நிரவதி4ம் ||

அம்ப-தாயாரான, பாதுகே-வாராய் பாதுகையே! மஹார்கை4:-அதிக விலைபெற்றதான, (அதாவது விலையே இல்லாமலிருக்கிற) அவதூ4த-அவமானம்பண்ணப்பட்டிருக்கிற, த்3யுமணி-சூரியர்களையுடைத்தாயிருக்கிற, மணிபி4: - ரத்நங்களாலே, ஆச்லிஷ்டாம்-இழைக்கப்பட்டும், க்ஷேத்ரஜ்ஞை: - ஜீவர்களாலே, ப்ரயத்நாத்-மிகவும் பிரயாஸப்பட்டு, அதி4க3த-அறியப்பட்டிருக்கிற, பதா3ம்-ஸ்வரூபத்தையுடைத்தாயிருக்கிறதும், முகுந்தே3ந-பெருமாளாலே, த்ராதும்-லோகங்களைக்காப்பாற்றுவதற்கு, பத3கமல-தாமரைப்பூபோன்ற திருவடியினுடைய, பதே3-அடியில், விநிஹிதாம்-வைக்கப்பட்டிருக்கிறதும், நிராபாயாம்-ஒருவித உபத்திரவமுமில்லாமலிருக்கிற, ப4வதீம்-உன்னை, அநவத்3யாநாம்-குற்றமில்லாத வாக்குக்களுக்கு, நிரவதி4ம்-எல்லையில்லாமலிருக்கிற, நிதி4ம்-இருப்பிடமாக, மந்யே-நினைக்கிறேன். (க்ஷேத்ரஜ்ஞை:-புதையல் இருக்கிற இடம் தெரிந்தவர்களாலே, முகுந்தே3ந-முகுந்தம் என்கிறபுதையலோடுகூட, பத3கமல-தாமரைப்பூவினுடைய, பதே3-அடியில் என்று ஒரு அர்த்தம்.)

(கருத்து) ஏ பாதுகையே! சூரியனைக் காட்டிலும் அதிக காந்தியுள்ளதான விலையற்ற ரத்னங்களாலிழைக்கப்பட்ட உன்னைப் பெருமாள் திருவடியில் சாத்திக்கொண்டிருக்கிறார். அதைப் பார்த்தால் உலகங்களைக் காப்பாற்றுவதற்கு ஒரு பெரிய புதையலை வைத்துக்கொண்டிருக்கிறாப் போலிருக்கிறது. ஆழ்வாரிடத்திலிருக்கிற உயர்ந்த குணங்களுக்கும் பாசுரங்களுக்கும் விலை மதிக்கமுடியாது. சூரியன் வெளியிருட்டைச் சிலவிடங்களில் போக்கினான். இவைகள் நெடுநாளாய் வந்த அஜ்ஞான இருட்டைப் போக்குகின்றன. ஜனங்களாலே இவர் போன்ற நல்ல ஆசாரியாளைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஸ்ரீ பெருமாள் ஸகல லோகங்களையும் ரக்ஷிப்பதற்காக நல்ல ஆசார்யர்களைப் பூமியில் அவதரிப்பிக்கிறார். எப்பொழுதுமிவர்களிடத்திலேயே திருவடியை வைத்துக்கொண்டிருக்கிறார். வேதம் ஸ்மிருதி இதிஹாஸம் புராணம் இவைபோன்ற வாசகுக்களுக்கு எல்லையில்லாத இருப்பிடமாக இருக்கிறார். (49)

(௫௰) தாபத்ரயம் நிரஸ்யதி ஶமயதி கஷாயாந் விஶோஷயதி பங்கம்। தேஜஸ்த்ரிதயமத இதம் தே மந்யே ரங்கராஜபாதுகே தேஜ: ॥

இதி ஶ்ரீ கவிதார்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய ஶ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஶ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஶ்ரீ ரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
ரத்நஸாமாந்யபத்ததி: ஸம்பூர்ணா ॥

---

ரங்கராஜபாதுகே-ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகையே! தே-உன்னுடைய, தேஜ:-காந்தியானது, தாபத்ரயம்-தன்னாலேயும் தன் பெண்டாட்டிகளாலும், காற்று வெயில் மழை முதலியவைகளாலும் வருகிற மூன்று தாபத்தையும், நிரஸ்யதி-போக்கடிக்கிறது. கஷாயாந்-பாபங்களை, ஶமயதி-சமைக்கிறது, (அதாவது போக்கடிக்கிறது) பங்கம்-பாபத்தை, (சேற்றை) விஶோஷயதி-உலர்த்துகிறது. அத:-ஆகையாலே, இதம்-இதை, தேஜஸ்த்ரிதயம்-சந்திரன் அக்னி சூரியன் என்கிற மூன்று தேஜஸ்ஸுக்களாக, மந்யே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! பிரகிருதி மண்டலத்தில் ஜீவன்களுக்குண்டாகிற மூன்று தாபத்தையும் உன் தேஜஸ்ஸுப்போக்கடிக்கிறது. பாபங்களையும் சமைக்கிறது. பாபத்தை உலர்த்துகிறது. அதனால் சூரியன் சந்திரன் அக்னி என்கிற மூன்று தேஜஸ்ஸுக்களாக நினைக்கிறேன். ஆசாரியர்கள் ஒரு சமயம் அதட்டுவார்கள். ஒரு சமயம் குளுமையாகப்பேசுவார்கள். அவர்களை ஸர்வவிதபந்துவாக சாஸ்திரங்கள் சொல்லியிருக்கிறது. (50)

பதினைந்தாவதான ரத்நஸாமான்ய பத்ததி முற்றிற்று.

---

॥ ஸ்ரீ: ॥

॥ ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥

## ஸ்ரீ ரங்கநாயபாதுகாஸஹஸ்ரே

## ஷோடஶீ பஹுரத்நபத்ததி: ॥

(௫௧௧) ஆஸ்யபாஹூருபாதேப்ய: வர்ணாந்
ஸ்ருஷ்டவத: ப்ரபோ: । ப்ரபத்யே பாதுகாம்
ரத்நை: ஸ்ருஷ்டவர்ணவ்யவஸ்திதிம் ॥

ஆஸ்ய-முகமென்ன, பாஹு-திருக்கைகளென்ன, ஊரு-திருத்தொடைகளென்ன, பாத-திருவடிகளென்ன இவைகளிலிருந்து, வர்ணாந்-பிராம்மணன் முதலிய ஜாதிகளை, ஸ்ருஷ்டவத:-உண்டுபண்ணிநின்றிருக்கிற, ப்ரபோ:-ஸ்ரீரங்கநாதனுடைய, ரத்நை:-கருப்பு சிகப்பு முதலான ரத்நங்களாலே, ஸ்ருஷ்ட-பிரகாசியாநின்றிருக்கிற, வர்ண-கருப்பு சிகப்பு முதலியவைகளுடைய, வ்யவஸ்திதிம்-கட்டுப்பாட்டையுடைத்தாயிருக்கிற, பாதுகாம்-பாதுகையை, ப்ரபத்யே-உபாயமாக நம்புகிறேன்.

(கருத்து) கீழ்பத்ததியில் பாதுகையில் இழைத்திருக்கிற ரத்னங்களைப்பற்றிப் பொதுவாக ஸாதித்தார். இந்தப் பத்ததியால் வெளுப்பு, சிகப்பு கருப்பு முதலிய ரத்னங்களுடைய காந்தியினுடைய சேர்க்கையைப்பற்றி ஸ்தோத்திரம் பண்ணுகிறார். பெருமாளுடைய திருமேனியில் ஒவ்வொரு அவயவங்களிலிருந்து

ஒவ்வொரு ஜாதியை யுண்டுபண்ணி அதற்கு ஆசாரம் முதலியவை களைத் தனித்தனியாக ஏற்படுத்தியது போல் உன்னிடத்தில் அநேக ரத்னங்களிருந்தாலும் அந்தந்த இடத்தில் அதததன் காந் திகள் ஒன்றோடொன்று கலக்காமல் விளங்குகின்றது. அப்போப் பட்ட பாதுகையை உபாயமாக நம்புகிறேன். வேதம் ஸ்மிருதி முதலியவைகளால் ஏற்பட்ட பிராம்மணுதி ஜாதிவ்யவஸ்தைகளை ஆழ்வார் முதலான பூர்வாசாரியர்கள் அவதரித்து வ்யவஸ்தை யைப் பண்ணிவருகிறார்கள். (1)

(௫௧௨) ஸிதரக்தபீதக்ருஷ்ணை: ஸவதீ கா
ஞ்சநபாதுகே விசித்ரா । யுகபேதவிகல்பிதம்
முராரேர்யுகபதுபதர்ஶயதீவ வர்ணபேதம் ॥

காஞ்சநபாதுகே-தங்கபாதுகையே! ஸவதீ-நீ, ஸித-வெளுப்பு ரத்நமென்ன, ரக்த-சிகப்புரத்நமென்ன, பீத-மஞ்சளான தங்கமென்ன, க்ருஷ்ண-கருப்பு ரத்நமென்ன இவைகளாலே, விசித்ரா-அநேக வர்ணமுள்ளவளாய்க்கொண்டு, யுகபேத-கிருதயுகம் முதலான பிரிவுகளாலே, விகல்பிதம்-மாற்றலான அநேக வர்ணங்களை, யுகபத்-ஒரேகாலத்தில், உபதர்ஶயதீவ-காண்பிக்கிறாய்போல.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் கருப்பு சிகப்புமுதலான அநேகரத்னங்கள் இழைத்திருக்கின்றன, அதினுலே அநேகவர் ணமுடையவளாக இருக்கிறாய். அதைப்பார்த்தால் பெருமாளை ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வொரு வர்ணமுள்ளவராக சொல்லியிருக் கிறது, அதை எல்லாம் ஒரே காலத்தில் நீ காண்பிக்கிறாய்போலி ருக்கிறது. பெருமாள் கிருதயுகத்தில் வெளுப்பாம். திரேதாயு கத்தில் சிகப்பாம். துவாபரயுகத்தில் மஞ்சளாம். கலியுகத்தில் கருப்பாம். என்று சொல்லியிருக்கிறது. (2)

(௫௧௩) நவரத்நவிசித்ரிதா முராரே: பதயோஸ்த்வம்
மணிபாதுகே விபாஸி । நவகண்டவதீ வஸுந்த
ரேவ ப்ரணயாந்நமிதா ஸமாஶ்ரயந்தீ ॥

மணிபாதுகே-வாராய் கல்விழைத்த பாதுகையே! நவ ரத்ந-ஒன்பது ரத்நங்களாலே ( அதாவது முத்து சிவப்பு பச்சை

நீலம் வைடூரியம் கோமேதகம் வைரம் பவழம் தங்கம்) விவிதா-அனேக வர்ணமுள்ளவளாக இருக்கிற, த்வம்-நீ, ஶௌரே:-பெருமாளுடைய, பதயோ:-திருவடிகளில், த்ருஷ்ணயா-ஆசையாலே, ஜநநஸத்ம-பிறந்தகத்தை, ஸமாஶ்ரயந்தீ-அடைந்திருக்கிற, நவவர்ஷவதீ-ஒன்பது பாகமுள்ள, (அதாவது பாரத கிம்புருஷ ஹரிவர்ஷ இளாவிருத பத்ராச்வ கேதுமால ரம்ய ஹிரண்மய குரு) வஸுந்தரேவ-பூமிபோல, விபாஸி-விளங்குகிறாய்.

(கருத்து) பாதுகையே! உன்பேரில் ஒன்பது ரத்னம் இழைத்திருக்கிறது அதனால் ஒன்பதுவிதமாக இருக்கிறாய், அதைப்பார்க்கிறபோது ஒன்பதுவிதமுள்ள பூமி தன்னுடைய பிறந்தகமான பெருமாள் திருவடியில் ஆசையாகவந்திருக்கிறாப்போலிருக்கிறது. ஆழ்வார் பகவதவதாரமாகையாலே ஸகலலோகவிருத்தாந்தங்களும் தெரிந்தவராக இருக்கிறார். பூமிக்குள்ள குணங்களிருக்கிறது. பெருமாள் திருவடியையே நம்பியிருக்கிறார். (3)

(௫௧௪) ஸஹஸா விநிவேத்ய ஸாபராதாம்ஸ்த்வதயீந
ஸ்வவநே முகுந்தபாதே । அருணோபலஸக்தமௌ
க்திகஶ்ரீ: ஸ்மயமாநேவ விபாஸி பாதுகே த்வம் ॥

ஹே பாதுகே-வாராய் பாதுகையே! அருணோபல-சிகப்பு கல்லுக்களிலே, ஸக்த-ஸம்பந்தித்திருக்கிற, மௌக்திக-முத்துக்களுடைய, ஶ்ரீ:-சோபையையுடைத்தாயிருக்கிற, த்வம்-நீ, த்வதயீந-உன்னதீனமாயிருக்கிற, ஸ்வவநே-தன் காப்பாற்றலை உடைத்தாயிருக்கிற, முகுந்த-பெருமாளுடைய, பாதே-திருவடிகளில், ஸஹஸா-சீக்கிரமாக, விநிவேத்ய-ஸமர்ப்பித்து, ஸ்மயமாநேவ-சிரிப்பவள்போல, விபாஸி-விளங்குகிறாய்.

(கருத்து) பாதுகையே உன்பேரில் இழைத்திருக்கிற சிகப்புரத்னத்தில்முத்துக்களின்காந்தி அடிக்கிறது, அதைப்பார்த்தால் சிகப்பான உதட்டில் பல்லுகாந்தி அடிக்கிறது. அதைப்பார்த்தால் குற்றம்பண்ணுகிறவர்களை பெருமாள் திருவடியில் காப்பாற்றவேணுமென்று ஸமர்ப்பித்து சிரிப்பதுபோலிருக்கிறது. ஆசாரியாள் தோஷமுள்ள ஜீவர்களைப் பெருமாள் திருவடியில் ஸமர்ப்பித்துப்

பகவானை பிரார்த்திக்கிறபோது மிக சந்தோஷப்படுகிறார்கள். ஆ
சையைசிகப்புக்கல்லாகச்சொல்லுகிறது. பெருமாள்ஸ்வபாவத்தை
சொல்லுகிற வார்த்தையை வெளுப்புக்கல்லாகவும் சொல்லுகிறது.
பெருமாளிடத்தில் ஒருஸங்கதியை ஆசைப்படுவதற்கு முன்பும்
பின்பும் பெருமாள் ஸ்வபாவத்தை நினைத்துக்கொள்ளுகிறார்கள்.

(ருகரு) வஹுரத்நஸமுத்பவம் உயதுவா தவஉதுணி
வாஉகெ உராரெ: । வரணொவமதம் உயரா
விஜும்உகடாரொஹணஸாஹஸாவஹுஉாஷடூ ॥

உணிவாஉகெ-வாராய் பாதுகையே! தவ-உன்னுடைய,
வஹுரத்நஸமுத்பவம் - அனேகம்ரத்னங்களாலுண்டாயிருக்கிற,
உயதுவம்-காந்தியை, உராரெ:-பெருமாளுடைய, உகடாரொ
ஹண-கிரீடத்தில் ஏறினதாகிற, ஸாஹஸம்- யோசிக்காமல்செய்த
தப்புகாரியத்தை, வஹுஉாஷடூம்-மன்னிப்புக்கேட்டுக்கொள்வதற்கு
வரணொவமதம்-திருவடியை அடைந்திருக்கிற, உயரவிஜும்-
மயில்தோகையாக, உதுணி-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் அனேகரத்னம் இழை
த்திருக்கிறது, அதினால் அனேகவர்ணமுள்ளவளாக இருக்கிறாய்,
அதைப்பார்த்தால் மயில் தோகைபோலிருக்கிறது. கிருஷ்ணாவ
தாரத்தில் மயில்தோகை தலையில் ஏறிவிட்டது, அந்தக்குற்றத்தை
மன்னிப்புக்கேட்டுக்கொள்ள பெருமாள் திருவடியில் மயில்தோ
கை வந்திருக்கிறாப்போலிருக்கிறது. (5)

(ருகா) வஹுஸயா ஹரிநீலஉளக்திகாநாம் விகஸதா
திரஸீவ வாஉகெ கவடு । உயாஹிதுரணாரவிநூ
கஷாஃ ஸஜவிதீவரவாணரீகவதா ॥

வாஉகெ-வாராய்பாதுகையே! கவம்-நீ, விகஸதா-பரவு
கின்ற, ஹரிநீல-இந்திரநீலக்கல் என்ன, உளக்திகாநாம்-முத்துக்
களென்ன இவைகளுடைய, வஹுஸயா-காந்தியாலே, உயாஹிக-
மதுஎன்கிற அஸுரனைக்கொன்ற பெருமாளுடைய, வரண-திரு
வடியாகிற, ஊரவிநூ-தாமரைப்பூவிலிருக்கிற, ஸகூஷாஃ-அழகாகிற

லக்ஷ்மிக்கு, இந்தீவர-கருநெய்தல்புஷ்பம் என்ன, புண்டரீக-வெண்தாமரைப்புஷ்பம் என்ன இவைகளாலே, ஸங்க்ரதித-தொடுக்கப்பட்ட, ஸ்ரஜம்-மாலையை, பிப்ரதீவ-கொடுக்கிறாய்போல.

(கருத்து) பாதுகையே! உன்பேரில் இந்திரநீலம் முத்து இரண்டும் இழைத்துஇருக்கிறது, அதனுடைய காந்தி ஒன்றோடொன்று கலக்கிறபோது பெருமாள் திருவடியிலிருக்கிற அழகாகிற லக்ஷ்மிக்கு வெண்தாமரை புஷ்பமும் கருநெய்தல்புஷ்பமும் சேர்த்து தொடுக்க மாலைபோட்டாப்போலிருக்கிறது. ஆழ்வார் பெருமாளைப்பற்றி ஸ்தோத்திரம் பண்ணுகிறகாலத்தில் சிலசமயம் ஸந்தோஷமாக இருக்கிறது, சிலசமயம் துக்கமாகஇருக்கிறது, சிலசமயம் ஆசையாக இருக்கிறது, உம்மைப்பார்க்கவேணும் வரவேணும் என்கிற வார்த்தைகளை சிகப்பு ரத்னமாக வைத்துக்கொள்ளுகிறது. குணங்களைப்பற்றி ஸ்தோத்ரம்பண்ணுகிற காலத்தில் வயிரமாக வைத்துக்கொள்ளுகிறது. இப்படி வருத்தப்படுகிறேன் உன்பாட்டுக்கு இருக்கிறாயே என்பதை கருப்புக்கல்லாகவைத்துக்கொள்ளுகிறது. இந்தப்பாசுரங்கள் பூர்ணமான ஜ்ஞானபக்தியால் வந்தபடியால் அவை பூக்கள்போலிருக்கின்றன, அதை பெருமாள் மாலைமாதிரியாகக் கொண்டாடுகிறார். (6)

(௫௯) தவ ரங்கபதிபாதுகே மணிநாம் ருசா ஸ்புரதி
ஸிதாஸிதாருணாநாம் | ஸமேதி கிரிசஸ்ய
மௌளிகங்கா குமுதேந்தீவரபத்மகாநநாநி ||

ஸ்புரதி-விளங்காநின்றிருக்கிற, ரங்கபதிபாதுகே-ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையே! தவ-உன்னுடைய, ஸித-வெளுப்பாயும், அஸித-கருப்பாயும், அருணாநாம்-சிகப்பாயுமிருக்கிற, மணீநாம்-ரத்னங்களுடைய, ருசா-காந்தியினாலே, கிரிசஸ்ய-சிவனுடைய, மௌளி-தலையிலிருக்கிற, கங்கா-கங்கையானது, குமுத-ஆம்பல்புஷ்பமென்ன, இந்தீவர-கருநெய்தல்புஷ்பமென்ன, பத்ம-செந்தாமரைபுஷ்பமென்ன இவைகளுடைய, காநநாநி-காடுகளை, ஸமேதி-அடைகிறது.

(கருத்து)பாதுகையே! உன்பேரில் வெளுப்பு சிகப்பு கருப்பு ரத்னங்கள் இழைத்திருக்கின்றன, சிவன் வந்து உன்னை ஸேவிக்

கிறார், அவருடைய தலையிலிருக்கிற கங்கையில் அந்த ரத்னகாந்தி அடிக்கிறது, அதைப்பார்த்தால் அந்த கங்கையில் ஆம்பல் கருநெய்தல் செந்தாமரைப்பூக்கள் நிரம்ப பூத்திருக்கிறாப்போலிருக்கிறது. (7)

(நுக ஆ) வ்யாமிஶ்ரியாநாம் த்யுதிபி: மணீநாம்
த்வாம் பாதுகே லோஹித ஶுக்ல க்ருஷ்ணாம் ।
விஹாரஹேதோ: இஹ ரங்கபர்த்து:
பாதார்பிதாம் ப்ரக்ருதிம் ப்ரதீம: ॥

ஹே பாதுகே-பாதுகையே! வ்யாமிஶ்ரியாநாம்-வெவ்வேறுவிதமாக இருக்கிற, மணீநாம்-ரத்னங்களுடைய, த்யுதிபி:-காந்திகளாலே, லோஹித-சிகப்பாயும், ஶுக்ல-வெளுப்பாயும், க்ருஷ்ணாம்-கருப்பாயுமிருக்கிற, த்வாம்-உன்னை, இஹ-இந்த லோகத்திலே, ரங்கபர்த்து:-ரங்கநாதனுடைய, விஹாரஹேதோ:-விளையாட்டுக்காக, பாத-திருவடியில், அர்பிதாம்-சேர்ந்திருக்கிற, ப்ரக்ருதிம்-பிரகிருதி என்கிற வஸ்துவாக, ப்ரதீம:-நினைக்கிறோம்.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் அனேகவிதமான ரத்னங்கள் இழைத்திருப்பதினால் நீ சிகப்பு வெளுப்பு கருப்பு என்கிற மூன்றுவிதமாக இருக்கிறாய். அதைப்பார்த்தால் பெருமாள் விளையாடுவதற்காக பிரகிருதி என்பது திருவடியில் சேர்ந்திருக்கிறாப்போலிருக்கிறது. நாம் இருக்கிற லோகத்துக்கு பிரும்மலோகம் வரையில் லீலாவிபூதி என்று பெயர், இது பிரகிருதியால் செய்யப்பட்டது, அந்த பிருகிருதிக்கு ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று மூன்று குணமுண்டு. ஸத்வம் வெளுப்பு, ரஜஸ் சிகப்பு, தமஸ் கருப்பு என்று சொல்வது வழக்கம். இந்த மூன்று குணங்களால் எல்லா ஜீவன்களும் திண்டாடுகிறது. ஸத்வகுணம் தெளிவை உண்டுபண்ணுகிறது. ரஜோகுணம் ஆசையை உண்டுபண்ணுகிறது. தமோகுணம் தூக்கத்தைக்கொடுக்கிறது. ஆழ்வாருக்கு ஜீவன்தெய்வம்முதலான ஸகலஸங்கதிகளும் மிக நன்றாய் தெரிகிறது. தெய்வத்தினிடத்தில் பூர்ணமான ஆசை உண்டாகிறது. தெய்வத்தின் உயர்ந்த குணங்களை நினைக்கிறபோதும் தெய்வம் அகப்படாதபோதும் மயக்கம் உண்டாகிறது. அந்த பிரகிருதியானது ஸம்ஸாரம்

மோக்ஷம் இரண்டுக்கும் உதவுகிறது ஆழ்வார் மோக்ஷத்துக்கு மாத்திரம் உதவுகிறார். (8)

(ரு௬ க) தமாலநீலத்யுதிபிஃ ஸநேத்ரைஃ முக்தாந்விதாம் ரத்நவிசேஷைஃ । ஸத்வேந ரங்கேச்வரகாந்திஸிந்தோஃ வேலாம் அவிச்ராந்த கதாகதாம் த்வாம் ॥

ரத்நவிசேஷைஃ-பாதுகையே! இந்த்ரநீலைஃ-நீலரத்னங்களாலே, தமால-பச்சிலைமரங்களா லே பச்சிலைமரங்கள் போல், நீல-கருப்பாக இருக்கிற, த்யுதிம்-காந்தியை உடைத்தா யிருக்கிற, முக்தா-முத்துக்களோடு, ஸமந்விதாம்-சேர்க்கப்பட்டி ருக்கிற, த்வாம்-உன்னை, ரங்கேச்வர-ஸ்ரீரங்கநாதனுடைய, காந்தி-அழகாகிற, ஸிந்தோஃ-ஸமுத்திரத்தினுடைய, அவிச்ராந்த-ஓச்ச லில்லாமல், கதாகதாம்-போக்குவரத்துக்குத் தகுந்ததாக இருக்கிற, வேலாம்-கரையாக, ஸத்வேந-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல் இழைத் திருக்கிறது. முத்துக்களிருக்கிறது. அதைப்பார்த்தால் மரங்க ளோடும் முத்துக்களோடும் சேர்ந்த எப்போதுபார்த்தாலும் போ க்குவருத்துக்கு தகுந்த ஸ்ரீரங்கநாதனுடைய அழகாகிற ஸமுத்தி ரத்தினுடைய கரைமாதிரியாக இருக்கிறது. பெருமாளுடைய அழ குமுதலான குணங்களுடைய அனுபவம் ஆழ்வாரிடத்தில் தங்கி இருக்கிறது. பெருமாள் அப்பால்போனால் வியஸநப்படுகிறார். கிட்ட வந்தால் ஸந்தோஷப்படுகிறார். ஆழ்வாருடைய தயை முத லான குணங்களை மரங்களாக சொல்லியிருக்கிறது. (9)

(ரு௬ ௦) ஸத்வேந ரங்கேச்வரபாதுகாஸ்த்வம் அகாலகால்யம் விபவம் விதாதும் । வஜ்ரேந்த்ரநீலவ்யபதேசத்ருச்யம் ஸதீக்ஷ்ணதம் கஞ்சந ஸம்ச்ரிதாநாம் ॥

ரங்கேச்வர-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுகாஃ-பாதுகை களாலே, அகாலகால்யம்-காலத்துக்கு அதீனமில்லாமலிருக்கிற, அதாவது அழிவில்லாமலிருக்கிற, விபவம்-மோக்ஷமாகிறஸம்பத்தை விதாதும்-உண்டுபண்ணுவதற்கு, வஜ்ர-வயிரமென்ன, இந்த்ர நீல-இந்திரநீலக்கல்லுகளென்ன இவைகளுடைய, வ்யபதேச-

வியாஜத்தினாலே, த்ருஸ்யம்-காணத்தகுந்ததாயிருக்கிற, அஹஸ்த்ரியாமம்-பகல்என்ன ராத்திரிஎன்ன இவைகள், பந்தீக்ருதம்-சிறைச் சாலையில் போடப்பட்டது. நூநம்-நிச்சயம்.

(கருத்து) பாதுகையே! உன்னிடத்தில் வயிரமும் இந்திர நீலக்கல்லும் இழைத்திருக்கிறது. அதைப்பார்த்தால் பகலும் இராத்திரியுமாக இருக்கிறது. தன்னை ஆசிரியித்தவர்களுக்கு மோக்ஷத்தைக்கொடுப்பதற்காக பகலையும் இரவையும் விலங்கில் போட்டிருக்கிறாப்போலிருக்கிறது. நல்ல ஆசாரியானை ஆச்ரயித்தவர்களுக்கு புண்ணியம் பாபம் இரண்டும் போய் நித்யமான பெருமானுடைய லோகம் கிடைக்கிறது. (10)

(ருசக) பதபத்மரக்ஷீ பவதீ முராரேர்மணிபந்துரா மௌக்திகரத்நபாஸா । அந்தர்த்ருசம் ஸாநுநயா முநீநாமநக்தி கர்ப்பூரசலாகயேவ ॥

[பாதுகே-வாராய் பாதுகையே!] முராரே:-பெருமானுடைய, பதபத்ம-திருவடியை, ரக்ஷீ-காப்பாற்றுகிறவளாயிருக்கிற, பவதீ-நீயானவள், மணிபந்துரா-இந்திரநீலக்கல்லைதொட்டுக் கொண்டிருக்கிற, மௌக்திகரத்ந-முத்து என்கிற ரத்னங்களுடைய, பாஸா-காந்தியினாலே, ஸாநுநயா-மெய்போலேகூடிக்கொண்டிருக்கிற, கர்ப்பூரசலாகயா-பச்சைக்கற்பூரக்குச்சியினாலே, முநீநாம்-ரிஷிகளுடைய, அந்தர்த்ருசம்-உட்கண்ணை, (அதாவது ஞானமாகிற கண்ணை) அநக்தி-மெய்யிடுகிறாய்போல.

(கருத்து) ஏபாதுகையே! உன்னிடத்தில் இந்திரநீலக்கல்லிழைத்திருக்கிறது. அதில் முத்தின் காந்தி அடிக்கிறது. அதைப்பார்த்தால் உன்னைத்தியானம்பண்ணுகிறவாளுடைய ஞானமாகிறகண்ணுக்கு வெளுப்பான பச்சைக்கற்பூரக்குச்சியில் மெய்யைதோய்த்துக்கொண்டு மெய்யிடுகிறாப்போலிருக்கிறது. ஆழ்வார் பெருமானைவிட்டு பிரிந்தகாலத்தில் ரொம்பதுக்கப்பட்டு சொல்லுகிற பாசுரங்களை இந்திரநீலமென்கிறது. பெருமாள் ஸேவைஸாதிக்கிறபோது ஸந்தோஷத்தினால் உண்டாகிற பாசுரங்களை முத்துஎன்கிறது. இந்த இரண்டின் தாத்பரியங்களை கவனிக்கிறவாகளுக்கு பெருமா

ளுடைய தியாகம் குறைவு இல்லாமல் இருக்கிறது விருத்தியடைகிறது. (11)

(௪௨) முக்தாமயூகநிவஹை: ஸுமங்களா க்ருஷ்ணா ச
மஹேந்த்ரமணிரச்மிஜாலை: | காந்தா முராரே: மணி
பாதுகே த்வம் விஹாரயாத்ரா விஜயம் வ்ருணோஷி ||

மஹேந்த்ரமணிபாதுகே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! முக்தா-முத்துக்களுடைய, மயூக-காந்திகளுடைய, நிவஹை:-கூட்டங்களாலே, ஸுமங்களா-நல்லக்ஷேமத்தை பண்ணுகிறவளாயும், (கிருஷ்ணன்கூடப்பிறந்தவளாயும்) மஹேந்த்ரமணி-இந்திரநீலக்கல்லுக்களுடைய, ரச்மி-கிரணங்களுடைய, ஜாலை:-கூட்டங்களாலே, க்ருஷ்ணா-கருப்பாயும், திரௌபதியாயும், முராரே:-பெருமாளுக்கு, காந்தா-கொண்டாடத்தகுந்தவளாயுமிருக்கிற, த்வம்-நீ, விஹார-ஸஞ்சாரத்தோடே விளையாட்டோடே, யாத்ரா-கூடினவளாய்க்கொண்டு, விஜயம்-ஜயத்தை, வ்ருணோஷி-அடைகிறாய். அர்ஜுநனைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளுகிறாய்.

(கருத்து) பாதுகையே! உன்பேரில் முத்து இழைத்திருக்கிறது, அதனால் எல்லாருக்கும் எல்லாக்ஷேமங்களையும் உண்டுபண்ணுகிறாய். இந்தரநீலக்கல் இழைத்திருக்கிறது, அதினால்கருப்பாக இருக்கிறாய். உன்னிடத்தில் பெருமாளுக்கு ரொம்பப்ரீதி, உன்னைசாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறார். எங்கேபோனாலும் ஜயம். ஸுபத்திரையாய் இருக்கிறாய். திரௌபதியாய்இருக்கிறாய். உல்லாஸத்துடன் அர்ஜுனனைக்கல்யாணம் பண்ணிக்கொள்ளுகிறாய் என்று ஒரு அர்த்தம் தோன்றுகிறது. நல்ல ஆசாரியாளுடைய அனுக்ரஹத்தாலே ஜீவன் பெருமாள்முதலான சங்கதிகளை உள்ளபடி அறிந்து பெருமாளிடத்தில் ரொம்ப ஆசையுள்ளவர்களாய் அவரைப்பிரிந்தால் ரொம்ப வருத்தத்தை அடைந்துகொண்டிருக்கிற நல்ல ஆசாரியாளுக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஒருவிதமான குறைவும்கிடையாது. இந்தக்காலத்தில் அப்பேர்பட்ட ஆசாரியாள் அகப்படுவது கஷ்டம், இல்லை என்றும் இல்லை. (12)

(௫௪) விசித்ரவர்ணாம் மணிபாதுகே த்வாம் ஸஹ்ருதயாம் ஸாதுநிபத்தவ்ருத்திம் । யதீந்த்ரஜுஷ்டாம் த்விபதாம் முராரே: ப்ரத்யாயிகாம் காஞ்சிதிவர்சம் ப்ரதீம: ॥

மணிபாதுகே-வாராய்கல்லிழைத்தபாதுகையே! விசித்ரவர்ணாம்-வெளுப்புசிகப்பு முதலான அனேகரூபத்தை உடைத்தாயிருக்கிற, ஸஹ்ருதயாம்-பெருமாள் இஷ்டப்படி ஸஞ்சரிக்கிறவளாயும், ஸாது-நல்லவார்த்தை சொல்லுகிறவிஷயத்தில், நிபத்த-பண்ணப்பட்டிருக்கிற, வ்ருத்திம்-பாட்டைஉடைத்தாயும், யதீந்த்ர-உயர்ந்த யோகிகளாலே, ஜுஷ்டாம்-ஸேவிக்கப்பட்டும், த்விபதாம்-இரண்டுதிருவடியைஉடைத்தானவளாயுமிருக்கிற, த்வாம்-உன்னை, முராரே:-பெருமானை, ப்ரத்யாயிகாம்-வரவழைக்கிறதாயிருக்கிற, காஞ்சித்-ஒரு, ருசம்-ருக்என்கிற மந்த்ரமாக, ப்ரதீம:-நினைக்கிறோம். (விசித்ரவர்ணாம்-அனேகவிதமான எழுத்தைஉடைத்தாயும், ஸஹ்ருதயாம்-அநுஷ்டுப் த்ருஷ்டுப் என்கிறமுதலான சந்தஸ்ஸுகளோடுகூடினதாயும், ஸாது-ஒருவிதஸ்வரத்தாலே, நிபத்த-சேர்க்கப்பட்டிருக்கிற, வ்ருத்திம்-பாட்டைஉடைத்தாயும், யதீந்த்ர-வஸிஷ்டர்முதலான ரிஷிகளாலே, ஜுஷ்டாம்-கண்டுபிடிக்கப்பட்டதாயும், த்விபதாம்-இரண்டுவாக்கியத்தைஉடைத்தானதாயும்,)

(கருத்து) ஏபாதுகையே! உன்னிடத்தில் அனேகரத்னங்களிழைத்திருக்கிறபடியாலே அனேகரூபமுள்ளவளாகஇருக்கிறாய். பெருமாள் உன்னைச்சாத்திக்கொண்டு இஷ்டப்படி ஸஞ்சரிக்கிறார். உன்னைப்பற்றி வெகுபேர் ஸ்தோத்திரமாகப்பாடி இருக்கிறார்கள். எவ்வளவோ பெரியவாள் உன்னை ஸேவிக்கிறார்கள். பெருமாளுடைய இரண்டு திருவடிகளிலுமிருந்து நினைத்தவிடத்துக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவருகிறாய். உன்னைப்பார்த்தால் ருக்கு என்கிற மந்திரம்மாதிரியாக இருக்கிறது. மந்திரத்தில் அனேக எழுத்துக்கள் இருக்கின்றன, அநுஷ்டுப்முதலான சந்தஸ் இருக்கிறது. ருக்கைப்பாடும்போது ஸாமம் என்று பெயர். வஸிஷ்டர்முதலான ரிஷிகளாலே கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இரண்டு வாக்கியம் ஒரு ருக்கு. பெருமாளைப்பற்றிச் சொல்லுகிறது. நல்லஆசாரியர்கள் ஸர்வகாலத்திலும் பெருமாளுடைய திருவடியையே நி

ளைத்துக்கொண்டிருக்கிறார்கள். அங்கங்கே எழுந்தருளி உபதேசத்தினாலும் அனுக்கிரஹத்தினாலும் அனேகஜனக்களை பெருமாளை நினைக்கும்படி பண்ணுகிறார்கள். ஸகலர்களும் அவர்களை ஸ்தோத்ரம்பண்ணுகிறார்கள், மிகப்பெரியவர்களெல்லாரும் அவர்களை ஸேவிக்கிறார்கள். (13)

(௧௨௪) ப்ரஸத்தீ கோத்ரபிதஃ ப்ரணாமைஃ பு-
ஷ்ணாஸி ரங்கந்ருபபாதுகே த்வம் । மணிப்ரபாஸம்-
பேதவ்யபதேஶாத் ததர்ஹாணி ஶராஸநாநி ॥

ஹே ரங்கந்ருபபாதுகே-ஸ்ரீரங்கநாதன் பாதுகையே! த்வம்-நீ, கோத்ரபிதஃ-மலைகளைப்பிளந்த இந்திரனுடைய, ப்ரணாமைஃ-நமஸ்காரங்களாலே, ப்ரஸத்தீ-ஸந்தோஷத்தை அடைந்தவளாய்க்கொண்டு, மணி-அநேகரத்னங்களுடைய, ப்ரபா-காந்தியினுடைய, ஸம்பேத-சேர்க்கையினுடைய, வ்யபதேஶாத்-வியாஜத்தினாலே, ததர்ஹாணி-அந்த இந்திரனுக்குத் தகுந்த, ஶராஸநாநி-வில்லுக்களை, புஷ்ணாஸி ப்ராய:-உண்டுபண்ணுகிறாய் போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்தில் அனேகரத்னங்களிழைத்திருக்கின்றன, அதனால் அனேகரூபமுள்ளவளாக இருக்கிறாய். அதைப்பார்த்தால் இந்திரன் வணங்கிக் கேட்டுக்கொண்டதின்பேரில் அவனுக்குச்சத்துருக்களைஜெயிக்க அனேகம் வில்லுக்களைக்கொடுப்பதுபோலிருக்கிறது. ஆகாசத்தில் ஒருகாலத்தில் அனேகம் வர்ணங்களோடுகூட வளைவாய் இந்திரன் வில்லு என்று ஒன்று கண்ணுக்குப்படுகிறது. அது எல்லாருக்கும் தெரியும். நல்ல ஆசாரியாளை வணங்கினவர்கள் நிரம்பவும் நல்லதான பிரமாணங்களாலும் யுக்திகளாலும் அனுபவங்களாலும் தப்புமதங்களை கண்டிக்கிறார்கள். (14)

(௧௨௫) ஶோணாஶ்மநாம் தவ ஹரிந்மணிபங்க்திபாஜாம்
பாஸாம் ததம் பஹுவிதம் ஹரிபாதுகே த்வம் ।
ப்ராசீநதம் ப்ரகடயந்தி ஜநவ்யபோஹாத்
ஸித்தாம் க்ஷிதௌ ஶாஸ்த்ரவதாம் விபக்ஷே ॥

பலிவிமதந-மஹாபலியை அடக்கின பெருமாளுடைய, பாதரக்ஷே-வராய் பாதுகையே, தவ-உன்னுடைய, ஹரிமணி-பச்சைரத்னங்களுடைய, ருசி-காந்திகளோடே, மிச்ரம்-சேர்ந்திருக்கிற, சோணாச்மநாம்-சிகப்புரத்னங்களுடைய, பாலாதபம்-இளம்வெயில்போல் சிகப்பான காந்தியை, சுக-கிளிஎன்கிற சகுந்தபக்ஷியினுடைய, கண-கூட்டங்களுடைய, ஆவேசாத்-இருப்பதினாலே, ச்யாமீக்ருதம்-பச்சையாகப்பண்ணப்பட்டிருக்கிற, விபக்வம்-நன்றாக கதிராகி முதிர்ந்திருக்கிற, கிமபி - இன்னதென்று சொல்லமுடியாமலிருக்கிற, ஸதாம்-நல்லவாளுக்கு உபயோகப்படுகிறதான, சாலிவநம்-நெல்லுவிளையுகிறவயலாக சங்கே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏபாதுகையே! உன்னிடத்தில் சிகப்பு பச்சை இரண்டும் இழைத்திருக்கிறது. அதின் காந்திகள் ஒன்றோடொன்று கலந்திருக்கிறது அதைப்பார்த்தால் கதிராகி முற்றியிருக்கிறவயலில் கிளிகள்வந்து உட்கார்ந்துகொண்டிருக்கிறாப்போலிருக்கிறது. ஆழ்வார் ஸாதித்திருக்கிற பாசுரங்கள் ரொம்ப ஆச்சர்யமாகஇருக்கிறது. அந்த பாசுரங்களுடைய உண்மையான அபிப்பிராயத்தை நல்ல ஆசாரியர்கள் அனுக்கிரஹம்பெற்றவர்கள் அறிந்து ஸகல ஸௌக்கியத்தையும் அடைகிறார்கள். ஸ்ரீதேசிகன்முதலான நல்ல ஆசாரியாளுடைய கிரந்தங்கள் இப்போது இருக்கிறது. ஆசை, கோபம், கர்வம் இவைமுதலியகெட்டகுணங்களை அடக்கின நல்ல ஆசாரியர்கள் இப்போது அகப்படுவது கஷ்டமாகயிருக்கிறது. அதினாலே அந்த கிரந்தங்களுடைய உண்மையான அர்த்தம் அறிவது ரொம்பசிரமமாக இருக்கிறது. ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸங்கல்ப ஸூர்யோதயத்தில், முட்டாள்களுக்குச்சண்டை பிரியமாகஇருக்கிறது. ரொம்பதெரிந்தவர்களுக்கு ஸ்நேஹத்திலே மிகுந்த ஆசையாயிருக்கிறதென்று ஸாதித்திருக்கிறார்—‘‘[illegible] ஸாதவ:’’ இந்தநாளில்வித்வான்கள்வசைவுகடிதாசிமூலமாய் ஒருவர்க்கொருவர் பார்த்துக்கொள்ளுகிறார்களே ஒழிய ஒருவர்க்கொருவர் கண்ணால்கூட பார்ப்பதில்லை. கோபம்போனால் நல்லபுஸ்தகங்களுடைய உண்மை தெரியும். உண்மை தெரிந்தால் கோபம்போகும்.　　(15)

(ருசசு) ஸம்மிஶ்ரிதேந்த்ரமணிவித்ருமமௌக்திகஶ்ரீ:
ஸைரந்த்ரிகேவ பவதீ மணிபாதரக்ஷே |
வ்யாதநோதி ரங்கந்ருபதேஶ்சரணாரவிந்தே
கஸ்தூரிகாகுஸ்ருணசந்தநபங்கவாஸம் ||

மணிபாதரக்ஷே-ரத்னப்பாதுகையே! ஸம்மிஶ்ரிதே-ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற, மணி-இந்திரநீலக்கல்லென்ன, வித்ரும-பவழங்களென்ன, மௌக்திக-முத்துக்களென்ன இவைகளுடைய, ஶ்ரீ:-காந்தியை உடைத்தாயிருக்கிற, பவதீ-நீயானவள், ஸைரந்த்ரிகேவ-அலங்காரம்பண்ணுகிறவள்போல, ரங்கந்ருபதே:-ஸ்ரீரங்கநாதனுடைய, சரணாரவிந்தே-தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியில், கஸ்தூரிகா-கஸ்தூரியென்ன, குஸ்ருண-குங்குமமென்ன, சந்தந-சந்தனமென்ன இவைகளுடைய, பங்க-குழம்புகளுடைய, வாஸம்-பூசுதலை, வ்யாதநோதி-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏபாதுகையே! உன்னிடத்தில் இந்திரநீலக்கல், பவழம், முத்து இவைகளிழைத்திருக்கின்றன. அதின் காந்தி பெருமாள் திருவடியில் அடிக்கிறது. அதைப்பார்த்தால் கஸ்தூரி குங்குமம் சந்தநம் இவைகளைக் குழைத்து அலங்காரம்பண்ணுகிறவள் பூசுவதுபோலிருக்கிறது. ஆழ்வார் ஸாதிக்கிற பாசுரங்கள் பெருமாள் திருவடிகளுக்கு இன்பமாயும் அழியாததுமான உயர்ந்த அலங்காரங்களாக இருக்கின்றன. (16)

(ருசஎ) ஹந்த த்வமஸுரதமநஸ்ய பாதரக்ஷே
ஶார்ங்காயுதஸ்ய த்ருதஶார்ங்கதநுர்ஜாதம் |
வைஹாரிகீம் விவிதரத்நருசிவ்யாஜாத்
த்வம் நஸ்ய ஸாயுதவதீ ஶோபநவிஞ்ஞிகாம் த்வம் ||

அஸுரதமந-அஸுரர்களைக்கொல்லுகிறபெருமாளுடைய, பாதரக்ஷே-பாதப்பாதுகையே, த்வம்-நீ, விவித-அநேகவிதமாக இருக்கிற, ரத்ந-ரத்னங்களுடைய, ருசி-காந்தியினுடைய, வ்யாஜ-வியாஜத்திநாலே, ஶார்ங்காயுதஸ்ய-பெருமாளு

டைய அந்தப்புரஸ்திரீகளுக்கு, மதனம்-மன்மதனாலேசெய்யப்பட்ட, இந்த்ரஜாலம்-ஆச்சர்யமான தோற்றத்தை, க்ருதவதீம்-உண்டுபண் ணிநின்றிருக்கிற, லீலாசிகீம்-விளையாட்டுக்காக இருக்கிற, மோஹநவிஸ்மயம்-மயக்கிறதான மயில்தோகையை, ஸமீக்ஷ மஹி-வஹிக்கிறாய்.

(கருத்து) ஏபாதுகையே! உன்னிடத்தில் அனேகரத்னங்களி ழைத்திருக்கின்றன. அதைப்பார்த்தால் மஹாலக்ஷ்மி முதலானவர் களுக்கு மன்மதன் இந்திரஜாலம் பண்ணுவதற்கு ஒருமயில் தோ கை வைத்துக்கொண்டிருக்கிறாப்போலிருக்கிறது. பெருமாளிடத் தில் பக்திஉள்ளவர்கள் ஆழ்வாருடைய பாசுரங்களை நல்ல ஆசாரி யாளிடமிருந்து சரியான அர்த்தங்களோடு கேட்டால் அவர்களு க்குப் பெருமாளிடத்தில் உண்டாகிற ஆசைக்கு எல்லைஇல்லை (17)

(௫௮) ரத்நை வ்யவஸ்தித ஸிதாஸித ஶோணவ
ர்ணை: ப்ராகாஶ்ய ஶ்ருதி ஸமீப பதை: ஸுவர்ணை: ।
த்ரஷ்டும் பதம் முரஜித: ப்ரணவப்ரபாவா
ஸந்த்ருஶ்யஸே ஜனநி ஸந்தத நேத்ர பங்க்தி: ॥

ஜநநி-தாயாரானபாதுகையே! வ்யவஸ்தித-ஒன்றோடொன்று கலக்காமலிருக்கிற, ஸித-வெளுப்பென்ன, அஸித-கருப்பென்ன, ஶோண-சிகப்பென்ன இவைமுதலான, வர்ணை:-வர்ணங்களை உடைத்தானதாயும், ப்ரகாஶ:-பிரகாசங்களை உடைத்தானதா யும், (பார்வையையுடையதாயும்) அஜஸ்ர-விடாமலிருக்கிற, ஶ்ருதி-வேதத்தினுடைய, (காதினுடைய) ஸமீப:-ஸமீபத் தைஉடைத்தாயிருக்கிற, ரத்நை:-ரத்னங்களாலே, அநிமேஷ த்ருஶ-இமைக்கொட்டாமல் பார்க்கத்தகுந்தவைகளாயிருக்கிற, முர ஜித்பதம்-பெருமாளுடைய திருவடிகளை, த்ரஷ்டும்-பார்க் கிறதற்கு, ஸம்ஹ்ருத-ஸம்பாதிக்கப்பட்டிருக்கிற, நேத்ர-கண்களு டைய, பங்க்தி:-வரிசையைஉடையவளாக, ஸந்த்ருஶ்யஸே-காண ப்படுகிறாய்.

(கருத்து) ஏபாதுகையே! உன்மேலிருக்கிற ரத்னங்களும் ப்ர காசமுள்ள வேதங்களாலே சொல்லப்பட்ட வெளுப்பு கருப்பு சி

கப்பு இந்த ரத்னங்களைப்பார்த்தால் இமைக்கொட்டாமல் பார்க்கக்கூடிய பெருமாளுடைய திருவடியை ஸேவிப்பதற்கு கண்போலிருக்கிறது. கண்ணில் கருப்பு சிகப்பு வெளுப்பு மூன்று வர்ணமிருக்கிறது. பிரகிருதியில் ஸத்வம் ரஜஸ் தமஸ்என்றுமூன்று குணமிருக்கிறது. வெளுப்பு சிகப்பு கருப்பு. அதுவும் பெருமாள் ஸ்வரூபத்தைமறைக்கிறது. ஆழ்வார்பாசுரத்தில் ஸத்வம்ரஜஸ்தமஸ் மூன்றுமிருக்கிறது. பெருமாளை உள்ளபடி அறிந்து பெருமாள் வேணுமென்றுஆசைப்பட்டுப் பெருமாள் அகப்படவில்லையே என்று வருத்தப்பட்டவர்களுக்கு ஒவ்வொருபாசுரமும் பெருமாளைப்பார்ப்பதற்கு ஒருக்காலும் அணையாத ரத்னதீபமாயும் கண்ணுமிருக்கிறது. ஒவ்வொருபாசுரமும் வேததாத்பர்யம். (18)

(ருசக) மரகதஸுகடிதஸௌக்திகபங்க்திவ்யக்த்யா
தூர்வாமதூகரசிதம் துரிதாபநோதாய |
மாதஃஸ்வயம் வஹஸி அலக்ஷ்யாணாம் ப்ரஜாநாம்
மாங்கல்யஸாமக்ர்யமிவ சௌரிபாதுகே த்வம் ||

மாதஃ-தாயாரான, சௌரிபாதுகே-வாராய் பெருமாள் பாதுகையே! த்வம்-நீ, மரகத-பச்சைரத்னங்களாலே, ஸுகடித-நடுவில்சேர்க்கப்பட்ட, சௌக்திக-முத்துக்களுடைய, பங்க்தி-வரிசையினுடைய, வ்யக்த்யா-வியாஜத்தினாலே, அலக்ஷ்யாணாம்-ஒன்றும் தெரியாமலிருக்கிற, ப்ரஜாநாம்-ஜனங்களுடைய, துரிதாபநோதாய-பாபங்களைப் போக்கடிக்கிறதற்காக, தூர்வா-அருகம்பில்என்ன, மதூக-இலுப்பைப்பூவென்ன இவைகளாலே, ரசிதம்-பண்ணப்பட்டிருக்கிற, மாங்கல்யஸாமக்ர்யம்-கலியாணத்துக்காக, இருக்கிறமாலையை, ஸ்வயம்-தானாகவே, வஹஸீவ, வைத்துக்கொண்டிருக்கிறாப்போல.

(கருத்து)ஏபாதுகையே! உன்னிடத்தில் பச்சை ரத்னமும் முத்தும் இழைத்திருக்கிறது. அதைப்பார்த்தால் ராஜகுமாரிகளுக்கு கலியாணத்துக்கு ஸ்வயம்வரம் என்று செய்வது வழக்கம். (அதாவது அனேகராஜாக்களை வரவழைத்து அந்தப்பெண்ணுக்கு யார் பிடிக்கிறதோ அவன்கழுத்தில் அருகம்புல் இலுப்பப்பூ இரண்டினாலும் செய்யப்பட்ட மாலையைப்போட்டுஅவனை நாயகனாக சேர்

த்துக்கொள்வது) அந்தமாதிரி லோகத்திலிருக்கிற முட்டாள்களு க்கு பெருமாளை கலியாணம்பண்ணிக்கொள்ள தெரியவில்லை. அத ற்காக அந்த மாலையை நீகையில் வைத்துக்கொண்டிருக்கிறப்போ லிருக்கிறது. பெருமாள் இந்தலோகத்தில் ஜனங்களை உண்டுபண் ணினது அழிவில்லாத மிக்க சுகமான தன்னுடைய லோகத்துக்கு கூப்பிட்டுக்கொள்வதற்காக. அதற்கு இந்த ஜனங்களைப்பெருமாளை தியானம்பண்ணச்சொல்லியிருக்கிறார். நிரம்பத்தெரிந்தவனும் கெ ஞ்சலாம், அறிவு கொஞ்சம் குறைவாக இருந்தாலும் ஸம்ஸாரவெ றுப்பும் பெருமாளிடத்தில் ஆசையும் இருந்தால் அவனும் கேழ்க் கலாம், அப்படியும் கேழ்க்கத்தெரியாத முட்டாள்கள் நல்ல ஆசா ரியர்களை ஆச்ரயித்தால் இந்த ஜனங்களுக்காக இந்த ஜனங்கள் கேட்டுக்கொண்டோ இவர்கள் கேழ்க்காமல் அவர்கள் தயையி னாலேயோ பெருமாளிடத்தில் பிரார்த்திக்கிறார்கள். அதுக்கு ஆசார்யாபிமாநமென்றும் ஆசார்யநிஷ்டையென்றும் பெயர்.

(௫௦) ரங்காதிராஜபதரக்ஷிணி ராஜதே தே
வஜ்ரோபஸங்கடிதமௌக்திகவித்ருமஶ்ரீ: ।
ஸக்தா சிரம் மநஸி ஸம்யமிநாம் நிவாஸாத்
ஸூர்யேந்துவஹ்நிமயதஹராவகாஶ இவ ॥

ஹே ரங்காதிராஜபதரக்ஷிணி-ஸ்ரீரங்கநாதனுடைய திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! தே-உன்னுடைய, வஜ்ர-வைரத்தோடு, உபஸங்கடித-ஸமீபத்திலே சேர்க்கப்பட்டிருக் கிற, மௌக்திக-முத்துக்களென்ன, வித்ரும-பவழமென்ன இவைக ளுடைய, ஶ்ரீ:-சோபையானது, ஸம்யமிநாம்-யோகிகளுடைய, மநஸி-மனதிலே, சிரம்-வெகுகாலம், நிவாஸாத்-வஸித்தபடி யாலே, ஸக்தா-சேர்ந்திருக்கிற, ஸூர்யேந்துவஹ்நிமயே-ஸூர்யன் சந்திரன்நெருப்புஇவைபோன்ற, தஹர-ஹ்ருதயபாகத்தினுடைய, அவகாஶ இவ-கொஞ்சம்இடம்போலே, ராஜதே-விளங்குகிறது.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் வைரங்களும் முத்துக் களும் பவழங்களும் சேர்த்து இழைத்திருக்கிறது. அதைப்பார்த் தால் ஜனங்களுடைய உடம்பின் உள்ளே ஹ்ருதயமென்கிறஇட த்திலே ஸூரியன் சந்திரன் நெருப்பு இந்தமூன்றும்போன்றதான ஒருஇடம் இருக்கிறதாம், உன்னைத்தியானம் பண்ணுகிறவர்களு

டைய அந்த இடத்திலே நீ வெகுநாள் இருந்தபடியால் அந்த இடத்தினுடைய சிறிது சிறிது பாகம் உன்மேல் ஒட்டினதுபோலிருக்கிறது. ஒருஜீவன் ஆசார்யாளைத் தியானிக்கிறபோது இவன் மனதும் அவர்களும் சேர்ந்து போகிறதுபோலே பிரீதியினாலே ஒன்றாக இருக்கவேண்டும். ஆழ்வாருக்கு பெருமாள் பிரிவினாலே வந்த தாபமும் பெருமாள் குணங்களுடைய தோற்றமும் அதனாலுண்டான ஸந்தோஷமும் ஆகிய இவை மூன்றும் ஒரு ஸமயத்திலிருக்கின்றன. (20)

(௫௫௧) ஆஸந்நவாஸவஶிலாஶகலா: ஸ்வகீயா: பத்மாக்ஷ
ஸ்ய பதரக்ஷிணி பத்மராகா: | வ்யக்தயந்தி
கமபி ப்ருங்கஸமிளிதம் பாதாரவிந்தமகரந்தப்ரவாஹம் ||

பத்மாக்ஷஸ்ய-தாமரைப்பூப்போல் திருக்கண்ணையுடைய பெருமாளுடைய, பதரக்ஷிணி-திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! ஆஸந்ந-கிட்ட இருக்கிற, வாஸவஶிலா-இந்திரநீலக் கற்களுடைய, ஶகல-துணுக்குகளை உடைய, ஸ்வீயா:-உன்னுடையதான, பத்மராகா:-சிவப்புக்கற்கள், ப்ருங்கை:-வண்டுகளோடு, ஸமிளிதம்-நன்றாகச்சேர்ந்திருக்கிற, கமபி-இன்னதென்று சொல்லமுடியாதபடி உயர்ந்ததான, பாத-திருவடியாகிற, அரவிந்த-தாமரைப் பூக்களுடைய, மகரந்த-தேனுடைய, ப்ரவாஹம்-வெள்ளத்தை வ்யக்தயந்தி-கண்ணுக்குத்தோன்றச் செய்கின்றன.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் சிவப்புக்கல்லும் அதன் பக்கத்தில் இந்திரநீலக்கல்லும் இழைத்திருக்கிறது. அதைப்பார்த்தால் பெருமாள் திருவடியாகிற தாமரைப்பூவிலிருந்து தேன் உன்னிடத்தில் தேங்கி அதில் வண்டு வந்து மயங்கி அசைவன்று உட்கார்ந்திருப்பதுபோலிருக்கிறது. ஆழ்வார் எம்பெருமானை மிகுந்த ஆசையுடன் அநுபவிக்கிறகாலத்தில் தேனைச்சாப்பிடும் வண்டுபோல் மயங்கி தன்னை மறந்து எழுந்தருளியிருக்கிறார். (21)

(௫௫௨) [illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஸௌவர்ணவதீவாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாது கையே! த்வம்-நீ, ஏகா-வேறு ஒருவருமில்லாமல் பெருமாளோடு நீ தனியாக இருந்துகொண்டு, ஸமயேஷு-அந்தந்தகாலங்களிலே, கஞ்சுகிவாராணீ-தாயார் எழுந்தருளியிருக்கிற ஸந்நிதிகளை, அதி மதநம்-அடைகிறதற்கு, மௌக்திக-முத்துக்களுடைய, கம்ஸா-காந் திகளுடைய, ஜால-கூட்டத்தினுடைய, விடநாக-சேர்க்கையினு லே, ரமணீய:-அழகாயிருக்கிற, ப்ரவாளை:-பவழங்களாலே, ரங்கேஶிது:-ஸ்ரீரங்கநாதனுக்கு, ஸ்மிதவிஶேஷயுதம்-ஒருவித மான சிரிப்போடுகூடிய, ப்ரியாணாம்-பத்னிகளுடைய, பிம்பா தரம்-கோவைப்பழம்போலுள்ள உதட்டை, ஸ்மாரயஸீவ-நினைவு மூட்டுகிறாய்போலே.

(கருத்து) ஏ பாதுகையே ! உன்மேரில் முத்தும் பவழமும் சேர்த்து இழைத்திருக்கிறது. முத்துக்களின் காந்தி பவழத்தில் படும்போது, பெருமாளைத்தாயார்ஸந்நிதிக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டியதற்காக சிரிப்போடு கூடின தாயார்களுடைய உதட்டினழகை நினைவு மூட்டுவது போலிருக்கிறது. ஆழ்வார், மிகுந்த ஆசையுடன் பெருமாளுடைய ஸ்வரூபம் குணங்கள் முதலியவைகளை வர்ணிக்கும்போது உடனேபெருமாளுக்கு ஆழ் வாரை அநுபவிக்கவேண்டுமென்று ஆசையுண்டாகிறது. (22)

(௫௩) ரங்கேஶ்வரஸ்ய ம்ருகயாரஸசரணாவஸக்தாம்
ரக்ஷ:கபீந்த்ரகடிதேஷு கிரீடேஷு போத்ரு ।
ஸௌவர்ணவதீ நிவஹவிசித்ர ரத்னாம்
சாயாம்ருகஸ்ய ஸவிதாமிவ ஶாஸனாக்ஷாம் ॥

ஸௌவர்ணவதீ-வாராய் பாதுகையே! நிவஹ-இழைக்கப்பட் டிருக்கிற, விசித்ரரத்நாம்-ஆச்சரியமான அனேகவித ரத்னங்களை யுடையவளும், ரங்கேஶ்வரஸ்ய-ஸ்ரீரங்கநாதனுகிற, ம்ருகயா:-மான் களைப்பிடிக்கிற வேடனுடைய, சரணாவஸக்தாம்-திருவடியோடு சேர்ந்தவளாயுமிருக்கிற, த்வாம்-உன்னை, ரக்ஷ:கபீந்த்ரகடி தேஷு-ராக்ஷஸர்களுக்குத்தலைவனான விபீஷணனுடையவும், குரங் குகளுக்குத்தலைவனான ஸுக்ரீவனுடையவும், கிரீடங்களிலே,

நிவேஶயோஶ்ரம்-வைக்கத்தகுந்ததாயிருக்கிற, சாயாதீப்ரஸ்ரு- வெள்ளி, தங்கம், இரத்தினம் இவைகள் ரூபமான, புள்ளிகளுடன் கூடிய ஆச்சரியமான மான் வேஷங்கொண்ட மாரீசனுடைய, வர்ணா-தோலினாலே, ரசிதாம்-செய்யப்பட்ட பாதரக்ஷைபோல, மந்யே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே ! உன்பேரில் கருப்பு சிவப்பு முதலிய அனேக வர்ணங்களான இரத்தினங்கள் இழைத்திருக்கின்றன. அதைப்பார்த்தால் அனேக வர்ணங்களோடு கூடின மான் வேஷத்தோடு வந்த மாரீசனுடைய தோலினால் செய்யப்பட்டதும், ஸுக்ரீவன் விபீஷணன் முதலானோர் தலையிலே ஸாதிக்கப்பட்டதுமான பாதரக்ஷைபோலிருக்கிறது. சித்ரகூடத்தில் பரதாழ்வான் ஸ்ரீ பாதுகையை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு போய் விட்டபடியினால், வேறு ஒரு பாதரக்ஷை தைத்தது. பெருமாளுக்கு இந்தப்பிரகிருதி மண்டலத்தில் கஷ்டப்படுகிற ஜீவன்களை நித்தியமான ஸுகத்தைக்கொடுக்கிற தன் உலகத்திற்கு அழைத்துக் கொண்டுபோக வேண்டுமென்கிற ஆசையினாலே, தன்னைக்காட்டிலும் உயர்ந்த ஆசார்யர்களை அழைத்துக் கொண்டு பூமிக்கு எழுந்தருளுகிறார். அவர்கள், நவரசங்களும் பொருந்திய வார்த்தைகள் காரியங்கள் இவை முதலிய அனேக உபாயங்களாலே, மிருகங்கள் போலொன்றும் தெரியாதவர்களாயும், ராக்ஷஸர்களைப்போல் வெகு பொல்லாதவர்களாயுமிருக்கிற இந்தஜீவன்களை பகவான் திருவடிகளிலே சேர்க்கிறார்கள். (23)

(௫௪) ஶயநாவஸி ரங்கபதிரிஹ பாதுகே த்வம்
சாயாகிராதகஸூதே நவரத்நசாஶ்யா ।
ஆக்ருஷ்ட வாஸவத நுர்குணகோடிரேகா
ஸம்யோஜிதா ஸம்வலிதகபர்வரிஷதேஷு நீவைः ॥

ஹே ரங்கபதிவிஹ பாதுகே-ஸ்ரீ ரங்கநாதனுடைய ஸஞ்சாரத்துக்காக இருக்கிற, வாயாய் பாதுகையே ! த்வம்-நீ, ஆக்ருஷ்ட-இழுக்கப்பட்டிருக்கிற, வாஸவத நு:-இந்திரனுடைய வில்லினுடைய, குணகோடி:-நுனுக்குகளையுடையனவும், ஏகைகா-ஒன்றுக்கொன்று, ஸம்வலித-சேர்க்கையினாலே, கபர்வரிதே:-

அனேக வர்ணமுள்ளதாகப் பண்ணப்பட்டனவுமான, மணிநாகயோ- ரத்னங்களுடைய காந்திகளால், கிராதவேஷ-வேட வேஷம் பூண்ட சிவனுடைய, கோடீரே-கிரீடத்திலே, நவபர்ஹாபீடம்-புதிதான மயில் தோகையினாலே செய்யப்பட்ட மாலையை, வ்யாதநோஷி-உண்டு பண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் பேரில் அனேகவிதமான ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளுடைய காந்தியைப் பார்த்தால் மேகத்தில் போடும் வில்லைப்போலிருக்கிறது. உன்னை சிவன் தலையில் வைத்துக்கொள்ளுகிறார். புதிதான மயில் தோகையினால் செய்த மாலையை வைத்துக்கொண்டது போலிருக்கிறது. ஆழ்வாருடைய ஆச்சரியமான திவ்ய ஸூக்தியைப் பெருமாளுக்குப் பரமபக்தனான ஸர்வஜ்ஞன் என்று பேர் பெற்ற சிவன் தலையால் கொண்டாடுகிறான். (24)

(௫௫) அந்யோந்யஸங்கதஹரிந்மணிபத்மராக
ரங்கேச்வரஸ்ய சரணாவநி ராஜஸே த்வம் ।
ஸந்த்யாவிநோதஸுபகாத்ருதயோகபீடம்
சைலாத்மஜாகிரிசயோரிவ தேஹமேகம் ॥

ரங்கேச்வரஸ்ய-ஸ்ரீ ரங்கநாதனுடைய, ஹே சரணாவநி-வாராய் பாதுகையே! அந்யோந்ய-ஒன்றுக்கொன்று, ஸங்கத-அழகாயிருக்கிற, ஹரிந்மணி-பச்சை ரத்னமென்ன, பத்மராக:-சிகப்புக்கற்களென்ன, இவைகளையுடைய, த்வம்-நீ, சைலாத்மஜா-ஹிமவத்பர்வதத்தின் பெண்ணான பார்வதி என்ன, கிரிச-சிவனென்ன, இவர்களுடைய, ஏகம் தேஹம்-ஒன்றான சரீரத்தை, அதாவது அர்த்தநாரீச்வரனென்ற ஒரு பாதி சிவன் ஒருபாதி பார்வதியான சரீரத்தை, ஸந்த்யாவிநோதஸுபகாம்-தனக்கு திருஷ்டாந்தமாயிருக்கிற பெருமையினாலே, த்ருதயோகபீடம்-பிரயோஜனமுள்ளதாகப் பண்ணுகிறவள் போலே, ராஜஸே-விளங்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் சிகப்பு ரத்னமும் பச்சைக்கல்லும் சேர்ந்தாப்போலே இழைத்திருக்கிறது. இந்த

இரண்டு வர்ணங்களும் ஒன்றோடொன்று சேருவது மிகவும் அழகாக இருக்கிறது. அப்படிப்பட்ட உன்னைப் பார்த்தால் பார்வதி பாதியும் சிவன் பாதியுங் கூடின அர்த்தநாரீச்வரன் சரீரம் போலிருக்கிறது. அந்த சரீரத்தை உனக்குத் திருஷ்டாந்தமாக ஆக்கி அதுக்கு ஒரு பெருமையைக் கொடுக்க இந்தமாதிரி இருக்கிறதுபோலிருக்கிறது. ஆசார்யர்களிடத்தில் கடுமையும் தயையும் சேர்ந்திருக்கிறது. (25)

(௨௬) தாபத்ரயப்ரசமநாய ஸமாச்ரிதாநாம்
ஸந்தர்சிதாருணஸிதாஸிதரத்நபங்க்தி: |
பாதாவநி ரங்கந்ருபதே ஸ்த்வமணிவாபகே ஸம்
ஸ்ருஷ்டவ்யஸி ஸரோஜகல்ஹாரகோத்பலகாநநாநி ||

ரங்கந்ருபதே:-ஸ்ரீரங்கநாதனுடைய, ஹே மணிபாதுகே-வாராய்க்கல்லிழைத்த பாதுகையே! ஸந்தர்சித-காண்பிக்கப்பட்டிருக்கிற, அருணஸிதாஸிதரத்ந-சிகப்பு, வைரம், இந்திரநீலம்என்றரத்தினங்களுடைய, பங்க்தி:-வரிசையையுடைய, த்வம்-நீ, ஸமாச்ரிதாநாம்-தன்னை யடைந்தவர்களுடைய, தாபத்ரய-மூன்று தாபங்களுடைய, (அதாவது தன்னால் வருவது, பிள்ளை பெண்டாட்டிகளால் வருவது, மழை முதலியவற்றால் வருவது, இவைகளை) ப்ரசமநாய-போக்கடிப்பதன்பொருட்டு, ஸரோஜ-செந்தாமரைப்பூவென்ன, கல்ஹார-ஆம்பலென்ன, உத்பல-கருநெய்தல் புஷ்பமென்ன இவைகளுடைய, காநநாநி-காடுகளை, ஸ்ருஷ்டவ்யஸி:-உண்டுபண்ணுகிறாய் போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் சிகப்பு, வைரம், இந்திர நீலம் இந்த மூன்றும் அதிகமாக இழைந்திருக்கிறது. அதைப்பார்த்தால் உன்னையடைந்தவர்களுடைய தாபத்தைப் போக்குவதற்காக தாமரை, ஆம்பல், கருநெய்தல் இந்த புஷ்பங்களை ஏராளமாக உண்டுபண்ணியிருக்கிறது போலிருக்கிறது. ஆழ்வார் அனேகவித பாசுரங்களை ஸாதித்திருக்கிறார். அவைகளுள் சில பெருமாளையாசைப்படுவதாயும், சில பெருமாள்ஸங்கதிகளைத் தெளிவாய் எடுத்துச் சொல்வதாகவும், சில பெருமாள் அகப்படவில்லையேயென்று வருத்தப்படுவதாகவும் இருக்கின்றன. அவைகளை வரிசையாய் சிகப்பு, வெளுப்பு, கருப்பு என்று வைத்துக்

கொள்ளவும். இந்தப் பாசுரங்களை நல்ல ஆசாரியர்களின் அநுக்கிரஹத்தாலும் உபதேசத்தாலும், ஸுக்ருதத்தாலும் ஐந்து அர்த்தங்களை நன்றாயறிந்துப்பெருமாளையநுபவித்தால், ஸம்ஸாரத்தில் இருந்தபோதும் தாபமிருக்காது. பிறகும் பெருமாளுடைய நித்தியமான உலகத்தையடைகிறபடியால் தாபமில்லை. இப்போது பெரும்பாலும் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம், ஸ்ரீ கீதாபாஷ்யம், ஸ்ரீமத்பகவத் விஷயம் (அதாவது திருவாய்மொழி வியாக்கியானம்) இவைகளை ஸேவிக்கிறார்கள், சொல்லவும் சொல்கிறார்கள், ஸங்கதியொன்றும் அகப்படவில்லை. ஸங்கதி அகப்பட்டால் ஒருவரிடத்திலும் கோபம் வராது என்று சொல்லியிருக்கிறது. இப்போதுள்ள வித்வான்களாலே எவ்வளவு சண்டையுண்டாகிறதோ, அவ்வளவு அறிவு ஏற்படவில்லை. ஆனால் இவர்களிஷ்டப்படி தெய்வம் சண்டையுண்டுபண்ண விடுகிறதில்லை. ஸங்கதி தெரிந்து பெருமாளை யநுபவிக்கிறவர்கள் இல்லையென்பதுமில்லை. மிகவும் அபூர்வமாக இருக்கிறார்கள். அதிகப்படிப்பில்லாமல் பக்தர்களானவர்கள் தேவலை. சில ஸ்திரீ சூத்திரர்கள் மிகவும் நல்லபடியாயிருக்கிறார்கள். ஐந்து அர்த்தமாவது— (1.) ஜீவன், பெருமாள் கோபத்தை, (2.) சமாதானம் பண்ணி (3.) பெருமாளு(4) இடம்போய் இஷ்டமான (5.) வேலைகளைச்செய்கிறது. இப்போது பெரிய வித்வான்களோ சுத்த முட்டாளோ எவருக்குமே இந்த உடம்பில் ஜீவன் ஒன்றிருக்கிறதென்றும், தெய்வமொன்றிருக்கிறதென்றும், அதனிடத்துப் போகவேண்டுமென்றும், இவை முதலிய நினைவு பெரும்பாலுமில்லை. உபந்யாஸம் பண்ணுகிற பேர்கள் இல்லை. யாராவது லக்ஷத்தில் ஒருவன் இந்த ஸங்கதிகள் நமக்கு தெரியவில்லையேயென்றால் முட்டாளாயிருப்பவர்கள் கேட்பார்கள். வித்வான் கிரந்தமெழுதி அச்சுப்போடுவார். அவருக்கும் ஒன்றுந்தெரியாது. அவர் கிரந்தத்தால் வேறு ஒருவருக்கும் ஒன்றுந்தெரியாது. வேறொருவர் சொன்னாலும் அவர் கேட்கமாட்டார். ஏனெனில் அவர் வேறொருவரையும் தெரிந்தவராக நினைப்பதில்லை. ஆகையால் க்ஷேமத்தையடைய வேண்டுமானால் நம்முடைய கெடுதல் நமக்குத் தோன்றல் வேண்டும். (26)

(௫௫௭) [illegible]
[illegible]

அந்யோந்யமப்யுபகதஶபலதயா ஏஷாம்
பாதி காந்திரபரா மணிபாதுகேஷு ||

ஹே மணிபாதுகே-வாராய்க்கல்லிழைத்த பாதுகையே! தவ-உன்னுடைய; இந்த்ரநீலா:-இந்திர நீலக்கற்கள், ஶௌரே:-பெருமாளுடைய, தேஹத்யுதிம்-திருமேனியினுடையகாந்தியை, வ்யஞ்ஜயந்தி-பிரகாசப்படுத்துகின்றன, பத்மராகா:-சிகப்புக்கற்கள், பாதாப்ஜ-செந்தாமரைப்பூப் போலிருக்கிற திருவடியினுடைய, ராகம்-காந்தியை, வ்யஞ்ஜயந்தி-பிரகாசப்படுத்துகின்றன, ஏஷாம்-இந்தஇரண்டுரத்தினங்களுடைய, காந்திஸ்து-காந்தியோவென்றால், அந்யோந்ய-ஒன்றுக்கொன்று, அப்யுபகத-அடையப்பட்டிருக்கிற, ஶபலதயா-உயர்த்தியையுடைத்தாயிருக்கையினாலே, (ஶபலம்-என்றால், ஒரு ரூபத்துக்கு விரோதியான வேறொரு ரூபத்தினுடைய சேர்க்கையினாலேயுண்டான அழகு) அபரா-வேறாக, அதாவது மிகவுமுயர்ந்ததாக, பாதி-விளங்குகிறது.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் இந்திர நீலக்கற்கள் இழைத்திருக்கின்றன. அதைப் பார்த்தால் பெருமாள் திருவடி போலிருக்கிறது. சிகப்பு கல்லிழைத்திருக்கிறது. அது பெருமாளுடைய உள்ளங்கால் மாதிரியிருக்கிறது. இந்த இரண்டு ரத்னங்களுடைய காந்தி ஒன்றோடொன்று சேரும்போது மிகவும் அழகாக இருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களில் சில பெருமாளை ஆசைப்படுவதாகவும், சில பெருமாள் அகப்படவில்லையேயென்று வருத்தப்படுவதாகவுமிருக்கின்றன. இவைகள் தனித்தனியே நன்றாயிருக்கின்றன. சேர்த்து ஸேவித்தாலும் இன்னும் அதிகமாக நன்றாய் இருக்கின்றன. (27)

(௫௫௮) ரக்ஷணசக்திஸஹரிந்மணிபத்மராகா
ஸரோஜராஜீவநயநபதாவநி பாவயே த்வாம் |
தத்பாதவிஸ்ருதஜுஷாம் ஶ்ருதிஸாரவீணாம்
ஸணொபாவயா நவிவ மஹிநிவேஶயோக்யா ||

ஸரோஜ-செந்தாமரைப்பூப்போலிருக்கிற, ராஜீவந-திருக்கண்களையுடைய பெருமாளுடைய, பதாவநி-திருவடியைக் காப்

பாற்றுகிற, பாதுகையே! ஶ்ரேணீ-இழைக்கப்பட்டிருக்கிற, மௌக்திக-முத்துக்களென்ன, ஹரிந்மணி-பச்சைக்கற்களென்ன, பத்மராகம்-சிகப்புக்கற்களென்ன இவைகளையுடைய, த்வாம்-உன்னை, தத்பாத-அந்தப் பெருமாளுடைய திருவடியிலே, விஶ்ரம்ப-ஶயனம்-சிரமபரிஹாரம் பண்ணிக்கொண்டிருக்கிற, அதாவது படுத்துக்கொண்டிருக்கிற, ஶ்ருதி-வேதமாகிற, ஸுந்தரீணாம்-பெண்களுடைய, மௌலிநிவேஶயோக்யம்-வைத்துக்கொள்ளத்தகுந்ததான, பஹுவர்ண-அனேக வர்ணங்களோடு கூடின தலையணையைப்போல, பாவயே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்து, பச்சைக்கல், சிகப்புக்கல், இவைகளெல்லாம் இழைத்திருக்கின்றன. அதனாலே அனேக வர்ணமுள்ளவளாக இருக்கிறாய். அப்படிப்பட்ட உன்னைப்பார்த்தால் பெருமாளுடைய திருவடியில் படுத்துக்கொண்டிருக்கிற வேதங்களாகிற பெண்களுக்குத் தலைக்கு வைத்துக்கொள்ள அனேக வர்ணமுடையப் பட்டுத்தலையணைபோலிருக்கிறது. ஜீவன்களுக்கு நல்ல ஸங்கதிகள் தெரியவேண்டுமேயென்று வேதத்திற்கு விசாரமாயிருக்கிறது. அவனவன் தோன்றினபடி அர்த்தம் சொல்லுகிறான். அந்த வேதங்களோ பெருமாள் திருவடியில் படுத்துக் கொண்டிருக்கின்றன. ஆழ்வார் அவதரித்துப் பிரபந்தம் ஸாதித்தபிறகு அந்தக்கவலையில்லாமல் ஸ்வஸ்தமாகப்படுத்துக் கொண்டிருக்கின்றன. படுத்துக்கொள்ளத்தலையணை ஆகப்பட்டது. ஆழ்வார் அவதரித்த பிறகு வேதத்தினர்த்தம் வைஷ்ணவர்களுக்குத்தெரிந்தது. (28)

(௬௨௯) ஆஸந்நவாஸவஶிலாருசிராஸ்த்வதீயா:
ஸரோஜாக்ஷஸ்ய ஸஞ்சாரக்ஷிணி ஸுபத்மராகா: ।
ஸம்பாவயந்தி ஸததம் த்வதுபாஸ்ரிதாநா:
ஸத்ய:ப்ரஸூததநயாஸ்ஸமாந வஸ்தா ॥

ஸரோஜாக்ஷஸ்ய-தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையுடைய பெருமாளுடைய, பதரக்ஷிணி-வாரர்ப்பாதுகையே! ஆஸந்ந-ஸமீபத்திலிருக்கிற, வாஸவஶிலா-இந்திர நீலக்கற்களாலே, ருசிரா:-அழகாயிருக்கிற, த்வதீயா:-உன்னுடையதான, பத்மரா

ரா:-சிவப்புக்கற்கள், க்வசித்-ஒரு ஸமயத்தில், உஷ்ண பானோ:-ஸூரியனுடைய, ஸத்ருʼசம்-ஸமம். யமுனையென்ற ஆற்றினாலே, ஸ்ரீமதா-அழகாயிருக்கிற, ஸ்வரூபம்-இருப்பை, ஸம்பாவயந்தி-தோன்றச் செய்கின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் சிகப்பும், இந்திரநீலமும் சேர்ந்திழைத்திருக்கிறது. அதைப் பார்த்தால் கருப்பான யமுனை என்ற நதியையுண்டுபண்ணி மடியில் வைத்துக்கொண்டிருக்கிற ஸூரியனைப்போலிருக்கிறது. ஆழ்வார், பெருமாளுடைய திருமேனியழகையும், அவரது குணங்களையும், ஆச்சரியமாக அநுபவிக்கும்போது உடனே அவரைக் கட்டிக்கொள்ள வேண்டும் போலிருந்து கையை எடுத்துப்போடப் போகிறார். அவர் கைகளுக்கு அகப்படவில்லை. அப்போது கண்ணுக்குப்பட்டது போலிருந்ததும் தவரிப்போய்துக்கப்படுகிறார். ஆழ்வாருடைய மிகுந்த தெளிவான அநுபவத்தை வைரமாகவும் ஆசைப்படும்பாசுரத்தை சிவப்பாகவும், கைக்கு அகப்படவில்லையே என்று வருத்தப்படும் பாசுரத்தைக் கருப்பாகவும் சொல்லுகிறது. (29)

(ருகூ0) முக்தேந்த்ரநீலமணிபி: க்ரதிதா ஸ்தவார்த்தா:
பங்க்தீ: த்ருʼடா: பரிசராமி பதாவநி த்வம் ।
மந்யே ஸமாச்ரித ஜநஸ்ய தவாநுபாவாத்
உந்மோசிதே ஸுக்ருʼத துஷ்க்ருʼத ச்ருʼங்கலே த்வே ॥

ஹே பரிசராமி பதாவநி-வாரிசாய் பெருமாளுடைய பாதுகையே! முக்த-முத்துக்களென்ன, இந்த்ர நீலமணிபி:-இந்திர நீலக்கற்களென்ன, இவைகளாலே, பண்ணப்பட்டிருக்கிற, ஸ்தவார்த்தா:-உன்னுடைய, த்ருʼடா:-கெட்டியான, பங்க்தீ:-வரிசைகளை, தவ-உன்னுடைய, அநுபாவாத்-பெருமையினாலே, உந்மோசிதே-விடுவிக்கப்பட்டிருக்கிற, ஸமாச்ரித ஜநஸ்ய-உன்னை யடைந்தவர்களுடைய, த்வே-இரண்டுகளான, ஸுக்ருʼத-புண்ணியமென்ன, துஷ்க்ருʼத-பாபமென்ன, இவைகளான, ச்ருʼங்கலே-விலங்குகளாக, மந்யே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்தும் இந்திர நீலக்கல்லும் இழைத்திருக்கிறது. அந்த இரண்டு வரிசைகளையும் பார்க்கும்போது உன்மஹிமையால் நீ அவிழ்த்துவிட்ட உன்னடியார்களுடைய புண்ணிய பாவங்களாகிய விலங்குகள் போலிருக்கின்றன. ஆசார்யர்களைக்கொண்டு ஒருவன்பெருமாளையாசிரயத்தால், பெருமாள் அவனுடைய புண்ணியம் பாபமென்கிறஇரண்டு விலங்குகளையும் போக்கித் தன்னுடைய லோகத்துக்கு அவனை யழைத்துக் கொள்ளுகிறார் என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. புண்ணியத்தை வெளுப்பாகவும், பாபத்தைக்கருப்பாகவும், சொல்லுகிற வழக்கம். புண்ணியமென்பதுபெருமாளை நினைப்பதற்கு இடஞ்சலான இந்த உலகத்திலேயோ ஸ்வர்க்கமென்று சொல்லப்பட்ட லோகம் முதலான லோகங்களிலேயோ ஸுகங்களைக் கொடுக்கிறது. பாபமென்பது இங்கும் நரகத்திலும் துக்கங்களைக்கொடுக்கிறது. ஒருவனுக்கு ஸுகம் வந்தால்பெருமாளை நினைக்கிறதேயில்லை. கஷ்டம் நேர்ந்தாலும் வைத்தியனைக்கூப்பிடுகிறான். அந்த மருந்தை இந்த மருந்தைக் கொண்டுவா என்கிறான். பாபத்தினாலே பெருமாளை நினைக்கிறதில்லை. பெருமாளைத் தவிர மற்ற ஸுகங்களையும் துக்கங்களையும் வெறுத்தவன் தான் பெருமாளிடத்தில் போகிறான். 'சிந்தயந்தீ' என்றகோபஸ்திரீக்குப் பெருமாளை யநுபவித்ததால் புண்ணியம் போய், பெருமாளை யடையமுடியவில்லையே என்ற துக்கத்தாலே பாபமும் போய் மோக்ஷத்தை அடைந்தாளென்று சொல்லியிருக்கிறது. அது மாதிரி ஆழ்வார் பெருமாளையநுபவிக்கிறேனென்று சில பாசுரங்களில் ஸந்தோஷப்படுகிறார். அது ஸுக்ருத பலம், அது முத்து. அடையவில்லையேயென்று வருத்தப்படுகிறார். அது பாப பலம், அது இந்திர நீலம். (30)

(௫௯௧) உத்கீர்ணமாயதகனைர் ஹரிநீலஜாலை:
ஸ்தூலா விசேஷருசிராணி ச மௌக்திகானி ।
த்வத்ஸ்தாஸ் ஸரஸிஜேக்ஷண பாதரக்ஷே
ஸம்யோஜயந்தி நியதா பவஸந்திபந்தம் ॥

ஸரஸிஜேக்ஷண-தாமரைப்பூப் போலிருக்கிற கண்ணை யுடையபெருமானுடைய, பாதரக்ஷே-வாராய்திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே! உத்கீர்ண-கக்கப்பட்டிருக்கிற, ஸ்தூல-ரொம்ப

அதிகமான, தமஸ:-இருட்டை உடைத்தாயிருக்கிற, ஹரிநீல-இந்திரநீலக்கற்களுடைய, ஸஞ்சா:-துணுக்குகளும், தாராவிஶேஷ-உயர்ந்த நக்ஷத்திரங்கள்போல், ருசிராணி-இன்பமாயிருக்கிற, மௌக்திகாநிச-முத்துக்களும், தவ-உன்னுடைய, ஸம்பர்கே-சேர்க்கையினாலே, பவ-சிவனுடைய, மௌலி-தலையிலிருக்கிற, இந்தும்-சந்திரனை, நிஶயா-ராத்ரியோடே, ஸம்யோஜயந்தி-சேர்க்கின்றன.

(கருத்து) ஏபாதுகையே! உன் பேரில் இந்திரநீலக் கல்லிழைத்திருக்கிறது. அதனுடைய கருப்புவர்ணத்தைப்பார்க்கும் போது வெய்யிலால்கூட போகாத இருட்டுப்போல் இருக்கிறது. உன்பேரில் முத்தும் இழைத்திருக்கிறது. அதனுடைய காந்தி உயர்ந்த நிலவு போலிருக்கிறது. உன்னை சிவன் தலையில் எடுத்து வைத்துக் கொள்ளுகிறார். அவர் தலையிலுள்ள சந்திரன், இந்த இரண்டு ரத்னங்களுடைய காந்தியோடு சேருகிறதினாலே ராத்திரியோடு சேர்ந்தது போலிருக்கிறது. பரமபதத்தில் துக்கமே இல்லாதபடியினாலே ஒரே பகலாக இருக்கிறது. பிரகிருதியிலே எவ்வளவு பெருமாளை அனுபவித்தாலும் பூர்ணமான அனுபவம் இல்லாத்தாலே துக்கம் இருப்பதாலே பிரகிருதி ராத்திரி போலிருக்கிறது. மஹான்களுடைய கிரந்தத்தின் தாத்பரியத்தை அறிகிறது ரொம்பசிரமம். என்னுடைய கெடுதலுக்கு எல்லையில்லை. ஏதோ தோன்றுகிறதைச் சொல்லுகிறேன். ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம், பகவத்விஷயம், இது முதலான கிரந்தங்களை நாம் ஸேவிக்கிறோம். அர்த்தமும் சொல்லுகிறோம். அதிலே இன்னது சொல்லியிருக்கிறதென்று நமக்குத் தெரியவில்லை. தெரிந்தாலும் செய்கையில் வரவில்லை. நல்ல ஆசாரியாளுடைய அனுக்கிரகம், உபதேசங்கள் பெற்று அவர்களாலே பழக்கி வைக்கப்பட்டு மனது தெளிந்தவர்களுக்கு அதில் சொல்லியிருக்கிற ஸங்கதிகள் தெரிந்து அதனாலே ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறார்கள். முத்தென்றால் சந்தோஷமாக ஸாதிக்கிற பாசுரங்களுக்குப் பேர். இந்திர நீலமென்றால் துக்கத்தோடு சொல்லுகிற பாசுரங்களுக்குப் பேர். (31)

(௩௨) விஷ்ணோ: பதேந ஸஹிதா மணிபாதுகே த்வம்
வ்யக்தம் ப்ரதீருசிராஜ்ஜ்வலமௌக்திகஶ்ரீ: ।
தாமேஷு தீவ்யஸி தமஸ்விஹரிந்மணீயஜாணா
தாரங்கிணீவ ஸரிதஶ் ஶ்வேதபாரிஷிதா: ॥

ஹே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! விஷ்ணோ:-பெருமானுடைய, பதே-திருவடியோடே, (ஆகாசத்தோடே) பதி-சேர்க்கப்பட்டும், வ்யக்த-பிரகாசிக்கிற, இந்த்ரநீல-கருப்புரத்னங்களுடைய, ருசி:-காந்தியை உடையவளாயும், உஜ்ஜ்வல-விளங்காநின்றிருக்கிற, மௌக்திகஸ்ரீ: - முத்துக்களுடைய சோபையை உடையவளாயும் இருக்கிற, த்வம்-நீ, காலேஷு-அந்தந்த காலங்களிலே, மருத்பி:-காற்றுகளாலே, (தேவதைகளாலே) உபாஸ்யமானா-ஏவப்பட்டிருக்கிற, (ஸ்தோத்திரம் பண்ணப்பட்டிருக்கிற) வஹதி:-நாலுபக்கத்திலும், ஸ்வச்ச-பிரகாசிக்கிற, வாரிபிந்து:-ஜலத்திவலைகளையுடைய, காதம்பினீ-மேகங்களுடைய வரிசைபோல, தீவ்யஸி-விளங்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லும் முத்தும் இழைத்திருக்கிறது. இந்த இரண்டையும் பார்த்தால் வெளுப்பான ஜலத்தோடு கூடிய (அதாவது மழைபெய்கிற) மேகங்கள்போலிருக்கிறது. ஆழ்வார் பகவானுடைய குணங்களை நினைத்த ஸந்தோஷத்தோடும் கண்ணுக்கும் கைக்கும் அகப்படவில்லையே என்றவருத்தத்தோடு அழுதுகொண்டிருக்கிறார். (23)

(ஸ்லோ) பாஸா ஸ்வயா ஸமவதோ மணிபாதுகே தே
முக்தாந்விதா மரதகோபலபங்க்திரேஷா ।
நித்யாவகாஹநஸஹம் ஸகலஸ்ய ஜந்தோ
கங்காந்விதம் ஜநயதீவ ஸமுத்ரமந்யம் ॥

ஸமவத:-பெருமானுடைய, ஹே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! முக்தாந்விதா-முத்துக்களோடுகூடிக்கொண்டிருக்கிற, தே-உன்னுடைய, மரதகோபல-பச்சைரத்னங்களுடைய, பங்க்தி:-வரிசையானது, ஸ்வயா-தன்னுடையதாயிருக்கிற, பாஸா-காந்தியினாலே, ஸகலஸ்ய ஜந்தோ:-எல்லாப்பிராணிகளுக்கும், நித்யாவகாஹநஸஹம்-எப்போதும் இறங்கக்கூடியதாகயிருக்கிற, கங்காந்விதம்-கங்கையோடு சேர்ந்திருக்கிற, அந்யம்-வேறான, ஸமுத்ரம்-ஸமுத்ரத்தை, ஜநயதீவ-உண்டுபண்ணுகிறது போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அதனைப் பார்த்தால் கங்கைபோலிருக்கிறது. பச்சை ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளுடைய காந்தி ஸமுத்ரம் போலிருக்கிறது. இந்த இரண்டையும் பார்க்கும்போது இப்போதிருக்கிற இந்த லோகத்திலுள்ள ஸமுத்ரம் ஏதோ ஒரு இடத்தில் கங்கையோடு சேர்ந்திருக்கிறது. ஸேது என்கிற இடம் தவிரமற்றஇடங்களில் ஸமுத்திரத்திலே அமாவாஸ்யைபௌர்ணமி தவிர மற்ற காலங்களிலே தீர்த்தமாடகூடாது. அந்த காலங்களிலும் தீட்டுக்காரர் முதலானவர்கள் தீர்த்தமாடகூடாது. அதற்காக எல்லாரும் எப்போதும் ஸ்நாநம் பண்ணக்கூடியதாய் எந்த இடத்திலும் கங்கையுடன் சேர்ந்ததான புதுஸமுத்ரத்தை உண்டு பண்ணுகிறது போலிருக்கிறது. பூமியிலே பிறந்த அறிவுள்ளவன் ஜன்மாந்தர மஹாஸுக்ருதத்தாலே நல்ல ஆசார்யனை அடைந்து ஆழ்வார் பாசுரங்களுடைய அபிப்பிராயத்தை அறிந்தால் கங்கை ஸமுத்ரம் முதலியவைகளின் அபேக்ஷையில்லை. அந்த ஸ்நானங்களாலேவரும் ஸுகத்தைக்காட்டிலும் விசேஷமான ஸுகத்தை அனுபவிக்கிறான். அவைகளும் இந்த அறிவுக்காகத்தான். (33)

(௩௪) ஸூர்யாத்மஜா ஹரிமணிப்ரதிபத்தராகா
த்வாம் நித்யமாச்ரிதவதீ மணிபாதரக்ஷே ।
பதா ஜநார்த்தநபதே க்ஷணஸாந்த்ரஸங்கா
மாஸந்நமௌக்திகருசா ஹஸதீவ கங்காம் ॥

மணிபாதரக்ஷே-வாரரய்கல்லிழைத்த பாதுகையே! ஹரிமணி-இந்திரநீலக்கல்லுகளுடைய, ப்ரதிபத்தராகா-வரிசைஎன்கிற வியாஜத்தினாலே, ஸூர்யாத்மஜா-ஸூர்யனுடைய பெண்ணையமுனையானது, த்வாம்-உன்னை, நித்யம்-எப்போதும், ஆச்ரிதவதீ-அடைந்தாய்க்கொண்டு, ஆஸந்ந-கிட்ட இருக்கிற, மௌக்திக-முத்துக்களுடைய, ருசா-காந்தியினாலே, பதா-திருவிக்கிரமாவதாரம்பண்ணினகாலத்திலே, ஜநார்த்தநபதே-பெருமாளுடைய திருவடியிலே, க்ஷணஸாந்த்ரஸங்காம்-சற்றுநாழிமட்டும்சேர்ந்ததான, கங்காம்-கங்காநதியை, ஹஸதீவ-சிரிக்கிறதுபோல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திர நீலக்கல் இழைத்திருக்கிறது. அதனுடைய காந்தி யமுனை போலிருக்கி

றது. அதன் பக்கத்தில் முத்து இழைத்திருக்கிறது. அதனுடைய காந்தியைப் பார்த்தால் சிரிப்பது போலிருக்கிறது. "ஏ கங்கையே, நீ திருவக்ரமாவதாரத்தில் சற்று நாழிகை தான் திருவடியில் இருந்தாய். நான் எப்போதும் இருக்கிறேன் பார்த்தாயா?" என்று யமுனை சிரிக்கிறது போலிருக்கிறது. எவ்வளவோ பேர்கள் பெருமாளுக்கு பக்தர்கள் இருக்கிறார்கள். நம்மாழ்வார் மாதிரி ஒரு துளிகாலம்கூட பெருமாளை விடாதவர்கள் ஒருவருமில்லை. (34)

(௫௯௫) பர்யந்தஸங்க்ரதிதபா₄ஸுரபத்₃மராகா₃:
பத்₃மோத₃ரப்₄ரமரகாந்திமுஷஸ்த்வதீ₃யா: ।
த்வத்ஸம்ஶ்ரயேண ஶரணாவநி ஶக்ரநீலா:
பீதாம்ப₃ரேண புருஷேண ஸாம்யம் ப₄ஜந்தே ॥

ஶரணாவநி-வாராய் பாதுகையே! பர்யந்த-ஸமீபத்திலே, ஸங்க்ரதித-இழைக்கப்பட்டிருக்கிற, பா₄ஸுர-விளங்காநின்றிருக்கிற, பத்₃மராகா₃:-சிவப்புக்கற்களை உடைத்தாயும், பத்₃ம-செந்தாமரைப்பூவினுடைய, உத₃ர-நடுவிலேஇருக்கிற, ப்₄ரமர-வண்டுகளுடைய, காந்திமுஷ:-அழகை அடைந்ததாயுமிருக்கிற த்வதீ₃யா:-உன்னுடையதான, ஶக்ரநீலா:-இந்திரநீலக்கற்கள், த்வத்ஸம்ஶ்ரயேண-உன்னை அடைந்திருக்கிற, பீதாம்ப₃ரேண-பொன்வர்ணமான உயர்ந்த வஸ்திரத்தைச்சாத்திக்கொண்டிருக்கிற, புருஷேண-பெருமாளோடு, ஸாம்யம்-ஸமானமாயிருக்குகையை, ப₄ஜந்தே-அடைகின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலே இந்திரநீலக் கற்கள் இழைத்திருக்கின்றன. பக்கத்திலே உயர்ந்த சிகப்புக் கற்கள் இழைத்திருக்கின்றன. இந்த இரண்டையும் பார்க்கும்போது செந்தாமரைப் பூவின் நடுவில் வண்டு உட்கார்ந்தது போலும், உயர்ந்த தங்கஜரிகை துப்பட்டா சாத்திக்கொண்டிருக்கிற நீருண்ட மேகம்போல் கருத்திருக்கிற பெருமாளைப் போலும் இருக்கிறது. ரொம்ப முட்டாளாக இருந்த ஒருவன் ஆழ்வாருடைய பூர்ண அனுக்கிரஹத்தாலே, நல்ல ஆசார்யனை அடைந்து பெருமாள் தாயார் முதலானவர்களுடைய குணங்களைப் பூர்ணமாக அறிந்து கொஞ்சகாலத்தில் பெருமாள் போலேயே ஆகிவிடுகிறான். (35)

(௫௬) மந்யே பதாவநி ஸதா பரிசிந்வதீ த்வம்
ரங்கேஶிதுஶ்சரணபங்கஜஸௌகுமார்யம் ।
அக்ரே ஶோபாபிரருணோபலமௌக்திகாநாம்
ப்ராஜ்யாம் விகிரஸி ஶஷ்பபுஷ்பபங்க்திம் ॥

பாதாவநி - திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே! ஸதா - எப்போதும், ரங்கேஶிது: - ஸ்ரீரங்கநாதனுடைய, சரணபங்கஜ - தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியினுடைய, ஸௌகுமார்யம் - ரொம்பமெதுவாயிருக்குகையை, பரிசிந்வதீ - பழகாநின்றிருக்கிற த்வம் - நீ, அக்ரே - முன்பிரதேசத்திலே, அருணோபல - சிகப்புக்கல்லென்ன, மௌக்திகாநாம் - முத்தென்ன, இவைகளுடைய, ஶோபாபி: - காந்தியினாலே, ஶஷ்ப - துளிரென்ன, புஷ்ப - பூக்களென்ன இவைகளுடைய, பங்க்திம் - வரிசையை, விகிரஸி - வைக்கிறாய், மந்யே - (என்று) நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் சிகப்புக் கல்லும் முத்தும் இழைத்திருக்கிறது. பெருமாள் உன்னைச் சாத்திக்கொண்டு போகிறபோது அவைகளுடைய காந்தி எதிரில் அடிக்கிறது. அதைப் பார்த்தால் நீ எப்போதும் பெருமாளுடைய திருவடியோடு பழகுகிறபடியினாலே "ரொம்பமெதுவாக இருக்கிறதே. தரையில் என்னமாக நடக்கமுடியும்" என்று தளிரையும் பூவையும் வாரி இரைப்பது போலிருக்கிறது. ஆழ்வார் எல்லா ஜனங்களுடைய ஹிருதயமும் கட்டியாக இருப்பதால் அவைகளில் பெருமாள் வரமுடியாதென்பதற்காகப் பெருமாளுடைய குணங்களை எடுத்துச் சொல்லிப் பெருமாளிடத்திலே ஆசையை உண்டுபண்ணி மனதை நல்லதாகச் செய்கிறார். பாதுகையைச் சாத்திக்கொண்டு கல் மேலே நடக்கிறது மிகவும் கஷ்டம். ஆசார்யாள் உபதேசம் அநுக்ரஹம் இவைகளாலே மனது நல்லதானால் பெருமாளை நினைக்கலாம்.

(௫௭) நிர்முக்தா சரணரக்ஷிணி நீயமாநா
ரங்கேஶ்வரேண பவதீ ரணதீக்ஷிதேந ।
ஸம்பத்யதே ப்ரதிபடீநயநாம்புஜாநாம்
ஜ்யௌத்ஸ்நீம் நிஶாமிவ ஸிதாஸிதரத்நபாஸா ॥

ஹே சரணரக்ஷிணி-வாராய் திருவடியைக் காப்பாத்துகிற பாதுகையே! ரணக்ஷிதௌ-சண்டைசெய்யவேணுமென்று ஸங்கல்பித்துக்கொண்டிருக்கிற, நிர்யாஸ்யதா-வெளிக்கிளம்புகிற, ரங்கேச்வரேண, ஸ்ரீரங்கநாதனாலே, நீயமாநா-அழைத்துக்கொண்டுபோகப்பட்டிருக்கிற, பவதீ-நீ, ஸித-வெளுப்பாயும், அஸித-கருப்பாயுமிருக்கிற, ரத்ந-ரத்னங்களுடைய, பாஸா-காந்தியினாலே, ஸுராரி-அஸுரர்களுடைய, ஸம்யதி-சண்டைசெய்கிறபெண்களுடைய, நயந-கண்களாகிற, அம்போஜாநாம்-தாமரைப்பூக்களுக்கு, ஜ்யோத்ஸ்நீம்-நிலாவுடன்கூடின, நிசாம்-இரவை, ஸமுசிதம் இவ-உண்டுபண்ணுகிறாய்போல.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் அஸுரர்களைத் தொலைப்பதற்காக உன்னைச்சாத்திக்கொண்டு எழுந்தருளுகிறார், உன்மேலிழைத்திருக்கிற வைரம் இந்திரநீலம் இவைகளுடையகாந்தி அடிக்கிறது. ஒன்று நிலவு போலும் மற்றொன்று இருட்டுமாதிரியும் இருக்கிறது. அதனால் இவைகளைப் பார்த்தால் நிலவுடன் கூடிய இரவு போலிருக்கிறது. அதனால் சண்டைக்கு வந்த அஸுரப் பெண்களுடைய கண்கள் (தாமரைப்பூக்கள்) மூடிப்போகின்றன. அதாவது அஸுரர்கள் இறந்து விடுகிறார்கள். அதனால் அவர்களுடைய மனைவிகள் ரொம்ப வருத்தப்படுகிறார்கள். ஆழ்வார், பெருமாள் இருக்கிறார் என்றும், அவர் குணங்கள் இப்படிப்பட்டன வென்றும் அவரை அடையாமல் நாம் ரொம்ப கஷ்டத்தை அனுபவிக்கிறோமே என்றும், நல்ல பிரமாணங்களை எடுத்து ஸாதிக்கிற போது கேட்கிற ஜனங்களுடைய காமம் (கெட்ட ஸங்கதிகளை அனுபவிக்கவேணுமென்று ஆசை) கோபம், த்வேஷம், கர்வம் இவை முதலிய கெட்ட குணங்கள் போய்விடுகின்றன. (37)

(௩௮) மரகதஹரிதாங்கீ சேஷபூஷா பதாப்ஜே
ரவிதநயஜலௌகவ்யக்தஸங்காஹ்வயச்ரீ: ।
கமயஸி பதரக்ஷே க்ருஷ்ணசைவ வாராசு
கநகஸரிதநந்தே பாம்ஸுபிம் ஸம்ஸ்க்ருதா கோவலம் ॥

ஹே பதரக்ஷே-வாராய் பாதுகையே! மரகத-பச்சைரத்னங்களாலே, ஹரித-பச்சையாயிருக்கிற, அங்கீ-திருமேனியையுடையவ

ளும், பத்மராகைஃ-சிகப்புரத்னங்களாலே, தோரா-பருத்தவைளாயும், ஈஷிநவ-புதிதாயிருக்கிற, ஜலபிந்து-ஜலத்திவலைகள் போல, வ்யக்த-பிரகாசிக்கிற, முக்தாபல-முத்துக்களுடைய, ஸ்ரீ:-சோபையையும் உடைத்தாயிருக்கிற, த்வம்-நீ, க்ருஷ்ண-பெருமாளாகிற, தேவ-மேகத்தினுடைய, ப்ரவாஸ-ஸஞ்சாரத்தினாலே, கநகஸரித்-காவேரியினுடைய, கூலே-கரைதரையிலே, ஸேந்த்ரகோபம்-பட்டுப்பூச்சியோடுகூடிக்கொண்டிருக்கிற, சாத்வலம்-பச்சைப்புல்லை, கலயஸி-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச்சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறார். உன்மேலே பச்சை, சிகப்பு, முத்து இவைகள் இழைத்திருக்கின்றன. இவைகளுடைய காந்தி எதிரே அடிக்கிறது. அதைப் பார்த்தால் மழைகாலத்தில் பட்டுப்பூச்சியுடன் கூடின புல் தரையிலே முத்துமுத்தாக மழை பெய்திருக்கிறது போலிருக்கிறது. ஆழ்வார் பகவானுடைய குணங்களை அனுபவித்து அதனால் ஒருஸந்தோஷமும்இன்னும்அவனைஅடைய வேணுமென்கிற ஆசையுடனும் எழுந்தருளியிருக்கிறார். (38)

(ருகூ) விரசிதஸரஸிஜாவிஷ்ணுபாதாரவிந்தா
ஸதிகமநபாவம் பாதுகே தர்சயந்தீ ।
ஸமஹிதமுக்தாபத்மராகப்ரகாசை:
வஹஸி நியதம் ப்ராப்தசோணம் ப்ரயாகம் ॥

ஹேபாதுகே-வாராய்பாதுகையே! விரசித-உண்டுபண்ணப்பட்டிருக்கிற, ஸரஸிஜா: - கங்கையைஉடைத்தாயிருக்கிற, விஷ்ணு-பெருமாளுடைய, பாதாரவிந்த-தாமரைப்பூபோலிருக்கிற, திருவடியைக்காட்டிலும், ஸதிகம்-ரொம்பஅதிகமாக இருக்கிற, மநபாவம்-பெருமையை, தர்சயந்தீ-காண்பித்துக்கொண்டு, ஸமஹிதபம-இந்திரநீலக்கல்லென்ன, முக்தா-முத்துக்களென்ன, பத்மராக-சிகப்புக்கல்லென்ன இவைகளுடைய, ப்ரகாசை: - காந்திகளாலே, ப்ராப்த - அடையப்பட்டிருக்கிற, சோணம்-சோணமென்ற சிகப்பான ஆற்றைஉடைத்தாயிருக்கிற, ப்ரயாகம்-கங்கை யமுனையினுடையசேர்க்கையை, வஹஸி-உண்டுபண்ணுகிறாய். நியதம்-நிச்சயம்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளுடையதிருவடி ஒருகாலத்தில் கங்கையை மாத்திரம் உண்டுபண்ணிற்று. நீ,திருவடியைக் காட்டிலும் உனக்குள்ள பெருமையை காட்டுவதற்காக இந்திரநீலக்கல், முத்து சிகப்புஇவைகளாலே வெளுப்பானகங்கை கருப்பான யமுனை சிகப்பான சோணைஆகிற மூன்றுநதிகளையும் உண்டு பண்ணுகிறாய். ஆழ்வார், பெருமாளைக்காட்டிலும் அதிகமாக லோகங்களுக்கு உபகாரம் செய்தருளினார். பகவானை அனுபவித்து ஸந்தோஷமடைந்து அவரை அடையவேணுமென்று ஆசைப்பட்டு அடையமுடியாமல் துக்கத்தை அனுபவித்தார். (39)

(ருஎ०) விவிதமணிமயூகைர்வ்யக்தபக்ஷாம் விசித்ரை:
ஜலநிதிதுஹிதுஸ்த்வாம் வேத்மி லீலாசகோரீம் |
ஸததமவிகலாநாம் பாதுகே ரங்கபர்த்து:
சரணநகமணீநாம் சந்த்ரிகாசாந்திபந்தீம் ||

ஹேபாதுகே-வாராய்பாதுகையே! த்வாம்-உன்னை, விசித்ரை:-ஆச்சரியமாயிருக்கிற, விவித-அநேகவிதமாக இருக்கிற, மணி-ரத்னங்களுடைய, மயூகை:-காந்திகளாலே, வ்யக்த-பிரகாசிக்கிற, பக்ஷாம்-சிறகுகளைஉடைத்தாயும் ஸததம்-எப்போதும், அவிகலாநாம்-குறைவில்லாமலிருக்கிற, ரங்கபர்த்து:-ரங்கநாதனுடைய, சரண-திருவடிகளுடைய, நக-நகங்களாகிற, மணீநாம்-முத்துக்களுடைய, சந்த்ரிகாம்-நிலவை, ஆபிபந்தீம்-சாப்பிடாநின்றிருக்கிற, ஜலநிதிதுஹிது:-ஸமுத்திரத்தின் பெண்ணான மகாலக்ஷ்மியினுடைய, லீலா-விளையாட்டுக்காக இருக்கிற, சகோரீம்-பெண்சகோரபக்ஷியாக, வேத்மி-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப்பார்த்தால் மகாலக்ஷ்மி விளையாட்டுக்காக வைத்துக்கொண்டிருக்கிற ஒரு பெண்சகோரப் பக்ஷிபோல் இருக்கிறது. உன்பேரில் அனேகவிதமான வெளுப்பு, சிகப்பு,கருப்பு முதலானரத்னங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளுடைய காந்தியைப் பார்த்தால் சிறகுகளைப் போலிருக்கிறது. பெருமாளுடைய திருவடி நகமாகிற சந்திரனுடைய காந்தியாகிற நிலவை சாப்பிடுகிறாய். ஆழ்வாராசார்யர்கள் எப்போதும் பகவானையே அனுபவித்துக்கொண்டும், ஜ்ஞாநாநுஷ்டானங்களோடு

கூடியும், தாயார் திருவுள்ளத்துக்கு மிகவும் உகந்தவர்களாகவும் இருக்கிறார்கள். (40)

(௭௧) பதாரவிந்தஸவிதார்த்திநாம் ரங்கபர்த்து:
விநயபரிஸராணாம் ஸமுஜ்ஜிதைஸாதபத்ரை: |
ததபி வஸுமதீ வசநக்ஷேமே த்வம் ஸுராணாம்
பஹுவிதமணிகாந்த்யா பர்ஹிசித்ராதபத்ரம் ||

ஹே பதரக்ஷே-பாதுகையே! ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, பதாரவிந்தஸவிதார்த்திநாம்-தாமரைப்பூப்போலிருக்கிற திருவடிகளுடையஸேவிப்பதில் ஆசையுள்ளவர்களாயும், விநயபரிஸராணாம் - ரொம்பவணக்கத்தை அடைந்தவர்களாயும், ஸமுஜ்ஜிதை:-தள்ளப்பட்டிருக்கிற, ஸாதபத்ரை:-குடையோடு கூடினவர்களாயும்இருக்கிற, ஸுராணாம்-தேவதைகளுக்கு, த்வம்-நீ, வசநக்ஷேமே-மறுபடியும், பஹுவித-அநேகவிதமான, மணி-ரத்னங்களுடைய, காந்த்யா-பிரகாசத்தினாலே, பர்ஹிசித்ராதபத்ரம்-மயில்தோகையினாலே செய்யப்பட்டகுடையை, வஸுமதீ-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏபாதுகையே! பெருமாளை ஸேவிக்கவேணுமென்று ஆசைப்பட்டு தேவதைகள் ரொம்பவணக்கத்துடன் குடை பிடித்துக்கொள்ளாமல் பெருமாளோடே வந்தாலும் அவர்களுடைய தலையில் உன்னை ஸாதிக்கும் போது உன்மேலே அநேகவிதமான ரத்னங்கள் இழைத்திருக்கிறபடியாலே அவைகளுடைய காந்தி அவர்கள் மேலே படும்போது மயில் தோகையால் செய்த குடையைப் பிடித்திருக்கிறதுபொலிருக்கிறது. பெருமாளிடத்திலும் ஆசார்யாளிடத்திலும் பக்தியுள்ளவர்கள் ரொம்ப வணக்கமுள்ளவர்களாய் ஒரு மரியாதையையும் அவர்கள் அபேக்ஷிக்காத போதிலும் ஆசார்யாளுடைய அனுக்கிரஹத்தினாலே அவர்களுக்கு விசேஷமான பெருமை ஏற்படுகிறது. (41)

(௭௨) ஶரதுபவிபத்ரா ஶாக்திகஸ்வரபக்ஷ்மா
ஸ்ரீபதிஸம்யஸோஹா ஹாஸபேசை: பத்ராஸை: |
ஹரிசரணஶோபா ரங்கநாதஸ்ய பாதே
கமயஸி பவதீ ந: கல்பவல்லீவ காமிந் ||

பாதுகே-வாராய்பாதுகையே! மரகத-பச்சைரத்னங்களுடைய, ருசி-காந்தியாகிற, பத்ர-இலைகளை உடைத்தாயும், மௌக்திக-முத்துக்களாகிற, ஸ்மேர-மலர்ந்திருக்கிற, ப்ரஸூந-பூவை உடைத்தாயும், பாஸ்வரை:-விளங்காநின்றுக்கிற, பத்மராகை:-சிகப்புக்கற்களாலே, ஸந்த்ருஷ்ட-பிரகாசிக்கிற, கிஸலய-துளிர்களுடைய, ஶோபா-அழகை உடைத்தாயும் இருக்கிற, ரங்கநாதஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, பாத-திருவடியிலிருக்கிற, உதாரா-ரொம்பகொடுக்கிறவளான, பவதீ-நீயானவள், காசித்-ஒரு, கல்பவல்லீவ-கல்பகக்கொடிபோலே, ந:-எங்களுக்கு, ஸர்வம்பலம்-எல்லாப்பிரயோஜனங்களையும், ஜநயதி-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே ! உன்னைப் பார்த்தால் பெருமாள் திருவடியிலிருக்கிற கற்பகக்கொடிபோலிருக்கிறது. நீ எங்களுக்கு ஸகல பலன்களையும் கொடுக்கிறாய். உன்பேரிலிழைத்திருக்கிற பச்சை ரத்னங்கள் இலைமாதிரி இருக்கின்றன. உன் முத்துக்கள் பூப்போலே இருக்கின்றன. உன் சிகப்பு ரத்னங்களைப் பார்த்தால் தளிர்மாதிரி இருக்கிறது. நல்ல ஆசார்யாளை ஆச்ரயித்தவர்களுக்கு ஒருவிதமான குறைவும் கிடையாது. (42)

(ருஎ௩) பஹுமணிருசிராங்கீம் ரங்கநாதஸ்ய பாதாத்
நிஜஶிரஸி கிரீஶோ நிக்ஷிபந் பாதுகே த்வாம் ।
ஸ்மரதி லலிதமுச்சை: லாலநீயம் பவாந்யா:
தரலகநகலாபம் ஷண்முகஸ்யைவ பர்ஹம் ॥

பாதுகே-வாராய்பாதுகையே ! பஹுமணி-அநேகவிதமான ரத்னங்களாலே, ருசிர-அழகாயிருக்கிற, அங்கீம்-திருமேனியைஉடைத்தாயிருக்கிற, த்வாம்-உன்னை, ரங்கநாதஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாத்-திருவடியிலிருந்து, நிஜஶிரஸி-தன்னுடைய தலையில், நிக்ஷிபந்-ஸாதித்துக்கொள்ளாநிற்கிற, கிரீஶ:-சிவனானவர், பவாந்யா:-பார்வதியினாலே, லாலநீயம்-கொண்டாடத்தகுந்ததாயும், தரல-அசங்கிக்கொண்டிருக்கிற, கந-நெருக்கமாயிருக்கிற, கலாபம்-தோகையைஉடைத்தானதாயும், லலிதம்-ரொம்பவும் அழகாயுமிருக்கிற, ஷண்முகஸ்ய-ஸுப்ரம

ணியனுடைய, ஔபவாஹ்யம்-வாஹனமான மயிலே, சேத:-மனஸ்ஸிலே, ஸ்மரதி-நினைக்கிறார்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேல் வெளுப்பும் சிகப்பும் கருப்புமாய் அநேகவிதமான ரெத்னங்கள் இழைத்திருக்கின்றன. அப்பேர்ப்பட்ட உன்னைப்பார்த்தால் அநேகவர்ணங்களுடன் கூடிய மயில் மாதிரி இருக்கிறது. சிவன் பெருமாளுடைய திருவடியிலிருந்து உன்னை எடுத்து தன் தலையில் ஸாதித்துக்கொள்கிறார். அப்போது பார்வதிக்கு ரொம்ப (இஷ்டமான) பிடித்தமான ஸுப்ரமண்யவாஹனமான மயிலேமனஸில் நினைத்துக்கொள்கிறார். மயில் என்கிறது அனேக வர்ணங்களுடன் கூடினதாய் கிருஷ்ண மேகத்தைக்கண்டு தோகையை விரித்து ஆடும்போது எப்படி பார்க்கிற ஸகல ஜனங்களுக்கும் இன்பமாயிருக்கிறதோ அதே மாதிரி பெருமாளுடைய பக்தர்கள் கிருஷ்ணனை அனுபவித்துப் பலவிதமான செய்கைகளைச்செய்கிறபோது ஸகலஜனங்களுக்கும் இன்பமாயிருக்கிறது. பக்தர்களுக்கு எல்லையில்லாத இன்பமாயிருக்கிறது. (42)

(௪௩) விவிதமணிஸமுத்தைர்வ்யக்தமாததாநாம்
திவஸரஜநிஸந்த்யாயௌகபத்யம் த்யுதிபி: ।
உபநிஷதுபகீதாம் பாதுகே ரங்கிணஸ்த்வா
மகடிதகடநார்ஹாம் ஶக்திமேவாவயாம: ॥

ரங்கிண:-ஸ்ரீரங்கநாதனுடைய, ஹேபாதுகே-வாராய்பாதுகையே! விவிதமணி-அநேகவிதமானரத்னங்களாலே, ஸமுத்தை:-உண்டாயிருக்கிற, த்யுதிபி:-காந்திகளாலே, திவஸ-பகலென்ன, ரஜநி-ராத்திரிஎன்ன, ஸந்த்யா-ஸந்த்யாகாலமென்ன இவைகளுடைய, யௌகபத்யம்-ஒரேகாலத்தில் சேர்க்கையை, வ்யக்தம்-எல்லாருக்கும் தெரியும்படியாக, ஆததாநாம்-உண்டுபண்ணுகிற, த்வாம்-உன்னை, உபநிஷதுபகீதாம்-உபநிஷத்துகளாலே சொல்லப்பட்டிருக்கிற, அகடிதகடநார்ஹாம்-இன்னொருவராலே சேர்க்கமுடியாத வஸ்துக்களை சேர்க்கத்தகுந்ததாயிருக்கிற, ரங்கிண:-ஸ்ரீரங்கநாதனுடைய, ஶக்திம்-சக்திஎன்கிறகுணமாக, அதாவது ஸாமர்த்தியமாக, ஏவாவயாம:-நினைக்கிறோம்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் வைரம், இந்திரநீலம், சிகப்பு இந்தமாதிரி இரத்னங்கள் இழைத்திருக்கின்றன. வைரத்தின் காந்தியைப் பார்த்தால் பகல் போலிருக்கிறது. இந்திரநீலத்தின் காந்தியைப் பார்த்தால் ராத்திரி போலிருக்கிறது. சிகப்பு ரத்னத்தின் காந்தியைப் பார்த்தால் ஸந்தியாகாலம்போலிருக்கிறது. ஒன்றோடொன்று சேராத இந்த மூன்றுகளையும் ஒரே காலத்தில் சேர்க்கிற உன்னைப் பார்த்தால் உபநிஷத்துக்களில் பெருமாளுக்கு மற்றொருவராலும் செய்யமுடியாத காரியங்களையெல்லாம் செய்கிற சக்தி உண்டென்று சொல்லியிருக்கிறது. அந்த சக்தி போலிருக்கிறது. இருக்கிற நரகம் போராது, இவனுடைய பாபத்துக்கு புதிதானநரகம் ஸ்ருஷ்டிக்கவேணுமென்று சொல்லக்கூடிய மகாபாபியான ஒருவனுக்கு ஏதோ ஒரு ஸுகிருத வசத்தினாலே நல்ல ஆசாரியனுடைய கடாக்ஷம் கிடைத்தால் அவன் நித்யஸூரிகளோடு சேருகிறான். ஆசார்யாள் தான் பகவானுடைய சக்தி. (43)

(ருஎரு) ஸகலமிதமவந்த்யம் சாஸநே ஸ்தாபயந்தீ
சரணநளிநஸங்கா மௌக்திகாதிப்ரகாரா ।
ப்ரகடயஸி ஸிதச்யாமரக்தாதிருசிமாந்
ஸமவிஷமவிபாகாந் ப்ராணிநாம் பாதுகே த்வம் ॥

பாதுகே-வாராய்பாதுகையே! இதம்ஸகலம்-இந்த ஸகலமானலோகத்தையும், அவந்த்யம்-தவரமுடியாமலிருக்கிற, சாஸநே-பெருமாளுடைய உத்திரவிலே, ஸ்தாபயந்தீ-நிறுத்துகிறவளாயும், சரணநளிநஸங்கா-பெருமாளுடைய திருவடியிலிருக்கிறவளாயும், மௌக்திகாதிப்ரகாரா-முத்துமுதலான அநேகரத்னங்களோடுகூடியவளாயுமிருக்கிற, த்வம்-நீ, ஸித-வெளுப்பாயும், ச்யாம-கருப்பாயும், ரக்தாதி-சிகப்புமுதலானதாயும் இருக்கிற, ருசிமாந்-வர்ணங்களை உடைத்தாயிருக்கிற, ப்ராணிநாம்-ஜநங்களுடைய, ஸமவிஷமவிபாகாந்-அநேகவிதமாகஏற்படுகிறகர்மத்தின்பலன்களை, ப்ரகடயஸி-பிரகாசப்படுத்துகிறாய்.

(கருத்து) ஏ பாதுகே! உன்பேரில் அநேகவிதமான ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. அதனால் உன்னிடத்தில் கருப்பு

சிகப்பு முதலான அநேக ரூபமிருக்கிறது. ஸகலமான லோக கும்பகவானுடைய உத்திரவை மீறாமல் நடத்துகிறாய், அப்பேர்ப் பட்ட உன்னைப் பார்க்கும்போது வெளுப்பாயும் கருப்பாயும் ஏற் படுகிற பிராணிகளுடைய புண்ணியபாபத்தின் பலன்களை ஜனங் களுக்கு காட்டுகிறாய்போல புண்யபலத்தை வெளுப்பாகவும் பாபபலத்தைக் கருப்பாகவும் சில கர்மபலத்தைக் சிகப்பாகவும் சொல்லுகிற வழக்கம். பெருமாள் பூமியில் அவதாரம் பண்ணு கிற காலத்திலே நல்லது பொல்லாததுகளான அனேக காரியங்க ளைச் செய்து ஸுகம் துக்கம் என்கிற அதன் பலன்களையும்காட்டி ஜனங்களுக்கு இப்படிச்செய்யவேணும் இப்படிச்செய்யக்கூடாது என்பதைக் காட்டுகிறார். அதேமாதிரிதான் ஆசார்யாளும் காட்டு கிறார். பாதுகை தன்னிடத்தில் இருக்கிற வெளுப்பு ரூபத்தி னாலே புண்யபலத்தையும் கருப்பு ரூபத்தாலே பாபபலத்தையும் காட்டுகிறது. (44)

(ருஎகூ) திஶதி முதமக்ஷ்ணாம் பாதுகே தேஹபாஜாம்
ஶதமகமணிபங்க்தி: ஶார்ங்கிணஸ்துல்யரூபா ।
பரிஸரநிஹிதைஸ்தே பத்மராகப்ரதீபை:
ப்ரததபரிசயா கஜ்ஜலஶ்ரீரிவைஷா ॥

ஹேபாதுகே-வாராய்பாதுகையே! ஶார்ங்கிண:-பெருமா ளுக்கு, துல்யரூபா-ஸமானமான ரூபத்தைஉடைய, தே-உன் னுடைய, ஶதமகமணி-இந்திரநீலக்கல்லுடைய, பங்க்தி:-வரி சையானது, பரிஸர-ஸமீபத்திலே, நிஹிதை:-வைக்கப்பட் டிருக்கிற, பத்மராக-சிகப்புரத்னங்களாகிற, ப்ரதீபை:-விளக்கு களாலே, ப்ரதத-ரொம்பகெட்டியாக, பரிசயா-உண்டுபண்ணப் பட்டிருக்கிற, கஜ்ஜல-மையினுடைய, ஶ்ரீரிவ-கருப்புப்போலே, தேஹபாஜாம் - உடம்பை அடைந்தவர்களுடைய, அக்ஷ்ணாம்-கண்க ளுக்கு, முதம்-ஸந்தோஷத்தை, திஶதி-கொடுக்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலே இந்திரநீலக்கல்லி ழைத்திருக்கிறது. அதன்பக்கத்தில் சிகப்பு ரத்னமிழைத்திருக் கிறது. அந்த சிகப்பு ரத்னத்தைப்பார்த்தால் விளக்குபோலே இருக்கிறது. இந்திரநீலத்தைப்பார்த்தால் அந்த விளக்கினாலே

உண்டான மைய்யின் கருப்புப் போலிருக்கிறது. ஆழ்வாருக்கு பெருமாள் குணங்களை அனுபவித்து எல்லையில்லாத ஆசை உண்டாகிறது. அதனாலே துக்கமும் அதிகமாக உண்டாகிறது. (45)

(௲௭௭) கஷாயாவலி ஸாந்த்ரஸிக்தேஷு ஸதா தவ மௌக்திகேஷு பரிதஃப்ரதயதே | உபராகஸதீமஸ்ருணா க்ஷதா ஹரிபாதுகே ஹரிசிலா மஹஸா ||

ஹேஹரிபாதுகே-வாராய் பெருமாளுடைய பாதுகையே! கஷாயாவலி-கொஞ்சம்கூட, ஸாந்த்ரஸிக்தேஷு-குறைவில்லாமலி ருக்கிற, தவ-உன்னுடைய, மௌக்திகேஷு-முத்துக்களிலே, ஹரி சிலா-இந்திரநீலக்கல்லினுடைய, மஹஸா-காந்தியினாலே, ஸதா-எப்போதும், பரிதஃ-நாலுபக்கங்களிலும், உபராகஸதீ-கிரஹணத்தை அடைந்த, ஸ்ருணாக்ஷ-சந்திரனுடைய, தசா-ஸாதிருச்யமானது, அதாவது சந்திரனைப்போலிருக்கையானது, ப்ரதயதே-எல்லாருக்கும் தெரிகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலே இந்திரநீலமும் முத்தும் இழைத்திருக்கின்றன. எப்போது பார்த்தாலும் முத்தின் பேரில் இந்திர நீலத்தின் காந்தி அடித்துக்கொண்டிருக்கிறது. அதைப்பார்க்கும்போது எப்போதும் சந்திரனை கிரஹணம் பிடித்திருக்கிறது போலிருக்கிறது. முத்து சந்திரன் போலே இருக்கிறது. பெருமாளை அனுபவித்து மஹான்களுக்கு உண்டாகிற ஸந்தோஷமானது, எப்போதும் பெருமாளிடத்தில் போய்ச்சேரவில்லையே என்கிற துக்கத்தோடு கூடவே இருக்கிறது. (46)

(௲௭௮) மரதகவதூஸ ரூசிரவித்ருமவல்லபிதா வ்யாயதரமௌக்திகஸ்தபகிதா நிமேஷஸம்பஹி: | உபவநசோபிதேவ சரணாவநி ரங்கபதே ரதிருசிதோ விஹாரமதிமர்ஹ வரம் ஸ்ப்ருசதி ||

ஹேசரணாவநி-வாராய்பாதுகையே! மரதக-பச்சைரத்னங்களாலே, வதூஸா-இலைஉள்ளவளாயும், ருசிர-அழகாயிருக்கிற, வித்ரும-பவழங்களாலே, வல்லபிதா-துளிருள்ளவளாகவும், வ்யாயதர-ரொம்பபெரிதாயிருக்கிற, மௌக்திக-முத்துக்களாலே,

ஸஸ்யகிதா-கொத்துக்கொத்தாக பூஉள்ளவளாகவும், நிகமை:-வேதங்களாலே, ஸாரஸி:-வாஸனைஉள்ளவளாயும், உபவநதேவதேவ-ஒருநல்லதோட்டத்திற்கு அதிஷ்டானதேவதைபோலிருக்கிற, த்வம்-நீ, விஹாரம்-விளையாட்டை (சஞ்சாரத்தை) அபிலஷத:-ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிற, ரங்கபதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, பதம்-திருவடியை, அபிமத்ய-வந்து, ஸ்ப்ருசஸி-தொடுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பூமி, மலை, காடு, ஆறு இவைகளுக்கெல்லாம் அதிஷ்டான தேவதையென்று ஒன்றிருக்கிறதாகச் சொல்லுகிறார்கள். உன்னைப்பார்த்தால் ஒரு உயர்ந்ததோட்டத்திற்கு அதிஷ்டான தேவதை போலிருக்கிறது. உன் மேலே இழைத்திருக்கிற பச்சை ரத்னங்கள் இலைகள் போலே இருக்கின்றன. பவழம் தளிர்போலிருக்கிறது. முத்து பூவை ஒத்திருக்கிறது. உன்னிடத்தில் வேதம் வாஸிக்கிறது. நீ தோட்டத்தில் விளையாடவேணுமென்ற ஆசையுள்ள பெருமாள் திருவடியை வந்து தொடுகிறாய். பெருமாளுக்கு எல்லாரிடத்திலும் இருக்கவேணுமென்ற ஆசை இருக்கிறது. அதாவது எல்லாரும் தன்னை நினைக்கவேணுமென்ற ஆசை இருக்கிறது. ஆழ்வார் முதலான ஆசார்யர்கள் தங்களுடைய உபதேசத்தாலும அனுக்கிரஹத்தாலும் அநேகவித கிரந்தங்களை ஸாதிப்பதாலும் எல்லாரும் பெருமாளை நினைக்கும்படி செய்கிறார்கள். (48)

(௪௯) ஸதோத்துங்கை ரங்கக்ஷிதிரமணபாதவ்யஸநிநி
ஸ்வபாவாதேகைஸ் தத்தத்மணிகிரணஸம்ஸ்பர்சகலுஷை: ।
வ்யதிஸ்பஷ்டாதாவ்யஸ்த்ராவ் யிதாரா விஸ்பர்சம் நமஸ்ய
நமாம்ஸுர்ஸ்வாத்ய்ம் நமதமரகோடீரமகரா: ॥ [தே

ஹேரங்கக்ஷிதிரமண-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதவ்யஸநிநி-வாராய் திருவடியிலாசையுள்ள பாதுகையே! நமத்-வணங்குகிற, அமர-தேவதைகளுடைய, கோடீர-கிரீடத்திலிருக்கிற, மகரா:-நகைரூபமாயிருக்கிற மகரமென்கிற மீனானது, ஸதா-எப்போதும், உத்துங்கை-உயர்ந்ததாயும், தத்மணி-அந்தந்தரத்னங்களுடைய, கிரண-காந்திகளுடைய, ஸம்ஸ்பர்ச-சேர்க்கையினாலே, கலுஷை-கலங்கியிருக்கிற (அனேக ரத்னமுள்ளதாயுமிருக்கிற) ஸ்வது-

உன்னுடைய, ருசிஜாலகே-காந்தியாகிற வெள்ளத்திலே, ப்ரதிஸ்ரோதோவ்ருத்த்யா-வெள்ளத்தில் எதிர்த்துப்போகிறதென்றவழக்கத்தினாலே, வ்யக்த-எல்லாருக்கும் தெரிகிறதாயிருக்கிற, ராகிஜஷம்-விசேஷமான காந்தியை (ஆசையை) உடைத்தாயிருக்கும்படி, நவாம்பஸ:-புதுஜலத்தினுடைய, (பிரவாஹத்தினுடைய) ஸ்வாச்சந்த்யம்-இஷ்டப்படிபோகிறதை, நஸஹதே-பொறுக்கிறதில்லை.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலே அநேக ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளுடைய காந்தியைப் பார்க்கும்போது ஒரு பெரிய கலங்கின வெள்ளம் போலிருக்கிறது. பாதுகையை ஸேவிக்க தேவதைகள் வருகிறார்கள். அவர்கள் தலையிலிருக்கிற கல்லிழைத்த கிரீடத்திலே அநேகவிதமான ரத்னங்களாலிழைத்து மீன் வைத்திருக்கிறார்கள். அதனுடைய காந்தி இதின் மேலே வீசுகிறது. அதைப்பார்த்தால் ஆறுகளில் வெள்ளம்வருகிறபோது மீன்கள் எதிர்த்துப் போவது வழக்கம். அந்தமாதிரி போகிறதுபோலிருககிறது. ஆழ்வார் போன்ற மஹான்களை பிரும்மா ருத்ரன் முதலான எல்லா தேவதைகளும், வந்து ஸேவிக்கிறார்கள். அவர்களுக்கு ஸம்ஸாரத்தில் ஒழிவும், பெருமாள் தான் வேணுமென்கிற ஆசையும் உண்டாகவில்லை. (49)

(௫௰) ஜயதி பதாவநி த்வம் மௌக்திகஶோணமணிஶ
க்ரநீலருசா । நவருசிஸந்ததிருசிராம் நக
நிஸ்த்ரிம்ஶஸம்பதம் ஶௌரே: ॥

இதி ஸ்ரீ கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீ ரங்க நாத பாதுகா ஸஹஸ்ரே
பஹுரத்நபத்ததிஷ்ஷோடஶீ ॥

---

ஹேபதாவநி-வாராய்பாதுகையே! த்வம்-நீ, மௌக்திக-முத்துக்களென்ன, ஶோணமணி-சிகப்புரத்னங்களென்ன, ஶக்ரநீல-இந்திரநீலக்கற்களென்ன, இவைகளுடைய ருசா-காந்தியினாலே, நவ-நகங்களுடைய, ருசி-காந்திகளுடைய, ஸந்ததி-வரிசை

யினாலே, ராகிராகம்-அழகாயிருக்கிற, ஸௌரே:-பெருமாளுடைய, நந்தகநிஸ்த்ரிம்சஸ்ய-நந்தகமென்கிற கத்தியினுடைய, ஸௌபகம்-அழகை, ஜநயஸி-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே ! உன்மேலே சிகப்பு, முத்து, இந்திரநீலம் மூன்றும் இழைத்திருக்கின்றன. அதைப்பார்த்தால் பெருமாள் கையிலே நந்தகமென்ற கத்தியை வைத்துக்கொண்டிருக்கிறது போலிருக்கிறது. உள்ளங்கை சிகப்பாக இருக்கிறது. நகம் வெளுப்பாகவும் கத்தி கருப்பாகவும் இருக்கின்றன. ஆழ்வாரைப்போன்ற மஹான்களை ஸேவிக்கும்போது பெருமாள் கையிலே கத்தியை எடுத்தால் எவ்வளவு பயமாக இருககுமோ அவ்வளவு பயமாக இருக்கிறது. முத்து பகவானுடைய ஸந்நிதிகளிலுண்டானதெளிவு, சிகப்புக்கல் பகவானை அடையவேணுமென்ற ஆசை. இந்திரநீலம் நினைத்தபடி நினைத்தபோது அகப்படாததான துக்கம். இப்பேர்ப்பட்ட மஹான்கள் இப்படி இருக்கிறார்களே, ஒரு ஸங்கதியுமில்லாத நாம் இப்படியிருக்கிறோமே என்று நினைக்கிறவர்கள் ரொம்ப நடுங்குகிறார்கள். அப்படி பயந்து பகவானை சாஸ்திரமுறைப்படி அறிந்து மஹத்தான க்ஷேமத்தை அடைகிறார்கள். (48)

பதினாறாவதான பஹுரத்னபத்ததி முற்றிற்று.

---





ஸ்ரீ: ।

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ॥

ஸ்ரீ ரங்கநாதபாதுகாஸஹஸ்ரே

ஸப்தத³ஶீ பத்³மராக³பத்³ததி: ॥

(ருஅக) ஸம்பத்ஸ்யே ரங்கநாதஸ்ய பாதுகாம் பத்³மரா
கி³ணீம் । பதை³கநியதாம் தஸ்ய பத்³மவா
ஸாமிவாபராம் ॥

தஸ்ய-அந்த ரங்கநாதனுடைய, பதை³கநியதாம்-திருவடி மாத்திரத்தை விட்டுப்பிரியாமலிருக்கிற, அபராம்-வேறாகயிருக்கிற, பத்³மவாஸாமிவ-மஹாலக்ஷ்மி போலிருப்பதும், பத்³மராகி³ணீம்-சிகப்புரத்நங்களையுடைத்தாயிருப்பதுமான, ரங்கநாதஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுகாம்-பாதுகையை, ஸம்பத்ஸ்யே-மோக்ஷம் வரையிலுள்ள எல்லா புருஷார்த்தங்களையும் கொடுக்கும் என்று நம்புகிறேன். பத்³மராகி³ணீம்-என்பதற்கு தாமரைப்பூவில் ஆசையுடையவள் என்று மஹாலக்ஷ்மிபக்ஷத்தில் அர்த்தம்.

(கருத்து) இந்த பத்ததியில் பாதுகையிலே சிகப்புரத்நங்கள் இழைத்திருப்பதைப்பற்றி வர்ணிக்கிறார். இந்தப் பாதுகையைப் பார்த்தால் பெருமாளுடைய திருவடியிலே மாத்திரம் இருக்கிற இன்னுமொரு மஹாலக்ஷ்மியைப் போலிருக்கிறது. மஹாலக்ஷ்மி திருமார்பிலேமாத்திரம் இருக்கிறாள். ஆழ்வார் தன்னை (பிராட்டியாக) பெருமாளுடைய நாயகியாக ஸாதிக்கிறார். ஆசார்யாள் தாயார்போல் இருக்கிறார்கள். (1)

(ருஅஉ) அதிவாங்மநஸம் பி³பி⁴த்ஸு ஶௌரே: பத³ரக்ஷே
பத³பத்³மஸங்க³மாய । பரிவர்ஷஸி பத்³மராக³
பா⁴ஸா பத³வீமாஹிதபல்லவாமிவ த்வம் ॥

ஹே பத³ரக்ஷே-வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! த்வம்-நீ, அதிவாங்மநஸம்-வாயினாலே சொல்லமுடியாததாகவும் மனஸ்ஸினாலே நினைக்கமுடியாததாகவும் இருக்கிற, ஶௌரே:-

பெருமாளுடைய, பத பத்ம-திருவடியாகிறதாமரைப்பூவினுடைய, ஸௌகுமார்யம்-மெதுவாக இருக்குகையை, விவிச்ய-யோசித்து, பத்மராக-சிகப்புரத்நங்களுடைய, ஸாஸா-காந்தியினாலே, பதவீம்-பெருமாள் எழுந்தருளுகிற வழியை, ஆஹித-பரப்பப்பட்டிருக்கிற, பல்லவம்-துளிரையுடைத்தானதாக, பரிகல்பயஸீவ-செய்கிறாய்போல.

(கருத்து) பாதுகையே! உன்னைப்பெருமாள் சாத்திக்கொண்டு எழுந்தருளும்போது உன்பேரில் இழைத்து இருக்கிற சிகப்புரத்நங்களுடைய காந்தி வழியில் பரவுகிறது. அதைப்பார்த்தால் நீ பெருமாள் திருவடியினுடைய எல்லையில்லாமலிருக்கிற மெதுவாயிருப்பதை அறிந்திருக்கிறபடியால் வழியிலே எழுந்தருளுவது சிரமமாகஇருக்குமே என்று யோசித்து நீ துளிரைப்பரப்பினதுபோலிருக்கிறது. லோகத்திலே ரொம்ப அழகான குழந்தைகளுடைய கைகால்கள் ரொம்பமெதுவாகஇருக்கிறது, உப்பு புளியினாலே வளர்கிற இவைகளே இப்படி இருந்தால் பெருமாள் திருவடி மெதுவாக இருக்க கேழ்க்கவேணுமா? ஆழ்வார் பெருமாள் திருவடி அழகைக்கண்டு ரொம்பவும் மயங்குகிறார். (2)

(ருஅரு) பதபல்லவஸங்கிபி: ப்ரதீப்தைரயி கோமல

ஸ்திரஸ் த்வ பத்மராகை: । அநலே ஶயநம் க்வசி

த்ராமசரஸ்ய ஸம்பாதயஸீவ பாதுகே த்வம் ॥

மைதிலீம்பத-தாயாராயிருக்கிற, பாதுகே-வாராய் பாதுகையே! த்வம்-நீ, பத-திருவடிகளாகிற, பல்லவ-துளிர்களிலே, ஸங்கிபி:-சேர்ந்திருக்கிற, ப்ரதீப்தை:-பளபளப்பாயிருக்கிற, அயி கோமல:-மிகவும் விளங்காநின்றிருக்கிற, பத்மராகை:-சிவப்புரத்நங்களாலே, ராமசரஸ:-பெருமாளுடைய, க்வசித்-ஒரு இடத்திலே, அநலே-நெருப்பிலே, ஶயநம்-படுக்கையை, ஸம்பாதயஸீவ-ஸத்யம் என்று காண்பிக்கிறாய்போல.

(கருத்து) பாதுகையே! உன்பேரில் சிவப்பு ரத்னம் இழைத்திருக்கிறது. அது ஏற்கனவே பளபளப்பாக இருக்கிறது. பெருமாள் உள்ளங்கால் துளிர்போலே அதிக சிவப்பாகயிருக்கிறது. இதுவும் சேரும்போது அந்த ரத்நம் அதிகப்பளபளப்பாக இருக்

கிறது. அதைப்பார்த்தால் அதிகமான நெருப்பு ஜ்வலிக்கிறது போல் இருக்கிறது அதைப்பார்த்தால் பாஞ்சராத்ரசாஸ்திரத்தில் பெருமாள் நெருப்பிலே படுத்துக்கொண்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறதை ஸத்தியம்தான் என்று காட்டுவதுபோலிருக்கிறது. ஆழ்வார் பூமியிலே அவதரித்து நடத்தின உயர்ந்த கார்யங்களாலே புராணங்களில் சொல்லியிருக்கிற பெருமாள் செய்த காரியங்கள் எல்லாம் சரியென்று ஜனங்களுக்குப்படுகிறது. (3)

(ருஅச) விபாதி ரங்கபதிபாதுகே த்வயி
பத்மராகமணிபங்க்திருஷ்ணா । நிபிடோருஸம்ஹநந-
பீடநக்ஷரந்மதுகைடபக்ஷதஜபங்கவாஸநா ॥

ரங்கபதி-ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகே-வாராய் கல் இழைத்தபாதுகையே! த்வயி-உன்மேலிருக்கிற, ருஷா-க்ஷேமத்தைப்பண்ணுவதான, பத்மராக-சிவப்புக்கல்லினுடைய, பங்க்தி:-வரிசையானது, நிபிட-கெட்டியாக, ஊரு-துடைகளிலே, ஸம்ஹநந-சேர்க்கையாகிற, பீடந-உபத்திரவத்தினாலே, க்ஷரத்-பெருகுகிற, மதுகைடப-மது, கைடபன் என்ற அஸுரர்களுடைய, க்ஷதஜ-ரக்தத்தினுடைய, பங்க-சேற்றினுடைய, வாஸநா-இருப்பை, விபாதி-ப்ரகாசப்படுத்துகிறது.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் சிவப்பு ரத்நங்கள் இழைத்திருக்கின்றன. அதைப்பார்த்தால்முன்னொருஸமயத்திலே மது கைடபன் என்ற அஸுரர்களைப் பெருமாள் துடையிலே வைத்து நெறித்தாராம். அந்த ஸமயத்திலே ரக்தம்பெருகி பாதுகையிலே இன்னம் இருப்பதுபோலத்தோன்றுகிறது. பாதுகையிலுள்ள ரத்நங்களை ஆழ்வார் பாசுரங்களாகச் சொல்லுகிறது. சிகப்புரத்நம் பகவானிடத்தில் ஆசையினாலே சொல்லும் பாசுரத்துக்குப்பெயர். ஆழ்வார் பெருமாளைப்பற்றி ஆசைப்பட்டுச்சொல்லும் பாசுரங்களைக் கேட்கும்போது பெருமாள் ஜனங்களுக்கு ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும் உண்டாகிற கெட்ட புத்தியைப் போக்கித் தன்னிடத்திலே விசேஷமான ஆசையை உண்டுபண்ணுகிறார் என்று ஏற்படுகிறது. (4)

(நூஅரு) ப்ரதியந்தி ரங்கபதிபாதுகே ஜநாஸ்த்வ
பத்மராகமணிரஸ்மிஸந்ததிம் । ஆஸ்ரிதாகஷாம் அக
நாஸநவிகர்த்திதாகவலயாஸ்ரிதாகஸ்ருக்ச்சடாம் ॥

ரங்கபதிபாதுகே-வாராய் ஸ்ரீரங்கநாதனுடையபாது கையே! ஜநா:-ஜனங்கள், தவ-உன்னுடைய, பத்மராகமணி-சிவப்புரத்நங்களுடைய, ரஸ்மி-கிரணங்களுடைய, ஸந்ததிம்-வரிசையை, தவ-உன்னுடைய, அநகஸாக-பெருமையினாலே, விகர்த்திதா-வெட்டப்பட்டிருக்கிற-அதாவது போக்கடிக்கப்பட்டிருக்கிற, ஆஸ்ரிதாநாம்-உன்னை அடைந்தவர்களுடைய, அக-பாபங்களுடைய, வலயாத்-கூட்டத்தினின்றும், விகலிதாம்-பெருகாநின்றிருக்கிற, அஸ்ருக்ச்சடாம்-ரத்நத்திலுடைய பிரவாஹமாக, ப்ரதியந்தி-நினைக்கிறார்கள்.

(கருத்து) ஹேபாதுகையே! உன்பேரில் சிவப்புரத்நங்கள் இழைத்திருக்கிறது. அதினுடைய காந்திகள் எல்லையில்லாமலி ருக்கிறது. அதைப்பார்த்தால் உன்னையடைந்தவர்களுடையபாபங்களை நீ வெட்டுகிறபடியால் அந்த பாபங்களுடைய இரத்தம் போலிருக்கிறது. நல்ல ஆசாரியர்களை ஆச்ரயித்தால் இவர்களுடைய ஸகலபாபங்களும் போய்விடும். (5)

(நூஅகூ) பஸ்யந்தி ரங்கேஸ்வரபாதுகே த்வாம் பௌரா
ங்கநா: விஸ்ரம்பிதராகபந்தாம் । ஸ்மரஜ்வரஸ்யோபநதாம்
ஸ்ஃபுலிங்கை: ஸங்காரஜாலைரிவ பத்மராகை: ॥

ரங்கேஸ்வரபாதுகே-வாராய் ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையே! பௌராங்கநா:-ஸ்ரீரங்கம் என்கிற பட்டணத்திலிருக்கிற ஸ்திரீகள், விஸ்ரம்பித-கொடுக்கப்பட்டிருக்கிற, ராக-ஆசையினுடைய, பந்தாம்-சேர்க்கையையுடைத்தாயிருக்கிற, த்வாம்-உன்னை, பத்மராகை:-சிவப்புரத்நங்களாலே, ஸ்மரஜ்வரஸ்ய-மன்மதனுகிற, ஜ்வலநஸ்ய-அக்னியினுடைய, ஸ்ஃபுலிங்கை:-நிரம்பவும்பளபளப்பாயிருக்கிற, அங்கார-தணல்களுடைய, ஜாலைரிவ-கூட்டங்களோடே சேர்ந்தவள்போல, பஸ்யந்தி-பார்க்கிறார்கள்.

(கருத்து) பாதுகையே! உன்னை ஸேவித்தவுடனே ஜனங்கள் எல்லாருக்கும் எல்லையில்லாத ஆசையுண்டாகிறது. அதனால் உன்

னிடத்து இழைத்திருக்கிற சிவப்புரத்னங்களை மன்மதனாகிற அக்னியினுடைய தணல்களாக நினைக்கிறார்கள். ஆழ்வாருடையபாசுரங்களை ஸேவிக்கின்றவர்களுக்கு பெருமாளிடத்தில் எல்லையில்லாத ஆசையுண்டாகிறது. (6)

(ருஅஎ) அவைமி தோஷாபகமஸ்ய ஹேதும் தமோ
பஹாம் ஸம்ஹ்ருதபத்மராகாம் । அசேஷஸேவ்யாம்மணி
பாதுகே த்வாம் ரங்கேசஸூர்யோதயபூர்வஸந்த்யாம் ॥

ஹே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! தோஷாபகமஸ்ய-ஸகலபாபங்களும் போகிறதற்கு (ராத்திரியைப் போக்குவதற்கு) ஹேதும்-காரணமாயும், தமோபஹாம்-தமோ குணத்தை போக்குவதாயும்,(இருளைப்போக்குவதாயும்)ஸம்ஹ்ருத-சேர்க்கப்பட்டிருக்கிற, பத்மராகாம்-சிவப்புரத்நங்களை உடைத்தானதாயும், (பத்ம-தாமரைப்பூக்களுடைய, ராகாம்-சிகப்பையுடைத்தானதாயும்) அசேஷஸேவ்யாம்-எல்லாராலும் ஸேவிக்கத்தகுந்த, த்வாம்-உன்னை, ரங்கேச-ஸ்ரீரங்கநாதனாகிற, ஸூர்ய-ஸூர்யனுடைய, உதய-ப்ரகாசிப்பதற்கு, பூர்வஸந்த்யாம்-காலைவேளையாக, அவைமி-நினைக்கிறேன்.

(கருத்து) ஹேபாதுகையே! உன்னைப்பார்த்தால் ரங்கநாதனாகிற ஸூர்யன் உதிப்பதற்கு காலைவேளைபோல் இருக்கிறது. நீ ஸகலபாபங்களையும் தமோகுணங்களையும் போக்குகிறாய். உன் பேரில் உயர்ந்த சிவப்புரத்நங்கள் இழைக்கப்பட்டிருக்கின்றன. உன்னை எல்லாரும் ஸேவிக்கிறார்கள். காலைவேளை ராத்திரியையும் இருளையும் போக்குகிறது. தாமரைப்புஷ்பங்களுக்கு சிவப்பை உண்டுபண்ணுகிறது. எல்லாராலேயும் ஸேவிக்கப்படுகிறது. ஸூர்யோதயத்தைக் கொடுக்குகிறது. ஆழ்வார் ஆசார்யர்களை ஸேவித்தவர்களுக்கும் அவர்களுடைய பாசுரங்களையுங்கேட்பவர்களுக்கும் ஸகலபாபங்களும் தமோகுணமும் போய் ரொம்பதெளிவாக எல்லாசங்கதிகளும்தோன்றி ஸ்ரீபெருமாளிடத்தில் எல்லையில்லாத பக்தியுண்டாகிறது. (7)

(ருஅஅ) அபாஸ்ய பாதாவநி ரங்கநாத: பாதாப்
ஜே பத்மவஸம்ஸ்பர்தயா । ஸ்வத்பாதபத்மோதயயோ
ஸஜ்ஜே காருண்யகவம் கஷாம்பூயே நநு: ॥

ஹே பாதுகே-வாராய் பாதுகையே! தவ-உன்னுடைய, பத்மராக-சிவப்புரத்னங்களுடைய, த்யுதய:-காந்திகள், ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாரவிந்த-தாமரைப்பூபோலிருக்கிற திருவடிகளிலே, பல்லவஸம்வ்யூஹ-தளிரினாலேசெய்யப்பட்ட மெத்தையினுடைய, ஸ்ரியம்-அழகை, உபாதாய-அடைந்து, ந:-எங்களுடைய, கல்மஷாரவிந்த யோ:-பாபமாகிறஸமுத்திரத்துக்கு, காலாநலத்வம்-பிரளயகாலத்து அக்னியாகஇருக்கையை, பஜந்தே-அடைகின்றன.

(கருத்து) பாதுகே! உன்பேரிலே சிகப்பு ரத்னங்கள் இழைத்திருக்கின்றன, அவைகளுடைய காந்தியைப்பார்த்தால் பெருமாளுடைய திருவடிகளுக்கு தளிர்களாலே தைத்த மெத்தைமாதிரியாக இருக்கிறது. எங்களுடைய பாபமாகிற ஸமுத்திரத்தை வற்றும்படி செய்யத்தகுந்தபிரளயகாலத்து அக்னியாகவுமிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களுடைய பாவம் மனத்திற்குப்பட்டால் நம்முடைய பெரியபெரிய பாபங்களெல்லாம் போய்விடும் ஆழ்வார் ஆசார்யாள் ஸூக்திகளை நாம் பெரும்பாலும் ஸேவிக்கிறதேயில்லை, அப்படி ஸேவித்தாலும் அவைகளின் கருத்துக்கள் மனதில் படுவது ரொம்ப துர்லபம். (8)

(ரு௮௯) நிஸர்கஸித்தம் மணிபாதரக்ஷே தைவஸ்ய ரங்காயதநம் ப்ரியஸ்ய । பாலார்கவர்ணா: பதபத்மராகம் கரோதி பத்மராகா: ஸபத்நயந்தி ॥

ஹேமணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! நிஸர்கஸித்தம்-ஸ்வபாவமாக ஏற்பட்டிருக்கிற, ரங்காயதநம்- ஸ்ரீரங்கவிமானமென்கிற இருப்பிடத்தை, ப்ரிய-இஷ்டமாக உடைத்தாயிருக்கிற, தைவஸ்ய-பெருமாளுடைய, பத-திருவடியாகிற, பத்ம-தாமரைப்பூவினுடைய, ராகம்-சிவப்பை, பாலார்க-இளம் சூரியனுடைய, வர்ண:-ரூபம்போலிருக்கிற ரூபத்தைஉடைத்தாயிருக்கிற, தவ-உன்னுடைய, பத்மராகா:-சிவப்பு ரத்நங்கள், ஸபத்நயந்தி-இரண்டுபங்காகப் பண்ணுகின்றன.

(கருத்து)பாதுகையே! உன்பேரிலே சிவப்புரத்னங்கள்இழைத்திருக்கின்றன. அதைப்பார்த்தால் உதயகாலத்து ஸூரியனைப்

போலிருக்கிறது. பெருமாளுடைய உள்ளங்கால் ரொம்பவும் ஸ்வ பாவமாக சிகப்பாக இருக்கிறது. இதுவும் சேருகிறபோது அந்த சிவப்புக்கு எல்லேயேயில்லை. பெருமாளுக்கு ஜனங்களிடத்திலே ஏற்கனவே ஆசையிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களாலே இன்னவும் ரொம்ப அதிகமாக உண்டாகிறது. (9)

(ரு௧௦) ஸஹைவ விஶ்வம் மணிபாதரக்ஷே ஸபத்ந்யா ஸமம் பாலயதோ முராரே: । யஶ:பயோதௌ ஸமிக ப்ரயந்தி ப்ரவாலஶோபாம் தவ பத்மராகா: ॥

ஹே மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்தபாதுகையே! தவ-உன்னுடைய, பத்மராகா:-சிவப்புக்கற்கள், ஸபத்ந்யாஸமம்-மஹாலக்ஷ்மியோடுகூட, ஸஹைவ-திருவடியினுலே, விஶ்வம்-உலகத்தை, பாலயத:-காப்பாற்றுபவராயிருக்கிற, முராரே:-பெருமாளுடைய, யஶ:-கீர்த்தியாகிற, பயோதௌ-ஸமுத்திரத்திலே, ப்ரவால-பவழத்தினுடைய, ஶோபாம்-அழகை, ஸமிக ப்ரயந்தி-உண்டுபண்ணுகின்றன.

(கருத்து) பாதுகையே உன்மீது இழைத்திருக்கிற சிவப்பு ரத்நங்கள் எல்லாலோகத்தையுந்தாயாரோடேகூட காப்பாற்று கிற பெருமாளுடைய கீர்த்தியாகிற ஸமுத்திரத்திற்கு பவழம் போல் இருக்கிறது. ஸ்ரீதாயாரும் பெருமாளுமாக ஸர்வப்பிரகா ரத்தாலும் இந்த உலகத்தைக் காப்பாற்றுவதைப்பற்றி ஆழ்வார் ரொம்பவிசேஷமாக ஸாதிக்கிறர் (10)

(ரு௧௧) ஜ்வலிஷ்ணுபி: காஞ்சநபாதரக்ஷே ப்ரஸூநயந்தி தே பாடலரத்நபங்க்தி: । ரேகாரதாங்கஸ்ய மஹ: ப்ரஸூதம் ரங்கேஶபாதாம்புஜகர்ணிகாஜ: ॥

ஹேகாஞ்சநபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! ஜ்வலிஷ்ணுபி:-ஜ்வாலையுள்ளதாயிருக்கிற (காந்தியுள்ளதாயிருக்கிற) தே-உன்னுடைய, பாடலரத்ந-சிவப்புரத்நங்களுடைய, பங்க்தி: வரிசையானது, ரங்கேஶ-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாம்புஜ-தாமரைப்பூபோலிருக்கிற திருவடியினுடைய, கர்ணிகாஜ:-நடுவையுடைந்திருக்கிற, ரேகாரதாங்கஸ்ய-கோடுரூபமான சக்கரத்தினு

டைய, தேஜஸ:-தேஜஸ்ஸினுடைய, ப்ரஸரம்-விஸ்தாரத்தை, ப்ரஸ்தௌதி-ப்ரஸ்தாபிக்கிறது, அதாவது சொல்லுகிறது, நினைக்கப் பண்ணுகிறது.

(கருத்து) பாதுகையே! உன்மேலே சிவப்புரத்னம் இழைத்திருக்கிறது. அதினுடைய காந்தியைப்பார்த்தால் பெருமாளுடையதிருவடியிலே இருக்கிற கோடுரூபமான சக்கரத்தினுடைய தேஜஸ்ஸோ என்று தோன்றுகிறது. பெருமாள் திருக்கையிலே சக்கரமிருக்கின்றன. உள்ளங்கையிலே கோடுரூபமான சக்கரமும் திருவடியிலே ஒரு சக்கரமுமிருக்கிறது. (11)

(௫௯௨) த்வய்யேவ பாதாவநி சோணரத்நைர்பாலா
தபம் நந்வநுதீரயந்த்யா | ரங்கபதே: பாததல
ஸ்திரம் ஸரோஜம் நித்யம் ஸம்வ்ருத்தமநித்ரம் ||

ஹே பாதாவநி-வாராய் பாதுகையே! சோணரத்நை:-சிவப்புரத்நங்களாலே, பாலாதபம்-இளம்வெய்யிலை, உதீரயந்த்யா-உண்டுபண்ணுகிற, த்வய்யேவ-உன்னுமேலேதான், ரங்கபதே:-ஸ்ரீரங்கநாதனுடைய, பாத-திருவடியினுடைய, தலே-அடியிலே அதாவது உள்ளங்காலிலே, ஸ்திரம்-உண்டாயிருக்கிற அதாவது எப்போதுமிருக்கிற, ஸரோஜம்-கோடுரூபமான தாமரைப் பூவானது, நித்யம்-எப்போதும், அநித்ரம்-தூக்கமில்லாததாக அதாவது மலர்ந்ததாக, ஸம்வ்ருத்தம்-ஆயிற்று.

(கருத்து) பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற சிவப்புரத்நங்களைப்பார்த்தால் ஸூர்யோதயமானதுபோலிருக்கிறது; அதனாலே பெருமாளுடைய உள்ளங்காலிலேயிருக்கிற கோடுரூபமான தாமரைப்பூவானது எப்போதுபார்த்தாலும் மலர்ந்ததாக இருக்கிறது. லோகத்திலே தாமரைப்பூ பொழுதுவிடிந்தால் மலரும் அஸ்தமனத்தில் மூடிப்போய்விடும். இது அப்படியில்லை. ஆழ்வார் எப்பொழுதும் திருவடியைப்பற்றி ஸாதித்துக்கொண்டிருக்கிறார்.

(௫௯௩) நித்யம் நிஜாலோகவசம் கதாநாம் ச்ரேயோ
விதாத்ரீம் ச்ரிதவத்ஸலாம் த்வாம் | ஸஹாயவந்தம் ஜயபாது
ரக்ஷ ஸந்த்யாஸமே ஸஜ்ஜநசேவதாம் த்வாம் ||

ஹே ஸ்ரீரங்கவராத்ரிஸேவிதரக்ஷே-வாராய் பெருமாளுடைய பாதுகையே! நித்யம்-எப்பொழுதும், நிஜாலோகஸ்தானம்-தன்னுடைய பிரகாசமார்க்கத்தை (தன்பார்வைவிழும்படியான இடத்தை) முதாநாம்-அடைந்தவர்களுக்கு, ஸ்ரேயஸ:-ஸகலக்ஷேமங்களையும், விஸ்ருஜந்தீம்-கொடுக்கிறவளாயும், ஸ்ரித-அடையப்பட்டிருக்கிற, ஸஹஸ்ராராம்-சிவப்புரத்நங்களையும் (தாமரைப்பூவிலே ஆசையையும்) உடைத்தானவளாயும், ஈஹீயஸீம்-ரொம்பஉயர்ந்தவளாயுமிருக்கிற, த்வாம்-உன்னை, ஈஷ்ஸதேவதாம்-ஸகலக்ஷேமங்களுக்கும் அதிஷ்டானதேவதையாக (மஹாலக்ஷ்மியாக) ஈக்ஷ்யாமஹே-நினைக்கிறோம்.

(கருத்து) பாதுகையே! உன்னுடைய பிரகாசம் யார்பேரில் படுகிறதோ அவர்கள் எல்லாருக்கும் நீ ஸகலக்ஷேமத்தையும் கொடுக்கிறாய். உன்பேரில் உயர்ந்த சிவப்புரத்நங்கள் இழைத்திருக்கின்றன. உன்னுடைய பெருமையைச்சொல்லிமுடியாது. ஸகலக்ஷேமங்களையும் கொடுக்கக்கூடிய (ஸகலக்ஷேமங்களுக்கும் யஜமானியான) தேவதையாக நினைக்கிறேன். உன்னை மஹாலக்ஷ்மியாக நினைக்கிறேன். நல்ல ஆசாரியாளுடைய கடாக்ஷம் பெற்றவர்களுக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஒருவிதமான குறைவும் கிடையாது. ஆசார்யாள் தாயாருடைய அவதாரம்தான். இந்தக் கலியிலே நல்ல ஆசார்யாள் அகப்படுகிறது சிரமம். கலியினுடைய கொடுமையாலே எந்த வஸ்துவும் நல்லதாகவில்லை. இருந்தாலும் கிடைத்தவரையில் லாபம். (13)

(கசு) தைவஸ்ய ரங்கரஸிகஸ்ய விஹாரஹேதோ

ராத்தாநநம் கமலே விநிவேஸ்ய பத்ம்யாம் ।

ஸ்தாயே நிவேஸயஸி ஸௌரணம் ஸ்தாநலோஸ:

ஸ்த்ரீபுஷ்பஹங்காம ஸாஸ்ரக்ஷிணி சுயம் ॥

ஹே ஸாரக்ஷிணி-வாராய் பாதுகையே! த்வம்-நீ, ரங்கரஸிகஸ்ய-ரங்கவிமானத்திலே ஆசையுள்ளவராயிருக்கிற, கூத்தாடுகிற இடத்திலேஆசையுள்ளவனுமுள்ள, தைவஸ்ய-பெருமாளுடைய, விஹாரஹேதோ:-ஸஞ்சாரத்திற்காக (விளையாட்டுக்காக) பத்ம்யாம்-முதலிலே, ஆத்தாநம்-தன்னை, கமலே-தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியிலே, விநிவேஸ்ய-ஸபர்ப்பிவித்து, ஸௌரண

மணீ-சிவப்புரத்னங்களுடைய, ப்ரகாசை:-காந்திகளாலே, ப்ரத்யூஷ-காலவேளையிலிருக்கிற, பத்மகோசம்-தாமரைமொட்டை, (மலர்ந்தபூவை) ப்ராய:-அநேகமாய், நிவேதயஸி-கொடுக்கிறாய் (பூவை வாரி இறைக்கிறாய்).

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலே சிவப்பு ரத்நங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தி அடிக்கிறது. அதைப் பார்த்தால் பெருமாள் வீதியிலே எழுந்தருளுவதற்காக நீ உன்னைத் திருவடியிலே ஸமர்ப்பித்து பிறகு செந்தாமரைப்புஷ்பங்களையும் ஸமர்ப்பிக்கிறதுபோலிருக்கிறது. ஒரு கூத்தாடுகிற பெண் ஒரு ஸபையிலே தலைவனை ஸேவித்து புஷ்பத்தைவாரி இறைக்கிறவழக்கமாம் என்று ஒரு அர்த்தம் தோன்றுகிறது. நல்ல ஆசாரியர்கள் பரமபதத்தை அடைவதற்காக எம்பெருமானுடைய திருவடிகளிலே ஆத்மாவை ஸமர்ப்பித்துவிட்டு இங்கே இருக்கிற காலத்திலே பெருமாள் திருவடிகளில் புஷ்பங்களைச்சாத்துகிறதுமுதலான நல்ல கைங்கரியங்களைப் பண்ணுகிறார்கள். (14)

(ருகூ) ப்ரத்யக்ம்யஸ்ய ஹவிஷ: ப்ரணவேந தீப்தே
ப்ரக்ஷேபணாய பரமார்த்தவிதாம் முநீநாம் ।
ப்ராஜ்யாம் ஸ்ரீரங்கநாதசரணாவநி பத்மராகை:
அத்வர்யுபாவகசிகாம் இவ ஸதீம் ப்ரதீம: ॥

ஸதீப்தே-வாராய் விளங்குகிற, ஸ்ரீரங்கநாதசரணாவநி-பெருமானுடைய திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே! பத்மராகை:-சிவப்புரத்னங்களுடன்கூடின, ஸதீம்-உன்னை, பரமார்த்தவிதாம்-ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்களின் உண்மையை அறிந்திருக்கிற, முநீநாம்-ருஷிகளுடைய, அதாவது ரொம்பபெரியோர்களுடைய, ப்ரத்யக்ம்யஸ்ய-ஜீவாத்மஸ்வரூபமான, ஹவிஷ:-தேவதைக்குக்கொடுக்கவேண்டிய த்ரவ்யத்தினுடைய, ப்ரணவேந-ஓம்என்கிற மந்திரத்தினாலே, ப்ரக்ஷேபணாய-கொடுக்கிறதற்கு, ப்ராஜ்யாம்-பெருத்ததான (நெய்யோடுகூடின) அத்வர்யுபாவகசிகாம்-ஒருவிதமான அக்நிஜ்வாலையாக, ப்ரதீம:-நினைக்கிறோம்.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் சிவப்புக்கற்கள் இழைத்திருக்கின்றன. அவைற்றின் காந்தி அக்னிஜ்வாலைபோலே இருக்

கிறது. அதைப்பார்த்தால் உபநிஷத்துக்களின் உண்மையான அபிப்ராயத்தை அறிந்தவர்கள் இந்த ஜீவாத்மா நிலையான பெருமாளுடைய லோகத்தை அடைவதற்காக இந்த ஜீவாத்மாவைத் தாயார் பெருமாளிடத்தில் ஸமர்ப்பிக்கிறார்கள், அதற்கு அக்னி ஜ்வாலைபோலே இருக்கிறது. லோகத்தில் ஒருதேவதைக்கு நெய் முதலான திரவியத்தைக்கொடுக்கும்போது ஒருமந்திரத்தைச்சொல்லி அக்னியிலே போடுகிறதுவழக்கம். சாஸ்திரத்தில் சொல்லியபடி அக்னியிலே போட்ட த்ரவ்யமானது அந்த தேவதைகளுக்குப்போய் சேருவதுபோல் நல்ல ஆசாரியாளிடத்தில் இந்த ஆத்மாவை ஸமர்ப்பித்தால் அதுபெருமாளிடத்தில்சேருவதைப்பற்றி ஸந்தேகமேயில்லை. ஆசாரியாள் நல்லவர்களாகஇருக்கவேண்டும்.

(ரு௯௪) ஸம்வத்ஸ்யதே தவ ஸஹாவநி ஸத்நராகை:
ப்ரஸ்தாநஸாஜநிகஹோமஹுதாஸநஸ்ரீ: ।
க்ஷீரஹுதிஸ்ஸவதி யத்ர விகல்பகங்கா
ரங்கேஸ்வரஸ்ய ருசிரா நகரஸ்மியாரா ॥

ஹேஸஹாவநி-வாராய் பாதுகையே! தவ-உன்னுடைய, ஸத்நராகை:-சிவப்புரத்நங்களாலே, ரங்கேஸ்வரஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, ப்ரஸ்தாநஸாஜநிகஹோம-பிரயாணமாகிற கல்யாணத்திற்காகச் செய்கிற ஹோமத்தினுடைய, ஹுதாஸந-அக்னியினுடைய, ஸ்ரீ:-சோபையானது, ஸம்வத்ஸ்யதே-ஏற்படுகிறது. யத்ர-யாதொரு அக்னியிலே, விகல்பகங்கா-கங்கைபோலிருக்கிற, ருசிரா-திரம்ப இன்பமாயிருக்கிற, ரங்கேஸ்வரஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, நக-நகங்களுடைய, ரஸ்மி-காந்திகளுடைய, யாரா-பிரவாஹமானது, க்ஷீரஹுதி:-பாலாலே பண்ணுகிற ஹோமமாக, ஸவதி-இருக்கிறதோ.

(கருத்து) பாதுகையே! உன்பேரில் சிவப்புரத்னம் இழைத்திருக்கிறது உன்னைச் சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறார். அப்போது வெளுப்பான பெருமாளுடைய நகத்தின் காந்தியும் இந்தச்சிவப்பு ரத்னத்தின் காந்தியும் கலக்கிறது. அதைப்பார்த்தால் பெருமாளுடைய பிரயாணமாகிற கல்யாணத்தில் உன்னுடைய சிவப்புரத்நகாந்தியாகிற அக்னிஜ்வாலையிலே பெரு

மாள் நககாந்தியாகிற பாலே ஹோமம் பண்ணுவதுபோலிருக்கிறது. ஆழ்வாருக்கு பகவானிடத்திலே ஆசை எல்லையில்லாமலிருக்கிறபடியாலே ஆழ்வார்ஸமீபத்தில் பெருமாள் ரொம்ப உத்ஸாஹத்துடனே எழுந்தருளுகிறார். (16)

(௫௯௭) ஆசாமதாமருணயாவகபங்கலக்ஷ்மீம்
ஶோணாஶ்மநாம் தவ பதாவநி காந்தியோகாத் ।
பத்மாஸஹாயபதபத்மநகாஃ ஶ்ரயந்தே
ஸந்த்யாநுரஞ்ஜிதஸுதாகரபிம்பஶோபாம் ॥

ஹே பதாவநி-வாராய் பாதுகையே! பத்மாஸஹாய-மஹாலக்ஷ்மிக்குத் துணையான பெருமாளுடைய, பதபத்ம-தாமரைப்பூ போலிருக்கிற திருவடியினுடைய, நகாஃ-நகங்கள், அருண-சிவப்பாயிருக்கிற, யாவகபங்க-செம்பஞ்சுக்குழம்பினுடைய, லக்ஷ்மீம்-அழகை, ஆசாமதாம்-உண்டுபண்ணுகிற, தவ-உன்னுடைய, ஶோணாஶ்மநாம்-சிவப்புரத்நங்களுடைய, காந்தியோகாத்-காந்தியின் ஸம்பந்தத்தாலே, ஸந்த்யா-ஸந்தியாகாலத்தாலே, அநுரஞ்ஜித-சிவப்பாகப்பண்ணப்பட்டிருக்கிற, ஸுதாகரபிம்ப-சந்திரமண்டலத்தினுடைய, ஶோபாம்-அழகை, ஶ்ரயந்தே-அடைகின்றன.

(கருத்து) பாதுகையே! உன்மேலிழைத்திருக்கிற சிவப்பு ரத்நகாந்தியைப்பார்த்தால் செம்பஞ்சுக்குழம்புமாதிரியிருக்கிறது. அது பெருமாளுடைய வெளுப்பான திருவடி நகங்களில் படும்போது சிவந்த ஸந்தியாகாலத்தோடு சேர்ந்த வெளுத்த சந்திரமண்டலம்போலிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்கள் எம்பெருமானுடைய திருவடிக்கு ரொம்ப அலங்காரமாகஇருக்கிறது(17)

(௫௯௮) ஸ்தாநே தவ ஸம்வ்ருத பதாவநி பத்மராகா
தேஜோமயாஃ ப்ரஶமயந்தி தமோ மதீயம் ।
சித்ரம் ததேததிஹ யந்நயந்தி நித்யம்
ராமாநுஜேந ஸஹஸா ரஜஸோ நிவ்ருத்திம் ॥

ஹே ஸம்வ்ருத பதாவநி-வாராய் ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையே! தேஜோமயாஃ-ரொம்பவும் பிரகாசமுள்ளவைகளாயிருக்

கிற, தவ-உன்னுடைய, பத்மராகா:-சிவப்புரத்நங்கள், ஸ்வீயம்-என்னுடைய, தம:-அஜ்ஞானமாகிற இருட்டை, வ்யபோஹயந்தி-போக்கடிக்கின்றன. ஸ்தாநே-இது நியாயம். ராகாத்மகேந-சிவப்பு ஸ்வரூபமாயிருக்கிற (ஆசைஸ்வரூபமாயிருக்கிற) தேஜஸா-தேஜஸ்ஸினாலே, ரஜஸ:-ரஜோகுணத்தினுடைய, நிவ்ருத்திம்-இல்லாமையை, ஜநயந்தி-உண்டுபண்ணுகின்றன. இதியத்-என்கிறயாதொன்டோ, ததேதத்-அந்த இது, இஹ-இந்தலோகத்திலே, சித்ரம்-ஆச்சரியம்.

(கருத்து) பாதுகையே! உன்மேலே இழைத்திருக்கிற சிவப்புரத்நங்கள் எல்லையில்லாதப் பிரகாசத்தாலே என்னுடைய அஜ்ஞானமாகிற இருட்டைப் போக்கடிக்கிறது. இது நியாயம். வெளிச்சத்தாலே இருட்டுப்போகிறது என்பது வழக்கம். வெளிச்சம் ராகமாயிருக்கிறது. அதாவது சிவப்பாய் ஆசையாயிருக்கிறது. அது ரஜோகுணத்தைப் போக்கடிக்கிறது ஆசை என்கிற ராகம் ரஜோகுணத்தாலே உண்டாகிறது. ஆசையினாலே ரஜோகுணம் போகிறது என்பது ரொம்ப ஆச்சரியம். ஆழ்வாருடைய பாசுரங்களாலே நம்முடைய அஜ்ஞாநம் போகிறது. பூர்வாசாரியர்கள் வேண்டிய கிரந்தம் ஸாதித்திருக்கிறார்கள். 'ஒரொன்றுதானே' என்கிறபடி ஒருவாக்கியமே நம்முடைய கெடுதலைப் போக்கப்போதுமானது. லோகத்திலே பெரும்பாலும் வித்வான் என்றிருக்கிறவர்கள் இந்தக்கிரந்தங்களை ஸேவிக்கிறார்கள். ஆனால் அவைகளினுடையவிஷயம் மனதில் படுகிறது ரொம்பக்கஷ்டமாயிருக்கிறது. அது பட்டால் கோபம், கர்வம்முதலான கெட்டகுணங்கள் இருக்காது; இருக்கிறதாகவாவதுதெரியும். இப்போது கோபம் இருக்கிறது என்றே தெரியவில்லை. என்னமோ ஏதாவது ஒருவியாஜத்தாலே ஸ்ரீ ஆசாரியாளும் பெருமாளும் காப்பாற்றவேணும். ஏதோ கொஞ்சம் என்னை நினைத்து இந்த வார்த்தையை எழுதினேன்(18)

(௫௬௬) பத்மாகராநுரவிகாஸிநி ரஜ்ஜயந்த்ய:
ஸீக்ஷா பதாவநி மயாபி பதாரவிந்தே ।
ஶோணாயமாநருசிபி: ஸஹஸா ப்ரவாளம்
மந்யே விஹஸ்ய மஹதீம் பத்மராகஶோபாம் ॥

ஹே பதா³வநி-வாராய் பாதுகையே! ஸம்பூ⁴ர்ணே, பத்³மா-மஹா லக்ஷ்மியினுடைய, கர-திருக்கைகளுடைய, அந்தர-நடுவிலே, விகாஸிநி-விளங்குகிற, (பத்³மாகர-தாமரைக்குளத்தினுடைய, அந்தர-நடுவிலே, விகாஸிநி-மலர்ந்திருக்கிற) ரங்க³பதே:-ஸ்ரீரங்கநாதனுடைய பத³-திருவடியாகிற, அரவிந்தே³-தாமரைப்பூவிலேஇருக்கிற, மகரந்த³-தேன்போலிருக்கிற குணங்களை (கள்ளுக்களை) பீத்வா-அனுபவித்து, (சாப்பிட்டு) ஶோணோபல-சிவப்பு ரத்நங்களுடைய, த்³யுதிமயம்-காந்திஸ்வரூபமாயிருக்கிற, ஸாமோத³-இன்பமான, ப்ரசாரம்-ஸஞ்சாரத்தையுடைய, அமந்த³ம்-ரொம்ப அதிகமாயிருக்கிற, மத³-கொழுப்பினாலே உண்டான, ராக³-சிவப்பினுடைய, ஶோபா⁴ம்-அழகை, பி³ப⁴ர்ஷி-வஹிக்கிறாய்.

(கருத்து) பாதுகையே! உன்மேலில் சிவப்புரத்னம் இழைத்திருக்கிறது. உன்னைச்சாற்றிக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறபோது நீயும் கூடப்போகிறாய் உன்னுடைய சிவப்புக்காந்தியையும் உன் ஸஞ்சாரத்தையும் பார்க்கிறபோது பெருமாள் திருவடியாகிற தாமரைப்பூவிலிருக்கிற தேனை (கள்ளை) வேண்டியபடிசாப்பிட்டுவிட்டு உடம்பெல்லாம் சிவந்து ஆடிவிழுந்துகொண்டு நடக்கிறதுபோலிருக்கிறது. கள்ளுக்குடித்தவன் முகமெல்லாம் சிவந்து ஆடிவிழுந்துகொண்டு நடப்பன். ஆழ்வார் பெருமாள் திருவடியின் குணங்களை அனுபவித்து மயங்கிப்போகிறார். (19)

(க00) பாதா³வநி ப்ரஸ்ருமரஸ்ய கலேர்யுக³ஸ்ய
ப்ராயேண ஸம்ப்ரதி நிவாரயிதும் ப்ரவேஶம் ।
ஶ்ரீரங்க³பூ⁴மி தவ ஶோணமணிப்ரஸூத:
ப்ராகாரமக்³நிமயமாரப⁴தே ப்ரகாஶ: ॥

ஹே பாதா³வநி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! தவ-உன்னுடைய, ஶோணமணி-சிவப்புரத்நங்களாலே, ப்ரஸூத:-உண்டாயிருக்கிற, ப்ரகாஶ:-வெளிச்சமானது, ப்ரஸ்ருமரஸ்ய-எங்கும் பரவுகிற, கலேர்யுக³ஸ்ய-கலியுகத்திற்கு, ஶ்ரீரங்க³பூ⁴மி-ஸ்ரீரங்கப்ரதேசத்திலே, ப்ரவேஶம்-நுழைகிறதை, ஸம்ப்ரதி-இப்போது, நிவாரயிதும்-தடுக்கிறதற்கு, அக்³நிமயம்-

நெருப்பினுல் உண்டுபண்ணப்பட்ட, ப்ராகாரம்-கோட்டையை, ப்ராயேண-அநேகமாக, ஸூரஹிதை-உண்டுபண்ணுகிறது.

(கருத்து) பாதுகையே! உன்மேலே சிவப்புரத்நம் இழைத்திருக்கிறது. அதனுடைய காந்தியைப்பார்த்தால் அக்னிஜ்வாலை போலே இருக்கிறது. அதைப்பார்த்தால் எங்குபார்த்தாலும் நுழைகிற கலியுகம் ஸ்ரீரங்கத்திற்குள் வாராமலிருப்பதற்கு ஸ்ரீரங்கத்துக்கு நெருப்பாலே ஒருகோட்டை போடுவதுபோலிருக்கிறது. உன்னைச்சாற்றிக்கொண்டு பெருமாள் ப்ரதக்ஷணமாக எழுந்தருளுகிறானன்றோ. ஆழ்வார் பாசுரங்களின் அபிப்ராயம் மனதிற் பட்டால் கெட்ட சங்கதிகளில் ஆசை, கோபம், கர்வம், பொறாமை இவைமுதலிய கெட்டகுணங்கள்வராது, இவைகள்தான்கலி. கலி என்று சண்டைக்குப்பெயர். பாசுரங்களுக்கு அர்த்தங்களை சொல்லுகிறோமே ஒழிய பெரும்பாலும் மனதிலே படவில்லை. அர்த்தபஞ்சகம் என்றால் ஐந்துஅர்த்தங்கள் என்று பெயர். ஒரு வித்வானை அது தெரியுமா என்று கேட்டால் 'ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்' என்று சுலோகத்தையும்சொல்லி அர்த்தமும் சொல்லுகிறார். அப்படியன்று அது. (1)ஜீவன்பெருமாள் (2)கோபத்தை (3)ஸமாதானம்பண்ணி (4)பெருமாள்கிட்டப்போய் (5) வேலை செய்யவேணும் என்று ஐந்து அர்த்தம். "நாம் இங்கே வந்திருக்கிறோம், பெருமாள்கிட்டப்போகவேணும்" என்ற நினைவே வெகு ஜனங்களுக்கு இல்லை. (20)

(கூ௦க) க்ரீடாக்ருஹாங்கண விஹாரிணி ரங்கநாதே
ஶோணாச்மரச்மி ஜனித ப்ரதிமாநகாஷ்டா: ।
ப்ராயேண ரஞ்ஜயதி பாதுகயோர்யுகம் தே
மௌஷ்டிக்ய ஸூசகவ வதீ மணிபாதுகே த்வம் ॥

மணிபாதுகே-மணியாய் கல்லிழைத்த பாதுகையே! பவதீ-நீ, ரங்கநாதே-ஸ்ரீரங்கநாதன், க்ரீடாக்ருஹ-விளையாட்டுக்காகஇருக்கிற வீட்டினுடைய, அங்கணே-நடுவிலே, விஹாரிணி ஸதி-எழுந்தருளுகிறபோது, சோணாச்ம-சிவப்புரத்நங்களுடைய, ரச்மி-காந்தியென்கிற, லாக்ஷா-லாக்ஷையுடைய, ப்ரதிமா-செம்பஞ்சுக்குழம்புகளாலே, மௌஷ்டிக்ய-அலங்

காரம் பண்ணுகிறவள்போலே, பாதஸரோஜ-தாமரைப்பூபோ லிருக்கிற திருவடிகளுடைய, யுக்மம்-இரண்டை, பூயிஷ்டம்-மிகவும், ரஞ்ஜயஸி-சிவப்பாகப்பண்ணுகிறாய்.

(கருத்து) பாதுகையே! உன்மேலே சிவப்புரத்னம் இழைத்திருக்கிறது. அது ரொம்ப காந்தியுள்ளதாகஇருக்கிறது. பெருமாள் உன்னைச்சாத்திக்கொண்டு எழுந்தருளும்போது திருவடியிலெல்லாம் படுகிறது. அதைப்பார்த்தால் செம்பஞ்சுக்குழம்பாலே திருவடியைப்பூசுகிறதுபோலிருக்கிறது. செம்பருத்தியென்கிறதை ஜலத்தில்போட்டால் சிவப்பாக இருக்கும். அதை மருதாணிபோலே அழகுக்காக காலில் தடவுகிறது வழக்கம். ஆழ்வார் திருவடிகளை மிகவும் ஸ்தோத்ரம் பண்ணுகிறார். (21)

(௯௨) ரங்கேசிதுர்விஹரதோ மணிபாதரக்ஷே
ரத்யாஸு லாஜஸுமனஸ: பரிகீர்யமாணா: ।
த்வத்பத்மராகக்ரிணைர்விபரிணதாஸ்தே
ஸந்த்யாதபாஞ்சிததாரகபங்க்திலக்ஷ்மீம் ॥

ஹேமணிபாதரக்ஷே-ரத்னம் இழைத்த பாதுகையே! விஹரத:-ஸஞ்சரியாநின்றிருக்கிற, ரங்கேசிது:-ஸ்ரீரங்கநாதனுடைய, ரத்யாஸு-நடுவீதியிலே, பரிகீர்யமாணா:-ஜனங்களாலே வாரிஇறைக்கப்பட்டிருக்கிற, லாஜஸுமனஸ:-புஷ்பங்கள், த்வத்-உன்னுடைய, பத்மராக-சிவப்புரத்னங்களுடைய, க்ரிண-காந்திகளுடைய, விபரிணாத்-விபரிப்பதாலே, ஸந்த்யாதப-மஞ்சள் வெய்யிலாலே, அஞ்சித-வியாபரிக்கப்பெற்றிருக்கிற, தாரக-நக்ஷத்ரங்களுடைய, பங்க்தி-வரிசையினுடைய, லக்ஷ்மீம்-அழகை, பஜந்தே-அடைகின்றன.

(கருத்து) பாதுகையே! உன்மேலே சிவப்புரத்நங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளுடைய சிவப்புக் காந்திகள் பெருமாள் எழுந்தருளுகிறபோது வீதியிலே ஜனங்களால் வாரியிறைக்கப்பட்ட மல்லிகைப்புஷ்பங்களின்மேலேபரவுகின்றன. அதைப்பார்த்தால் மஞ்சள் வெய்யிலோடுகூடிய நக்ஷத்ரங்கள்மாதிரி இருக்கிறது. ஒழிந்திருக்கிற உயர்ந்த யோகிகளின் மனதுகூட ஆழ்வார் பெருமாளைப்பற்றி ஆசைப்படுகிற பாசுரங்களைக்கேழ்க்கும்

போது பெருமாளிடத்திலே ஆசையினாலேகலங்கிப்போகின்றன. யோகிகளெல்லாம் கண்ணனை ஸேவிக்கும்போது தாங்கள்பெண்களாகப்போகவேணுமென்று ஆசைப்பட்டார்களாம். (22)

(கூ०௩) ரஙா்ாயிராஜவதூ³ரக்ஷிணி விஹ்ருதஸ்த்வாம்
மஹாதரஜ்ஜவிரஹெ மிரிஶஸ்ய ஶஷ்ஜை ।
ஸம்வஜ்யதி ஶஹவா தவ வத்³மராகா³
ஶைஹூஜாத்மஜாவரணயாவகவஜ்ஜவக்ஷ்ஷீம் ॥

ஹெரஙாயிராஜ-ஸ்ரீரங்கநாதனுடைய, வதூ³ரக்ஷிணி-வாராய் பாதுகையே! தவ-உன்னுடைய, வத்³மராகா³:-சிவப்புரத்னங்கள், ஶஹவா-காந்தியாலே, ஸ்வாம்-உன்னை, விஹ்ருதஃ-தூக்குகிற, மிரிஶஸ்ய-சிவனுடைய, மஹா-கங்கையினுடைய, தரஜ்ஜ-அலையினாலே, விரஹெ-அழுக்கில்லாமலிருக்கிற, ஶஷ்ஜை-தலையிலே, ஶைஹூஜாத்மஜா-ஹிமவத்பர்வதத்தின்பெண்ணான பார்வதியினுடைய வரண-கால்களுடைய, யாவகவஜ்ஜ-செம்பஞ்சுக்குழம்பினுடைய, லக்ஷ்மீம்-சோபையை, ஸம்வஜ்யதி-விருத்திபண்ணுகின்றன.

(கருத்து) ஏபாதுகையே! உன்மேலே சிவப்புரத்னம் இழைத்திருக்கிறது. அதனுடைய சிவப்புகாந்திகள், பாதுகையை சிவன் தலையிலே வைத்துக்கொள்ளுகிறபோது கங்கையினாலே அலம்பப்பட்ட அவர் தலையிலே பரவுகிறது. அதைப்பார்த்தால் பார்வதியினுடைய கோபத்தை ஸமாதானம்பண்ண சிவன் பார்வதியை ஸேவிக்கிறபோது அவள் காலிலே இருக்கிற செம்பஞ்சுக்குழம்பு பட்டதுபோலே இருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களை பெருமாளுக்கு பக்தரான சிவன் தலையிலே தூக்கிவைத்துக்கொள்ளுகிறார். (23)

(கூ०௪) ஶரணாமதாநாம் ஶஸ்ருஶீம் ஶொஹரஸாம்
ஶமயிதும்மயஸ்தூதநுமஹெ வாறஸஸ்யாநு ।
வமஸரவிஜயொமாதூஜநாயகஸ்ய ஸஸ்யஃ
வரிணமநாணீநஃ வாஜகெ வத்³மராகா³நு ॥

ஹெவாஜகெ-வாராய்பாதுகையே! ரஙாநாயகஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, வத-திருவடிகளாகிற, ஸரவிஜ-செந்தாமரைப்

பூக்களுடைய, யோகாத்-ஸம்பந்தத்தினாலே, பூய:-ரொம்ப, பரிணதா:-உண்டாகியிருக்கிற, ராகிண:-சிவப்பைஉடைத்தாயிருக்கிற, பத்மராகாந்-சிவப்புரத்னங்களை, ஶரணம்-மோக்ஷோபாயமாக, உபகதாநாம்-நம்பினவர்களுடைய, [illegible]-நல்லஸங்கதிகளுடைய அறிவில்லாமையாகிற, ஶர்வரீம்-இரவை, ஶமயிதும்-போக்கடிக்கிறதற்கு, உதயஸ்தாந்-பிரகாசிக்கிற (உதய பர்வதத்திலிருக்கிற) பாலஸூர்யாந்-இளம் ஸூரியர்களாக, மந்யே-நினைக்கிறோம்.

(கருத்து) ஏபாதுகையே! உன்மேலே சிவப்புரத்னம் இழைத்திருக்கிறது. அது ஏற்கனவே நல்ல சிவப்பாக இருக்கிறது. சிவப்பாயிருக்கிறபெருமாள் உள்ளங்காலினுடையசேர்க்கையினால்இன்னும் அதிகசிவப்பாக இருக்கிறது. அந்த ரத்னத்தைப்பார்த்தால், ஸம்ஸாரத்தைப்போக்கவேண்டுமென்று பாதுகையை அடைந்தவர்களுடைய அஞ்ஞானமாகிற இரவைப்போக்குவதற்கு ஸூரியன் உதித்தாப்போலிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களை நல்ல ஆசார்யாளுடைய அனுக்ரஹத்தை முன்னிட்டு அவர்களிடத்தில் கேட்கிறபேர்களுக்கு அஞ்ஞானமெல்லாம் போய்விடுகிறது. (24)

(௯௦௫) ஹரிபதராகிணாம் பாதுகே தாவகாநாம்
அருணமணிகணாநாம் சந்த்ரசூடமௌளி: ।
ப்ரணதிஸமயஸங்காத் பாஸநாமேவ தத்தே
கலமகணிஶகாந்திஸ்பர்த்திநீபிர்ஜடாபி: ॥

ஹே பாதுகே-வாராய்பாதுகையே! சந்த்ரசூடமௌளி:-சந்த்ரகலையைத்தலையிலுடைய சிவன், கலமகணிஶ-செம்பாப்பயிரின் கதிரினுடைய, காந்தி-அழகோடு, ஸ்பர்த்திநீபி:-சண்டைப்படுகிற அதாவது அதுபோலே இருக்கிற, ஜடாபி:-சடைகளாலே, ஹரி-பெருமாளுடைய, பத-உள்ளங்கால்போலே, ராகிணாம்-அழகாயிருக்கிற, தாவகாநாம்-உன்னுடையதாயிருக்கிற, அருணமணி-சிவப்புரத்னங்களுடைய, கணாநாம்-கூட்டங்களுடைய, ப்ரணதிஸமய-பாதுகையை சிவன்ஸேவிக்கிறஸமயத்திலே, ஸங்காத்-ஸம்பந்தித்திருக்கிற, பாஸநாமேவ-காந்தியினுடைய சேர்க்கையைத்தான், தத்தே-தரிக்கிறான்.

(கருத்து) பாதுகையே! சிவனுடைய தலையிலே செம்பரப்பயி ரின் கதிர்போலே பொன்வர்ணமாக சடைகள் அதிகமாக இருக்கி ன்றன. அவைகளுக்கு அந்தவர்ணம்ஏதென்றுகேட்டால், உன்னை வந்து சிவன் ஸேவிக்கிறபோது பெருமாளுடைய உள்ளங்காலின் சிவப்பாலே எல்லையில்லாத சிவப்பை அடைந்த சிவப்பு ரத்னங்களு டைய காந்தி பட்டதினாலே உண்டாயிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களைச் சிவன் தலையிலே வைத்துக்கொண்டாடுகிறார். (25)

(௬௦௬) ப்ரதிவிஹரணமேதே பாதுகே ரங்கபர்த்து:
பதகமலஸமாநா: பத்மராகாஸ்த்வதீயா: ।
தருணதபநஸௌஹ்ருத்யம் உத்வஹத்பிர்மயூகை:
ஸ்தலகமலவிபூதிம் ஸ்தாபயந்த்யவ்யவஸ்தாம் ॥

ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுகே-வாராய் பாதுகையே! ப்ரதிவிஹரணம்-ஸஞ்சாரங்கள்தோறும், பதகமலை-தாமரைப்பூபோலிருக்கிறதிருவடியோடே, ஸமாநா:-ஸமானமாயி ருக்கிற, த்வதீயா:-உன்னுடையதாயிருக்கிற, ஏதே-இந்த, பத்மரா கா:-சிவப்புரெத்தினங்கள், தருணதபந-இளம்ஸூர்யனுடை ய, ஸௌஹ்ருத்யம்-ஸ்நேஹத்தை, உத்வஹத்பி:-அடையாநின்றிருக்கிற, மயூகை:-காந்திகளாலே, அவ்யவஸ்தாம்-கட்டுப்பாடு இல்லாமலி ருக்கிற, ஸ்தலகமல-நிலத்தாமரைப்பூக்களுடைய, விபூதிம்-ஸம்ரு த்தியை, ஸ்தாபயந்தி-ஏற்படுத்துகின்றன.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் சிவப்பு ரெத்னங்கள் இழைத்திருக்கின்றன, அவைகள் பெருமாளுடைய சிவப்பான உள்ளங்கால்போலிருக்கின்றன. பெருமாள் உன்னைச் சாற்றிக் கொண்டு எழுந்தருளுகிறபோது அந்த ரத்தினத்தினுடைய காந் திகள் உதயகாலத்து ஸூர்யனுடைய காந்திகள்போல் கொஞ்சம் சிவந்து எங்கும் பரவுகின்றன, அதைப்பார்த்தால் எல்லா இடங்க ளிலும் தாமரைப் புஷ்பங்கள் இருக்கின்றனபோலிருக்கின்றன. பெருமாளிடத்தில் மிகுந்த ஆசையுடன் ஆழ்வார் ஸாதித்த பாசு ரங்களின் தாத்பரியங்கள் பெரியவர்கள் அனுக்ரஹத்தால் மன தில்பட்டால், சூரியோதயகாலத்தில் தாமரைமொட்டுகள் மலருகின் றனபோல் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற தாரதம்மியம் இல்

லாமல் எல்லாருடைய மனது மலருகிறது. அதாவது எல்லாருக்கும் பெருமாளிடத்தில் பக்தி, தயை, பொறுமை இவைமுதலிய நல்ல குணங்கள் வருகின்றன. (26)

(௧0௭) அயமநிதரஸுகாந் ரஞ்ஜயந் வீதராகா
நருணமணிகணாநாம் தாவகாநாம் ப்ரகாஸ: |
மதுரிபுபதரக்ஷே த்ராக் ஜாஜ்வல்யமாந
ஶ்ஶலபயதி ஜநாநாம் ஸாஸ்வதம் பாபராஸிம் ||

மதுரிபோ-மதுவென்கிற அஸுரனுக்குச் சத்துருவான பெருமாளுடைய, பதரக்ஷே-வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! வீத-போயிருக்கிற, ராகாந்-பெருமாளைத் தவிர மற்றவைகளில் ஆசையை உடைத்தாயிருக்கிற, அநிதரஸுகாந்-பெருமாளுடைய அநுபவம் தவிர வேறு ஸுகமில்லாதவர்களை, ரஞ்ஜயந்-ஸந்தோஷப்படுத்துகிறதாயும் (சிவப்பாகப்பண்ணுகிறதாயும்) ஜாஜ்வல்யமாந:-மிகவும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறதாயும், தாவகாநாம்-உன்னுடையவைகளாயிருக்கிற, அருணமணி-சிகப்புரத்நங்களுடைய, கணாநாம்-கூட்டங்களுடைய, அயம்-இந்த, ப்ரகாஸ:-காந்தியானது, த்ராக்-சீக்கிரமாக, ஜநாநாம்-ஜநங்களுடைய, ஸாஸ்வதம்-ரொம்பக்காலமாயுள்ள, பாபராஸிம்-பாபங்களுடைய கூட்டத்தை, ஸலபயதி-விளக்குவெட்டுப்பூச்சிபோல்பண்ணுகிறது.

(கருத்து) பாதுகையே! உன்பேரில் சிகப்புரத்நங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் எல்லையில்லாத ப்ரகாசமானது மற்ற ஒன்றையும் நினையாமல் பெருமாளையே நினைத்து ஸுகப்படுகிறவர்களை நிரம்பஸந்தோஷப்படுத்துகிறது. ஜனங்களுடைய நெடுநாளாக வந்த பாபக்கூட்டங்களை விளக்கில் வந்து விழுகிற பூச்சிகளைப்போல் பொசுக்கிறது. அதாவது போக்கடிக்கிறது. சிகப்பு இல்லாதவர்களை சிகப்பாகப்பண்ணுகிறது. ஆசையில்லாதவர்களுக்கு ஆசையையுண்டுபண்ணுகிறது என்றும் ஒரு அர்த்தம். பெருமாளிடத்தில் நிரம்ப ஆசையோடு ஆழ்வார்பாடின பாட்டுகளை சிகப்புரத்நமென்று சொல்லுகிறது. அந்தப் பாசுரங்களின் கருத்து பெருமாளிடத்தில் ரொம்ப பக்தர்களை எல்லையில்லாமல் ஸந்தோஷப்படுத்துகிறது. ஜநங்களுடைய நெடுநாளாய்வந்த எல்லையில்

லாத பாபங்களை அறிந்தவுடனேயே போக்குகிறது. விளக்கில் வந்து விழுகிற பூச்சி என்று சொன்னதால் பாபிகள்கூட ஆழ்வார் பாசுரத்தின் கருத்தை மிகுந்த ஆசையுடன் கேட்கிறார்கள் என்று ஏற்படுகிறது. (27)

(௨௮) ப்ரசுரநிக³மக³ந்தா⁴: பாது³கே ரங்க³ப⁴ர்த்து:
பத³கமலஸம்ருத்³தி⁴ம் ப்ரத்யஹம் ஸாத⁴யந்த: ।
த³த⁴தி ஶமயந்தோ கா³ட⁴மந்தஸ்தமிஸ்ரம்
ஸமுசிதமாருண்யம் தாவகா: பத்³மராகா³: ॥

ஹே பாது³கே-வாராய்பாதுகையே! ப்ரசுர-அதிகமாயிருக்கிற, நிக³மக³ந்தா⁴:-வேதவாஸனைகளையுடைத்தானவைகளாயும், ரங்க³ப⁴ர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, பத³-திருவடியாகிற, கமல-தாமரைப்பூவினுடைய, ஸம்ருத்³தி⁴ம்-நிரம்புதலை, ப்ரத்யஹம்-தினம்தோறும் ஸாத⁴யந்த:-உண்டுபண்ணுகிறவைகளாயும், கா³ட⁴ம்-கெட்டியாக இருக்கிற, அந்த:-உள்ளேயிருக்கிற, தமிஸ்ரம்- அக்ஞானமாகிற இருட்டை, ஶமயந்த:-போக்கடிக்கிறவைகளாயுமிருக்கிற, தாவகா:-உன்னுடையவைகளாயிருக்கிற, பத்³மராகா³:-சிகப்புரத்னங்கள், ஆருண்யம் சிகப்பாகவிருக்குகையை (ஸூரிபனாகவிருக்குகையை) த³த⁴தி-அடைந்திருகின்றன. ஸமுசிதம்-மிகவும் தகுந்தது.

(கருத்து) ஓபாதுகையே! உன்பேரில் சிவப்புரத்நங்கள் இழைத்திருக்கின்றன. அவைகள் உயர்ந்த ஸூர்யனை இருக்கின்றன. எல்லாகாலத்திலும் எல்லா வேதங்களுடைய வாசனைகளையும் அடைந்து இருக்கின்றன. பெருமாளுடைய திருவடியாகிற தாமரைப்பூவை ஸம்ருத்தமாகப் பண்ணுகின்றன. உள்ளிருக்குமிருட்டைப்போக்குகின்றன; ஆழ்வார் பாசுரங்கள் எல்லாவேதங்களின் கருத்தாக இருக்கின்றன, பெருமாள் திருவுள்ளத்திற்கு மிகுந்த உகப்பாக இருக்கின்றன; கேட்கிறவர்களுக்கு எல்லா நல்ல ஸங்கதிகளையும் தெரிவித்து அக்ஞானத்தையும் போக்குகின்றன, (28)

(௨௯) ப்ராக்ஷாஶக்ஷ்யப்ரப⁴வதி ரங்கி³ண: பாது³கே ஶேஷ
வக்த்ரோத்³யோதே ஸ்தவபரிணதிம் பத்³மராகா³ந்விதஸ்தே ।
க்ஷோணீந்த்³ரோபாஸ்யமஸ்யப்ரதிவிதி ஸேவமாநாம்
ஸீமந்தஸ்த்ரீயமக்ஷாப்யஸ்யஸந்திவிந்துஸ்த்வராஸாம் ॥

தேவீ - விளங்குகிற, ரங்கிண: - ஸ்ரீரங்கநாதனுடைய, பாதரக்ஷே - வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! தே - உன்னுடைய, பத்மராக - சிவப்புரத்நங்களுடைய, த்யுதி: - காந்தியானது, ஸேவாநதாநாம் - ஸேவிப்பதற்காக வணங்கியிருக்கிற, த்ரிதஶஸுந்தரீணாம் - தேவஸ்திரீகளுடைய, அதரப்ரவாலே - தங்கத்தால்செய்யப்பட்ட ஒருவிதஆபரணம்போலிருக்கிற உதட்டிலே, லாக்ஷா - செம்பஞ்சுக்குழம்பினுடைய, லக்ஷ்மீம் - சோபையையும், வக்த்ரஸரோஜே - தாமரைப்பூபோலிருக்கிறமுகத்திலே, மதபீநதாம் - கொழுப்பினாலுண்டான அழகையும், கர்ண - காதினுடைய, உபாந்தே - ஸமீபத்திலே, கிஸலய - துளிர்களுடைய, ருசிம் - அழகையும், ஸீமந்தே - வகுடுப்ரதேசத்திலே, ஸிந்தூரஶோபாம் ச - ஸிந்தூரத்தினுடைய அழகையும், ஸூதே - உண்டுபண்ணுகிறது.

(கருத்து) ஏபாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற சிவப்புரத்நங்களுடைய காந்தியானது உன்னைச்சேவிப்பதற்காக குனிந்திருக்கிற தேவஸ்திரீகளுடைய உதட்டில் படும்போது செம்பஞ்சுக்குழம்பு தடவின அழகையும், முகத்தில் படும்போது கள்ளுக்குடியினாலுண்டான கொழுப்பினால் உண்டானஅழகையும், காதில் துளிர்களுடைய அழகையும், வகுட்டில் ஸிந்தூரத்தினுடைய அழகையும் உண்டுபண்ணுகிறது. ஆழ்வார் பாசுரங்களின் அபிப்ராயம் மனதில்பட்டால் அதினால் ஒருவனுக்கு எல்லாவிதமான அழகும் ஸுகமும் வரும்.

(௪௧௦) ஶோணமணயஸ்த்வதீயே ஹரிபதராகேண
உத்யதஹிமாம்ஶவ: | நயந்தி சரணரக்ஷே த்யு
மணிமணிம் ஜ்யோதிரிங்கணதாம் ॥

இதி ஸ்ரீ கவிதார்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீவேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
பத்மராகபத்ததி: ஸப்ததஶீ ॥

---

சரணரக்ஷே-வாராய்த் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஹரி-பெருமாளுடைய, பத-திருவடியினுடைய, ராகேண-சிகப்பினாலே, ஸ்ப்ருஷ்ட-அடையப்பட்டிருக்கிற, மஹிமாந:-பெருமையையுடைத்தாயிருக்கிற, தவ-உன்னுடைய, ஏதே-இந்த, ஶோணமணய:-சிவப்புரத்நங்கள், த்யுமணி-சூரியர்களுடைய, கணம்-கூட்டத்தை, ஜ்யோதிரிங்கணதாம்-மினிமினிப் பூச்சியாயிருக்குகையை, நயந்தி-அடைவிப்பிக்கின்றன.

(கருத்து)ஏபாதுகையே! உன்பேரில் சிவப்புரத்நங்கள் இழைத்திருக்கின்றன, அவைகளின்சிகப்புகாந்தியானதுபெருமாளுடைய உள்ளங்காலின் சிகப்புப்பட்டு கோடிபங்கு அதிகமாய்விட்டது. அதைப் பார்க்கும்போது கோடிஸூர்யர்கள் சேர்ந்தாலும் மினிமினிப்பூச்சிபோலிருக்கிறது. ஆழ்வார் ஆசாரியர்களுடைய உபதேசங்களாலே வரப்பட்ட ஞானங்களைப்பார்த்தால், இந்த உபதேசமில்லாதவர்களுக்குப் பதினாயிரம் சாஸ்திரஞானமிருந்தாலும் கொஞ்சம்கூட உபயோகப்படாது என்று தோன்றுகிறது.

பதினேழாவதான பத்மராகபத்ததி முற்றிற்று.

---

## ஸ்ரீரங்கநாயகபாதுகாஸஹஸ்ரே

## அஷ்டாதசீ முக்தாபத்ததி: ॥

(சுகக) பத்தாநாம் யத்ர நித்யாநாம் முக்தாநாமீஶ்வரஸ்ய
ச । த்ருஶ்யதே ஶேஷஶேஷித்வம் ஸா
மே ஸித்த்யது பாதுகா ॥

யத்ர-யாதொருபாதுகையிலே, பத்தாநாம்-இழைக்கப்பட்டிருக்கிற, நித்யாநாம்-அழிவில்லாமலிருக்கிற, முக்தாநாம்-முத்துக்களுக்கும், ஈஶ்வரஸ்ய-பெருமாளுக்கும், ஶேஷஶேஷித்வம்-பெருமைப்படுத்துகிறது, பெருமை அடைகிறது என்கிற ஸங்கதியானது, த்ருஶ்யதே-கண்ணாலே பார்க்கப்படுகிறதோ, ஸா-அந்த பாதுகையானது, மே-எனக்கு, ஸித்த்யது-ஸித்திக்கவேணும். அதாவது-ஸ்வாதீனமாகவேணும். யத்ர-யாதொருபாதுகையிலே,

பத்தா:-கர்மத்தாலே கட்டுப்பட்ட ஸம்ஸாரிகளுக்கும், முக்தா:-கர்மத்தாலே விடப்பட்டவர்களுக்கும், நித்யா:-கர்மஸம்பந்தம் ஒருகாலுமில்லாதவர்களுக்கும், ரங்கேஶ்வரஸ்ய-பெருமாளுக்கும், ஶேஷஶேஷித்வம்-முன்போலவே.

(கருத்து) சேஷமென்றால் பெருமைப்படுத்துகிறது. சேஷி என்றால் பெருமை அடைகிறது. பாதுகையில் முத்து இழைத்திருக்கிறது. அது பெருமாளுக்கு விசேஷமான பெருமையை உண்டுபண்ணுகிறது. இந்தப் பெருமாள்பாதுகையை ஸம்ஸாரிகளும் நித்யஸூரிகளும் முக்தர்களும தலையில்சாத்திக்கொள்ளுகிறார்கள். அதனால் பெருமாள் உயர்ந்தவரென்றும் இவர்கள் பெருமாளுக்குக்கீழ்ப்பட்டவர்களென்றும் எல்லாருக்கும் நன்றாய் தெரியகிறது. அந்தப்பாதுகை எனக்கு ஸ்வாதீனமாகவேணும். அதாவது அந்தப்பாதுகையினிடத்தில் பொய்யில்லாத எல்லை இல்லாமல் எனக்கு பக்தி உண்டாகவேணும். ஸ்ரீபெருமாளும் ஆசார்யாளும் நிஜமாக பக்திபண்ணுகிறவனுக்கு ஸ்வாதீனமாவார்கள். ஆழ்வாருக்கு மூன்றுவிதஜீவர்களும், ஈச்வரனும் சேஷமாக இருக்கிறார்கள் என்கிறது ப்ரத்யக்ஷமாயிருக்கிறது. முத்து என்று சொல்லப்படுகிற ஆழ்வாருடைய பாசுரங்களுக்குப் பெருமாள் சேஷபூதராயிருக்கிறார், அதாவது சுவாதீநராயிருக்கிறார். வாஎன்றால் வருகிறார் என்பது ப்ரத்யக்ஷமாயிருக்கிறது. (27)

(௯௨) தவ ரங்கதுரீணபாதரக்ஷே விஶதா மௌக்திக
பங்க்திர்விபாதி । ஸாந்த்ரீ த்வயி ஸாயிதா ப
வமோக்ஷஸமயே ஸங்க்ராந்திதேவ ஸாயுஜ்யக்ருத்யா ॥

ரங்கதுரீண-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதரக்ஷே-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! விஶதா-வெளுப்பாயிருக்கிற, தவ-உன்னுடைய, மௌக்திக-முத்துக்களுடைய, பங்க்தி:-வரிசையானது, ஸாயிதா-ஸம்பாதிக்கப்பட்டிருக்கிற, பவமோக்ஷ:-மோக்ஷத்தைஉடைத்தானவர்களாலே, ஸமயே-மோக்ஷத்திற்குப் போகிறஸமயத்திலே, ஸாந்த்ரீ-ஆரம்பப்ரீதியுள்ளவளாகஇருக்கிற, த்வயி-உன்னிடத்திலே, ஸங்க்ராந்த-சேர்ப்பிக்கப்பட்டிருக்கிற, ஸாயுஜ்யக்ருத்யேவ-புண்யகர்மம்போலே, விபாதி-விளங்குகிறது.

(கருத்து.) மோக்ஷத்திற்குப் போகிறவர்களுடைய-முன்செய்த-பலம் கொடுக்காமல் மீதியான-புண்ணிய கர்மங்களை அவர்கள் மோக்ஷத்திற்குப்போகிறஸமயத்தில்,பெருமாள் அவர்களை விட்டுப் பிரித்து, அவர்களிடத்தில் ரொம்ப ப்ரீதியாய் இருக்கிறவர்களிடத்தில் சேர்ப்பிக்கிறான் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. ஏ பாதுகையே! உன்பேரில் நல்ல வெளுப்பானமுத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளைப் பார்த்தால், மோக்ஷத்தை அடைகிறவர்களிடத்தில் ரொம்ப ப்ரீதி உள்ள உன்னிடத்தில் சேர்ப்பிக்கப்பட்ட புண்ய கர்மங்கள்போல் இருக்கின்றன. முத்துக்கள் என்று ஆழ்வார் பாசுரத்தைச் சொல்லுகிறது. அந்தப் பாசுரங்கள் மஹா ஸுக்ருதங்களாலே உண்டாகின்றன. அதாவது எல்லை இல்லாத பகவத் பாகவத ஆசார்யர்கள் அநுக்கிரஹத்தாலே உண்டாகின்றன என்று தோன்றுகிறது. ஒருவர் தெய்வம் இருக்கிறது என்று அறிந்து, சாஸ்திரத்தில் சொல்லியபடி பக்தியாவது, பிரபத்தியாவது செய்தால், அவன் மோக்ஷத்திற்குப் போகிற ஸமயத்திலே அவனிடம் ப்ரீதியாய் இருந்தவனிடத்தில் அவன் பண்ணின எல்லா புண்ணிய கர்மங்களுடைய பலன்களையும் பெருமாள் கொடுக்கிறார் என்றும், த்வேஷம் பண்ணினவனிடத்தில் அவனுடைய ஸகல பாப பலன்களையும் கொடுக்கிறார் என்றும் சொல்லி இருக்கிறது. (2)

(கூகந) ஶரணாகதஸஸ்யஶாலிநீயம் தவ மௌக்திகஶ்ரேணி
ருசிநிர்ஜரவீசிபி: । ரங்கதுரீணபாதரக்ஷே ஜகதீ நித்யமதைவமாத்ருகாஸீத் ॥

ரங்கது-வாராய், ரங்கதுரீண-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதரக்ஷே-திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, ஶரணாகத-பெருமாளைக் கெஞ்சுகிறவர்களாகிற, ஸஸ்ய-பயிர்களுடைய, ஶாலிநீ-வரிசையை உடைத்தாயிருக்கிற, இயம்-இந்த, ஜகதீ-பூமியானது, தவ-உன்னுடைய, மௌக்திகஶ்ரேணி-உயர்ந்த முத்துக்களுடைய, ருசி-காந்திகளாகிற, நிர்ஜர-மலைபருவிகளுடைய, வீசிபி:-வெள்ளங்களாலே, நித்யம்-எப்பொழுதும், அதைவமா

த்ருகா-மானம் பார்த்த சீமை இல்லாததாக, அதாவது ஆற்றுப் பாச்சல் உள்ளதாக, ஸம்ருத்தம்-ஆயிற்று.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளினுடைய காந்தி அழிவில்லாமலிருக்கிறது. அதைப்பார்த்தால், கோடை காலத்திலும் நிற்காத பெரிய வெள்ளம் போலிருக்கிறது. அந்த வெள்ளத்தினால் பூமி முதலான எல்லா லோகங்களிலும் சரணாகதர்களாகிற நெல்லுகள் விருத்தி அடைந்து கொண்டே இருக்கின்றன. ஆழ்வார் அவதரித்த பிறகு பூமி முதலான லோகங்களில் ஸகலமான பேரும் பெருமானை ஆச்ரயித்து, பெருமானை அடைந்து கொண்டே இருக்கிறார்கள். (3)

(௧௧௪) அயி விஷ்ணுபதம் பரிஸ்ஃபுரந்தீ நவமௌக்திக<br>
மணிநிர்மலப்ரகாசா | பரிபுஷ்யஸி க்ஷேமாணி<br>
ஸத்த்வாநாம் ப்ரதிபச்சந்த்ரகலேவ பாதுகே த்வம் ||

பாதுகே-வாராய் பாதுகையே! விஷ்ணுபதம்-ஆகாசத்திலே, பெருமானுடைய திருவடியிலே, பரிஸ்ஃபுரந்தீ-விளங்காநின்றும், நவ-புதியதாயிருக்கிற, மௌக்திகமணி-உயர்ந்த முத்துக்களாலே, (முத்துக்கள் போலே) நிர்மல-வெளுப்பாயிருக்கிற, ப்ரகாசா-காந்தியை உடைத்தாயிருக்கிற, த்வம்-நீ, ப்ரதிபத்-ப்ரதமையிலிருக்கிற, சந்த்ரகலா இவ-சந்திரகலைபோல, அதாவது-பிறைபோல, ஸத்த்வாநாம்-பிராணிகளுக்கு, க்ஷேமாணி-க்ஷேமங்களை, பரிபுஷ்யஸி-உண்டு பண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்துக்கள்நிறைய இழைத்திருக்கின்றன. அவைகளால்நல்ல வெளுப்புகாந்தியை உடையநீ, களங்கமில்லாத பிரதமை சந்திரன்போல் ஸகலமான லோகங்களுக்கும் க்ஷேமங்களை உண்டு பண்ணுகிறாய். ஆழ்வார் அவதரித்து ரொம்ப உயர்ந்த முத்துக்கள் போன்ற பாசுரங்களைப் பாடினபடியால், ஸகல லோகங்களுக்கும் ஸகல க்ஷேமங்களும் இன்றைக்கும் உண்டாகின்றன. சந்திரன் பிறையைப் பார்த்தால் ரொம்ப

நல்லது என்று சொல்லியிருக்கிறது. விஷ்ணுபதமென்று ஆகாசத்திற்கும் பெயர். (4)

(கoரு) நிஹிதா நவமௌக்திகாவலிர்வ: ஸ்தலேஷு காஞ்சந பாதுகே முராரே: | நகசந்த்ரமஸாம் பதாச்ரிதாநாம் ப்ரதிபிம்பப்ரகரச்ரியம் பிபர்தி ||

காஞ்சநபாதுகே-ஹே பாதுகையே! தங்கமயமான பாதுகையே! ஸ்தலேஷு-உன்னுடைய நாலுபக்கங்களிலும், நிஹிதா-இழைக்கப்பட்டிருக்கிற, நவ-புதிதாயிருக்கிற, மௌக்திகாவலி:-முத்துக்களுடைய வரிசையானது, முராரே:-பெருமாளுடைய, பதாச்ரிதாநாம்-திருவடியை அடைந்திருக்கிற, நக-நகங்களாகிற, சந்த்ரமஸாம்-சந்திரன்களுடைய, ப்ரதிபிம்ப-ப்ரதிபிம்ப சந்திரன்களுடைய, ப்ரகரச்ரியம்-வரிசைபோல, பிபர்தி-விளங்குகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேரில் முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் பெருமாள் திருவடியிலிருக்கிற நகங்களாகிற சந்திரன்களுடைய ப்ரதிபிம்பங்கள் போலிருக்கின்றன. நகங்கள் பெருமாள் திருவடியை விட்டுப் பிரியாததுபோல் ஆழ்வாருடைய பாசுரங்களும் பெருமாளுடைய திருவடியை விட்டுப் பிரியாமலிருந்து, திருவடிக்கு அலங்காரமாக இருக்கின்றன. பாசுரங்களுக்கும் திருவடி அலங்காரம். நகங்களுக்கு திருவடியால் அழகு. திருவடிக்கு நகங்களால் அழகு. (5)

(கoசு) ஸதாதநோதி பவதீ ஸதா ஸ்வகீயமௌக்திகதயுதிஸ்புரிதா | ஹரிபாதுகே ஹரிபதோத்பவா கநகாபகா ஸரபஸாபகா ||

ஹரிபாதுகே-ஹே பெருமாளுடைய பாதுகையே, ஸதா-எப்பொழுதும், ஸ்வகீய-உன்னுடையவைகளாயிருக்கிற, மௌக்திக-முத்துக்களுடைய, த்யுதி-காந்தியினாலே, ஸ்புரித-பூசப்பட்டிருக்கிற, அதாவது வியாபிக்கப்பட்டிருக்கிற, கநகாபகா-பொன்னி என்று சொல்லப்பட்ட காவேரியானது, ஹரிபதோத்பவா-பெருமாள் திருவடியிலிருந்து உண்டாயிருக்கிற, ஸுர

ஸுராபகயா-கங்கையோடே, வபுஷாபி-சரீரத்தினாலும், ஸமதாம்-ஸமமாய் இருக்குந்தன்மையை, உபைதி-அடைகிறது.

(கருத்து) கங்கை என்கிறது பெருமாள் திருவடியிலிருந்து உண்டான ஓர் ஆறு. காவேரி என்று ஓர் ஆறு. இந்த இரண்டும் லோகங்களுடைய பாபத்தைப் போக்குவது முதலான விஷயங்களில் ஒரேமாதிரி தான். ஆனால் காவேரியைப் பொன்னியென்று சொல்லுகிறது. காவேரி சிகப்பு. கங்கை வெளுப்பு. ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்த வெளுப்பான உயர்ந்த முத்துக்களின் காந்திகள் பெருமாள் காவேரியின் நடுவில் எழுந்தருளியிருப்பதால்,காவேரியின் பேரில்எப்போதும்படுகிறது. ஆதலால் அது வெளுப்பாகஆகி வெளுப்பு நிறத்தாலும் கங்கையோடு ஸமானமாக ஆய்விட்டது. ஆழ்வாரின் பாசுரத்தின் அபிப்ராயத்தை நல்ல ஆசாரியர்களின் அநுக்கிரஹத்தினால் உள்ளபடி அறிந்தவர்கள் கங்கை போல்ஸகலலோகங்களுக்கும் ஸகலகஷ்டங்களையும் போக்கி,எல்லா க்ஷேமங்களையும் உண்டு பண்ணுவார்கள். ரஜோகுணம், தமோகுணம் உள்ளவர்களும் ஆழ்வார் பாசுரங்களுடைய அபிப்ராயத்தை அறிந்தால், ரஜஸ் தமஸ் இல்லாத ஸத்வகுணத்தை அடைந்து விடுவார்கள். (6)

(௬௧௭) தவ ரங்கசந்த்ர தபநீயபாதுகே விசதா ஸதா
வஹதி மௌக்திகாவலி꞉ | சரணாரவிந்த நகசந்த்ர
மண்டல ப்ரணயோபயாத நவதாரகாருசிம் ||

ரங்கசந்த்ர-ஸ்ரீரங்க விமானத்திற்கு சந்திரன் போன்ற ஸ்ரீ ரங்கநாதனுடைய; தபநீயபாதுகே-வாராய் தங்கமயமான பாதுகையே! விசதா-வெளுப்பாயிருக்கிற, தவ-உன்னுடைய, மௌக்திக-முத்துக்களுடைய, ஆவலி꞉-வரிசையானது, சரணாரவிந்த-தாமரைப்பூப்போன்ற திருவடிகளுடைய, நக-நகங்களாகிற; சந்த்ரமண்டல-சந்திரமண்டலத்திலே, ப்ரணய-ஸ்நேஹத்தினாலே, உபயாத-வந்திருக்கிற, நவ-புதிதான, தாரகா-நக்ஷத்திரங்களுடைய, ருசிம்-அழகை, ஸதா வஹதி-அடைகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் வெளுப்பாய் முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளைப் பார்த்தால்—பெருமாள் திருவடியில் இருக்கிற நகங்கள் சந்திரன் போலிருக்கின்றன. சந்திரனுக்கு நக்ஷத்திரங்களை அகமுடையாளாகச் சொல்லி இருக்கிறது. அதனால் சந்திரனிடத்தில் வந்திருக்கிற நக்ஷத்திரம் மாதிரி இருக்கிறது. பெருமாள் திருவடியோடு சேர்ந்த அதாவது திருவடியைப்பற்றிச்சொல்லப்பட்ட ஆழ்வார் பாசுரங்களைஸேவிக்கும் போது, சந்திரனும் நக்ஷத்திரமும் சேர்ந்தது போலிருக்கிறது. இந்த பூமியில் நல்ல ஸங்கதிகளைத்தோன்ற விடாமல் பண்ணுகிற அக்ஞானமாகிற இருட்டை நிலாவானதுபோல் போக்கடிக்கிறது. அந்த பாசுரங்கள் நக்ஷத்திரங்கள் போலிருக்கின்றன. (7)

(௧௧௮) ஹரஸ்யகோடீர லாலிதா சாருமௌக்தி
கருசிபி: பாண்டுரா | ரங்கநாதபதாம்போஜஸம்ஶ்ரிதா த்வம் ல
க்ஷ்யஸே ஸ்வர்ணதீவ பாதுகே ||

பாதுகே-வாராய் பாதுகையே! ஹரஸ்ய-சிவனுடைய கோடீர-கிரீடத்தாலே, லாலிதா-கொண்டாடப்பட்டவளாயும், சாரு-அழகாயிருக்கிற, மௌக்திக-முத்துக்களுடைய, ருசிபி-காந்திகளாலே, (காந்திகள்போலே) பாண்டுரா-வெளுப்பாயும், ரங்கநாத-ஸ்ரீரங்கநாதனுடைய, பதாம்போஜ-தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியோடு, ஸம்ஶ்ரிதா-சேர்ந்திருக்கிற, த்வம்-நீ, ஸ்வர்ணதீவ-கங்கைபோலே, லக்ஷ்யஸே-காணப்படுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச் சிவன் ஸந்தோஷத்தோடு தலையில் ஸாதித்துக்கொள்ளுகிறார். உன்பேரில் முத்துக்கள் இழைத்து இருப்பதால் அதின் காந்தியால் வெளுப்பாய் இருக்கிறாய். நீ பெருமாளுடைய திருவடியாகிற தாமரைப் பூவோடு சேர்ந்திருக்கிறாய், இப்படிப்பட்ட உன்னைப் பார்த்தால் கங்கை போலிருக்கிறது. ஆழ்வார் நல்ல கருத்துள்ள பாசுரங்களால் கங்கைபோல் ஸகல லோகத்தையும் தோஷமில்லாமல்பண்ணி, ஸகல க்ஷேமத்தையும் அடையும்படி பண்ணுகிறார். (8)

(கூகக) யே ஸஜந்தி ஸவதீம் தவ தே ஶிகாக்ர
த்ருத்யசிகந்த்ரமுக்தயா வ்ருத்தயந்தி யோகி முகரிபாதுகே ஶிகஸ்தித பாலசந்த்ர சந்த்ரிகாம் ||

முரமதந-முரு என்கிற அஸுரனுக்குச்சத்ருவான பெருமாளுடைய, பாதுகே-வாராய் பாதுகையே! யே-எவர்கள், ஸவதீம்-உன்னை, ஸஜந்தி-தியானிக்கிறார்களோ, (அதாவது வேறு நினைவு இல்லாமல் விடாமல் நினைக்கிறார்களோ) தே-அவர்கள், தவ-உன்னுடைய, ஶாந்திகத்ருத்விகல்ப முக்தயைவ-கங்கைபோலிருக்கிற முத்துக்களின் காந்தியினாலேயே, ஶிகஸ்தி-தலையிலிருக்கிற, பாலசந்த்ரஸ்ய-சின்ன சந்திரனுடைய, சந்த்ரிகாம்-நிலாவை, வ்ருத்தயந்தி-வ்ருத்திபண்ணுகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னை யார் தியானிக்கிறார்களோ. அவர்கள் உன்பேரில் இழைத்திருக்கும் முத்துக்களுடைய கங்கைபோலிருக்கும் வெளுப்பு காந்திகளாலே தலையிலிருக்கிற சின்னசந்திரனுடையநிலாவை வ்ருத்திபண்ணுகிறார்கள். அதாவது உன்னைத் தியானிக்கிறவர்களுக்கு சிவன்பட்டம் வருகிறது. ஆழ்வாரிடத்திலும் அவர் பக்தர்களிடத்திலும் பக்தி பண்ணி, ஆழ்வாருடைய பாசுரங்களை அர்த்தத்தோடு அறிந்தால், அவர்களுக்கு நல்ல அறிவு விருத்தி அடைகிறது. ஆழ்வார்களுடைய பக்தர்களுக்குக் கிடைக்காத ஐசுவரிய மில்லை. (9)

(கூஉ௦) முக்தாமயூகைர் நியதம் த்வதீயைர் ஆவிஷ்க்ருதம் ஸம்நதிமத் பவாநி ரங்கேஶபாதாவநி பிந்து ஸம்ஸ்க்ருதசந்த்ரம் ஹரோ தர்ஶிதஸம்நதிஸ்தாம் ||

ரங்கேஶ-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாவநே-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! தர்ஶித-காண்பிக்கப்பட்டிருக்கிற, ஸம்நதிம்-வணக்கத்தை உடைத்தாயிருக்கிற, ஹரோ தேவ:-சிவன், த்வதீயை:-உன்னுடையவைகளாயிருக்கிற, முக்தா-முத்துக்களுடைய, மயூகை:-காந்திகளாலே, அவதம்ஸம் சந்த்ரம்-தலைக்கு அலங்காரமான சந்திரனை, ஆவிஷ்க்ருது-நிரப்பப்

போகிறவராய்க் கொண்டு, ஸாநந்-உன்னை, விபர்த்தி-தூக்குகிறார்; நியதம்-நிச்சயம்

(கருத்து) ஏ பாதுகையே! சிவன் வணக்கத்துடன் உன்னைத் தலையில் வைத்துக்கொள்ளுகிறார். எதற்காக என்றால், உன்னிடத்திலிருக்கும் முத்துக்களின் காந்தியால் தலையிலிருக்கும் சந்திரனை பெரிதாகப் பண்ணுவதற்காக. பெருமாள், நித்ய ஸூரிகள் இவர்களாலேகூட தலையில் வைத்துக்கொள்ளக்கூடிய ஆழ்வார் பாசுரங்களை சிவன் பிரும்மா இவர்கள் வைத்துக்கொள்ளக்கேட்பானேன்? ரஜோகுணத்துக்கும் தமோகுணத்துக்கும் சுவாதீனப்பட்டு ஐச்வர்யத்தையே பெரியதாக நினைக்கிற பிரும்மா சிவன் முதலானவர்கள், ப்ரும்ம பட்டம் முதலானவைகளையும் திருணமாகவும், தொந்தரவாகவும் நினைத்த ஆழ்வார்களின் ஸூக்தியை—தங்களுக்கு நல்ல ஞானமும், ஸம்ஸாரத்தில் ஒழிவும், பெருமாளிடத்தில் ஆசையும்வரவேணுமென்று தலையால் வஹித்து ஸேவிக்கிறார்கள்.

(௩௨௧) பரிஷ்க்ருதா மௌக்திகரஶ்மிஜாலை꞉ பதா³ப்³ஜ-
ரக்ஷீ ப⁴வதீ முராரே꞉। ப⁴வத்யனந்தோர்மிப⁴ஜாம்
ஶரீரிணாம் ஸம்ஸார ஸாக³ரபோதவதீ ‖

பதா³ப்³ஜம்-பாதுகையே! மௌக்திக-முத்துக்களுடைய, ரஶ்மி-கிரணங்களாகிற, ரஶ்மி-கயிறுகளுடைய, ஜாலை꞉-கூட்டங்களாலே, பரிஷ்க்ருதா-அலங்கரிக்கப்பட்டும், கட்டப்பட்டும், முராரே꞉-பெருமாளுடைய, பதா³ப்³ஜ-திருவடியை, ரக்ஷீ காப்பாற்றுகிறவளாயுமிருக்கிற, ப⁴வதீ-நீ யானவள், அனந்தோர்மி-எல்லை இல்லாத அலைகளாலே (அதாவது ஸமுத்திரத்தில் அலைகள்போல் ஓச்சலில்லாத பசி, தாகம், துக்கம், நல்ல ஸங்கதிகளை அறியாமை, கிழத்தனம், சாவு என்கிற ஆறு உபத்திரவங்களாலே) ப⁴ஜாம்-தவித்துக்கொண்டிருக்கிற, ஶரீரிணாம்-பிராணிகளுக்கு, ஸம்ஸார-ப்ரகிருதியாகிற, ஸாக³ர-ஸமுத்திரத்திற்கு போதவதீ-ஓடமாக, ப⁴வதி-ஆகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! ப்ராணிகள் ப்ரகிருதியின் ஸம்பந்தத்தினாலே உடம்பையும் அதைக் காட்டிலும் வேறான ஜீவனையும்,

அதற்கு யஜமானனுன தெய்வத்தையும் அறியாமல், அநேக பாபங்களைச்செய்து அந்தப்பழக்கம் எல்லையில்லாமல் வ்ருத்தியாகி, மறுபடியும் அந்த பாபத்திலே ஆசை உண்டாகி, மறுபடியும் சரீரம் இந்திரியம் முதலான ப்ரக்ருதியை அடைந்து, மறுபடியும் அறியாமை முதலான சுழலில் அகப்பட்டு திண்டாடுகிறுர்கள். உயர்ந்த முத்துக்களாலே இழைக்கப்பட்ட உன்னைத்தலையில் சாத்திக்கொண்டும் உன் திருமஞ்சன தீர்த்தத்தை சாப்பிடுவது முதலானவைகளாலேயும் இந்தக் கஷ்டத்தைப் போக்குகிறுர்கள். ஆகையால் ஜனங்களுடைய கஷ்டமாகிற ஸமுத்திரத்திற்கு நீ ஓடமாக இருக்கிறுய். உன்பேரில் இழைத்து இருக்கிற கம்பிபோன்ற முத்துக்களின் காந்தியைப் பார்த்தால் ஓடத்தைக்கட்டுகிற கயிறுபோலிருக்கிறது. பிளாச்சு முதலானவைகளை வைத்துக் கொண்டு கயிறுகளால் ஓடம் கட்டுவது வழக்கம். ஆழ்வார் அவதரித்து, ரொம்பவும் இன்பமான-ஜீவன் தைவம் முதலான நல்ல ஸங்கதியைக் காண்பிக்கிற -முத்துக்கள் போன்ற பாசுரங்களை ஸாதித்ததால் வெகு பேர்கள் நல்ல ஸுக்ருதங்களால் நல்ல ஆசாரியாளை அடைந்து நல்ல ஸங்கதிகளைத் தெரிந்து மோக்ஷத்தை (அதாவது பெருமாளுடைய அழிவில்லாத இடத்தை) முன்னேயும் அடைந்தார்கள். இப்பவும் அடைகிறுர்கள். நாளைக்கும் அடையப்போகிறுர்கள். (11)

(கஉஉ) ரங்கேஶபாதப்ரதிபந்தஸோகாம் ரத்நாந்விதை꞉
ஶ்லாகிதாம் ஶிரோபி꞉ | முக்தாவதாதாம் மணி
பாதுகே த்வாம் மந்தும் ஸர்பராஜாயிதவத꞉ ப்ரதீத꞉ ||

மணிபாதுகே-ரத்னம் இழைத்த பாதுகையே! ஸ்ரீரங்கேஶ-ஸ்ரீ ரங்கநாதனுடைய, பத-திருவடியிலே, ப்ரதிபந்த-அடையப்பட்டிருக்கிற, ஸோகாம்-ஸுகத்தை உடைத்தானவளாயும், உடலை யுடைத்தானதாயும், ரத்ந-ரத்தினங்களோடு, அந்விதை꞉-சேர்க்கப்பட்டிருக்கிற, ஶிரோபி꞉-தலைகளாலே, ஶ்லாகிதாம்-கொண்டாடப்பட்டவளாயும், முக்தா-முத்துக்களாலே, முத்துக்கள் போலே, அவதாதாம்-வெளுப்பாயுமிருக்கிற, த்வாம்-உன்னை, ஸர்பராஜாயிதவத꞉-பாம்புகளுக்கெல்லாம் ராஜாவாயிருக்

கிற. ஆதிசேஷனுடைய, ஸம்ஸ்தாநம்-திருமேனியாக, வ்யாதீநக்ஷி னேக்கிறோம்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ உயர்ந்த முத்துக்களால் இழைக்கப்பட்டு, நல்ல வெளுப்பாயிருக்கிறாய், பெருமாள் உன்மேபேரில் திருவடியை வைத்துக்கொண்டிருக்கிறார். உயர்ந்த கிரீடங்களை வைத்துக்கொண்டிருக்கிற பிரும்மா முதலான தேவதைகளுடைய தலைகளால் கொண்டாடப்படுகிறாய், ஆனதால் நீ ஆதிசேஷன் திருமேனிபோலிருக்கிறாய். ஆதிசேஷன் வெளுப்பு. அவர் திருமேனியில் பெருமாள் எழுந்தருளி யிருக்கிறார். அவருடைய ஆயிரம் தலைகளிலும் ரத்நங்களிருக்கின்றன. ஆழ்வார்எழுந்தருளியிருந்தஇருப்பைப்பார்த்தால்திருவனந்தாழ்வானாகவேசொல்லலாம்.

(௬௨௫) ஸ்ரீரங்கநாதபாதாவநி மௌக்திகைஸ்தே ஜ்யோத்ஸ்நாவ்யாப்தம்
ஜகதிதம் திவாபி । தேவாநாம் ந ஜஹதி யேந ஹஸ்தராஜீவகோஶா: ‖

ஸ்ரீரங்கநாத-பெருமாளுடைய, பாதாவநி-திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே, தே-உன்னுடைய, மௌக்திகை:-முத்துக்களாலே, இதம்-இந்த, ஜகத்-லோகமானது, திவாபி-பகலில்கூட ஜ்யோத்ஸ்நாவ்யாப்தம்-நிலாவினால் ரொம்பியிருக்கிறது, யேந-யாதொரு காரணத்தினால், தேவாநாம்-தேவதைகளுடைய, ஹஸ்தராஜீவகோஶா:-கைகூப்பலாகிற, தாமரை மொட்டுகள், ..., ந ஜஹதி-அடையவில்லையோ.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்த வெளுப்பான முத்துக்களுடைய காந்தியால், இந்த லோகம் பகலில் கூட நிலாவாக இருக்கிறது. அது எதினால் தெரிகிறது என்றால், தேவதைகளுடைய கைகூப்பலாகிற தாமரை மொட்டுக்கள் பகலில் கூட மலருவது இல்லை. அதாவது பாதுகையை ஸேவிக்கிறபோது தேவதைகள் கைகளைக் கூப்பிக்கொண்டு இருக்கிறார்கள். தன்னால் வருகிறது ஒன்று, பிள்ளை பெண்டாட்டிகளால் வருகிறது ஒன்று, தைவத்தினால் அதாவது மழை காற்றுகளினால் வருவது ஒன்று—ஆக மூன்று விதங்களான வருத்தங்களாகிற மிகவும் கடு

மையான நெருப்பில் அகப்பட்டுக்கொண்டு ஸம்ஸாரத்திலே தபிக்கிற பிராணிகள் ஆழ்வாருடைய முத்துக்கள் போன்ற பாசுரங்களின் கருத்தை அறிகிறபோது, பூர்ண சந்திரனுடைய நிலவினால் போல் குளிர்ந்து போகின்றனர். அப்போது எல்லையில்லாத பக்தியினால் கையைப் பிரிக்காமல் கூப்பிக்கொண்டே யிருக்கிறார்கள். ஸகலதேவதைகளுமுள்பட அப்படி யிருக்கிறார்கள். (13)

(கூஉச) ஸம்ஶ்ரிதாநாமநவாம் விஶுத்திம் த்ராஸவ்ய
பாயம் ச விதந்வதீ த்வம் । ஸாயுஜ்யஸௌபாக்யவதீ
ஸ்வகீயைர்மௌக்திகைஶ்ஶௌரிபதபாதுகே ந: ॥

ஶௌரே-பெருமாளுடைய, பாதுகே-வாராய் பாதுகையே! ஸம்ஶ்ரிதாநாம்-உன்னை அடைந்திருக்கிற, ந:-எங்களுக்கு, அநவாம்-குற்றமில்லாத, விஶுத்திம், தோஷமில்லாமையை, வெளுப்பை, த்ராஸ-பயத்தினுடைய, (ரத்னங்களுக்கு ஏற்பட்ட தோஷங்களுடைய) வ்யபாயம் ச-இல்லாமையையும், விதந்வதீ-உண்டு பண்ணுகிற, த்வம்-நீ, ஸ்வகீயை:-தன்னுடையவைகளான, மௌக்திகை:-முத்துக்களோடே, ஸாயுஜ்யம்-ஒரேமாதிரியான ஸௌகாநுபவத்தை, ஸௌபாக்யவதீ-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பக்தியோடு உன்னை அடைந்தவர்களை உன்னிடத்தில் இருக்கும் முத்துக்கள் போல் சுத்தங்களாகவும், த்ராஸமில்லாமலும் பண்ணிவிடுகிறாய். அதாவது ஒருவிதமான தோஷமில்லாதவர்களாகவும், அதினால் ஒருவிதமான பயமும் இல்லாதவர்களாகவும் பண்ணுகிறாய். சுத்தி என்றால் வெளுப்புக்கும் பெயர். த்ராஸமென்றால் ரத்நங்களுக்கு ஏற்பட்ட தோஷங்களுக்கும் பெயர். பெருமாள் தன்னை அடைந்தவர்களைத் தன்னைப்போல் பண்ணுகிறார். ஆசார்யர்களும் தன்னை அடைந்தவர்களைத் தன்னைப்போல் பண்ணுகிறார்கள். முத்துக்கள் என்றால் பாசுரங்கள். அவைகள் குற்றமில்லாமலும் பயமில்லாமலும் இருக்கின்றன. தன்னை யறிந்தால் எல்லாருக்கும் எல்லா ஸுகங்களையும் கொடுக்கின்றன. அதுபோல், ஆழ்வார்களுடைய பக்தர்களுமிருக்கிறார்கள். (14)

(௩௨௫) ஸம்வேத்மி பாதுகே மௌக்திகானாம்
கீர்ணாம் ப்ரஸ்ருதை: கிரணப்ரரோஹை: |
யாத்ரோத்ஸவார்த்தம் விஹிதாம் முராரே:
ஸம்பூர்ணஸாங்குரபாலிகாம் த்வாம் ||

பாதுகே-வாராய் பாதுகையே! மௌக்திகாநாம்-முத்துக் களுடைய, ப்ரஸ்ருதை:-நீட்டிக்கொண்டிருக்கிற, கிரண-காந்தி களாகிற, ப்ரரோஹை:-முளைகளாலே, கீர்ணாம்-வ்யாபிக்கப் பட்டிருக்கிற அதாவது ரொம்பி இருக்கிற, த்வாம்-உன்னை, முராரே:-பெருமாளுடைய, யாத்ரா-வெளியில்எழுந்தருளுகிறதாகிற, உத்ஸவார்த்தம்-கல்யாணத்திற்காக, விஹிதாம்-ஏற்படுத்தப்பட்டி ருக்கிற, ஸம்பூர்ணாம்-குறைவில்லாமலிருக்கிற, ஸாங்குரபாலி காம்-முளைகளோடுகூடின பாலிகை என்கிற பாத்திரமாக, ஸம்வே த்மி-அறிகிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேல் முத்துக்கள் இழை த்திருக்கின்றன. நீட்டிக்கொண்டிருக்கிற அவைகளுடைய வெ ளுப்பான காந்தியைப் பார்க்கும்பொழுது, பெருமாள் வெளியில் எழுந்தருளுகிறதாகிற கல்யாணத்திற்காக ஏற்படுத்தப்பட்ட நிறைந்த முளைகளோடு கூடின பாலிகைமாதிரி இருக்கிறது. லோகத்தில் ஸம்ஸாரிகள் வீடுகளில்|கல்யாணம் பண்ண ஆரம்பிக் கும் போது ஒருபாத்திரத்தில் நெல் உளுந்து பயிறு முதலான திரவியங்களை விதைக்கிறார்கள். அது நாலுநாளில் முளைத்து பயி ராகஆகிறது வழக்கம். நல்ல ஆசாரியாளுடைய அனுக்கிரஹமும், கடாக்ஷமும் ஒருவனிடத்தில் இருந்தால், அவர்களுக்கு பெருமா ள் ப்ரத்யக்ஷமாகி விடுகிறார். (15)

(௩௨௬) ரிசஸ்வஹேதும் ஸகுஹஸ்ய ஜந்தோ:
ஸ்வாதோஸ்மிதஸ்யாத்மஸமஸ்ததோஷ: |
முக்தாமயூகைர் வ்யவஹாரலக்ஷ்யாம்
பாஷாம் ரங்கேஶ்வர பாதுகே த்வம் ||

ரங்கேஶ்வர-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுகே-வாராய் பாது கையே! த்வம்-நீ, முக்தா-முத்துக்களுடைய, மயூகை:-காந்தி

களாலே, ஸர்வஸ்ய-எல்லா, ஜந்தோ:-ப்ராணிகளுக்கும், ஶிவங்க ஹேதும்-மங்களத்துக்குக் காரணமாயும், (சிவனாய் இருக்குமை யை உண்டு பண்ணுகிறதாயும்) அஸங்க்யேய:-கணக்கில்லாமலி ருக்கிற, ஹரிநீலரத்னப்ரகாஶ:-உயர்ந்த வெள்ளங்களாலே, ப்ரவாஹம்-ப்ரேம்பி இன்பமாக இருக்கிற, அந்யாம் ஸ்ரவந்தீம்-இப்போது இருக்கிற கங்கையைக் காட்டிலும் வேறு கங் கையை, ப்ரஸூஷே-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்துக்கள் இழைத் திருக்கின்றன. அவைகளினுடைய காந்திகளைப்பார்த்தால், அளவு இல்லாத கங்காப்ரவாஹம்போல் இருக்கிறது. அவைகளைப்பார் த்தால் நீ அநேக கங்கைகளை உண்டுபண்ணுகிறாய் போல் இருக்கி றது. முன்னே ஒருஸமயத்தில் பெருமாள் த்ரிவிக்கிரமாவதாரம் பண்ணினபோது பூமியை எல்லாம் ஒருஅடியால் அளந்து ஆகா சத்தை எல்லாம் ஒருஅடியால் அளக்கும்போது, திருவடி பிரும் மலோகத்திற்குப் போயிற்றாம். அப்போது பிரும்மா திருவடியில் தீர்த்தம் சேர்த்தாராம். அதுகங்கை என்கிற ஆறாக ஆய்விட்ட தாம். அதைச்சிவன் தலையில் வைத்துக்கொண்டாராம். அதினால் அவர் சிவனாக ஆனாராம்.(அதாவது விசேஷ க்ஷேமங்களை அடைந் தாராம்.) அப்போது ஒருவர் சிவனானார். அந்த கங்கை ஏழாகப் பிரி ந்தது. இப்போது நீ-எல்லாரையும் சிவனாகப் பண்ணுகிறதாயும், எல்லையில்லாத பிரிவுள்ளதாயும், அந்தகங்கையைக் காட்டிலும் அநேக விதத்தினால் உயர்ந்ததுமான கங்கையை உண்டு பண்ணுகி றாய்போல. ஆழ்வாருடைய ஒவ்வொரு பாசுரத்தின் கருத்து கங்காப்ரவாஹம் போல் இருக்கிறது. ஸகலபாபத்தையும் போக்கி ஸகலக்ஷேமத்தையும் கொடுக்கிறது. (16)

(௧௨௭) ரங்கே ஶயாநஸ்ய பதாவநி த்வாம் நாராயணஸ்ய
விந்யாஸவிஶேஷவிருத்தாம் । பரிஶ்ரமநிவர்த்திக
ஜாமதக்ந்யஸ்யாம் த்ருதிஸம்விந்நாம் த்ருதியந்தி பரார்த்தாம்॥

பதாவநி-பாதுகையே, ரங்கேஶயாநஸ்ய-ரங்கவிமா நத்தில், சயனித்துக்கொண்டிருக்கிற, நாராயணஸ்ய-பெருமா

ளாகிற அழகு ஸமுத்திரத்தினுடைய, ஸவிதே-ஸமீபத்திலே, நிஷண்ணா-இருக்கிறவளாயும், வரிஷ்ட-விளங்காநின்றிருக்கிற, மௌக்திக-முத்துக்களுடைய, ஜால-கூட்டத்தினாலே, ஸ்ப்ருஶ்யா-பார்க்கத்தகுந்தவளாயுமிருக்கிற, த்வாம்-உன்னை, புதாஃ-கவிகள் ... முத்து உண்டாகிற காலத்தில் பிளந்திருக்கிற, முக்தா-முத்துச் சிப்பியாக, ப்ரதியந்தி-நினைக்கிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் நிரைய முத்துக்கள் இழைத்திருக்கின்றன. நீங்கள் இரண்டுபேரும் ஒரேமாதிரியாக இருக்கிறீர்கள். உங்களைப் பார்த்தால் முத்து பக்குவமான காலத்தில் வெடித்தமுத்துச் சிப்பிபோல் இருக்கிறது. குளங்களில் ஒரேமாதிரி இரண்டுபாகமுள்ள நத்தான் கூடு என்று ஒன்றிருக்கும். அதற்குள் பூச்சி இருக்கும். ஏதோ ஒருகாரணத்தால் அந்தப் பூச்சி செத்துப்போய்விட்டால் அது இரண்டாய் பிளந்து போய் விடும். இதேமாதிரி ஸமுத்திரத்தில் இருக்கிறது. அவைகளுக்கு சிப்பி என்றுபெயர். அவைகள் நடுவில் முத்துக்கள் உண்டாகின்றன. முத்து முத்தின ஸமயத்தில் வெடிக்கிறது. நீ அந்த முத்துச்சிப்பிபோல் இருக்கிறாய். அது ஸமுத்திரத்தில் இருக்கும். நீ பெருமாளாகிற அழகு ஸமுத்திரத்தின் கிட்ட இருக்கிறாய். பெருமாளை உள்ளபடி பார்த்ததால் அவரிடத்தில் எல்லை இல்லாத பக்தி உள்ள ஆழ்வாருடைய பாசுரங்களைப் பார்த்தால், உயர்ந்த முத்துக்கள் போலிருக்கின்றன. (17)

(௬௨௮) அவைமி ரங்கப்ருத்வபாதரக்ஷே முக்தாமயானி
த்வயி நிஸ்துலானி | ததேவ கல்பாந்தர தாரகாணாம் உத்பாதி பீஜாநி ஜகத்யாதா ||

ரங்கப்ருத-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதரக்ஷே-வாராய் பாதுகையே! த்வயி-உன்னிடத்திலிருக்கிற, நிஸ்துலானி-ஸமானமில்லாமலிருக்கிற, முக்தாமயானி-முத்துக்களை, ஜகத்யாதா-லோகங்களை உண்டுபண்ணுகிறவராகஇருக்கிற, ததேவ-அந்தஸ்ரீரங்கநாதனாலேயே, உத்பாதி-விரைக்கப்பட்டிருக்கிற, கல்பாந்தர-அடுத்த கல்பத்தில் வரப்போகிற, தாரகாணாம்-நக்ஷத்திரங்களுக்கு, பீஜாநி-விரைகளாக, அவைமி-அறிகிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேரில் இழைத்து இருக்கின்ற உயர்ந்த முத்துக்களைப்பார்த்தால், லோகத்தை எல்லாம் உண்டு பண்ணுகிற பெருமாளால்அடுத்த கல்பத்திற்கு வேண்டிய நக்ஷத்திரங்களுக்காக நாத்துவிடப்பட்டிருக்கிறதுபோலிருக்கிறது. அதாவது முத்துக்கள் நக்ஷத்திரங்கள் போலிருக்கின்றன. ரொம்பதூரம் கீழே இருக்கிற ஜனங்களுக்குக்கூட நக்ஷத்திரங்கள் நன்றாய் ப்ரகாசிப்பதுபோல் ரொம்ப மட்டமான ஜனங்களுக்குக்கூட முத்துக்கள் போன்ற ஆழ்வாருடைய பாசுரங்களின்கருத்து நன்றாகத்தெரிகிறது. (18)

(கூஉக) விக்ராந்தமாஸீத் க்ஷணமந்தரிக்ஷம்
மாயாவிநா ஸமவதா மணிபாதரக்ஷே ।
வ்யோமாபகாவிபுலபல்வலதர்சநீயை
முக்தாபலைஸ்தவ ஸௌம்யை: த்வைதீக்ருததாரம் ॥

மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே, மாயாவிநா-ஆச்சரியமான காரியங்களைச் செய்கிற, அதாவது சின்ன குழைந்தையாக இருந்து லோகங்கள் எல்லாம் ரொம்பும்படி வளர்ந்தவராக இருக்கிற, அதாவது வாமனனாக இருந்து த்ரிவிக்கிரமாவதாரம் பண்ணி இருக்கிற, ஸமவதா-பெருமாளாலே, விக்ராந்தம்-அளக்கப்பட்டிருக்கிற, அந்தரிக்ஷம்-ஆகாசமானது, க்ஷணம்-கொஞ்சகாலம், வ்யோமாபகா-ஆகாசகங்கையினுடைய, விபுல-பெரியதாக இருக்கிற, பல்வல-தண்ணிக் கொப்பளங்கள்போல், தர்சநீயை:-பார்க்கத்தக்கவைகளாயிருக்கிற, ஸௌம்யை:-க்ஷேமத்தைப்பண்ணுகிறவைகளான—தவ-உன்னுடைய, முக்தாபலை: முத்துக்களாலே, த்வைதீக்ருத-இரண்டு பங்காகப் பண்ணப்பட்டிருக்கிற, தாரம்-நக்ஷத்திரத்தை உடைத்தானதாக, ஆஸீத்-ஆயிற்று.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் ஒரு ஸமயத்தில் த்ரிவிக்ரமாவதாரம் பண்ணி பூமியை ஒரு திருவடியால் அளந்து ஆகாசத்தை ஒரு திருவடியால் அளக்கும்போது திருவடியோடு நீயும் ஆகாசத்திற்குப்போனாய். அப்போது ஆகாசத்தில் நக்ஷத்

ரங்கள் அபாரமாக இருந்தன. உன் பேரில் இழைத்திருக்கிற ரொம்ப பெரிதானமுத்துக்கள் நக்ஷத்திரங்கள்போல் விளங்கிற்று. அந்த காலத்தில் உண்டான கங்கையினுடைய கொப்பளங்கள் நக்ஷத்திரங்கள்போல் இருந்தன. ஆகாசத்தில் பெருமாள் திருவடி இருக்கிற சற்று நாழிவரையில் ஒன்றுக்கு மூன்று பங்கு நக்ஷத்திரங்கள் இருக்கின்றன போலிருந்தது. (19)

(கஉ0) ஸ்ரீவிஹாரரஸிகேந ஸௌரேஸ்த்வம்
ரக்ஷாவிதௌ ஸமதயா ஜகதாம் நியுக்தா ।
ஸத்வம் ததர்ஹமிவ தர்சயஸி ப்ரபூதம்
முக்தாமயூக நிகரேண விஸ்ருமரேண ॥

ஸௌரே-வாராய் பாதுகையே, ஸ்ரீ-மஹாலெக்ஷ்மியோடே, விஹார-விளையாட்டிலே, ரஸிகேந-ஆசைஉள்ளவராயிருக்கிற, ஸமதா-பெருமாளாலே, ஜகதாம்-லோகத்தினுடைய, ரக்ஷாவிதௌ-காப்பாற்றுகிற வியாபாரத்திலே, நியுக்தா-ஏவப்பட்டிருக்கிற, த்வம்-நீ, விஸ்ருமரேண-நாலுபக்கமும் பரவுகிற, முக்தாமயூக-முத்துக்களின் காந்தியினுடைய, நிகரேண-கூட்டத்திலே, ததர்ஹம்-அந்தக்காப்பாற்றுவதற்குத் தகுந்ததாக இருக்கிற, ப்ரபூதம்-ரொம்ப பெரியதாக இருக்கிற, ஸத்வம்-ஸத்வ குணத்தை, தர்சயஸீவ-காண்பிக்கிறாய்போலே,

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்திகள் அபாரமாய் நாலுபக்கங்களிலும் பரவுகின்றன. அவைகளைப்பார்த்தால், லோகத்தை எல்லாம் காப்பாற்றத்தகுந்ததான எல்லையில்லாத ஸத்வகுணத்தை எல்லா லோகத்திற்கும் காண்பிக்கிறாய் போலிருக்கிறது. எதற்கென்றால் பெருமாள் லக்ஷ்மியோடு விளையாடவேணுமென்று ஆசைப்பட்டுக்கொண்டு ஸகல லோகத்தினுடைய காப்பாற்றுதலை உன்னிடத்தில் வைத்துவிட்டார். லோகத்தைஎல்லாம் காப்பாற்றுவதற்கு உயர்ந்த ஸத்வகுணம் வேணுமே. அது பாதுகையிடமிருக்கிறதா என்று;ஜனங்களுக்கு உண்டாகும் ஸந்தேஹத்தைப் போக்குவதற்காக, உயர்ந்த ஸத்வகுணமுடைய

ஆழ்வாரை உலகத்தைக் காப்பாற்றுவதற்கு ஏற்படுத்தி, பெருமாள் கவலையற்றிருக்கிறார். ஆழ்வாருடைய பாசுரங்களை ஸேவிக்கும்போது, அவரிடத்திலிருக்கும் ஸத்வ குணத்திற்கு எல்லை இல்லை என்று தோன்றுகிறது. லோகங்களைக்காப்பாற்றுவதற்கு தயை, பொறுமை, ஒழிவு, வணக்கம், ஒரு ஸங்கதியைப் பற்றின தீர்மானம், தெய்வபக்தி இவை முதலான நல்ல குணங்கள் வேணும். இந்த குணங்களெல்லாம் ஸத்வகுணத்தினால்தான் உண்டாகும். ஒருவரைப் பார்த்தாலும், அவர் வார்த்தையைக் கேட்டாலும் அவரை நல்லவரென்று தெரிந்து கொள்ளலாம். ஆழ்வாருடைய பாசுரங்களை ஸேவிக்கும்போதே அவர் நல்லவரென்று எல்லாருக்கும் தோன்றுகிறது.

(கஉ௧) பாதாவனீம் ஸபதீம் ப்ரதிபத்யமாநே
ஸ்ரீரங்கசந்த்ரமஸி ஸம்ஹ்ருதமௌக்திகஸ்ரீ: ।
அங்கீகரோஷி வரணாவநி காந்திமுக்ராம்
உந்நித்ரகைரவவதீ கைரவதீ கவ்யும் ॥

வரணாவநி-வாராய் பாதுகையே, ஸம்ஹ்ருத-அடையப்பட்டிருக்கிற, மௌக்திக-முத்துக்களாலே, ஸ்ரீ:-அழகை உடைத்தாயிருக்கிற,ஸா-நீ, ஸ்ரீரங்கசந்த்ரமஸி-ஸ்ரீரங்கவிமாநத்திற்குச் சந்திரன் போலிருக்கிற பெருமாளானவர், பாத-திருவடியினுடைய, அவநீம்-வைக்கிறதாலே, (பாதாவநீம்-கிரணங்களைக் கொடுக்கிறதாலே,) ஸபதீம்-உன்னை, ப்ரதிபத்யமாநே-அடைகிற போது, உந்நித்ர-மலர்ந்திருக்கிற, கைரவா-ஆம்பல்புஷ்பத்தை உடைத்தாயிருக்கிற, கைரவதீவ-ஆம்பல் ஓடைபோல, உக்ராம்-உயர்ந்ததாக இருக்கிற, காந்திம்-அழகை, அங்கீகரோஷி-அடைகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளினால் மிகவும் பளபளப்பாக இருக்கிறாய் பெருமாள் உன்னைத் திருவடியில் சாத்திக்கொள்ளும்போது நிலா புறப்பட்ட காலத்தில் மலர்ந்த ஆம்பல் பூக்கள் நிறைந்த ஆம்பல் ஓடைபோலிருக்கிறாய், ஆழ்வார் எம்பெருமானைப்பற்றி பாசுரங்

கள் பாடும்போது பெருமாள் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து அவருக்கு ஸேவை ஸாதிக்கிறார். அப்போது ஆழ்வாருடைய உடம்பு இந்திரியங்கள் எல்லாம் மலர்ந்த புஷ்பங்கள்போலிருக்கின்றன. ஆம்பல் புஷ்பம் நிலா இல்லாவிட்டால் மூடுகிறது. நிலா பட்டால் மலருகிறது. அதுபோல பெருமாளை அனுபவிக்காமல் போனால், ஆழ்வார் வருத்தப்படுகிறார். அனுபவித்தால் எல்லையில்லாத ஸந்தோஷத்தை அடைகிறார். அறிவில்லாத பூக்கள் தன்னடையாக மலருவதுபோல், ஜீவன் பெருமாளை அனுபவிக்கும்போது ஸந்தோஷப்பட வேணும். நம்போன்றவர்கள் "நாராயணா, கிருஷ்ணா" என்று சொன்னாலே பெரிது. (21)

(௬௱௨) த்ரய்யந்த ஸௌத தவள ஸுதாயிதேந
ஜ்யோத்ஸ்நா விகல்பித ருசா மணிபாதரக்ஷே |
முக்தாமயீ முரபித: பதஸரோஜபாஜாம்
வர்ணேந தே ஹரஸீவ ஸதாமவர்ணம் ||

மணிபாதரக்ஷே-வராராய் கல்லிழைத்த பாதுகையே, முக்தாமயீ-முத்துக்களால் ரொம்பி இருக்கிற, த்வம்-நீ, த்ரய்யந்த-உபநிஷத்துக்களாகிற, ஸௌத-உப்பரிகைக்கு, தவள ஸுதாயிதேந-வெள்ளைச்சுண்ணும்புபோலிருக்கிற, ஜ்யோத்ஸ்நா விகல்பித-நிலாப் போல் இருக்கிற, ருசா-காந்தியை உடைத்தாயிருக்கிற, தே-உன்னுடைய, வர்ணேந-வெள்ளை வர்ணத்தினாலே, முரபித:-பெருமானுடைய, பத ஸரோஜபாஜாம்-தாமரைப்பூப் போலிருக்கிற திருவடியை அடைந்தவர்களுடைய (அதாவது பெருமாளிடத்தில் பக்தியுள்ளவர்களுடைய) அவர்ணம்-அழுக்கை, (கெட்டபெயரை) ஹரஸீவ-போக்கடிக்கிறாய்போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கும் நல்லமுத்துக்களுடைய காந்தி நிலாவைப்போலிருக்கிறது. அதைப்பார்த்தால், உபநிஷத்துக்களாகிற உப்பரிகைகளுக்கு வெள்ளை வைக்கத்தகுந்த சுண்ணும்பு போலிருக்கிறது. அந்தக்காந்தி பெருமாளை ஸேவிக்கிறவர்கள் மேலே படுகிறது. அப்போது

அவர்களுடைய எல்லாக்கெடுதல்களையும் போக்குகிறது. ஆழ்வார் திருவாய்மொழியைப் பாடாவிட்டால் ஒருவருக்கும் உபநிஷத்தினுடைய உண்மையான அர்த்தம் தெரியாது. அதனால் உபநிஷத்துக்கள் இருக்கிற இடம் தெரியாமல் போய்விடும். ஆகையால் ஆழ்வார் பாசுரங்கள் உபநிஷத்துக்களாகிற மாடிக்கு வெள்ளை வைக்கத்தகுந்த சங்கு வெள்ளை போலிருக்கிறது. அவைகள் ஜனங்களுக்கு நிலவு போல் குளிர்ந்து எல்லாஸங்கதிகளையும் தெரியப்படுத்துகிறது. பெருமாளுடைய பக்தர்களுக்கு அந்தப்பாசுரங்களை ஸேவிப்பதால் எல்லா துக்கங்களும் அடியோடு போகிறது. இந்தலோகத்திலும் ஒருவிதக் குறைவுமில்லை. மோக்ஷமும் கிடைக்கிறது. ஆனால் உண்மையான கருத்தை அறிவது வருத்தம். எப்படிச்சொன்னாலும் நல்லதுதான் வீண்போகாது. நல்ல சொல்லினால் கெட்டசொல்லைப்போக்கடிக்கிறாய் என்று ஒரு பொருள் ஏற்படுகிறது.

(கூகூ) வைகுண்டபாத நகவாஸநயேவ நித்யம்
பாதாவநி ஸ்ருஜதி தவ மௌக்திகாநி ।
ஸந்துஷ்டதாபஶமநாய ஸமாஶ்ரிதாநாம்
ஶ்லோகஸம்ஜ்ஞவிஷயாம் ஸுதயா ப்ரவாஹம் ॥

பாதாவநி-பாதுகையே, தவ-உன்னுடைய, மௌக்திகாநி-முத்துக்கள், வைகுண்ட-பெருமாளுடைய, பாத-திருவடிகளுடைய, நக-நகங்களுடைய, வாஸநயேவ-பழக்கத்தினாலே போல, ஸமாஶ்ரிதாநாம்-தன்னை அடைந்தவர்களுடைய, ஸந்துஷ்ட-ஒருவராலும் போக்கப்படாமலிருக்கிற, தாபஶமநாய-தாபத்தைப் போக்குவதற்காக, ஶ்லோக-பிரகாசத்தினுடைய, ஸம்ஜ்ஞவிஷயா-கூட்டமென்கிற வியாஜத்தினாலே, நித்யம்-எப்பொழுதும், ஸுதயா ப்ரவாஹம்-அமிருத வெள்ளத்தை, ஸ்ருஜதி-உண்டு பண்ணுகின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன் பேரில் உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தியைப் பார்த்தால், உன்னை வந்தடைந்தவர்களுடைய எல்லை இல்லாத தாபத்தை ப்போக்

குவதற்காக உன் யஜமானனான பெருமாளுடைய திருவடியானது கங்கை முதலான அமிருத வெள்ளத்தை உண்டு பண்ணினது போல், அந்தத்திருவடியின் பழக்கத்தினால் உன் முத்துக்களும் எப்போதும் உயர்ந்த அமுதவெள்ளத்தை உண்டுபண்ணுவது போலிருக்கின்றன. ஆழ்வாராசாரியர்கள் திருவாய்மொழி முதலான ஆச்சரியமான கிரந்தங்களை ஸாதித்திருக்கிறார்கள். 'ஒவ்வொன்று தானே யமையாதோ' என்கிறபடி அவைகளின் ஒவ்வொரு வார்த்தையே எல்லையில்லாத ஸம்ஸார தாபங்களைப் போக்கக்கூடியது. ஸ்ரீபெருமாளும் ஆசாரியர்களும் அமிருதமான வார்த்தைகளைச் சொல்லி, எல்லாரையும் காப்பாற்றுகிறார்கள். ஆழ்வார் பாசுரத்தின் கருத்துக்கள் அமிருதமாக இருக்கின்றன. முத்து என்றால் பாசுரம். காந்தி என்பது கருத்து. (23)

(௨௪) ராமாநுவ்ருத்த்யா ஜடிலஸ்ய பரதஸ்ய மௌலௌ
ரங்காதிராஜபதபத்மரக்ஷிணி த்வம் ।
ஏகாதபத்ரஜகதீத்ரயா த்விதீயம்
முக்தாமயூகை: க்ருதவதீ நவமாதபத்ரம் ॥

ரங்காதிராஜ-ஸ்ரீரங்கநாதனுடைய, பதபத்மரக்ஷிணி-தாமரைப் பூபோலிருக்கிற திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, ஏகாதபத்ர-ஒற்றைக் குடையுள்ளதாகப் பண்ணப்பட்டிருக்கிற, ஜகத்த்ரயா-மூன்று உலகங்களை யுடைய, த்வம்-நீ, ராமாநுவ்ருத்தி-ராமனைப்போலிருப்பதாலே, ஜடிலஸ்ய-ஜடையுள்ளதாக இருக்கிற, பரதஸ்ய-பரதனுடைய, மௌலௌ-தலையிலே, முக்தாமயூகை:-முத்துக்களுடைய காந்திகளாலே, நவம்-புதிதாயிருக்கிற, த்விதீயம்-இரண்டாவதாகஇருக்கிற, ஆதபத்ரம்-வெள்ளைக்குடையை, க்ருதவதீ-பண்ணினாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பரதர் ஸ்ரீராமன் காட்டுக்கு எழுந்தருளினதைக் கேட்டு, மிகவும் வருத்தப் பட்டு, ஸ்ரீராமனைத் திரும்பவும் எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்போது ஸ்ரீராமன் அவருக்கு உன்னைக் கொடுத்தார். பரதர் உன்

லேச் சிரஸில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, ஸ்ரீராமனுக்குப் பிடிக்கிற வெள்ளைக் குடையை உனக்குப் பிடித்து, உன்னை எழுந்தருளப் பண்ணினார். உன்பேரில் ஏராளமான உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளினுடைய சக்கிரமான அந்தக் காந்திகளைப் பார்க்கும்போது, பரதருக்கு ஏற்கனவே பிடித்த வெள்ளைக் குடை ஒன்று. காந்தி ஒரு குடை. ஆக இரண்டு குடைகள் பிடித்தது போலிருந்தது. ஆழ்வார் பாசுரத்தின் கருத்தை உள்ளபடி அறிந்தவர்களுக்கு உலகத்தார் பண்ணுகிற மரியாதை பெரிதல்ல. அந்த அறிவே அவர்களுக்குப் பெரிய மரியாதை. (24)

(௱௨௫) பாதாவநி ஸ்புடருசிர்மதுபூரஹாரா
சாரு: விஸ்புரதி மௌக்திகபங்க்திரேஷா |
ரூடஸ்ய ரங்கபதிபாதஸரோஜமத்யே
ஸேவாத்நஸ்ஸந்தாநஶாகிந இவ புஷ்பபங்க்தி: ||

பாதாவநி-வாராய் பாதுகையே, ஸ்புட-விளங்குகிற, ருசி-காந்திகளாகிற, மதுபூரஹா-தேன் வெள்ளத்தை உடைத்தாயும், சாரு-அழகாயுமிருக்கிற, தே-உன்னுடைய, மௌக்திகபங்க்தி:-முத்துக்களின் வரிசையானது, ரங்கபதி-ஸ்ரீ ரங்கநாதனுடைய, பாதஸரோஜ-தாமரைப் பூப்போலிருக்கிற திருவடியினுடைய, மத்யே-நடுவிலே, ரூடஸ்ய-முளைத்திருக்கிற, ஸேவாதநோ:-ஸேவாரூபமாயிருக்கிற, ஸந்தாநஶாகிந:-கல்பக விருக்ஷத்தினுடைய, புஷ்பபங்க்திரிவ-புஷ்பவரிசைபோல, விஸ்புரதி-விளங்குகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன் பேரில் முத்துக்கள் இழைத்திருக்கிறதைப் பார்த்தால், பெருமாளுடைய உள்ளங்காலிலே கோடு ரூபமாக கல்பகமரம் இருக்கிறது. அதினுடைய பூக்களைப் போலிருக்கின்றன. முத்துக்களின் காந்தியைப் பார்த்தால், பூவிலிருக்கிற தேன் வெள்ளமாகப் பெருகுவதுபோலிருக்கிறது. ஆழ்வார் பாசுரங்கள் எப்பொழுதும் வாடாமல் தேனைப்பெருக்கிக்கொ

ண்டு, எல்லா பலன்களையும் கொடுக்கின்ற பூக்கள் போலிருக்கின்றன. பெருமாளுடைய திருவடிக் கோடு போலே ஆழ்வார். பாசுரங்கள் அதன் புஷ்பம் போலே. (25)

(௯௫௬) அதிசயிதை: பதநகேந்துபாஸா அதிமநோ
ஜ்ஞை: முக்தாம்ஶுபிர்முரஜிதோ மணிபாது
கே த்வம் | ஸ்வாபாவிகீம் ஸகலஜந்துஷு ஸார்வ
பௌமீம் ப்ராய: ப்ரஸத்திமநகாம் ப்ரகடீகரோஷி ॥

மணிபாதுகே-வாராய் கல்லிழைத்த பாதுகையே, த்வம்-நீ, முரஜித:-முரன் என்ற அஸுரனைக் கொன்ற பெருமாளுடைய, பத-திருவடிகளின் நக-நகங்களாகிற, இந்து-சந்திரன்களுடைய, பாஸா-காந்தியினாலே, அதிசயிதை:-அதிகமாகச் செய்யப்பட்டிருக்கிற, அதிமநோஜ்ஞை:-மிகவும் இன்பமாயிருக்கிற, முக்தாம்ஶுபி:-முத்துக்களுடைய காந்திகளாலே, ஸ்வாபாவிகீம்-ஸ்வபாவமாக ஏற்பட்டிருக்கிற, ஸார்வபௌமீம்-மிகவுமுயர்ந்ததாக இருக்கிற, அநகாம்-ஒருவிதக்குற்றமும் இல்லாமலிருக்கிற, ஸகலஜந்துஷு-எல்லா ப்ராணிகள் விஷயத்திலுமிருக்கிற, ப்ரஸத்திம்-அநுக்ரஹத்தை (அதாவது நன்றாக இருக்க வேணும் என்கிற நினைவை) ப்ரகடீகரோஷி-ப்ரகாசப் படுத்துகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலே உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்திகளுக்கு எல்லை இல்லை. அதோடு பெருமாள் திருவடியினுடைய நகத்தினுடைய காந்தியும் சேர்ந்து இன்னும் அதிகமாக இருக்கிறது. இதைப் பார்த்தால் எல்லாப் பிராணிகளிடத்திலும் உனக்கு ஸ்வபாவமாக ஏற்பட்டிருக்கிற உயர்ந்த அனுக்ரஹம் போல் இருக்கிறது. ஸ்ரீபெருமாளும் ஆசாரியாளும் எல்லாப் பிராணிகளும் ஸௌக்கியத்தை அடையவேணுமே என்று மிகவும் கவலைப் படுகிறார்கள். ஆழ்வாருடைய பாசுரங்களாலே ஆழ்வாருடைய கவலை தெரிகின்றது. (26)

(௯௫௭) நிஸ்ஸீமவ்ருஜிநம் ஹ்ருதயம் மதீயம்
நாத்யஸ்ய ரத்நஸமதாயிரோபவிஷ்ணு: |

ஜாதஸ்ப்ருஹேவ ஸஹஸா மணிபாதரக்ஷே
முக்தாம்ஶவஸ் ஸ்படிகஸௌதஸாம்யம் நயந்தி ॥

ஜாத: மணிபாதரக்ஷே-தாயாராக இருக்கிற கல்லிழைத்த பாதுகையே, தவ-உன்னுடைய, முக்தாம்ஶவ:-முத்துக்களுடைய காந்திகள், நிஸ்ஸீம-எல்லையில்லாமலிருக்கிற, மஹ:-தேஜஸ்ஸினாலே, ஶுப்ரம்-அழுக்கற்ற, மதீயம்-என்னுடைய, ஹ்ருதயம்-மனதை, ஶயிதோ:-படுத்துக்கொண்டிருக்கிற, ரங்கபதே:-ஸ்ரீ ரங்கநாதனுக்கு, ஸ்படிகஸௌத-ஸ்படிகத்தாலே செய்த உப்பரிகைக்கு ஸாம்யமானதாக இருப்பதை, ஸஹஸா-உடனே, நயந்தி-பண்ணுகின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேல் இழைத்திருக்கின்ற முத்துக்களுடைய காந்திகள் எல்லையில்லாத அழுக்குள்ள என்னுடைய மனதைஸ்படிகத்தாலே செய்த உப்பரிகையைப்போலேபண்ணுகின்றன. எதற்காக வென்றால், பெருமாளுக்கு என் மனதிலிருக்க வேணுமென்று மிகுந்த ஆவல் இருக்கிறது. அதற்காக. மனது எவ்வளவு கெட்டதாக இருந்தாலும் ஆழ்வார் பாசுரத்தின் கருத்தை உண்மையாக நல்ல ஆசாரியர்களைக் கொண்டு அறிந்தால், நன்றாய்த் தெளிந்து விடும். பிறகு அவர்கள் பகவானை நினைப்பார்கள். (27)

(கூஅ) ஶ்யாமா தநுஸ்ஸமவத: ஶ்ருதிவம்ஶதாரா
த்வம் ஸம்ஶ்ரிதா விமலமௌக்திகதர்ஶநீயா ।
ஸ்தாநே ததேததுசிதம் மணிபாதரக்ஷே
தோஷாம் க்ஷணதயதி வாஸிகசந்த்ரதீம் ந: ॥

மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே, ஶ்ருதிவம்ஶ-அடையப்பட்ட, தாரா-முத்துக்களை உடைத்தாயிருக்கிற (ப்ரணவத்தை உடைய) ஸமவத:-பெருமாளுடைய, தநு:-சரீரமானது, ஶ்யாமா-கருப்பாக இருக்கிறது, (ராத்திரியாக இருக்கிறது) விமல-அழுக்கில்லாமலிருக்கிற, மௌக்திக-முத்துக்களாலே, தர்ஶநீயா-பார்க்கத் தகுந்தவளாயிருக்கிற, த்வம்-நீ, சந்த்ரிகா-நிலாவாக

இருக்கிறாய், தவேதத் - அந்த இந்த, உபயம் - இரண்டானது, ந: - எங்களுடைய, போதம் - அறிவாகிற, கைரவஷண்டம் - ஆம்பல் ஓடையை, க்ஷணாத் க்ஷணத்திற்குள், விகாஸம் - மலர்த்தியை, நயதி - அடையும்படி பண்ணுகிறது. ஸாதே - நியாயம்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலே முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்திகளோடுகூடிய உன்னைப்பார்த்தால்நிலாவைப் போலிருக்கிறது. நீர்கொண்டமேகம் போல் கருப்பான பெருமாள் ராத்திரி போலிருக்கிறார். பெருமாள் உன்னை சாத்திக் கொள்ளும்போது சந்திரனுடன் கூடிய ராத்திரி போலிருக்கிறது. நிலாவும் இராத்திரியும் சேர்ந்து என்னுடைய எண்ணமாகிற ஆம்பலோடையை நன்றாக மலர்த்தியது. ராத்திரியில் ஆம்பல் பூ மலருகிறது நியாயம் தானே. ஸ்ரீ ஆசாரியாளும் பெருமாளும் சேர்ந்து ஜீவன்களுக்கு நல்ல அறிவை உண்டு பண்ணுகிறார்கள். (28)

(௨௯) உதாரவ்ருத்தைர் மணிபாதரக்ஷே
முக்தாமயூகைர் ரகுநாதஸக்தை: ।
த்ரிதசாதிபேஷு நிஹிதா த்ரிதசேஸ்வராணாம்
தீர்த்தோதகை: ஸ்வயமிவ ஸ்ராபிதநவாந் ॥

மணிபாதரக்ஷே - ரத்னம் கல்லிழைத்த பாதுகையே, த்ரிதச - தேவதைகளுக்கு, ஈச்வராணாம் - ராஜாக்களான இந்திரன் முதலானவர்களுடைய, அபிஷேக - தலைகளிலே, நிஹித - வைக்கப்பட்டிருக்கிற, த்வம் - நீ, உதார - அதிகம் கெட்டியாக இருக்கிற, வ்ருத்தை: - பாபங்களை (சேற்றை)ப்போக்கடிக்கிற, முரஹித: - முரன் என்ற அஸுரனைக் கொன்ற பெருமாளுடைய, நக - நகங்களுடைய, ரச்மிபி: - காந்திகளோடுகூடிக்கொண்டு இருக்கிற, முக்தா - முத்துக்களுடைய, அம்சுபி: - காந்திகளாகிற, தீர்த்த - புண்ணிய தீர்த்தங்களுடைய, உதகை: - ஜலங்களினாலே, ஸ்ராபித: - அந்தந்தப் பட்டங்களை அபிஷேகிக்கிறவர்களாயிருக்கிற, தான் - அந்த இந்திரன் முதலானவர்களை, ஸ்வயம் - பட்டாபிஷேகம் பண்ணி வைக்கிறாய் போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன் பேரிலிருக்கின்ற முத்துக்களுடைய காந்திகளைப் பார்த்தால், ஜலம் மாதிரி இருக்கிறது. பிரும்மபட்டம் முதலான உயர்ந்த பட்டம் வேண்டுமென்று உன்னை ஜீவன்கள் தலையில் வைத்துக் கொள்ளுகிறார்கள். எல்லாப் பாபங்களையும் அழுக்குகளையும் போக்கடிக்கக் கூடிய— பெருமாளுடைய நக காந்தியோடு கலந்த-தெளிந்த வெள்ளம் போலிருக்கிற உன்னுடைய முத்துக் காந்திகளைப் பார்த்தால் உயர்ந்த புண்ணிய தீர்த்தத்தின் ஜலத்தைக் கொண்டு வந்து அவர்களுக்கு நீ பட்டாபிஷேகம் பண்ணி வைப்பது போலிருக்கிறது.

ஆழ்வாராசாரியர்களை ஒருவன் மிகுந்த பக்தியுடன் வணங்கினால் அவர்கள் ஸாதித்த பாசுரங்களின் உண்மையான கருத்து மனதில் பட்டு, எல்லாப் பாபங்களும் போய், நித்திய ஸூரிகள் பதவியை அடைவார்கள். (29)

(௩௰) ரங்கேசபாத நகசந்த்ர ஸுதா நிஷேகம்
ஸம்ப்ராப்ய ஸித்தகுளிகா இவ தாவகீநா:|
ஸம்ஸாரஸஜ்வர ஜுஷாம் மணிபாதரக்ஷே
ஸஞ்ஜீவநாய ஜகதாம் ப்ரபவந்தி முக்தா: ||

மணிபாதரக்ஷே-வைரங்கல்லிழைத்த பாதுகையே, தாவகீநா:-உன்னுடையதான, முக்தா:-முத்துக்கள், ஸித்தகுளிகா இவ தபஸினாலே உயர்ந்த பதவியை அடைந்தவர்களாலே செய்யப்பட்ட மாத்திரைகள்போல, ரங்கேச-ஸ்ரீரங்கநாதனுடைய, பாத-திருவடியினுடைய, நக-நகங்களாகிற, சந்த்ர-சந்திரன்களுடைய-ஸுதா-அமிருதத்தாலே, நிஷேகம்-பூச்சை, ஸம்ப்ராப்ய, அடைந்து, ஸம்ஸார-பிறக்கிறது செத்துப் போகிறதாகிற, ஸஜ்வர ஜுஷாம்-ஜ்வரத்தை அடைந்திருக்கிற, ஜகதாம்-உலகங்களுடைய, ஸஞ்ஜீவநாய-பிழைப்பு மூட்டுவதின் பொருட்டு, ப்ரபவந்தி-ஸமர்த்தமாகுகின்றன.

(கருத்து) உலகத்தில் ஸித்தபுருஷர்கள் உயர்ந்த மாத்திரைகளைப்பண்ணி, அவற்றைத்தேன் முதலியவைகளில் ஊரப் போட்டு

வைத்திருப்பார்கள். ஜ்வரம் முதலான வியாதி உள்ளவர்களுக்கு அவைகளைக்கொடுத்தால், அவர்கள் வியாதி நீங்கி, அதிகஸௌக்யத்தை அடைவார்கள். ஏ பாதுகையே! அது போல, உன் மேலிழைத்திருக்கும் முத்துக்கள் பெருமாளுடைய திருவடி நகங்களாகிற சந்திரனுடைய அமிருதத்தில் மூழ்கி, பிறப்பு சாவு என்கிற தீராததான ஜ்வரத்திலகப்பட்டு, தபித்துக்கொண்டிருக்கிறஜனங்களுக்குஎல்லா துக்கங்களையும் போக்கி, அளவில்லாதஸௌக்யத்தைக் கொடுக்கிறது. ஆழ்வார் பெருமாளுடைய திருவடிகளில் உண்மையான பக்தியுடன், அவைகளைப்பற்றி எவ்வளவோ பாசுரங்களைப்பாடி இருக்கிறார். ஒருவன் அவைகளில் ஒரு பாசுரத்தின் கருத்தை உண்மையாக அறிந்தாலும், அவன் இது முதல் என்றில்லாத நெடுநாளாக வந்த பிறப்பு சாவு முதலான அநேக துக்கங்களைப்போக்கி அளவு இல்லாத மோக்ஷ ஸௌக்யத்தை யடைவன். ஆழ்வாருடைய ஒவ்வொரு பாசுரமும் உயர்ந்த ஸித்தர்களாலேசெய்யப்பட்ட மாத்திரை போலிருக்கிறது. (30)

(௩௰௧) ஸாவேகரஸிகைர்மஹிதா பரதாத்யை:
த்ருப்தா மௌக்திகமிஷேண விகீர்ணபுஷ்பா
ரங்கேச்வரஸ்ய நியதம் த்வயி லாஸ்யபாஜோ
ரங்கஸ்தலீவ ருசிதா மணிபாதரக்ஷே த்வம் ||

மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! ஸாவேகரஸிகை:-மிகுந்த பக்தி உள்ளவர்களாயிருக்கிற, (அபிநயத்திலே மிகவும் கெட்டிக்காரர்களாய் இருக்கிற) பரதாத்யை:-பரதர் முதலானவர்களாலே (பரதசாஸ்திரம் தெரிந்தவர்களாலே, கூத்திலே கெட்டிக்காரர்களாலே) மஹிதா-அடையப்பட்டவளும், த்ருப்தா-இழைக்கப்பட்டிருக்கிற, மௌக்திகமிஷேண-முத்து என்கிற வியாஜத்தினாலே, விகீர்ண-இறைக்கப்பட்டிருக்கிற, புஷ்பா-பூக்களை உடையவளுமான, த்வம்-நீ, த்வயி-உன்னிடத்திலே, லாஸ்யபாஜ:-கூத்தை அடைந்திருக்கிற, அதாவது உன்னிடமிருந்து கூத்தாடிக் கொண்டிருக்கிற, ரங்கேச்வரஸ்ய-ஸ்ரீ ரங்கநாதனுக்கு, (கூத்திற்குத் தலைவனாயிருக்கிறவனு

க்கு) ஸ்தித-இன்பமாயிருக்கிற, ரஜஸ்வீவ-கூத்தாடுகிற இடம் போல, அஸி-ஆகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச் சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறபோது கூத்தாடிக் கொண்டுபோவதுபோலிருக்கிறது. அதாவது மிகுந்த ஸந்தோஷத்துடன் எழுந்தருளுகிறார். ஆகையால் உன்னைப் பார்த்தால் கூத்தை நடத்த ஏற்பட்ட இடம் போலிருக்கிறது. அந்த இடத்தில் அபிநய சாஸ்திரங்களில் மிகுந்த கெட்டிக்காரர்கள் இருப்பார்கள். கூத்து என்பது உயர்ந்த புத்தியினால் அறியத் தகுந்த சாஸ்திரம். அந்த இடத்தில் பூக்களை வாரி இறைத்திருப்பார்கள். அது போல் உன்னையும் மிகுந்த பக்தியுள்ள பரதர் முதலானவர்கள் அடைந்திருக்கிறார்கள். உன்மேல் இழைத்திருக்கும் முத்துக்களைப் பார்த்தால், பூக்களைப் போலிருக்கின்றன. ஸ்ரீ ரங்கநாதன் உன் பேரில் கூத்தாடுகிறார். பகவான் நல்லவர்களிடத்தில்தான் இருப்பன். மிகுந்த நல்லவர்களிடத்தில்தான் கூத்தாடுவன். அதாவது—மிகுந்த ஸந்தோஷத்தை அடைவன். பகவானுக்கு இருப்பதற்கே இடமில்லை. ஸந்தோஷம் எப்படிவரும்? அப்படியிருக்க, ஆழ்வார் முதலான ஆசாரியர்கள் அகப்பட்டார்கள். பகவான் அவர்களிடத்தில் மிகுந்த ஸந்தோஷத்துடன் வந்து கூத்தாடுகிறான். அவர்கள் அருளிச்செய்த—ஆச்சரியங்களான பாசுரங்களைப் பார்த்தால், அளவில்லாத உயர்ந்த வாஸனை முதலிய குணங்களுள்ள பூக்கள் போலிருக்கின்றன. அவர்களிடத்தில் மிகவும் பக்தியுள்ள நாதமுனிகள் முதலான சிஷ்யர்கள் அவர்களிட மிருந்துகொண்டு மிகுந்த ஸந்தோஷம் அடைகிறார்கள். (31)

(௱௩௨) மந்யே முகுந்தசரணாவநி மௌலிதேஶே
விந்யஸ்ய தேவி பவதீம் விநதஸ்ய ஶம்போ:।
ஆபாதயந்த்யபிக்ருதா: ப்ரதிபத்ததாரம்
பஶ்சாத் துஷாரகிரணம் தவ மௌக்திகௌகை:॥

முகுந்தசரணாவநி-பாதுகாய் பெருமானுடைய பாதுகையே! அபிக்ருதா:-அர்ச்சகர்கள், விநதஸ்ய-வணங்கியிருக்கிற, ஶம்போ:-சிவனுடைய, மௌலிதேஶே-தலையிலே, பவதீம்-

உன்னை, வித்யஸ்ய-வைத்து, மூர்த்நா-அவர் தலையிலிருக்கிற, தாராகிரணம்-சந்திரனை, தவ-உன்னுடைய, மௌக்திக-முத்துக்களுடைய, ஓகை:-கூட்டங்களாலே, வ்யாப்தம்-அடையப்பட்ட, தாரம்-நக்ஷத்திரங்களை உடைத்தானவனாக, ப்ரதிபாதயந்தி-செய்கிறார்கள், (என்று நினைக்கிறேன்.)

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலே உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன. ஸ்ரீ ரங்கநாதனை ஸேவிக்கிறதற்குச் சிலன் வருகிறபோது, அவர் தலையில் உன்னை அர்ச்சகர்கள் ஸாதிக்கிறார்கள். அப்போது உன்னிடத்திலிருக்கின்ற முத்துக்கள் அவர் தலையிலிருக்கிற சந்திரனுக்கு பக்கத்தில் இருக்கிற நக்ஷத்திரங்கள்போல் தோன்றுகின்றன. எல்லா சாஸ்திரங்களும், ஒருவனுக்கு வந்தாலும், அவைகள் ஆழ்வாருடைய பாசுரங்கள் சேர்ந்தால் தான், விளங்குகின்றன. ஆகையால், ஒருவன் எல்லாசாஸ்திரங்களை அறிந்திருந்தாலும், அவன் ஆழ்வாருடைய பாசுரங்களின் உண்மையான கருத்தை அறிந்து, மற்ற பலன்களில் ஒழிந்து பகவானிடத்தில் அதிகமான ஆசையுள்ள ஒரு பெரியவரிடம் போகவேணும். அவர் ஆழ்வார் பாசுரங்களின் கருத்தை அவனுக்கு உபதேசிப்பார். அதனால், அவனுடைய ஏற்கனவே யிருந்த அறிவு அளவில்லாமல் விருத்தியடைந்து மோக்ஷம் வரையிலுள்ள ஸுகத்தைக் கொடுக்கும். (32)

(௩௩) லக்ஷ்மீபதேர் விஹரத: ப்ரியமாசரந்தீ
முக்தாமயூகநிவஹை: புரதோ விகீர்ணை: |
காந்தாநி காஞ்சநமயி ஸதி நீதமந்தம்
ஸௌத்யே விநிக்ஷிபஸி ஸாந்த்ரஸுதாவஸாநி ||

காஞ்சநமயி-வாராய் தங்கமயமான பாதுகையே! விஹரத:-விளையாடுகிற, லக்ஷ்மீபதே:-மஹாலக்ஷ்மிக்கு ப்பர்த்தாவான ஸ்ரீரங்கநாதனுக்கு, ப்ரியம்-இஷ்டத்தை; ஆசரந்தீ-செய்கிறவளாயிருக்கிற, த்வம்-நீ, புரத:-முன்னே, விகீர்ணை:-பரப்பப்பட்டிருக்கிற, முக்தா-முத்துக்களுடைய, மயூக-காந்திகளுடைய, நிவஹை:-கூட்டங்களாலே, ஸௌத்ய-கோவிலிலிருக்கிற,

தீர்க்கி-க்ரோஸா-ஓடைகளிலே, வஹநீநாம-தாமரைக் கொடிகளுடைய, கந்தாநி-கிழங்குகளை, விநிக்ஷிபஸி-போடுகிறாய், இதி-என்று நினைக்கிறேன்.

(கருத்து) பாதுகையே! உன் பேரில் முத்துக்கள் இழைத்திருக்கின்றன. உன்னைச் சாத்திக்கொண்டு பெருமாள் தாயாருடன் சந்திரபுஷ்கரணி முதலான ஓடைகளில் எழுந்தருளுகிற போது, முத்துக்காந்திகள் அவைகளில் பரவுகின்றன. அதைப் பார்த்தால், பெருமாளுடன் தாயார் விளையாடுவதற்காக ஓடைகளில் தாமரைக் கொடிகளை நீ கொண்டுவந்து போட்டிருப்பது போலிருக்கிறது. எம்பெருமானுக்கு எல்லா ஜனங்களுடைய ஹ்ருதயங்களாகிற தாமரைப்பூக்களில் தாயாருடன் இருப்பதனால் வரும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்காக எல்லா ஜனங்களுக்கும் ஜீவன் பெருமாள் முதலான ஸங்கதிகளை ஆழ்வார் உபதேசிக்கிறார். (33)

(௧௩௪) ஆஶாஸ்ய நூநமநகாம் மணிபாதரக்ஷே
ஸம்ஸ்ருஜ்ய வாரிதிஸுதாஸஹஜஸ்ய வ்ருத்திம் |
யாதீம் ரங்கபதயோரநபாயிநீம் த்வாம்
ஜ்யோத்ஸ்நா ஸமாஶ்ரயதி மௌக்திகபங்க்திலக்ஷ்யாத் ||

மணிபாதரக்ஷே-ரத்னம் இழைத்த பாதுகையே! ஜ்யோத்ஸ்நா-நிலாவானது, வாரிதிஸுதா-க்ஷீரஸமுத்ரத்தில் பிறந்திருக்கிற மஹாலக்ஷ்மியினுடைய, ஸஹஜஸ்ய-உடன் பிறந்தவனான சந்திரனுக்கு, அநகாம்-குற்றமில்லாமலிருக்கிற, வ்ருத்திம்-வளர்த்தியை, ஆஶாஸ்ய-அபேக்ஷித்து, ரங்கபதயோ:-பெருமாளுடைய திருவடிகளுக்கு, அநபாயிநீம்-சற்று நேரம் கூட விடாமல், யாதீம்-தாங்குகிறவளாயும், (காப்பாற்றுகிறவளாயுமிருக்கிற) த்வாம்-உன்னை, மௌக்திக-முத்துக்களுடைய, பங்க்தி-வரிசையினுடைய, லக்ஷ்யாத்-வியாஜத்தினாலே, ஸமாஶ்ரயதி-அடைகிறது.

(கருத்து) பாதுகையே! உன்மேலே முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தியைப்பார்த்தால் நிலாவைப்போ

லிருக்கிறது. அதைப்பார்த்தால், மஹாலெக்ஷ்மியின் உடன் பிறந்தவனான சந்திரன் கிருஷ்ணபக்ஷத்திலே குறைந்துபோகிறான். அந்த குறைவு அவனுக்கு இல்லாமலிருக்கவேணுமென்கிற ஆசையினால் நிலாவானது—எப்போதும் பெருமாள் திருவடியை விடாமல் தூக்கிக்கொண்டு காப்பாற்றுகிறஉன்னிடத்தில் முத்து என்கிற வியாஜத்தினாலே வந்து கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுவதுபோலிருக்கிறது. பெருமாளுடைய திருவடிகளில் உண்மையான பக்தியுள்ளவர்களை ஒருவன் வணக்கத்துடன் கெஞ்சிக்கேட்டுக்கொண்டால், எல்லாப் பலன்களும் கிடைக்கும், கிடைக்காதது ஒன்றுமில்லை. உயர்ந்த நிலாப்போன்ற ஞானம், பக்தி, தயை, பொறுமை முதலான குணங்கள் ஆழ்வாரிடத்தில் இருக்கின்றன. எதற்காக என்றால், மஹாலக்ஷ்மியோடுகூடப்பிறந்த—கௌஸ்துபாம்சர்களான—ஜீவன்களுக்குள் சிலருக்கு அறிவேகிடையாது. கொஞ்சம் வந்தாலும் பகவானிடத்தில் கொஞ்சம் பிரீதியுமாயிருக்கிறது. ஜீவன்களாகிற சந்திரன்களுக்கு பிரளயகாலம் அமாவாசை போலிருக்கிறது. ஸ்ருஷ்டிகாலம் சுக்லபக்ஷம் போலிருக்கிறது. ஜீவன்களுக்கு இருக்கும் ஞானக்குறைவைப்போக்கி, மிகுந்த ஞானத்தை உண்டுபண்ணுவதற்காக முன் சொன்னகுணங்கள் ஆழ்வார் பாசுரங்களாக ஆயின. அதாவது—சந்திரன்போன்ற எல்லா ஜீவன்களும், ஆழ்வார் பாசுரங்களால் அதிகமான ஞானத்தை அடைகிறார்கள். மோக்ஷத்தை அடைகிறார்கள். (34)

(கூசரு) யே நாம கேசித் பவதீம் விநயாவநம்ரை:
ருத்தம்வஹந்தி க்ருதிந: க்ஷணமுத்தமாங்கை: ।
த்வந்தி ரங்கந்ருபதே: மணிபாதரக்ஷே
ஸ்வச்சந்தபோக்யநியதாமிஹ தே விபூதிம் ॥

ரங்கந்ருபதே:—ஸ்ரீரங்கநாதனுடைய, மணிபாதரக்ஷே—வாராய் கல்லிழைத்த பாதுகையே! யே நாம கேசித்—எந்த சில, க்ருதிந:—புண்ணியசாலிகள், விநய—வணக்கத்தினாலே, அவநம்ரை:—வணங்கியிருக்கிற, உத்தமாங்கை:—தலைகளாலே, பவதீம்—உன்னை, க்ஷணம்—கொஞ்சகாலம், உத்வஹந்தி—தலையால் தூக்குகிறார்களோ, தே—அவர்கள், இஹ—இந்த லோகத்திலே, ஸ்வச்ச—உன்னு

டைய, ஜாத்ருஶ-முத்துக்களுடைய, ஒவ-கூட்டங்களுக்கு, நித்யம்-தவராமலிருக்கிற, ஜஹதீம்-மிகவும் பெரிதாயிருக்கிற, விஶேஷம்-தோஷமில்லாமையை, ஐஹந்தி-ஆசைப்படுகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்தில் இழைத்திருக்கின்ற-பெரிய குணங்களுள்ள-ஒருவிதமான கெடுதியுமில்லாத-முத்துக்களைப்போல்ஆகுவதற்காக,உன்னைச்சில புண்ணியசாலிகள் மிகுந்த வணக்கத்துடன் தலையில்வைத்துக்கொள்ளுகிறார்கள். பக்தியுடன் ஆழ்வாரை ஆச்ரயித்தவர்கள் எல்லா பாபங்களும் நீங்கி, எல்லா உயர்த்தியையும் அடைந்து, ஆழ்வாரையும் பெருமாள்திருவடியையும் விட்டு க்ஷணம்கூடப் பிரியமாட்டார்கள். ஆழ்வார்முதலான நல்ல ஆசாரியர்களை ஒருவன் ஒருதரம் ஸேவித்தால், அவர்களை ஒருக்காலும் விடாமலிருக்கவேணுமென்றும்,உயர்ந்த பதவியை அடையவேணுமென்றும் ஆசையுண்டாகிறது. (35)

(௩௪௩) அநாரதம் நஸதாநாம் ஸதவுரம்
ஜநிதமோக்ஷஸௌந்தர்யை விமுக்தாபலைஸ்த்வம்
ப்ரகடயஸி ஜநாநாம் பாதுகே ரங்கபர்த்து:
பதஸரஸிஜஸேவாவாஸநாப்ரஸூதிம் ॥

தேவி-விளங்காநின்றிருக்கிற, பாதுகே-வாராய் பாதுகையே! த்வம்-நீ, அநாரதம்-எப்போதும் (தினந்தோறும்) ஸதாநாம்-இன்பமாயிருக்கிற, நாமானாம்-விரல்களாகிற, ஸதவுராம் துளிர்களுக்கு, ஜநித-உண்டு பண்ணப்பட்டிருக்கிற, மோக்ஷ-மொட்டுகளுடைய,ஸௌந்தர்யை:-அழகைஉடைத்தாயிருக்கிற, முக்தாபலை:-முத்துக்களாலே,ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, பதஸரஸிஜ-தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியினுடைய,ஸேவாவாஸநா-கோடுரூபமான சங்கிலையே ப்ரஸூதிம்-முத்து உண்டாகிறதை, ஜநாநாம்-ஜனங்களுக்கு, ப்ரகடயஸி-தெரியப்படுத்துகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலில் உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன.பெருமாளுடைய விரல்களைப் பார்த்தால்

எப்போதும் வாடாத-நிலையாயிருக்கிற- துளிர் போலிருக்கிறது. முத்துக்கள் இந்தத்துளிர்களுக்கு மொட்டுப்போலிருக்கின்றன. மேலும், பெருமாளுடைய திருவடியிலே சங்குமாதிரி ரேகை இருக்கிறது. சங்கிலிருந்து முத்து உண்டாகிறது என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. அதனால் உன்னுடைய முத்துக்களைப்பார்த்தால் சங்கிலிருந்து முத்து உண்டாகிறதென்பதை ஜனங்களுக்குத் தெரிவிப்பது போலிருக்கிறது. ஆழ்வாருடைய முத்துப் போன்ற பாசுரங்கள் நிலையான துளிர்போன்ற திருவடிகளுக்கு அலங்காரமாயிருக்கின்றன. அந்தத்திருவடிகளுக்கு அந்தப் பாசுரங்கள்தான் தகும். இந்தப்பாசுரங்களுக்கு அந்த திருவடி தான் தகும். இந்தப்பாசுரங்கள் அந்தத்திருவடியின் நினைவினால்தான் உண்டாயின. அந்த திருவடியை ஒருவன் இன்பமாக நினைத்தால், அதேமாதிரி பாசுரங்கள் உண்டாகும். (36)

(௩௭) பலிநியமநவேலாவர்த்திநஸ்தஸ்ய விஷ்ணோ:
பதஸரஸிஜமாத்வீ பாவநீ தேவி நூநம் |
ஜநநஸமயஸக்தா ஜாஹ்நவீ தாவகாநாம்
வஹதி சரணரக்ஷே வாஸநாம் மௌக்திகாநாம் ||

தேவி சரணரக்ஷே-விளங்குகிறதிருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! பலிநியமநவேலா-மஹாபலிசக்ரவர்த்தியை அடக்குகிற ஸமயத்திலே, வர்த்திந:-வளர்ந்திருக்கிற, தஸ்ய விஷ்ணோ:-த்ரிவிக்ரமாவதாரம் பண்ணின அந்தப்பெருமாளுடைய, பத-திருவடியாகிற, ஸரஸிஜ-தாமரைப்பூவினுடைய, மாத்வீ-தேனாக இருக்கிற, பாவநீ-எல்லா உலகத்தின் பாபங்களைப் போக்குவதான, ஜாஹ்நவீ-கங்கையானது, ஜநநஸமய-உண்டாகிறஸமயத்திலே, ஸக்தா-சேர்ந்திருக்கிற, தாவகாநாம்-உன்னுடையவைகளாயிருக்கிற, மௌக்திகாநாம்-முத்துக்களுடைய, வாஸநாம்-கொஞ்ச பாகத்தினுடைய சேர்க்கையை, வஹதி-அடைகிறது, நூநம்-நிச்சய

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள்மஹாபலியை அடக்குவதற்காகத்திரிவிக்ரமாவதாரம் பண்ணினகாலத்திலே, உலகத்தின் பாபங்களைப் போக்கடிக்கிற கங்கை என்ற நதி திருவடியிலிருந்து

உண்டாயிற்று. அதாவது திருவடிப் பிரும்மலோகத்திற்குப் போனபோது பிரும்மா திருவடியிலே தீர்த்தத்தை சேர்த்தார். அதைத்தான் கங்கை என்று சொல்லுகிறது. அது வெளுப்பாக இருக்கிறது. உன் மேலிழைத்திருக்கிற வெளுப்பான முத்துக்களுடன் சேர்ந்தபடியால்தான், அதுவெளுப்பாயும்தோஷத்தைப்போக்கும் சக்தியுள்ளதாயும்இருக்கிறது. பெருமாள் திருவடியாகிற தாமரைப் பூவிற்குத் தேன்போலிருக்கிறது. கங்கை எல்லாஜனங்களுடைய பாபத்தையும் போக்கடிக்கிறது ஆனாலும் ஆழ்வாருடைய பாசுரத்திற்கு ஏகதேசத்திற்குவராது. பாசுரம்ஸங்கதிகளைத் தெரிவிப்பதுபோல் கங்கை தெரிவிக்கிறதோ. திருவடியோடு கங்கை ஒருகால் சேர்ந்தது.பாசுரங்கள் திருவடியோடு எப்போதும் சேர்ந்திருக்கின்றன. (37)

(௩௮) ஶௌரேர்பதச்சிதெ வைரமிந்தோஸ்ஸ
ரோஜை: ஶமயிதுமிவ தாரா ஸேவமானாஶ்சிரம்
த்வாம் । பூயிஷ்டகிரணவாரி: பாதுகே ஸம்
ச்ரிதாநாம் கலிகல்மஷமஶேஷம் க்ஷாலயந்தீவ
முக்தா: ||

பாதுகே-வாராய் பாதுகையே! ஶௌரே:-பெருமாளுடைய, பதச்சிதே:-திருவடிக்குத்தோழனாயிருக்கிற, ஸரோஜை:-தாமரைப்பூக்களோடு, இந்தோ:-சந்திரனுக்கு உள்ள, வைரம்-சண்டையை, ஶமயிதும்-போக்கடிக்க, சிரம்-வெகுகாலம், த்வாம்-உன்னை, ஸேவமானா:-ஸேவித்துக் கொண்டிருக்கிற, தாரா இவ-நக்ஷத்திரங்கள்போல, பூயிஷ்ட-அதிகமாக இருக்கிற, கிரணவாரி:-காந்தி வெள்ளத்தை உடைத்தாயிருக்கிற, முக்தா:-முத்துக்கள், ஸம்ச்ரிதாநாம்-தன்னை அடைந்தவர்களுடைய, கலிகல்மஷம்-கலிகாலத்தாலே உண்டான பாபத்தைச் சேற்றை, அஶேஷம்-மீதியில்லாமல், க்ஷாலயந்தீவ-அலம்புகின்றன போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் நல்ல முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தி-வெள்ளம் போலிருக்கி

த்ராஸம்-எல்லாவிதமான பயத்தையும், (பத்தங்களுக்கு ஏற்பட்ட குற்றத்தையும்,) உந்மூலயந்தீம்-அடியோடுபோக்குகிறவளாயும், த்ரிபுவநஸ்லாகநீயாம்-மூன்றுலகங்களாலும்கொண்டாடக்கூடிய வளுமான, த்வாம்-உன்னை, உபாச்ரித்ய-கிட்டி அடைந்து, ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, சரண-திருவடிகளுடைய, நக-நகங்களாகிய, மணீநாம்-ரத்னங்களுடைய, ஸமீபே-ஸமீபத்திலே, நிஜ்காந்திம்-தங்களுடைய பளபளப்பை, ந ஜஹதி-விடுகிறதில்லை. ந்நூநம்-நிச்சயம்.

(கருத்து) பாதுகையே! உன்னிடத்தில் இழைத்திருக்கிற உயர்ந்த முத்துக்கள் பெருமாள் திருவடி நகங்களுக்கு பயப்படுகிறதில்லை. அதாவது அவைகளுக்கு மேலே பளபளப்பாயிருக்கின்றன. ஏனென்றால், ஒருகால் வணங்குகிறவர்களுக்குஎல்லா பயத்தையும் போக்குகிறவளும்எல்லாலோகத்தாலும் கொண்டாடக் கூடிய குணங்களுள்ளவளாயுமிருக்கிற உன்னை அந்த முத்துக்கள் அடைந்தபடியால். ஆழ்வாருடைய திருவடிகள் நித்திய ஸூரிகளிடத்திலும் பயப்படவேண்டாம்.நித்தியஸூரிகளுக்கு மேற்பட்டவர்கள் அவர்கள்.ஆழ்வார் பாசுரங்கள் தமிழாக இருந்தபோதிலும் வேதத்திற்குப் பயப்படுவதில்லை. வேதத்திற்கு மேலே என்றும் சொல்லலாம். திருவடியைப் பற்றி ஸ்தோத்திரம் பண்ணுகிறவர்களிடத்தில் பாதுகையை ஸ்தோத்ரம் பண்ணுகிறவர்கள் பயப்பட வேண்டியதில்லை. பெருமாளுக்கு கைங்கரியம் பண்ணுவதைக்காட்டிலும் பாகவதர்களுக்குக்கைங்கர்யம் பண்ணுகிறது மிகவும் உயர்ந்தது. ( 40 )

(சுகு) ஸர்வமிதமசேஷம் விஹிதகோ ரங்கபர்த்து:
பதகமலமிதம் தே பாதுகே யாதயந்த்ர: ।
நிரவதிஹரண வேதாந்தஸூக்தாநாம் ஸஜ்ஜீ
ஸ்ரீதேஜஉதகணிகாநாம் ஸம்பதம் ஸௌக்திகாநி ॥

பாதுகே-வாராய் பாதுகையே! இதம்-இந்த, ஸர்வம்-உலகத்தை, அசேஷம்-மீதியில்லாமல், விஹிதக:-தாக்குகிற, ரங்கபர்த்து:-ரங்கநாதனுடைய, இதம்-இந்த, பதகமலம்-திருவடி

வானது, கர்ணவிஷயதேசா-இந்த்ரியங்கள் போகிறஸமயத்திலே, காதரஸ்ய-பயத்தை அடைந்திருக்கிற, ஸஸ்ய-இந்த, ஜநஸ்ய-பிராணியினுடைய (அநாதனான என்னுடைய) வஹ்நிதாபம்-வருத்தத்தை, ஶமயது-போக்கடிக்கவேணும், (ஶமயதா-போக்கடிக்கிறது

(கருத்து,) பாதுகையே! உன்மேலில் நல்லமுத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளைப் பார்க்கும்போது, அவைகளையும் உன்னையும் பெருமாளையும் எல்லாரையும் ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். முத்துக்களுடைய பளப்பினாலே ஏற்கனவே பிரகாசமாயிருக்கிற பெருமானுடைய நகங்களின் காந்தி ஆயிரமடங்கு பளப்பளப்பாகிறது. முத்துக்களின் அழிவில்லாத காந்தி நிலவுபோலிருக்கிறது. செத்துப்போகிற காலத்தில் ரொம்ப உளரிக்கொள்ளுவேன், இப்போது நினைக்கவே பயமாக இருக்கிறது. அப்போது கேட்பானேன்? அப்போது என்னுடைய அளவில்லாத வருத்தத்தை (தாபத்தை) ப்போக்கடிக்க வேணும். அதாவது—செத்துப்போகும் ஸமயத்திலே பாதுகையைச் சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுவதுபோலத் தோன்றவேணும். ஆழ்வாருடைய பாசுரங்கள்எல்லையில்லாத கீர்த்தியுள்ளவைகளாயும், கீர்த்தியைக்கொடுப்பவையுமாக இருக்கின்றன. வேதத்தைக்காட்டிலும் உயர்த்தியுள்ளவைகளாயுமிருக்கின்றன. பாசுரத்தினுடைய உண்மையான கருத்து இப்போது மனதில்பட்டால், ஒருவன் செத்துப்போகிறோமே என்று பயப்படமாட்டான். அந்த ஸமயத்திலே நினைவுக்கு வந்தால், கேட்பானேன். (42)

(௪௩) த்ருவம் ப்ரஸ்ரவ்யஸீயதாம் தேவி பாதுகே
நாம் ஸம்ஸ்கர்ஷம் ப்ரதிவதி ஶ்யாமஜித்பாதரக்ஷிகே தாவகா
நாஃ । ஸத்த்வம் நித்யம் நிஜஸ்தானஸம்வ்ருத்திஷு
தோஷவத்ஸ்வாஸாத்ஸ்வப்ரத்யுஷித தத்வஸாம் யோமி
நாஸஞ்சராத் ||

ஶ்யாமஜித்-மது என்ற அசுரனைக்கொன்ற பெருமானுடைய, பாதரக்ஷிகே-வாராய் பாதுகையே! ஸத்த்வம்-உன்னிடத்திலே,

வானது, கரணவிஷயவெஷா-இந்திரியங்கள் ............
காதரவஸ்-பயத்தை அடைந்திருக்கிற, ஜவஸ்-இந்த, ஜநஸ்ய-பிராணியினுடைய (அதாவது-என்னுடைய) பரிதாபம்-வருத்தத்தை, ஶமயதி-போக்கடிக்கவேணும், (ஶமயதா-போக்கடிக்கிறது

(கருத்து,) பாதுகையே! உன்மேலில் நல்லமுத்துக்கள் இழைந்திருக்கின்றன. அவைகளைப் பார்க்கும்போது, அவைகளையும் உன்னையும் பெருமாளையும் எல்லாரையும் ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். முத்துக்களுடைய வெளுப்பினாலே ஏற்கனவே பிரகாசமாயிருக்கிற பெருமாளுடைய நகங்களின் காந்தி ஆயிரமடங்கு பளப்பளப்பாகிறது. முத்துக்களின் அழிவில்லாத காந்தி நிலவுபோலிருக்கிறது. செத்துப்போகிற காலத்தில் ரொம்ப உளரிக்கொள்ளுவேன், இப்போது நினைக்கவே பயமாக இருக்கிறது. அப்போது கேட்பானேன்? அப்போது என்னுடைய அளவில்லாத வருத்தத்தை (தாபத்தை)ப்போக்கடிக்க வேணும். அதாவது—செத்துப்போகும் ஸமயத்திலே பாதுகையைச் சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுவதுபோலத் தோன்றவேணும். ஆழ்வாருடைய பாசுரங்கள்எல்லையில்லாத கீர்த்தியுள்ளவைகளாயும்,கீர்த்தியைக்கொடுப்பவையுமாக இருக்கின்றன. வேதத்தைக்காட்டிலும் உயர்த்தியுள்ளவைகளாயுமிருக்கின்றன. பாசுரத்தினுடைய உண்மையான கருத்து இப்போது மனதில்பட்டால், ஒருவன் செத்துப்போகிறோமே என்று பயப்படமாட்டான். அந்த ஸமயத்திலே நினைவுக்கு வந்தால், கேட்பானேன். (42)

(சுருக) ஸ்திரும் யாஸ வஸ்மிரஸஹித்தாம் தேவி ஸாதுகாஸணீ
நாம ஸமெஸ்ரு கஷயிஷுவதி ஸயாராஜித்தாஷ்ராமகெ தாவகா
நாழ | நமூஷொ நித்யம் நிஜமரண மணவஸ்திஷொ
தொலவகஸ்ராஸரஞ்செஸ்ரா திஸ்ஸிததஸவஸாம் யொகி
நாஸஷாராத்ஃ ||

ஸயாராஜிகூ-மது என்ற அசுரனைக்கொன்ற பெருமாளுடைய, வாதூஷ்ஜெவாராம் பாதுகையே! ஸவத்ரம்-உன்னிடத்திலே,

நிஜ-தன்னுடையதாயிருக்கிற, ப்ரணய-வெளுப்பு முதலான குணங்களுடைய(அபஹததாபாப்மத்வம் முதலான குணங்களுடைய) மணி-கூட்டத்தினுடைய, வ்யக்தி-ப்ரகாசத்திற்காக, ந்யஸ்த:-இழைக்கப்பட்டிருக்கிற,(கொடுக்கப்பட்டிருக்கிற,) ஆத்மஜ்யோதி:, தன்னையும் பரமாத்மாவையும் உள்ளபடி அறிவதினாலே மார்ஜித-போக்கடிக்கப் பட்டிருக்கிற, தம:-தமோகுணத்தை உடைய, (இருட்டை உடைய) மோக்ஷ-மோக்ஷத்தை ஆசைப் படுகிறவர்களுடைய, ஜீவாத்மா-ஜீவஸ்வரூபமானது, திவ்யம்-அப்ராக்ருதமாக இருக்கிற, (உயர்ந்ததாயிருக்கிற) ஸ்திரம்-நிலையாயிருக்கிற, பதம்-பரமபதத்தை(தேஜஸ்ஸை) ச்ரிதம்-அடைந்திருக்கிற, தாவகானாம்-உன்னுடைய, முக்தாமணீநாம்-முத்துக்களுடைய (மோக்ஷத்தை அடைந்தவர்களுடைய) மத்யே-நடுவிலே, ஸத்ருக்ஷ-ஒருவனாக (ஒன்றாக,) பவதி-ஆகிறான். (ஆகிறது.)

(கருத்து) பாதுகையே! உன்னிடத்திலே ஒருவன் தன்னுடைய ஸ்வபாவமான குணங்கள் ப்ரகாசிப்பதற்காக ஆத்மாவை ஸமர்ப்பித்தால், அந்த ஆத்மா உன்னிடத்தில் இழைத்திருக்கிற நிலையான காந்தியோடு கூடிய முத்துக்களில் ஒன்றாக ஆகிறான். இந்த உடம்பில் ஆத்மா என்று அழிவில்லாததாக ஒன்று இருக்கிறது. அது இந்த உடம்புபோல் அழிகிறதில்லை. இன்னொரு உடம்பைப் பிடித்துக்கொள்ளுகிறது. அதற்கு யஜமானனாய் பெருமாள் என்று ஒருவர் இருக்கிறார். இந்த ஆத்மா இப்போது பிறவி, சாவு, பசி, தாஹம், வியாதி முதலிய பல தொந்தரவுகளை யனுபவிக்கிறது. பெருமாளிடம் போய்ச் சேர்ந்தால், இந்த ஆத்மாவிற்கு எல்லா தொந்தரவும் நீங்கி, உயர்ந்த ஸௌகம் கிடைக்கும். நமக்கு அந்த மாதிரி ஸௌகத்தை கொடுப்பதற்காகத்தான் பெருமாள் இந்த ஆத்மாவிற்கு, உடம்பு, கண் முதலான இந்திரியங்கள், நல்ல அறிவு, சாஸ்திரம், ஆசாரியர்கள் இவை எல்லாவற்றையும் கொடுத்தார். நாம் இந்த ஸங்கதிகளை நல்ல ஆசாரியர்கள் அநுக்கிரஹத்தால் அறிந்து, பெருமாளைத் தியானம் பண்ணினாலும், அல்லது கெஞ்சிக் கேட்டாலும் (பிரபத்தி பண்ணினாலும்), அல்லது நமக்காக இன்னொரு

பெரியவர் செஞ்சிக் கேட்டுக் கொண்டாலும், நம்மை அவர் நிலையான தம்மிடத்திற்கு அழைத்துக் கொள்ளுவர். நமக்காக இன்னொருவர் கேட்டுக் கொள்ள-நாம் பூமியிலிருப்பதும், நாம் அவரை வேண்டாம் என்று சொல்லாமலிருப்பதே போதும். ஆகையால் ஒருவனுக்கு இப்படி உயர்ந்த மதத்தில் பிறப்பு வந்த உடனேயே அந்தஜீவனுக்காக ஒருவர் கைவத்தைக்கேட்டுக் கொள்ளலாம். உடம்பு நிலையில்லாமையால், பிறந்த உடனேயே கட்டாயம் கேட்டுக் கொள்ள வேண்டும். ஒரு ஆத்மாவிற்கு இன்னொருவர் கேட்டுக் கொண்டால், அந்த ஆத்மாவிற்கு ஸௌகரிய முண்டென்று சாஸ்திரமிருந்தால், அதைத் தாமதிப்பதற்கு ஆத்மாவின் க்ஷேமத்தில் ஆசைக்குறைவைத்தவிர வேறு என்ன காரணம் சொல்லமுடியும். ஒரு ஸ்ரீ வைஷ்ணவனுக்கு அநேகம் குழந்தைகள் பிறந்து செத்துப் போகின்றனவே. அந்தக் குழந்தைகளுடைய மோக்ஷத்தை அடையக்கூடிய ஜன்மத்தை அவைகளுடைய தகப்பன் வீணாகத்தானே அடித்தான். ஆகையால் ஆசாரியர்களிடத்திலே ஸமர்ப்பிக்கப்பட்ட ஆத்மா மோக்ஷத்தை அடைகிறான். (43)

(கருச) ஸத்த்வம் நித்யம் ஸ்ப்ருஶரஜஸாம் தீப்யதி-
ஷோ: பிப்ரதி ஸ்வாகாரஸாம்யம் தாம் ஶ்ரிதவிஹ்வாம் வா
ர்ணிகே த்வத்ரயாஸி | ஸ்ரோதோபி: ஸ்வைஸ்ஸர்வ-
ஜகதிதம் தீபவத்வ்யாப்ய காமம் முக்தாஸ்ஸ்தாஸ்ம் யத்பத
ஸநாதாஸ்ஸ்திதா த்யக்தஸங்கா: ||

தீப்யமானே-வாராய் விளங்காநின்ற பாதுகையே! ஶுக்தா:-முத்துக்கள், யத்பதஸநாதா:-யாதொரு பாதுகையை (ஸபையை) அடைந்ததினாலே, த்யக்தஸங்கா:-ரத்ன தோஷமில்லாதவைகளாய்க்கொண்டு, ஸ்வை:-தன்னுடையவைகளான, ஸ்ரோதோபி:-காந்திகளாலே, ஸர்வம் ஜகத்-எல்லா உலகத்தையும், தீபவத்-விளக்குப்போலே, காமம்-வேண்டியபடி, வ்யாப்ய-வியாபித்து, ஸத்த்வம்-தோஷமில்லாமையை (வெளுப்பை) பிப்ரதி-அடைகின்றனவோ, தாம்-அப்படிப்பட்ட, த்வாம்-உன்னை, நித்யம்-எப்போதும், ஸத்த்வ-ரஜோகுணம் தமோகுணமில்லாமலிருக்

கிற, விதுஷாம்ஸதி-பெருமாளுடைய நித்யமான ஸ்தானமான பரமபதத்திலே, ஸூரிவரிண தாம்-நித்யஸூரிகளிருக்கிற, அமித,-அளவில்லாமலிருக்கிற, விபவாம்-ஸம்பத்தை (பெருமையை) உடைய, தாம்-அந்த, ஸூரிநீம்-ஸபையாக, தர்கயாமி-நினைக்கிறேன். (உபஸ்ருதா:-மோக்ஷத்தையடைந்தவர்கள், நிராபாதா:-ஒருவித பயமுமில்லாதவர்கள். ஸுமேதஸ:-அறிவுகளாலே)

(கருத்து) பாதுகையே! உன்னைப் பார்த்தால், பரமபதத்திலே நித்திய முக்தர்களாலே நிறைந்திருக்கிற ஸபையாக நினைக்கிறேன். ஜீவன்கள் பக்தியையோ, பிரபத்தியையோ செய்து அந்த ஸபைக்குப் போனால், எல்லா பாபங்களும் போய் ஒருவித பயமுமில்லாமல், ஸூரியன் தன் வெளிச்சத்தினால் எல்லா உலகத்திலும் பரவுவது போல், தங்களுடைய அறிவாலே எல்லா உலகங்களையும் அறிந்து, உயர்ந்த எல்லா ஸுகங்களையும் அநுபவிக்கிறார்கள். உன்னிடத்தில் இழைத்திருக்கும் முத்துக்கள் முக்தர்களுக்கு ஏற்பட்ட ஒரு குற்றமுமில்லாமல், நல்ல வெளுப்பாய் இருக்கின்றன. அதின் காந்தி உலகமெல்லாம் பரவுகிறது. ஆழ்வாருடைய பாசுரங்களுக்கு ஒருவிதமான குற்றமுமில்லை. அதனால், அவைகளைப்பற்றி ஒருவருக்கும் பயமில்லை. அவைகளுடைய கருத்தை அறிவதால், எல்லா உலகங்களுக்கும் இப்போது ஸந்தோஷமும், பிறகு மோக்ஷமும் கிடைக்கும். நல்ல ஆசாரியனை அடைந்தவர்கள் மோக்ஷத்தை அடைந்தவர்களைப்போலவே எல்லா ஸுகங்களையும் அநுபவிக்கிறார்கள். அதை இப்போதே காணலாம். ஆனால் அப்படிப் பட்ட ஆசாரியர்கள் அகப்படுகிறது கஷ்டம். இல்லையென்று சொல்லமுடியாது. இருக்கவும் இருக்கிறார்கள். அகப்பட்டவரை யில் லாபமாக நினைக்க வேண்டும். தன் ஸ்வரூபத்தின் உண்மையை அறிந்தால் கோபமில்லாமை முதலிய அடையாளங்கள் கட்டாயம் உண்டாகுமென்று ஸ்ரீ தேசிகன் ஸாதிக்கிறார். (44)

(௪௫) ஶ்ருத்வா பௌரை: புராணை: கவிபிரபி பாதுகே
ஸக்திபாஜாம் ஶ்ருத்யாதீநாம் நிஸர்காத் விவ்ருஜிநம் ஶ்ரா-
விதா ஸம்ஹிதாஸு | தேவேந த்வாம் ப்ரபந்ந
ஸா ப்ரதிராஜஸ்ய யஸ்ய ...
... ஸூக்திகாநாம் ஶ்ரோதவ்யா ||

வாஹிகே-வாராய் பாதுகையே, ஶௌரேஃ-பெருமாளுடைய, வாரணகமலம்-தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியை, ப்ராப்தா-அடைந்தவளாயும், கிமபி-இன்னதென்று சொல்ல முடியாத மிகவும் கடுமையான, வ்ருஜினம்-பாபத்தை, வ்யுதஸிது-போக்கடிக்கிறதற்கு, ஸக்திபாஜாம்-பக்தியை அடைந்தவர்களுடைய, மௌளிஷு-தலைப்பிரதேசத்தை, ப்ராபிதா-அடையும்படி செய்யப்பட்டிருக்கிற, அதாவது-தலையில் ஸாதிக்கப்பட்டிருக்கிற, த்வம்-நீ, ஸஹஸ்ராக்ஷணா-ஆயிரம் கண்களை உடைய, தேவேந-இந்திரனாலே, உன்னதபூஷ்ய-உயர்ந்த யானையான ஐராவதத்தினுடைய, மூர்த்நி-தலையிலே, ந்யஸ்தா-வைக்கப்பட்டவளாய்க்கொண்டு, மௌக்திகாநாம்-முத்துக்களுடைய, ப்ரபாபிஃ-காந்திகளாலே, முகபட-முகத்திற்கு அலங்காரமாகப்போடும் வஸ்திரத்தினுடைய, ஶ்ரியம்-காந்தியை, யாஸி-அடைகிறாய்.

(கருத்து) பாதுகையே! உன்னைப் பெருமாள் திருவடியிலே சாத்திக்கொண்டிருக்கிறார். அதனால் பெருமாளுடைய பக்தர்கள் தங்களுடைய அளவில்லாத கடுமையான பாபங்களைப் போக்குவதற்காகத் தலையில் ஸாதித்துக் கொள்ளுகிறார்கள். உன்னை இந்திரன் ஐராவதத்தின் தலையில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோகிறான். அப்போது உன்மேலிழைத்திருக்கும் உயர்ந்த முத்துக்களுடைய காந்தி அதனுடைய முகத்தில் பரவுகிறது. அதைப் பார்த்தால் யானைகளுடைய முகங்களுக்கு அலங்காரமாக வெள்ளியாலே செய்யப்பட்ட சில வஸ்துக்களை துணியில் தைத்து முகபட்டமென்று போடுவது வழக்கம். அதுபோலிருக்கிறது. பெருமாள் திருவடிகளில் உண்மையாகப்பக்தியுள்ளவர்களைஜனங்கள் தங்களுடைய பாபம் போவதற்காக வந்து அடைகிறார்கள். பிரும்மலோகம் வரையிலுள்ள ஸம்பத்தை உதாஸீநம் பண்ணி, மோக்ஷம் வேணுமென்று ஆசைப்படுகிற நல்ல ஆசாரியர்களை இந்திரன் முதலான தேவதைகளும் கொண்டாடுகிறார்கள். அவர்களுக்கு இந்த மாதிரி ஒழிவு வரவில்லையாதலால். (45)

(கருக) தவ ஹரிவாஹநகே வ்யாயதமௌக்திகரந்த்ர
ஸம்பவ: ப்லவமாநஜஹ்நுதநயாஸலிலஸஹசரா:| பதமஜராமரம் விதததே கதம் ஸதாம் ப்ரண
தஸாரேந்த்ரமௌலிவலிதங்கரணா: கிரணா: ||

ஹரிவாஹநிகே-வாராய் ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையே! :-உன்னுடைய, வ்யாயத-மிகவும் பெரியதாயிருக்கிற, மௌக்திகரந்த்ரஸம்பவ:-உயர்ந்த முத்துக்களிலிருந்து உண்டானதும், ப்லவமாந-அலையடித்துக் கொண்டிருக்கிற, ஜஹ்நுதநயாஸலிலஸஹசரா:-கங்கையின் வெள்ளம்போலிருப்பதும், ப்ரணத-வணங்கியிருக்கிற, ஸாரேந்த்ர-உயர்ந்த தேவதைகளுடைய, மௌலிவலிதங்கரணா:-தலையை நிரைக்கப் பண்ணுகிறனவாயுமிருக்கிற, கிரணா:-காந்திகள், ஸதாம்-பெரியோர்களுக்கு, அஜராமரம்-கிழத்தனமும் சாவுமில்லாமலிருக்கிற, பதம்-பட்டத்தை, கதம்-எப்படி, விதததே-உண்டுபண்ணுகின்றன

(கருத்து) பாதுகையே! உன் மேலே உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தி ஜில் ஜில் என்று கங்கை வெள்ளம் அலையடிப்பது போலிருக்கிறது. தேவதைகள் தலையிலே உன்னை ஸாதிக்கிறபோது அந்த காந்தியினுலே தலையெல்லாம் நிரைத்ததுபோலாய் விடுகிறது. அந்த காந்தி பெருமாளிடத்தில் பக்தி யுள்ளவர்களுக்குக் கிழத்தனம் சாவு இல்லாத பரமபதத்தை எப்படிக் கொடுக்கிறது? அதாவது பாதுகையின் முத்துக் காந்தி மேலே பட்டவர்களுக்கு மோக்ஷம் வருகிறது என்று கருத்து. நிரைச்சலை உண்டு பண்ணுகிற பாதுகை கிழத்தனமில்லாத பதவியை எப்படிக் கொடுக்கும் என்று வேடிக்கையாக ஸாதிக்கிறுர். ஆழ்வார் பாசுரத்தின் கருத்துக்கள் கங்கையின் வெள்ளம் போலிருக்கிறது. தேவதைகளெல்லாம் தலையாலே கொண்டாடுகிறுர்கள். அவைகளை உண்மையாக அறிந்தவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கும். (46)

(௩௫௭) கபர்தே காபாலே: க்ஷிதிதரபதத்ராயிணி
ததா (ஸ்புடஸ்ரா: ஸ்வச்சம் ஹரிபதயோர் ஹாட-
கமயோ) முஹுர்கங்காமந்யாம் க்ஷரதி தவ முக்தா
மணிமஹ: | ப்ரயத்ந: கூர்த்ஸ்யம் முஹுரநேகம் ஸி
ஞ்சதி யதா நிராலம்போ லம்போதரகலபஶுண்டா
புஷ்கர: ‖

க்ஷிதிதர-பூமியைத் தூக்குகிற பெருமானுடைய, பதத்ரா யிணி-எராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, காபா லி-ஒருவருடைய, (அதாவது சிவனுடைய) கபர்தே-சடைமு டியிலே, தவ-உன்னுடைய, முக்தாமணி-முத்துக்களுடைய, மஹ:- காந்தியானது, முஹு:-அடிக்கடி, அந்யாம்-இப்போதுள்ள கங் கையைக் காட்டிலும் வேறாகஇருக்கிற, கங்காம்-கங்கையை, ததா- அப்படி, க்ஷரதி-பெருக்குகிறது, (உண்டு பண்ணுகிறது) யதா- எப்படிப்பெருக்கினதாலே, லம்போதர-பிள்ளையாராகிற, கலப -முப்பதுவருஷத்துயானையினுடைய, ஶுண்டா - துதிக்கை யினுடைய, புஷ்கர: - சிரங்காய்போலிருக்கிற நுனியானது, நிராலம்ப:-கைக்கு அகப்படாததாலே ஒன்றையும் பிடிக்காத தாய்க் கொண்டு, ப்ரயத்ந:-மீண்ட ப்ரயத்னமுடையதாய்க் கொண்டு, கூர்த்ஸ்யம்-தலைப்பிரதேசத்தை, அநேகம்-அடிக்கடி, ஸிஞ்சதி-நனைக்கிறதோ.

(கருத்து) பாதுகையே! உன் மேலே உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்திகள் கங்கை மாதிரி இருக்கின்றன. சிவன் உன்னைத் தலையின்மேலே ஸ்ரீதித்துக் கொள்ளும் போது அவர் தலையின்மேலே ஏற்கனவே இருக்கிற கங்கையைக்காட் டிலும் வேறாக இன்னொரு கங்கை பெருகுவது போலிருக்கிறது. பிள்ளையார் அதைப்பார்த்து ஜலம் தான் பெருகுகிறது என்று நி னைத்து தும்பிக்கையை அடிக்கடி போட்டு தன் தலையின்மேலே கொ ண்டு வைக்கிறார். அதில் ஒன்றும் அகப்படவில்லை. அதில் ஜலம் இருந்தாலல்லவோ கைக்கு அகப்படும். ஆழ்வாருடைய பா

சாரங்களைச் சிவன் மிகவும் கொண்டாடுகிறார். சிவனைப் பெருமாளு டைய பக்தராகச் சொல்லியிருக்கிறது. (47)

(௪௰௮) முகுந்தபதரக்ஷிணி பூர்ணத்யுதயஸ்தா
வகா: க்ஷரந்த்யம்ருதநிர்ஜரம் கமபி மௌக்திகஶ்ரே
ணய:| மநாகபி மநீஷிணோ யதநுஷங்கிணஸ்தத்க்ஷ
ணாஜ்ஜராமரணமேதுரம் ஜஹதி தாபத்ரயம்॥

முகுந்தபதரக்ஷிணி-வாராய் பெருமாளுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, பூர்ணா-அதிகமாக இருக்கிற, த்யுதய:-காந்திகளை யுடைத்தாயிருக்கிற, தாவகா:-உன்னுடையவைகளாயிருக்கிற, மௌக்திக-முத்துக்களுடைய, ஶ்ரேணய:-வரிசைகள், கமபி-இன்னதென்று சொல்ல முடியாமலிருக்கிற, அம்ருதநிர்ஜரம்-அமிருத வெள்ளத்தை, க்ஷரந்தி-பெருக்குகின்றன, மநீஷிண:-நல்ல புத்தியுள்ளவர்கள், மநாகபி-கொஞ்சமாவது, யதநுஷங்கிண:-யாதொரு வெள்ளத்தைச் சேர்ந்து, ஜரா-கிழத்தனமென்ன, மரண-சாவென்ன, இவைகளாலே, மேதுரம்-நிறைந்திருக்கிற, தாபத்ரயம்-மூன்று தாபத்தை, (தன்னால், பிறரால், தைவத்தால் வருபவை) ஜஹதி-விடுகிறார்களோ.

(கருத்து) பாதுகையே! உன்மேலில் உயர்ந்த முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தி அமிருத வெள்ளம் போலிருக்கிறது. அந்தக் காந்தி யார் மேலிலாவது சற்று நாழிகை பட்டதானால், அவனுக்குப் பல தொந்தரவுகளுடன் கூடிய ஸம்ஸாரம் போய் விடுகிறது. ஆழ்வார் பாசுரங்களுடைய கருத்து வெகு ஆச்சரியமாக இன்பமாக இருக்கிறது. அதை யாராவது ஒருவன் கொஞ்சம் கேட்டாலும், அவனுக்கு நல்ல அறிவு உண்டாகி, அதனால் ஸம்ஸாரம் போய்விடும். (48)

(௪௰௯) தேவ: ஶ்ரீபதநாக்ஷயா திஶதி தத்விஷ்டம்ப
பயேவ தே மௌளீபாதஸரோஜயாவகயுதீ
தச்ரேவ ஸதாநக்ஷந்தே। ஜகதாம் ஜநத்தி பாதஸூதா

இத்தம் ரமாபரிஜநைரபிஜல்பமாநே ப்ராயஸ்த்வம் மணி
பாதுகே ப்ரஹஸிதா முக்தாருசிவ்யாஜாத் ||

மணிபாதுகே-மாராய் கல்லிழைத்த பாதுகையே! ஸ்ரீ மஹாலெக்ஷ்மியினுடைய, பத-திருவடியினுடைய, லாக்ஷா-செம்பஞ்சுக் கொழம்பினாலே, அங்கித:-பொட்டு உள்ளவராக இருக்கிற, தேவ:-ஸ்ரீரங்கநாதனவர், தே-உன்னுடைய, உபரி-மேலேயே, ஸந்த்ருஶ்யதே-காணப்படுகிறார், கௌரீ-பார்வதியினுடைய, பாதஸரோஜ-தாமரைப்பூப்போலிருக்கிற காலி னுடைய, யாவக-செம்பஞ்சுக் கொழம்பை, பணீ-பணமாக உடைய சிவன், தலே-பாதுகையினுடைய அடியிலே, ஸந்த்ருஶ்யதே-காணப்படுகிறார், இத்தம்-இந்த மாதிரி, ரமாபரிஜநே-மஹாலெக்ஷ்மியினுடைய வேலைக்காரஸ்திரீகள், ஈத்ருஶகர்வத்தினாலே, ஜல்பதி-சொல்லுகிறபோது, த்வம்-நீ, முக்தா-முத்துக்களுடைய, ருசி-காந்திகளுடைய, வ்யாஜ-வியாஜத்தினாலே, ப்ரஹஸிதாப்ராய:-சிரிக்கிறாப்போல,

(கருத்து) பாதுகையே! உன் மேலே முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளுடைய காந்தியைப் பார்த்தால்—"உன்னைப் பார்த்து மஹாலெக்ஷ்மியினுடைய வேலைக்காரிகள் லெக்ஷ்மியாலே உதைபட்டவன் உன்மேலிருக்கிறான். பார்வதியின் காலைப் பிடிக்கிறவன் கீழே இருக்கிறான். உனக்கென்ன குறைவம்மா? உன்னிடத்தில் எத்தனையோ புருஷர்கள் இருக்கிறார்கள்" என்று பரிஹாஸம் பண்ணுகிறார்களாம். அதாவது பெருமாள் உன்னைத் திருவடியிலே சாத்திக் கொண்டிருக்கிறார். சிவன் உன்னைத் தலையில் வைத்துக்கொண்டிருக்கிறார் என்று அபிப்ராயம். இது ஸ்தோத்ரம் தான். அதைப்பரிஹாஸமாகச் சொல்லுகிறார்கள், அந்த வார்த்தையைக் கேட்டு நீ சிறிக்கிறது போலிருக்கிறது. (49)

(௫௰) ரஜோபவாரணரக்ஷா ஸா தே விதயாதுபா
பாதீம் பாஹி | யந்நளக்தகவ்யூஹாஹி: ஶ்வேதஶீவதி
வ ஸஹஸ்ரஜாஶீவழி ||

இதி ஸ்ரீகவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீ ரங்கநாத பாதுகாஸஹஸ்ரே முக்தாபத்ததிரஷ்டாதசீ

———o———

ஸா-அந்த, ரங்கேசஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, சரணரக்ஷா-திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையானது, மே-எனக்கு, ஸநாதநீம்-அழிவில்லாத, ஸாத்த்வீம்-வெளுப்பை, (பாபங்களில்லாமையை) விதத்யாத்-உண்டு பண்ணவேண்டும். யஸ்யா:-யாதொரு பாதுகையினுடைய, மௌக்திக-முத்துக்களுடைய, ப்ரபாபி:-காந்திகளாலே, ஸஹ்யஜா-காவேரியினுடைய, த்வீபம்-திட்டானது, ஸ்ரீரங்கமானது, ஸ்வேதத்வீபவத்-ஒரே வெளுப்பான சுவேத த்வீபமென்று சொல்லப்படுகிற இடம் போலிருக்கிறதோ.

(கருத்து) சுவேதத்வீபம் என்று ஒரு இடம் இருக்கிறதாம். அங்கே யிருப்பவர்களெல்லாரும் பெருமாளைக் கண்ணாலே காண்கிறார்களாம். சுவேதமென்றால் வெளுப்பு என்று அர்த்தம். அதனால் இந்த இடம் வெளுப்பாக இருக்கிறது என்று ஏற்படுகிறது. பாதுகையிலே முத்துக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளினுடைய காந்தியினாலே ஸ்ரீரங்கம் வெளுப்பாய் இருக்கிறது. அதனால் சுவேதத்வீபம் போலிருக்கிறது. இரண்டு காவேரிக்கும் நடுவிலிருப்பதாலே ஸ்ரீரங்கத்தைத்திட்டு என்று சொல்லுகிறது. அப்பேர்ப்பட்ட பாதுகை என்னுடைய எல்லா பாபங்களையும் போக்கடிக்கவேணும். ஆழ்வார் பாசுரங்கள் சொல்லுகிற இடமாக இருப்பதாலே தமிழ் தேசமெல்லாமே சுவேதத்வீபம் மாதிரி என்று சொல்லலாம். (50)

பதினெட்டாவதான முக்தாபத்ததி முற்றிற்று.



ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ||

ஸ்ரீ ரங்கநாயகபாதுகாஸஹஸ்ரே

ஏகோநவிம்ஶ: மரகதபத்ததி: ||.



(௬௬௧) வந்தே காருத்மதீம் வ்ருத்த்யா மணிஶ்ரேணீபி:
பாதுகாம் | யயா நித்யம் துலஸ்யேவ ஹரித
த்வம் ப்ரகாஶ்யதே ||.

வ்ருத்த்யா-வேலையினாலும், மணி-ரத்னங்களுடைய, ஶ்ரேணீபி:-கூட்டங்களாலும், காருத்மதீம்-கருடனைச் சேர்ந்ததாக இருக்கிற, பாதுகாம்-பாதுகையை, வந்தே-ஸேவிக்கிறேன். யயா-யாதொரு பாதுகையினாலே, துலஸ்யேவ-துளஸியினாலே போல, நித்யம்-எப்பொழுதும், ஹரிதத்வம்-பெருமாளாகிற உண்மையான பொருளானது, பச்சையாக இருக்குகையானது, ப்ரகாஶ்யதே-நன்றாய்க் காட்டப்படுகிறதோ.

(கருத்து) இப்போது பாதுகையில் பச்சை ரத்னங்கள் இழைத்திருப்பதைப்பற்றி 20 சுலோகங்களாலே சொல்லுகிறார். பாதுகை கருடனுடைய வேலையைச் செய்கிறது. கருடனுடைய வேலை பெருமாளை எழுந்தருளப் பண்ணுகிறது. பாதுகையில் கருடனுடைய ரத்னமும் இழைத்திருக்கிறது. பச்சை ரத்னத்தை கருடப்பச்சை என்று சொல்லுகிறார்கள். பாதுகை பெருமாளை வீதியில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து கோவிலுக்குள் வரத்தகாத மனிதர்களுக்கும் ஜந்துக்களுக்கும் காட்டுகிறது. பெருமாள் கருடன் மேலேறி ஆகாசத்தில் எழுந்தருளினால் பூமியிலிருக்கிற நம்மைப்போலொத்தவர்களுக்கு ஸேவைஸாதிக்கிறது ரொம்ப கஷ்டம். பாதுகையில் எழுந்தருளினால் ஸுகமாக ஸேவையாகும். பாதுகைகள் துளஸிமாதிரி பச்சையாகவும், மிகவும் பரிசுத்தமாயும், எல்லா பாபங்களையும் போக்கி எல்லா ஸுகங்களையும் கொடுத்துக்கொண்டும் பெருமாளுக்கு மிகவும் இஷ்டமாகவும் இருக்கிறது. அப்பேர்ப்பட்ட பாதுகையை ஸேவிக்கிறேன். கரு

டன் என்றால் வேதம். ஆழ்வார் வேதம்போல் திருவாய்மொழியைக்கொண்டு எல்லாருக்கும் பெருமாளை நன்றாய்ஸுலபமாகத்தெரியப்படுத்தி யிருக்கிறார். நாம் வேதங்களைக்கொண்டு பெருமாளை தெரிந்துகொள்ளுவது கஷ்டம். அவர் வேதத்திலிருக்கிற ரத்னம் போன்ற ஸாரமான அர்த்தத்தை அறிந்திருக்கிறார். (1)

(௧௫௨) ஸவிலாஸகதேஷு ரங்கபர்த்து:
த்வதயீநேஷு பஹிஷ்க்ருதோ கருத்மாந் ।
அயி விந்ததி நிர்வ்ருதிம் கதஞ்சித்
நிஜரத்நைஸ்த்வயி பாதுகே நிவிஷ்டை: ॥

ஹே பாதுகே-வாராய் பாதுகையே, ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, த்வதயீநேஷு-உன் அதீனமாயிருக்கிற, ஸவிலாஸ-விளையாட்டோடு கூடிக்கொண்டிருக்கிற, கதேஷு-ஸஞ்சாரங்களிலே, பஹிஷ்க்ருத:-தள்ளப்பட்டிருக்கிற, கருத்மாந்-கருடன், த்வயி-உன்னிடத்திலே, நிவிஷ்டை:-இழைக்கப்பட்டிருக்கிற, நிஜரத்நை:-தன்னுடைய ரத்னங்களாலே, (அதாவது பச்சைக்கற்களாலே) கதஞ்சித்-கஷ்டப்பட்டு, நிர்வ்ருதிம்-ஸந்தோஷத்தை, விந்ததி-அடைகிறான்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச் சாத்திக் கொண்டு பெருமாள் உல்லாஸமாக எழுந்தருளும்போது கருடனுக்குத் தன் பேரில் எழுந்தருளவில்லையே என்று வருத்தமாயிருக்கிறது. அப்போது 'நம்முடைய ரத்னம்தானே பாதுகையிலே இழைத்திருக்கிறது. அதன் மேலேதான் பெருமாள் எழுந்தருளுகிறார். பாதகமில்லை' என்று மிகவும் சிரமப்பட்டு ஸமாதானம் பண்ணிக் கொள்ளுகிறார். வாஹனங்களில்லாமல் திருச்செவியிலே (அதாவது தோளுக்கினியானில்) எழுந்தருளும்போது பாதுகையில் எழுந்தருளுவதாக வைத்துக் கொள்ள வேண்டியது. ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவாய் மொழியைச் சொல்லும்போது வேதம் தன்னைச் சொல்லவில்லையே என்று மிகவும் வருத்தப்பட்டு, பிறகு "தன் அர்த்தத்தைத் தானே திருவாய்மொழி சொல்லுகிறதே" என்று நினைத்து ஸந்தோ

தும் ஸம்ஸ்க்ருதமாயில்லாதபோனாலும் அர்த்தம் தன்னுடையது தானே என்று நினைக்கிறது. (2)

(கூகூந) ஸதயே மணிபாதுகே முராரே: ஶுத்தாந்தபரிசாரிகா முஹுஸ்தே | ஹரிதாந் ஹரிதஶ்மனாம் மயூகாந் துளஸீபல்லவஶங்கயா க்ஷிபந்தி ||

ஸதயே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! முராரே:-பெருமாளுடைய, ஶுத்தாந்தபரிசாரிகா:-தாயார் ஸன்னிதியிலிருக்கிற அசடான வேலைக்காரிகள், தே-உன்னுடைய, ஹரிதஶ்மனாம்-பச்சை ரத்னங்களுடைய, ஹரிதாந்-பச்சையாயிருக்கிற, மயூகாந்-காந்திகளை, துளஸீபல்லவஶங்கயா-துளஸிக் கொழுந்தோ என்கிற சங்கையினாலே, முஹு:-அடிக்கடி, க்ஷிபந்தி-தள்ளுகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் பச்சை ரத்னம் இழைத்திருக்கிறது. உன்னைச் சாத்திக் கொண்டு பெருமாள் தாயார் ஸன்னிதிக்கு எழுந்தருளுகிறார். தாயாருக்கு வேலைக்காரிகள் இருக்கிறார்கள். அவர்கள் அசடாக இருக்கிறார்கள். அங்கே பச்சை ரத்னக் காந்தி பரவுகிறதானது துளஸிபோலிருக்கிறது. ஐயோ! துளஸிமாதிரி இருக்கிறதே, காலில் படப்போகிறதே என்று அந்தக் காந்தியை தள்ளப் போகிறார்கள். இது காந்தி என்று தெரியவில்லை. தள்ளியும் போகவில்லையே என்று விழிக்கிறார்கள். பணக்காரர் வீட்டிலே பச்சைக் கண்ணாடிகள் சிகப்புக் கண்ணாடிகள் கூடத்துச் சுவர்களிலே வைத்திருப்பார்கள். பட்டிக்காட்டான் உள்ளே போனால், வெய்யில் உள்ளேபோது மேலே சிவப்பாக அடிக்கும். காவியா என்று அடிக்கடி தள்ளிக் கொள்ளுவன். ஆழ்வார் ஒரு ஸமயம் பெருமாளை அதட்டுகிறார். தெரியாதவர்களுக்கு ஐயோ இப்படி அதட்டுகிறாரே என்று தோன்றும். ரஸிகர்கள் ஸந்தோஷப்படுவர்கள். ஸ்ரீராமன் ஸீதையைக் காட்டிற்கு அழைத்துப் போகமாட்டேன் என்றார். ஸீதை பலதடவை சொன்னாள். அப்பவும் கேட்கவில்லை. "நீ புருஷனோ? உடம்பிலே புருஷனை ஒழிய வேலையிலே பொம்மனாட்டிதான்,'

என்று சொன்னாள். அது பெருமாளுக்கு மிகவும் ஸந்தோஷமாயிருந்தது. அதைப்போல ஆழ்வாரும் ஸாதிக்கிறார். [3]

(கூகூச) ஹரிதஸ்ஸஹஸா ஹரிந்மணீநாம் ப்ரபயா
ரங்கநரேந்த்ரபாதரக்ஷே | துளஸீவநஸம்பதம்
ததாதி க்வசி ஸத்பிர் நிஹித: ப்ரஸூநராஶி: ||

ஹே ரங்கநரேந்த்ரபாதரக்ஷே-வாராய் ஸ்ரீ ரங்கநாதனுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஹரிந்மணீநாம்-பச்சை ரத்னங்களுடைய, ப்ரபயா-காந்தியினாலே, ஸஹஸா-உடனே, ஹரித:-பச்சையாயிருப்பதும், ஸத்பி:-பக்தர்களாலே, நிஹித:-சாத்தப்பட்டிருக்கிறதுமான, ப்ரஸூந-மல்லிகை முதலான பூக்களுடைய, ராஶி:-கூட்டமானது, துளஸீ-துளஸிகளுடைய, ஸம்பதம்-சோலையை, ததாதி-தரிக்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலே பச்சை ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. உன்மேலேமல்லிகை முல்லைமுதலானவெள்ளைப் புஷ்பங்களைக் கொண்டுவந்துஸமர்ப்பிக்கிறார்கள். அந்தப்பூக்களில்இந்தபச்சைரத்னத்தின்காந்திஅடித்தது அவைகளெல்லாம்பார்க்கிறவர்களுக்குத்துளஸியைப்போலிருக்கிறது. இப்போதுகூட இராஜாக்களிடத்தில் அந்தமாதிரி பச்சை இருக்கிறதாம். எண்ணத்தினுடைய வித்தியாஸத்தினாலே கோபத்தைக் கொடுக்கக்கூடிய வார்த்தை ஸந்தோஷத்தைக் கொடுக்கிறது. [4]

(கூகூரு) ப்ரஸாதயஸீ மணிபாதுகே த்வம் விக்ஷேப
யோகேந விஹாரவேலாம் | ஹரிந்மநோஜ்ஞா ஹ
ரிகாந்திபிர்நாஸ்ய ஸமுத்ரஸ்ய ஸைவமுக்தாஜநீவ ||

ஹேமணிபாதுகே! வாராய் கல்லிழைத்த பாதுகையே! ஹரிபி:-பச்சை ரத்னங்களாலே, மநோஜ்ஞா-இன்பமாயும், விஹாரவேலாம்-பெருமாள்எழுந்தருளுகிறஸமயத்தை, (ஸமுத்திரத்தினுடைய கலக்கத்தை), விக்ஷேபயோகேந-திருவடியை உன்னிடத்தில் வைக்கிறதினாலே, ப்ரஸாதயஸீ-ஸந்தோஷப்படுத்துகிற

வளாயும் (தெளியப்பண்ணுகிறவளாயுமிருக்கிற) த்வம்-நீ, ஹரிகாந்திஸிந்தோ:-பெருமாளாகிற அழகு ஸமுத்ரத்திற்கு, சைவலமஞ்ஜரீவ-வேலம்பாசிக்கொத்துபோல, ஸம்த்ருச்யஸே, காணப்படுகிறாய்.

கருத்து) ஏ பாதுகையே! உன்னைச் சாத்துக்கொண்டு பெருமாள் வெளியிலே எழுந்தருளுகிறார். அப்போது அவரை நீ மிகவும் ஸந்தோஷப்படுத்துகிறாய். நல்ல உயர்ந்த செருப்பாக இருந்தால் அதைப் போட்டுக்கொண்டு நடக்க மிகவும் ஸந்தோஷமாயிருக்கும். உன் மேலே பச்சை ரத்னம் இழைத்திருக்கிறது. பெருமாள் அழகுக்குஒருஸமுத்திரமாக இருக்கிறார். அந்தஸமுத்திரத்திற்கு நீ ஒருபாசிக் கொத்து போலிருக்கிறாய். வேலம் பாசிஉள்ள ஒரு குளத்திலே ஜலம் தெளிந்திருக்கும். ப்ரஸாதயந்தீ என்பதற்கு ஜலத்தைத் தெளியப் பண்ணுகிறதென்று அர்த்தம். ஜனங்கள் எல்லையில்லாத தப்புகளைப் பண்ணும்போது பெருமாளுக்கு அவர்களிடத்தில் மிகவும் கோபம் வந்து விடுகிறது. அப்போது ஜனங்களைத் தொந்தரவு பண்ணி விளையாட ஆரம்பிக்கிறார். ஆழ்வார் முதலான ஆசாரியார் அப்போது நல்லவார்த்தை சொல்லி பெருமாளுடைய கோபத்தைப் போக்கி ஸந்தோஷப்படுத்துகிறார்கள். [௫]

(௱௫௩) வ்யதாஸி ரங்கதுர்யபாதரக்ஷே ஹரின்மணீ
நாம் ப்ரபயா ஸமக்ரயா | ஶிகாப்ரதேசேஷு ச்ருதி
ஸீமந்தினீநாம் மங்கல்யதூர்வாங்குரதாமபங்க்திம் ||

ரங்கதுர்யபாதரக்ஷே-ஸ்ரீரங்கநாதனுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! த்வம்-நீ, ஹரின்மணீநாம்-பச்சை ரத்னங்களுடைய, ஸமக்ரயா-விளங்காநின்றிருக்கிற, ப்ரபயா-காந்தியினாலே, ச்ருதிஸீமந்தினீநாம்-வேதங்களாகிற பெண்களுடைய, ஶிகாப்ரதேசேஷு-தலைகளிலே, மங்கல்ய-கல்யாணத்தைக் காட்டுகிற, தூர்வாங்குர-அருகம்பில் கொழுந்துகளாலே செய்யப்பட்ட, தாம-மாலையினுடைய, பங்க்திம்-வரிசையை, வ்யதாஸி-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலே பச்சை ரத்னம் இழைத்திருக்கிறது. அதனாலே நீ பச்சையாக இருக்கிறாய். வேதமாகிற பெண் உன்னைத் தலையிலே வைத்துக்கொள்ளுகிறது. கல்யாண காலத்தில் பெண்கள் அருகம்புல்லைத் தலையிலே வைத்துக் கொள்ளுவார்கள். வேதங்களாகிற ஸ்திரீகளுக்கு நீ அருகம்புல்லு போலிருக்கிறாய். வேதங்கள் பெருமாளைச் சொல்லுகிறது. அதினாலே வேதங்களுக்குப் பெருமாள் புருஷன். இப்போது இருக்கிற அறியாத ஜனங்கள் வேதத்திற்குக் கோணலாக அர்த்தம் சொல்லுகிறபோது வேதங்களுக்குப் புருஷனைப் பிரிக்கிறது போலிருக்கிறது. வேதங்களுக்கு அந்த ஜனங்களைப் பார்த்தால், ஸீதைக்கு ராவணனைப் பார்க்கிறது போலிருக்கிறது. ஆழ்வார் தன் பாசுரங்களுக்குப் பெருமாள் தானென்று அர்த்தம் சொல்லும்போது, வேதங்களுக்கு ஆழ்வாரைப் பார்க்கும்போது, ஸீதைக்கு ஹநுமாரைக் கண்டாப்போலிருக்கிறது. ஸந்தோஷமடைகிறது. வேதங்கள் ஆழ்வார் பாசுரங்களைப் பூப்போலே சூட்டிக்கொள்ளுகின்றன. [6]

(௬௬௭) அவிச்சேதரஶ்மிநியதைர்யுதா ஹரித்பி:
ஸத்பதேந கதிமதீ மணிபாதுகே |
ஸந்த்ருஶ்யஸே ஸவித்ருமண்டலமத்யபாஜோ
ரங்கேஶ்வரஸ்ய ரதஸம்பதிவாபரா த்வம் ||

ஹரிந்மணிபாதுகே-வாராய் கல்லிழைத்த பாதுகையே, அவிச்சேத-நடுவில் விட்டுப்போகாமலிருக்கிற, (1) ரஶ்மி-கிரணங்களாலே, நியதை:-தவராமலிருக்கிற, (2) ஹரித்பி:-பச்சை ரத்னங்களோடு, யுதா-சேர்க்கப்பட்டும், (3) ஸத்பதேந-நல்ல வழியினாலே, கதிமதீ-நடையை யுடைத்தாயிருக்கிற, த்வம்-நீ, ஸவித்ருமண்டலமத்யபாஜ:-ஸூர்யமண்டலத்தின் நடுவை அடைந்திருக்கிற, ரங்கேஶ்வரஸ்ய-ரங்கநாதனுக்கு, அபரா-ஸூரியனுடைய தேரைக்காட்டிலும் வேறாக இருக்கிற, ரத-தேராகிற, ஸம்பதிவ-சொத்துப்போல, ஸந்த்ருஶ்யஸே-காணப்படுகிறாய்.

(1) கயிறாலே கட்டப்பட்டிருக்கிற, (2) பச்சைக் குதிரைகளோடு, (3) ஆகாசமார்க்கத்தினாலே, என்று வேறு அர்த்தம்.

(கருத்து) ஓ பாதுகையே! உன் மேலே உயர்ந்த காந்தியுள்ள பச்சைரத்னங்கள் இழைத்திருக்கின்றன. உன்னைச் சாத்திக்கொண்டு பெருமாள் நல்லவழியிலே எழுந்தருளுகிறார். உன்னைப் பார்த்தால், ஸூரியனுடைய தேர் மாதிரி இருக்கிறது. சூரியமண்டலத்திலே பெருமாள் எழுந்தருளியிருக்கிறார் என்று சொல்லியிருக்கிறது. ஹரித் என்றால் பச்சைக்கல்லுக்கும் குதிரைக்கும் பெயர். 𑌸𑌤𑍍𑌪𑌥 என்று நல்லவழிக்கும் ஆகாசத்திற்கும் பெயர். ஆசாரியர்களைப் பெருமாளுக்குத் தேராகச் சொல்லுகிறது. ஆசாரியர்கள் வழியாகத்தான் பெருமாள் ஒருவரிடம் வருகிறார். அதாவது ஆசாரியர்களாலேதான் பெருமாளை ஜீவன் அறிகிறான்; நினைக்கிறான்; அடைகிறான். [7]

(௬௬௮) 𑌶𑍍𑌯𑌾𑌮𑌾𑌯𑌮𑌾𑌨𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌵𑌨𑍋𑌪𑌕𑌣𑍍𑌠𑌾𑌃
𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌪𑌦𑌾𑌵𑌨𑌿 𑌹𑌰𑌿𑌨𑍍𑌮𑌣𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌾𑌃 ।
𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌶𑌾𑌦𑍍𑌵𑌲𑌵𑌤𑍀𑌂 𑌪𑍍𑌰𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂
𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌸𑍍𑌯 𑌰𑍁𑌚𑌿𑌰𑌾𑌂 𑌨𑌖𑌰𑌶𑍍𑌮𑌿𑌗𑌙𑍍𑌗𑌾𑌂 ॥

𑌪𑌾𑌦𑌾𑌵𑌨𑌿-வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, 𑌶𑍍𑌯𑌾𑌮𑌾𑌯𑌮𑌾𑌨-கருப்பாயிருக்கிற, 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤-உபநிஷத்துக்களாகிற, 𑌵𑌨-காடுகளுடைய, 𑌉𑌪𑌕𑌣𑍍𑌠𑌾𑌃-ஸமீபத்தையுடைய, 𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌾𑌃-உன்னுடையவைகளான, 𑌹𑌰𑌿𑌨𑍍𑌮𑌣𑌯𑌃-பச்சை ரத்னங்கள், 𑌰𑍁𑌚𑌿𑌰𑌾𑌂-இன்பமாயிருக்கிற, 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌸𑍍𑌯-பெருமாளுடைய, 𑌨𑌖-நகங்களுடைய, 𑌰𑌶𑍍𑌮𑌿-காந்தியாகிற, 𑌗𑌙𑍍𑌗𑌾𑌂-கங்கையை, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂-எப்போதும், 𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤-ஸமீபத்திலே, 𑌶𑌾𑌦𑍍𑌵𑌲𑌵𑌤𑍀𑌂-பச்சைப்புல்லோடுகூடிய இடமுள்ளதாக, 𑌪𑍍𑌰𑌥𑌯𑌨𑍍𑌤𑌿-காண்பிக்கின்றன, பிரகாசப்படுத்துகின்றன.

(கருத்து) ஓ பாதுகையே! உன் மேலே பச்சை ரத்னங்கள் ழைத்திருக்கின்றன. அவைகள் தங்களுடைய பச்சைக் காந்தியினாலே, உபநிஷத்துக்களாகிற காடுகளைக் கருப்பாகப் பண்ணுகின்றன. பாதுகையைப்பெருமாள் திருவடியில் சாத்திக்கொள்ளுகிறார். திருவடி நகங்களுடைய காந்தி கங்கையைப்போலே இருக்

கிறது. பச்சை ரத்னங்களின் காந்தியைப் பார்க்கும்போது கங்கைக் கரையிலே ஏராளமான புல் முளைத்திருக்கிறது போலி ௫௭
ருக்கிறது.

(௬௬௬) உத்திஸ்ய காமபி மதிம் மணிபாதரக்ஷே
ரங்கேஸ்வரஸ்ய சரணே விநிவேஸிதாத்மா।
ப்ராயோ ஹரிந்மணிருசா ப்ருஸஸக்தபங்க்தா
ப்ராதுஷ்கரோதி பவதீ துளஸீவநாநி ॥

மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே, காமபி-இன்னதென்று சொல்லமுடியாத அதாவது மிகவும் உயர்ந்ததான, மதிம்-அடைய வேண்டிய இடத்தை, உத்திஸ்ய-உத்தேசித்து, ரங்கேஸ்வரஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, சரணே-திருவடியிலே, விநிவேஸித-வைக்கப்பட்டிருக்கிற, ஆத்மா-தன்னை உடைத்தாயிருக்கிற, (ஸமர்ப்பிக்கப்பட்டிருக்கிற ஜீவாத்மாவை உடைத்தாயிருக்கிற,) ப்ருஸ-கெட்டியாயிருக்கிற, ஸக்த-ரத்னவரிசைகளுடைய, பங்க்தா-சேர்க்கையை உடைத்தாயிருக்கிற, (ஸக்திபங்க்தா-பிரீதியினுடைய சேர்க்கையை யுடைத்தாயிருக்கிற,) பவதீ-நீ, ஹரிந்மணி-பச்சை ரத்னங்களுடைய, ருசா-காந்தியினாலே, ப்ராயஃ-அநேகமாய், துளஸீவநாநி-துளஸித் தோட்டங்களை, ப்ராதுஷ்கரோதி-பிரகாசப்படுத்துகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலே பச்சை ரத்னமிழைத்திருக்கிறது. உன்னைப் பெருமாள் சாத்திக்கொண்டு எழுந்தருளுகிறபோது, சுற்றிலும் பச்சையாகப் போகிறது. அதைப் பார்த்தால், ஒருவன் பெருமாளுடைய நிலையான இடத்தை அடைவதற்காக, பெருமாளிடத்தில் சரணாகதி பண்ணி பூமியிலிருக்கும் காலத்தில் துளஸித்தோட்டம் போட்டிருக்கிறது போலிருக்கிறது. உலகத்திலிருக்கிறவர்களுக்கு நல்ல காரியங்களைச் செய்யவேணுமென்று காட்டிக்கொடுப்பதற்காக பெருமாளும் நித்யஸூரிகளும் பூமியிலவதரித்து நல்ல காரியங்களைச் செய்கிறார்கள்

(௧௭௦) ஸேவாஸமாகதவதாம் த்ரிதசேச்வராணாம்
பூஷாமணிப்ரகரசாலிஷு மௌலிஷு த்வம் ।
ஸம்வர்த்தயஸ்யஸுரமர்தந பாதரக்ஷே
ஸ்வாநாச்மகர்பருசிபி: சுகபங்க்திசோபாம் ॥

அஸுரமர்தந-அஸுரர்களைக் கொல்லுகிற பெருமானுடைய, பாதரக்ஷே-வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, த்வம்-நீ, ஸேவாய-பெருமானை ஸேவிப்பதற்காக, ஸமாகதவதாம்-வந்திருக்கிற, த்ரிதசேச்வராணாம்-தேவதைகளுக்கு ராஜாவான இந்திரன் முதலானவர்களுடைய, பூஷாமணி-அலங்காரமான ரத்னங்களுடைய, ப்ரகரசாலிஷு-கூட்டங்களை அடைந்திருக்கிற, (முத்தின பழுத்த நெற்கதிர்கள் உள்ளதான,) மௌலிஷு-கிரீடங்களிலே, ஸ்வாந-தன்னுடையதாயிருக்கிற, அச்மகர்ப-பச்சை ரத்நங்களுடைய, ருசிபி:-காந்தியினாலே, சுக-கிளிகளினுடைய, பங்க்தி-வரிசையினுடைய, சோபாம்-அழகை, ஸம்வர்த்தயஸி-இருக்கும்படி செய்கிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! உன் பேரில் பச்சை ரத்னமிழைத்திருக்கிறது. உன்னை இந்திரன் முதலான தேவதைகள் ஸேவிக்க வருகிறார்கள். அவர்கள் தலைகளில் சிவப்பு ரத்னங்கள் இழைத்த கிரீடங்களிருக்கின்றன. அவைகளில் உன் பச்சை ரத்னகாந்தியடிக்கிறபோது, விளைந்துபழுத்தபயிர்களில் கிளிகள் வந்துஉட்கார்ந்திருக்கிறதுபோலிருக்கிறது. நல்ல ஆசாரியர்கள் சிஷ்யர்களுக்கு நல்ல ஸங்கதியை சொல்லிக்கொடுக்கிறபோது, அவர்கள் நல்ல ஸங்கதிகளை அறிவதையே உயர்ந்தப் பிரயோஜனமாக நினைக்கிறார்கள்.

(௧௭௧) ப்ரவாலிணா தநுபவாஸவ்ருதீ நிவிஷ்டசேஷே
ஸம்ப்ருதகஸுகரூதாநாம் ஸாம்ஸேஜாதம்ஸூஜாதை: ।
பஸ்வதிவிபூதா த்வம் தஸ்ய பாணே நிஷண்ணம்
மதுரிபுபதரக்ஷே பத்மயோநிர்மணாபாத் ॥

மதுரிபு-மது என்கிற அஸுரனுக்குச்சத்ருவான பெருமானுடைய, பதரக்ஷே-வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற

பாதுகையே, பசுபதி-சிவனாலே, விப்ரு ப்படிருக கிற, கூடம்-நீ, உரவரிண த, அப்போதுதான் உண்டாயிருக்கிற, உருவ-நாவஜூரீ-அருகம்புல் கொடியைக்காட்டிலும், நிவி-சேஷ-பேதமில்லாமலிருக்கிற, ஸாம்ஸம்ஜஸ-பருத்திருக்கிற, ஸாதகமரகதாநாம்-பச்சைத் துணுக்குகளுடைய, ஜாலைஃ-கூட்டங்களாலே, தஸ்ய-அந்த சிவனுடைய, பாணௌ-கையிலே, நிஷண்ணம்-இருக்கிற, ஹரிணஶாவம்-மான்குட்டியை, வஞ்சயஸி-ஏமாத்துகிறாய் (இழுக்குகிறாய்.)

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலே பச்சை ரத்னம் இழைத்திருக்கிறது. அதனுடைய காந்தியைப் பார்த்தால் அருகம்புல் மாதிரி இருக்கிறது. சிவன் உன்னைத் தலையிலே சாத்திக் கொள்ளும்போது கையிலே மான் குட்டியை வைத்துக்கொண்டிருக்கிறார். அது இந்தக் காந்தியைப் பார்த்து புல்லென்று நினைத்து நாக்கை நீட்டுகிறது. நாக்குக்கு ஒன்றும் அகப்படவில்லை. அதை நீ ஏமாத்துகிறாய். நல்ல ஆசாரியர்கள் ஸாதிக்கிற உயர்ந்த ஸங்கதிகளை அறிவதே கஷ்டம். அந்தப்படி நடக்கிறதென்றால் ரொம்ப புண்ணியத்தாலே வரக்கூடியது. [11]

(கஎஉ) ஹரிசரணஸரோஜந்யாஸயோக்யம் ஸவத்யாஃ
ப்ரகுணமபிலஷந்த்ய: வர்ணமுத்ராஸம் துளஸ்யஃ ।
ப்ரதிதிநமுபஹாரை: பாதுகே தாவகாநாம்
ஶரதகமரகதாநாமாஶ்ரயந்தே மயூகாந் ॥

பாதுகே-பாராய் பாதுகையே, துளஸ்யஃ-துளஸிகள், ஹரி-பெருமாளுடைய, சரணஸரோஜ-தாமரைப்பூப்போன்ற திருவடியினுடைய, ந்யாஸயோக்யம்-வைக்கத்தகுந்ததாயிருக்கிற, ப்ரகுணம்-மிகவும் உயர்ந்ததான, ஸவத்யாஃ-உன்னுடைய, வர்ண-பச்சை ரூபத்தினுடைய, ஸாம்யம்-அடைவதை, அபிலஷந்த்யஃ ஆசைப்பட்டவைகளாய்க்கொண்டு, ப்ரதிதிநம்-தினந்தோறும், உபஹாரைஃ-தங்களுடைய தளங்களாகிற காணிக்கையை ஸமர்ப்பித்து, தாவகாநாம்-உன்னுடையவைகளாயிருக்கிற, ஶரதக-

பச்சை ரத்னங்களுடைய, மயூகாநாம்-துணுக்குகளுடைய, மயூக வாநு-கிரணங்களை, க்ஷுர்யதே-அடைகின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன் மேலிழைத்திருக்கிற பச்சை ரத்தின காந்திகள் ரொம்பஆச்சரியமாக இருக்கின்றன. துளஸிகள் அந்த காந்தியைப்பார்த்து, "காந்தி மிகவும் உயர்ந்ததாயிருப்பதால் தான், அந்தப்பாதுகையை பெருமாள் தன் திருவடியிலே சாத்திக் கொள்ளுகிறார். அந்தமாதிரி காந்திநமக்கும்வேணுமெ"ன்று ஆசைப்பட்டுத்துளஸிகள் தினந்தோறும் தங்களுடையதளங்களைகாணிக்கையாக ஸமர்ப்பித்து,உன்னுடைய பச்சைரத்னங்களைஸேவிக்கின்றன. உலகத்தில்ஆசாரியர்கள்-தயை, பொறுமை,ஒழுங்கு, வணக்கம், தைவம், அதைச் சேர்ந்தவர்களிடத்தில் நிஜமானப்ரீதி, தனக்குஇருக்கிற கெடுதிகளை நினைத்து-எந்தவேலையில் என்னகெடுதி வருமோஎன்று நினைத்து–பயம், ஒருஸங்கதியைப்பற்றி யோசனை, எப்போதும் தெய்வத்தினுடைய ஸேவை—இவை முதலிய நல்ல குணங்களால் நிறைந்திருக்கிறார்கள். அதனால் பெருமாள் அவர்களுக்குச் சொன்னபடி கேட்கிறார். இந்த ஸங்கதியை நல்ல புண்ணியம் பண்ணின ஜனங்கள் கவனித்து நாமும் அந்தமாதிரி ஆகவேணுமென்று ஆசைப்பட்டு, அவர்களிடத்தில்தங்களிடமிருக்கும் பதார்த்தங்களைப்பக்தியுடன்ஸமர்ப்பித்து,தினந்தோறும்அவர்களை ஸந்தோஷப்படுத்துகிறார்கள். (12)

(௯௭௩) ஹரிதமணிமயூகைர் கலிதாம்நாயகந்தை:
விஹரஸி சரணரக்ஷே ஜாதகௌதூஹலா த்வம் ।
தநுஜதமநலீலாதாரிகாணாம் ஸுதாராம்
ததநகதுலஸீவத்ஸிக்தம் பாஸி மௌலௌ ஶ்ருதீநாம் ॥

பாஸி-விளங்காநின்றிருக்கிற, சரணரக்ஷே-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே, த்வம்-நீ, ஜாத-உண்டாயிருக்கிற, கௌதூஹலா-ஸந்தோஷத்தை உடையவளாய்க்கொண்டு, கலித-அடையப்பட்டிருக்கிற, ஆம்நாய-உபநிஷத்துக்களுடைய கந்த-வாஸனையை உடையதான, ஹரிதமணி-பச்சைரத்னங்களுடைய, மயூகை:-காந்திகளாலே, தநுஜதமந-அஸுரர்களைக்

சொல்லுகிற பெருமாளுடைய, க்ரீடாஶாரிகாணாம்-விளையாடுவதற்குக் குழந்தைகளாயிருக்கிற, ஶ்ருதீநாம்-வேதமாகிற பெண்களுடைய, உத்தம்ஸே-தலையிலே, அலககலிகாநாம்-மயிர்க்கொழுந்துகளுடைய, பங்க்திம்-வரிசையை, திஶஸி கொடுக்கிறாய்.

(கருத்து) பாதுகையே! உன் மேலே பச்சை ரத்னங்களிழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தி எப்போதும் பெருமாளுடன் விளையாடிக்கொண்டிருக்கிற வேதமாகிற பெண்கள் தலையில்படுகிறது. அதைப்பார்த்தால் நீ மருக்கொழுந்தைச் சூட்டினாப்போலிருக்கிறது. அந்தக் காந்திகளில் உபநிஷத்து வாஸிக்கிறது. அதாவது அந்த காந்தியை உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. வேதம் பெருமாளைச் சொல்லுகிறது என்கிற ஸங்கதி, வேதத்திற்குப் பலர் பலவிதமாக அர்த்தம் சொல்லுகிறபடியினாலே ஜனங்களாலறிய முடியவில்லை. அதை அறிந்தால்தான் ஜீவன்களுக்குஸுகம். ஜீவன்களுடைய ஸுகத்திற்காகத்தான் வேதங்களைப்பெருமாள் ஏற்படுத்தினார். அதினாலே அறியாததைபற்றிப் பெருமாளும் வேதங்களும் வருத்தப்படுகின்றன. ஆழ்வார் உபநிஷத்தின் அர்த்தங்களைத் தமிழ்பாஷையில் எல்லாருக்கும் தெளிவாகஸாதித்தபிறகு எல்லாரும் ஸௌக்கியத்தை அடைகிறார்கள். அதனால் வேதங்கள் ஆழ்வார் பாசுரங்களைத் தலையிலே தூக்கிக் கொண்டாடுகின்றன. (13)

(கூஎச) அயிதபஹுஶாகைர் மரகதப்ரஸூதை:
த்வதுபரி ஶௌரே: பதாக்ரே ஶ்யாமலைரம்ஶு
ஜாலை: | அநிதரஶரணாநாம் அந்தரங்கோதஶாலாம்
காநநம் கிம் ஜநயஸி த்வம் கிம் காரணம் பாதுகே ||

ஶௌரே:-பெருமாளுடைய, பதாக்ரே-திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! த்வம்-நீ, அயித-அடையப்பட்டிருக்கிற, பஹு-அநேகமான, ஶாகை:-வேதபாகத்தையுடையதாயும் (கிளைகளையுடைதாயும்), ஶ்யாமலை:-கருப்பாக இருக்கிற, மரகத-பச்சைக் கற்களாலே, ப்ரஸூதை:-உண்டுபண்ணப்பட்டிருக்கிற, அம்ஶு-கிரணங்களுடைய, ஜாலை:-கூட்டங்களாலே, அநிதரஶரணாநாம்-வேறு காப்பாற்றுகிறவர்கள் இல்லாமலிருக்

கிற, (வேறுப்பிட்டியில்லாமலிருக்கிற,) ஆரண்யகாநாம்-காட்டில் சொல்லவேண்டிய வேதங்களுக்கு, காட்டிலேயே இருக்கிறவர்களுக்கு, கிமபி-இன்னதென்று சொல்லமுடியாத, (அதாவது மிகவும் உயர்ந்ததான) கீசகாரண்ய-மூங்கில் காடாகிற, உபதுர்கம்-கோட்டையை, ஜநயஸி-உண்டுபண்ணுகிறாய். நூநம்-நிச்சயம்.

(கருத்து) பாதுகையே! உன் மேலே பச்சை ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. வேதங்களாலே சொல்லப்பட்ட அவைகளின் காந்தியைப் பார்த்தால், வேறு காப்பாற்றுகிறவர்களில்லாத வேதங்களுக்கு மூங்கில் காட்டினாலே ஒரு கோட்டை போட்டதுபோலிருக்கிறது. வேதங்களுக்குப் பலவிதமான இடைஞ்சல்கள். அவைகளைப் போக்கிப் பெருமாள் காப்பாற்றவேணும். ஆழ்வார் பாசுரங்களை ஸாதித்ததாலே, வேதங்கள் உண்மையான அர்த்தங்களை ஒருவிதத் தொந்தரவில்லாமல் தெரியப்படுத்துகிறது. ஆழ்வார் பாசுரங்கள் இல்லாதவரையில் நமக்கு வேதத்தினுடைய உண்மையான அர்த்தம் தெரியாது. அந்த பாசுரங்களின் பலத்தினாலே தான் மதத்தின் உண்மையான அர்த்தம் கெடாமலிருக்கிறது. (௧௭௪)

(௧௭௫) பஹுலநிகமஶாகாம் பாதுகே ரங்கநாத-
சரணநகமயூகைஶ்சாருபுஷ்பானுபந்தாம் |
மரகததலரம்யாம் மந்யே ஸம்ரூடாம்
கநகஸரிதுகண்டே காபி தூர்வாடவீம் த்வாம் ||

பாதுகே-வாராய் பாதுகையே! பஹுல-அதிகமாயிருக்கிற, நிகமஶாகாம்-வேதபாகத்தையுடைத்தாயிருக்கிற, (கிளைகளையுடைய) ரங்கநாத-ரங்கநாதனுடைய, சரண-திருவடிகளுடைய, நக-நகங்களுடைய, மயூகை:-காந்திகளாலே, சாரு-அழகாயிருக்கிற, புஷ்பானுபந்தாம்-புஷ்பங்களுடைய சேர்க்கையை உடைத்தாயிருக்கிற, மரகத-பச்சை ரத்னங்களாகிற, தல-இலைகளாலே, ரம்யாம்-அழகாயிருக்கிற, த்வாம்-உன்னை, கநகஸரித்-காவிரியினுடைய, கண்டே-கரைவுத்தரையிலே, ஸம்ரூடாம்-நடமாகிற, காபி-இன்னதென்று சொல்லமுடியாமலிருக்கிற

(உயர்ந்ததான) உத்யாநலக்ஷ்மீ-தோட்டத்திற்கு அதிஷ்டான தேவதையாக, உந்நயே-நினைக்கிறோம்.

(கருத்து) பாதுகையே! உன்னைப் பார்த்தால் காவிரிக்கரையிலிருக்கிற-பெருமாள் விளையாடத்தகுந்த-ஒரு தோட்டத்திற்கு அதிஷ்டான தேவதைபோலே, அதாவது—தோட்டம்போலே இருக்கிறது. உன்னைப்பற்றிச் சொல்லுகிற வேதங்கள் கிளைகளாயிருக்கின்றன. பெருமாளுடைய திருவடி நகங்கள் புஷ்பம்போலிருக்கின்றன. உன்மேலிழைத்திருக்கிற பச்சை ரத்னங்கள் இலைபோல் இருக்கின்றன. ஒரு பெரிய மனுஷ்யன் அழகான தோட்டத்தில் விளையாடுவதுபோலே பெருமாள் ஆழ்வாரிடத்திலே விளையாடுகிறார். (15)

(எசுசு) நவகிரண நிகாயை ர்நித்ய ஸம்ஸ்விகஸ்யந்மூணாள
ஸ்ரீ: ஸ்துதரஸவிசேஷை: ஸீவலே: கரம்சேஷி
விசு வரிசுமயபவி ரம்யம் பாதுகெ ரங்கபர்த்து:
பதகமல ஸமீபே பத்ரவத்யா: ப்ரவ்ருத்திம் ||

பாதுகெ-வாராய் பாதுகையே! த்வம்-நீ, ரங்கபர்த்து:-ஸ்ரீ ரங்கநாதனுடைய, நவ-நகங்களுடைய, கிரண-காந்திகளுடைய, நிகாயை:-கூட்டங்களாலே, நித்யம்-எப்போதும், ஸ்ம்ஸ்விக:-பிரகாசியாநின்றிருக்கிற, மூணாள-தாமரைத் தண்டை உடையதாயும், ஸ்துத-கொண்டாடப்பட்டிருக்கிற, ரஸவிசேஷை:-உயர்ந்த ஸந்தோஷத்தையுடைத்தாயிருக்கிற(ஜலத்தையுடைத்தாயிருக்கிற,) ரங்கபர்த்து:-ஸ்ரீ ரங்கநாதனுடைய, பத-திருவடியாகிற, கமல-தாமரைப்பூவினுடைய, ஸமீபே-ஸமீபத்திலே, தே-உன்னுடைய, ஸீவலே:-பச்சையாயிருக்கிற, கரம்சேஷி:-காந்திகளாலே, ரம்யம்-இன்பமாயிருக்கிற, பத்ரவத்யா:-தாமரை இலைகளுடைய, ப்ரவ்ருத்திம்-வரிசையை, வரிசுமயபவி-உண்டாக்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளுடைய திருவடியைப் பார்த்தால் தாமரைப் பூப்போலிருக்கிறது. பெருமாளுடைய திருவடி நககாந்தியைப் பார்த்தால், வெளுப்பான தாமரைத் தண்டு

போலிருக்கிறது. திருவடியின் ஸமீபத்திலிருக்கிற உன்னுடைய பச்சை ரத்னத்தின் காந்தி தாமரை இலைபோலிருக்கிறது. திருவடியிலிருக்கிற பிரீதியே ஜலமாக இருக்கிறது. ரஜஸ்ஸு தமஸ்ஸு இல்லாத ஸத்வகுணத்தாலே பெருமாளிடத்திலே பிரீதிமேலிட்டு ஆழ்வார் பெருமாளைப்பற்றி பெருமாள் திருவடியை நினைத்துக் கொண்டே பாடுகிறார். (16)

(கஎஎ) த்ரிதஶயுவதீநாம் து:க நிர்வாபணார்தே<br>
த்வயி விநிஹிதபாதே லீலயா ரங்கநாதே |<br>
தததி மரணரக்ஷே தைத்யஸௌதாநி நூநம்<br>
மரதகருசிபிஸ்தே ஸத்யதூர்வாங்குராணி ||

மரணரக்ஷே-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே, ரங்கநாதே-ஸ்ரீரங்கநாதனைவர், த்ரிதஶயுவதீநாம்-தேவஸ்திரீகளுடைய, து:கநிர்வாபணார்தே-வருத்தத்தோடு கூடியசப்தத்தைப் போக்கடிப்பதற்காக, த்வயி-உன்னிடத்திலே, லீலயா-விளையாட்டாக, விநிஹித-வைக்கப்பட்டிருக்கிற, பாதே-திருவடியை உடைத்தானபோது, ஸத்ய-உடனே, தைத்ய-அஸுரர்களுடைய, ஸௌதாநி-உப்பரிகைகள், தே-உன்னுடைய, மரதக-பச்சை ரத்நங்களுடைய, ருசிபி:-காந்திகளாலே, தூர்வாங்குராணி-புல் முளைகளை, தததி-தரிக்கிறன. நூநம்-நிச்சயம்.

(கருத்து) பாதுகையே! தேவதைகளை அஸுரர்கள் தொந்தரவு பண்ணுகிறார்கள். அதனாலே தேவஸ்திரீகள் அழுகிறார்கள். அதைப் போக்குவதற்காகப் பெருமாள் உன்னைத் திருவடியிலே சாத்திக்கொண்டு அஸுரர்களைக் கொல்ல எழுந்தருளுகிறார். அப்போது உன்மேலிருக்கிற பச்சை ரத்னங்களுடைய காந்தி அவர்களுடைய வீட்டிலடிக்கிறது. அதைப் பார்த்தால் வீடுகளிலெல்லாம் புல் முளைத்திருப்பதுபோலிருக்கிறது. அதாவது அவர்கள் அடியோடுபோய், வீட்டில் ஒருவரும் குடியில்லாமல் மாடிகளிலெல்லாம் புல்முளைத்திருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களின் உண்மையான கருத்தை யறிவதால் காமம், கோபம், தாபம், டம்பம், மோஹம், இவை முதலான அஸுரர்கள் அடியோடு செத்துப்

போகிறார்கள். சாந்தி, விரக்தி, பக்தி, தயை, க்ஷமை-இவை முதலான நல்ல குணங்கள் குறைவில்லாமல் விருத்தி அடைகின்றன.

(கஎஅ) விவர்த்ததஸஹோபிர்வீததோஷாநுஷங்கம்
விலஸதுபரி நைல்யம் ஜ்வலி விஷ்ணோ: பதம் தத் |
ப்ருதுமரதகத்ருச்யம் ப்ராப்ய பாதாவநி த்வாம்
ப்ரகடயதி ஸமந்தாத் ஸம்ப்ரயோகம் ஹரித்பி: ||

ஜ்வலி-விளங்காநின்றிருக்கிற, பாதாவநி-திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! விவர்த்தத-மிகவும் அதிகமாயிருக்கிற, ஸஹோபி:-காந்திகளாலே, வீத-போயிருக்கிற, தோஷ-குற்றங்களுடைய (பாபங்களுடைய,) அநுஷங்கம்-ஸம்பந்தத்தை உடைய, விலஸத்-விளங்காநின்றிருக்கிற, உபரி-மேல் பாகத்திலே, நைல்யம்-கருப்பை உடைய, தத்-அந்த, விஷ்ணோ:-பெருமாளுடைய, பதம்-திருவடியானது, (ஆகாசமானது) ப்ருது-பெருமையிருக்கிற, மரதக-பச்சை ரத்னங்களாலே, த்ருச்யம்-பார்க்க இன்பமாயிருக்கிற, த்வாம்-உன்னை, ப்ராப்ய-அடைந்து, ஸமந்தாத்-நாலு பக்கத்திலும், ஹரித்பி:-பச்சைரத்னங்களோடு, ஸம்ப்ரயோகம்-சேர்க்கையை, ஸமந்தாத்-நாலுபக்கமும், ப்ரகடயதி-ப்ரகாசப்படுத்துகிறது.

அஹோபி:-பகல்களாலே, விவர்த்தத-பெருத்திருக்கிற, தோஷா-ராத்திரியினுடைய, ஹரித்பி:-பச்சைக்குதிரைகளோடே என்று வேறு அர்த்தம்.

(கருத்து) பாதுகையே! உன்மேலே பச்சை ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. உன்னைப் பெருமாள் திருவடியிலே சாத்திக்கொள்ளும்போது, அந்தப்பச்சை காந்தியினாலே எங்கே பார்த்தாலும் ஒரேபச்சையாக இருக்கிறது. பச்சை ரத்னங்களிழைத்த பாதுகையைப் பெருமாள் சாத்திக்கொள்ளும்போது, பகலிலேயே ஆகாசமெல்லாம் பச்சையாயிருக்கிறது. பகலிலே ஆகாசம் மாத்திரம் கருப்பாக இருக்கும். இப்போது எங்கே பார்த்தாலும்பச்சையாக இருக்கிறது. ஆழ்வார் அவதரித்து பாசுரங்களை ஸாதித்த பிறகு எல்லாருமே பெருமாளிடத்தில் பக்திபண்ணுகிறார்கள். (18)

(௧௭௧) ஶ்ரீபூ₄ம்யோ: ப்ரணயஸரணிர்யத்ர ஸாம்ய ஹீநா யத்ஸம்பர்கா₃த₃நக₄சரிதா: பாது₃கே காமசாரா: । தாராஸக்தம் தமிஹ தருணம் ப்ரீணயந்தே ஜரத்யோ நித்யஶ்யாமாஸ்தவ மரதகைர்நூநமாம்நாயவாச: ॥

பாது₃கே-வாராய் பாதுகையே! யத்ர-யாதொரு பெருமாளிடத்திலே, ஶ்ரீபூ₄ம்யோ:-லக்ஷ்மி பூதேவி இவர்களுடைய, ப்ரணய-ஸ்நேஹத்தினுடைய, ஸரணி:-வழியானது, ஸாம்யஹீநா-ஸமமில்லாமலிருக்கிறதோ, காமசாரா:-இஷ்டப்படி நடந்த கோபஸ்திரீகள், யத்ஸம்பர்கா-யாதொரு பெருமாளோடு சேர்ந்ததாலே, அநக₄, தோஷமில்லாமலிருக்கிற, சரிதா:-செய்கைகளை உடைத்தானவர்களோ, தார-ப்ரணவத்திலே, ஆஸக்தம்-சேர்ந்திருக்கிற, தம்-அந்த, தருணம்-சிறுபிள்ளையான பெருமாளை, ஜரத்ய:-கிழவிகளாய (வெகுகாலமா)யிருக்கிற, ஆம்நாயவாச:-வேதவார்த்தைகள், தவ-உன்னுடைய, மரதகை:-பச்சை ரத்னங்களாலே, நித்யஶ்யாமா:-எப்போதும் கருப்பாய் (சிறுபெண்களாய்) க்கொண்டு, ப்ரீணயந்தே-ஸந்தோஷப்படுத்துகின்றன. நூநம்-நிச்சயம்.

(கருத்து) பாதுகையே! பெருமாளிடத்திலே மஹாலக்ஷ்மியும் பூதேவியும் எல்லையில்லாத ப்ரீதி பண்ணுகிறார்கள். இந்து லக்ஷம் குடி கோபஸ்திரீகள் சாஸ்த்திரத்தை மீறிக்கூட கிருஷ்ணனிடத்திலே ப்ரீதியாக இருந்தார்கள். ஆனால் பெருமாளோடு இருந்ததாலே அது தோஷமில்லை. அப்பேர்ப்பட்ட சிறு பிள்ளையான பெருமாளுக்குப் பெரிய கிழவியான வேதமாகிற பெண்ணிடத்திலே எல்லையில்லாத ப்ரீதி யிருக்கிறது. உன் மேலிழைத்திருக்கிற பச்சை ரத்னம் அந்தக்கிழவிகளை சிறு பெண்களாக ஆக்கிவிட்டன. ஶ்யாமா-என்ற வார்த்தைக்கு கருப்பு என்றும், சிறு பெண் என்றும் பொருள். வேதங்கள் முழுவதும் பெருமாளைத்தான் சொல்லுகின்றன. இப்போது வேதத்திற்குப் பெருமாளை விட்டு அநேகம் பேர்கள் தப்பான அர்த்தத்தைச் சொல்லிவிட்

டார்கள். அதிலே பெருமாளுக்கு மிகவும் மனஸ்தாபமாக இருந்தது. ஆழ்வார் அவதரித்து நல்ல அர்த்தங்களை ஜகத்து முழுக்கத் தெரிவித்தபிறகு, வேதத்தின் ஸரியான அர்த்தத்தை எல்லாரும் அறிந்திருக்கிறார்கள். அதனாலே பெருமாளுக்கு ஸந்தோஷமாக இருக்கிறது. (19)

(௧௮௦) பத்மாகரஸ்தலீவ காபி சரணாவநி பாஸி கமலாவாஸிந்யா: । யந்மரதகதளமத்யே ஏக: பத்ரமிவ ஸ ஸமீக்ஷ்யதே ஸௌரி: ॥

இதி ஸ்ரீகவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே ஏகோநவிம்ஶதி: மரதகபத்ததி: ॥௧௯॥

---

சரணாவநி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே, கமலா-ஸ்ரீ, கமலாவாஸிந்யா:-தாமரைப்பூவில் வசிக்கிற மஹாலக்ஷ்மிக்கு, காபி-இன்னதென்று சொல்லமுடியாத(உயர்ந்ததான) பத்மாகரஸ்தலீவ-நிலத்தாமரையுள்ள இடமாக, பாஸி விளங்குகிறாய். யஸ்யா:-யாதொரு உன்னுடைய, மரதக-பச்சைக்கல்லாகிற, தள-இலைகளினுடைய, மத்யே-நடுவிலே, ஏக: பத்ரமிவ-ஒரு இலையாக, ஸ:-அந்த, ஸௌரி:-பெருமாள், ஸமீக்ஷ்யதே-காணப்படுகிறாரோ.

(கருத்து) பாதுகையே! உன்னைப்பார்த்தால் மஹாலக்ஷ்மி வஸிப்பதற்கு நிலத்தாமரை பூத்த இடம்போலிருக்கிறது. உன் மேலிழைத்திருக்கின்ற பச்சைகளைப் பார்த்தால் இலைகள் மாதிரி இருக்கின்றன. உன் மேலே எழுந்தருளியிருக்கிற பெருமாளைப் பார்த்தால் இந்த இலைகள் மத்தியிலே அவரும் ஒரு இலைபோலிருக்கிறார். ஆழ்வார் எப்போதும் மஹாலக்ஷ்மியையே நினைத்துக்கொண்டிருக்கிறார். மஹாலக்ஷ்மி ஆழ்வாரைத் தாமரைப் பூவாக வைத்துக்கொண்டு அங்கேயே வஸிக்கிறாள். (20)

பத்தொன்பதாவதான மரதகபத்ததி முற்றிற்று.

---



ஸ்ரீ: ।

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம: ।

ஸ்ரீ ரங்கநாத பாதுகா ஸஹஸ்ரே

விம்ஶதிதமீ இந்த்ரநீலபத்ததி: ॥



(சு அக) ஹரிணா ஹரிநீலைஶ்ச பூஷிதத்வவதீம் ஸதா ।
அயத்நஸுலபநிர்வாணாம் ஶ்ரயே மணிபாதுகாம் ॥

ஹரிணா-பெருமாளாலும், ஹரிநீலைஶ்ச-இந்திரநீலக்கல்லுக்களாலேயும், ஸதா-எப்பொழுதும், பூஷிதத்வவதீம்-அலங்காரத்தையுடையதாயும், அயத்நஸுலப-பிரயாஸமில்லாமல் அடையக் கூடியதாயிருக்கிற, நிர்வாணாம்-மோக்ஷத்தை உடையதாயுமிருக்கிற, மணிபாதுகாம்-கல்லிழைத்த பாதுகையை, ஶ்ரயே-அடைகிறேன்.

(கருத்து) இந்தப் பத்ததியில் இந்திர நீலம் இழைத்திருப்பதைப்பற்றி வர்ணிக்கிறார். பாதுகைகளில் இந்திரநீலக்கல்லுக்கள் இழைத்திருக்கின்றன. இந்திரநீலக்கல்லுக்கள்போன்ற பெருமாளும் பாதுகைகளின்பேரில் எப்பொழுதும் எழுந்தருளியிருக்கிறார். ஆகையால் பெருமாளும், நீலரத்னங்களும், பாதுகைகளுக்கு எப்பொழுதும் அலங்காரமாக இருக்கின்றன. பாதுகைகளை ஸேவித்தவர்களுக்கு பிரயாஸமில்லாமல் மோக்ஷம்கிடைக்கும். அப்பேர்ப்பட்ட பாதுகைகளை ஸேவிக்கிறேன்.

ஆழ்வார்ஆசார்யர்களுக்குபெருமாளும்,பெருமாளைப்பற்றின பாசுரங்களும்அலங்காரமாக இருக்கின்றன. அவர்கள் திருவடிகளை ஆசிரயித்தவர்களுக்கும் பிரயாஸமில்லாமல் மோக்ஷம் கிடைக்கும்.

(சு அஉ) ஹரிரத்நஶிலாயஷ்டேவைதே நவநீரதஸந்நி-
விஶேஷவர்ணாபா: । ஶ்ருதிஶிகரஸங்கிநி ஶௌரிபாத
ரக்ஷே வஹிதாநந்த்வஹேஷஜம் ஹவந்தி ॥ (2)

ஶௌரி-பெருமாளுடைய, பாதரக்ஷே-திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! நவ-புதிதாயிருக்கிற, நீரத-அவிரிச்

சாயத்தைக் காட்டினும், நிவிஷ்டசோபா-பேதமில்லாமலிருக்கிற, வர்ணாத்மரூபா-ரூபத்தையுடைத்தாயிருக்கிற, தவ-உன்னுடைய, அமீ-இந்த, மஹாநீலா-இந்திரநீலக்கல்லுக்களுடைய, ருசய:-காந்திகள், ச்ருதி-வேதங்களுடைய, சிரோநீதி-தலையிலே, வலித-நிறைச்சலுடைய, ஆர்த்தவ-உண்டாகாமலிருக்கிறதற்கு, பேஷஜம்-மருந்தாக, ஸம்ஜாதி-ஆகின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீல ரத்னங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தியைப்பார்த்தால் அவிரிச்சாயம் போலிருக்கிறது. அது வேதமாகிற பெண்களின் தலைமயிர்கள் நிறைக்காமலிருக்கிறதற்கு மருந்துபோலிருக்கிறது. ஆழ்வாருடைய பாசுரங்களிருப்பதினால்தான் உபநிஷத்துக்களின் அர்த்தங்களைஉள்ளபடி அறிகிறார்கள். அதனால் உபநிஷத்துக்களுக்கும், அதை நம்பினவர்களுக்கும் ஒருவிதக்குறைவுமில்லை.

(ஸா அஙு) அலகாநிவ பிம்பிதை: ச்ருதீநாம்
மஹாநீலமயை: ஸ்ரஜஸி ஸாந்த்ர ருசிபி: |
அநகாதிசயஸ்ய பாதரக்ஷே
கருணாம்ப்ருதி சைவலப்ரரோஹாந் ‖ (3)

ஹே பாதரக்ஷே-காராய்த் திருவடிகளைக் காப்பாற்றுகிற பாதுகையே! த்வம்-நீ, பிம்பிதை:-பிரதிபலித்திருக்கிற, ச்ருதீநாம்-வேதமாகிற பெண்களுடைய, அலகாநிவ-மயிர்கள்போலிருக்கிற, ஸாந்த்ரருசிபி:-அதிகமான காந்தியையுடைத்தாயிருக்கிற, மஹாநீலமயை:-இந்திர நீலக்கல்லுக்களாலே, அநகாதிசயஸ்ய-மஹாலக்ஷ்மிக்கு நாயகனாயிருக்கிற பெருமாளுடைய, கருணா-தயையாகிற, அம்புதி-ஸமுத்திரத்திலே, சைவல-பாசிக்கொத்துகளுடைய, ப்ரரோஹாந்-முளைகளை, ஸ்ரஜஸி-உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கற்கள் இழைத்திருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் வேதமாகிற பெண்களின் தலைமயிர்கள் உன்னிடத்தில் பிரதிபலித்திருப்பது போலிருக்கின்றன. பெருமாளுடைய தயையாகிற ஸமுத்திரத்திற்கு வேலம்பாசிபோலுமிருக்கின்றன.

பாதுகையை ஆழ்வாராகவும், ரத்னங்களை அவருடைய பாசுரங்களாகவும் சொல்லுவது வழக்கம். அந்தப் பாசுரங்கள் உபநிஷத்துக்களுடைய ஸாரமான அர்த்தங்களை வெளிப்படுத்துகின்றன. அந்தப் பாசுரங்களால் பெருமாளுக்கு நம்மைப்போலொத்த ஜீவர்களிடத்தில் அளவில்லாமல் தயை விருத்தியடைகிறது. வேலம்பாசியுள்ள ஜலத்திற்குக்கலக்கம் இடையாது. (3)

(௨௮௪) அநகைர் ஹரிநீலவர்த்மநாம்

ப்ரஸரத்பிர் மணிபாதுகே ருசாம் நிகரை: ।

அதரீகரோஷி ரதாங்கபாணே

ரவதீர்ணஸ்த்வது பர்யதிஷ்டிதஸ்ய காந்திம் ॥ (4)

ஹே மணிபாதுகே-வாராய்க் கல்லிழைத்த பாதுகையே! த்வம்-நீ, அநகை:-குற்றமில்லாமலும், ப்ரஸரத்பி:-எங்கும் பரவினவைகளாயுமிருக்கிற, ஹரிநீல-இந்திர நீலக்கல்லுக்களுடைய, வர்த்மநாம்-வரிசைகளுடைய, ருசாம் நிகரை:-காந்திகளாலே, உபர்யம்-உன்பேரில், அதிஷ்டிதஸ்ய-எழுந்தருளியிருக்கிற, ரதாங்க-சக்கரத்தை, பாணே:-திருக்கையில் வைத்துக்கொண்டிருக்கிற பெருமாளுடைய, அவதீர்ணாம்-எல்லையில்லாமலிருக்கிற, காந்திம்-அழகை, அதரீகரோஷி-இளப்பமாகப் பண்ணுகிறாய்.

(கருத்து) பெருமாளும், இந்திரநீலக்கல்லுக்களும் இரண்டும் கருப்பு வர்ணம் தான். இரண்டும் நல்ல காந்தியுள்ளவை தான். ஆனாலும் பாதுகைகளில் இழைத்திருக்கிற இந்திரநீலக்கல்லுக்களின் காந்தியைக்காட்டிலும் பெருமாளுடைய காந்தி குறைவாக இருக்கிறது. பெருமாளைக்காட்டிலும் உயர்ந்தவை ஆழ்வாருடைய பாசுரங்கள். (4)

(௨௮௫) சரணாவநி ஸாந்த்ரஸங்கமநா

ஹரிநீலத்யுதிபிஸ்தவாநுவித்தா ।

வஸந்தோத்ஸவஸந்ததஸ்ய ரங்கபர்த்து

ர்யமுநேவ ஸ்வயமாகதா ஸமீபம் ॥ (5)

ஹே சரணாவநி-வாராய்த் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! தவ-உன்னுடைய, ஹரிநீல-இந்திரநீலக் கல்லுக்களுடைய, த்யுதிபி:-காந்திகளாலே, அநுவித்தா-வ்யாபரிக்கப்பட்டி

ருக்கிற, ஸஹ்யகந்யா-காவேரியானது, ரங்கேஶதந்த்ர-ரங்கவிமானத்தில்எழுந்தருளியிருக்கிற, வஸுதேவ-வஸுதேவருடைய, ஸுத-ஸுதப்பிள்ளையாயிருக்கிற கிருஷ்ணனுடைய, ஸமீபம்-ஸமீபத்தை, ஸ்வயம்-தானே, ஶ்ரிதா-அடைந்திருக்கிற, யதோநந்தா-யமுனை என்கிற ஆறுபோல ஸாதி-விளங்குகிறது.

(கருத்து.) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற இந்திரநீலக்கல்லுக்களின் காந்தி காவேரியில் படுவதினால் சிகப்பாக இருக்கிற காவேரி கருப்பாகப்போய்விடுகிறது. அதைப்பார்த்தால் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் கிருஷ்ணனிடத்திற்கு யமுனை தானாகவே வந்ததுபோலிருக்கிறது. யமுனை ஜலம் கருப்பு.

ஸம்ஸாரத்தில் அதிகமான ஆசை உள்ளவர்களுக்கு ஆழ்வாருடைய பாசுரங்களின் கருத்தை உள்ளபடி அறிவதினால் ஸம்ஸாரத்தில் வெறுப்பும், பெருமாளிடத்தில் பக்தியும் பிரயாஸமில்லாமல் உண்டாகிவிடும். (5)

(சுஅசு) சுவலிதஶைவதாந்தராணா

உநவெ்யஸ்வம் உணிவாதுகே உயகுவெவ: ।

ஹரிநீலஉவஜூஹெவவி-யஹெதூ

ஹரிஸாரூவ்யஉயதூதெதா ஜநாநாம் ॥ (6)

ஹெ மணிபாதுகே-மாராய்க் கல்லிழைத்தபாதுகையே! ஸம்-நீ, அநவெவ:-குற்றமில்லாமலிருக்கிற, ஹரிநீலஸமுத்ஹவெவ:-இந்திரநீலக்கல்லுக்களால் உண்டாயிருக்கிற, மயூகெவ:-காந்திகளாலே, சுவலித-தள்ளப்பட்டிருக்கிற, ஶைவதாந்தராணாம்-பெருமாளைத்தவிர மற்ற தேவதைகளை உடைத்தாயிருக்கிற, ஜநாநாம்-ஜனங்களுக்கு, ஹரிஸாரூப்யம்-பெருமாளைப்போல் கருப்பாயிருக்குகையை, அயத்நத:-பிரயாஸமில்லாமல், விதனுஷே-உண்டுபண்ணுகிறாய்,

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற இந்திரநீலக்கல்லுக்களின் காந்தி எந்த ஜனங்கள்பேரில் பட்டாலும் அவர்கள் பெருமாளைப்போல கருத்த பளபளப்பான காந்தியை அடைகிறார்கள்.

ஆழ்வார் பாசுரங்களின் கருத்தை உள்ளபடி அறிந்தவர்கள், எல்லா தேவதைகளைக் காட்டிலும் பெருமாளையே உயர்ந்தவராக

நினைத்து, மற்ற பிரயோஜனங்களை வெறுத்து பிரயாஸமில்லாமல் பெருமாளை அடைகிறார்கள். (6)

(கஅஎ) நேத்ரேஷு ஜந்தோஸ் தவ பாதரக்ஷே
நீலாஸ்மபாஸா நிஹிதாஞ்ஜநேஷு ।
ஸ்ரியா ஸமம் ஸம்ஸ்ரிதரங்ககோஶோ
நிதி: ஸ்வயம் வ்யக்திமுபைதி நித்யம் ॥ (7)

**ஹே பாதரக்ஷே**-வாராய்த் திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே! **தவ**-உன்னுடைய, **நீலாஸ்ம**-இந்திரநீலக்கல்லுக்களுடைய, **பாஸா**-காந்தியினாலே, **ஜந்தோ:**-பிராணிகளுடைய, **நேத்ரேஷு**-கண்கள், **நிஹித**-வைக்கப்பட்டிருக்கிற, **அஞ்ஜநேஷு**-மையை உடைத்தானபோது, **ஸம்ஸ்ரித**-அடையப்பட்டிருக்கிற, **ரங்க**-ரங்கவிமானமாகிற, **கோஶ**-பெட்டியையுடைத்தாயிருக்கிற, **நிதி:**-பெருமாளாகிற புதையலானது, **ஸ்ரியாஸமம்**-மஹாலக்ஷ்மியோடு கூட, **நித்யம்**-எப்பொழுதும், **ஸ்வயம்**-தானாகவே, **வ்யக்திம்**-பிரகாசத்தை, **உபைதி**-அடைகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற இந்திரநீலக்கல்லுக்களின் காந்தியைப்பார்த்தால் கருப்பான மைபோலிருக்கிறது. அதை எவன் கண்ணில் போட்டுக்கொள்ளுகிறானோ, அவனுக்கு ரங்கவிமானத்திலிருக்கும் பெருமாளாகிற புதையல் மகாலெக்ஷ்மியோடு எப்பொழுதும் தானாகவே கண்ணுக்குப் படுகிறது.

ஆழ்வாருடைய பாசுரங்களின் கருத்தை உள்ளபடி அறிந்தவனுக்கு எப்பொழுதும் பெருமாள் வலுவிலேவந்து ஸேவைஸாதிக்கிறார். சில மையைக் கண்ணில் போட்டுக்கொள்ளுகிறவனுக்கு புதையல் தெரியுமாம். (7)

(கஅஅ) அஹார்யஶௌர்யா தவ பாதரக்ஷே ஶாந்த்யாம் ஶஹா
நீலாஶ்மதிம் ஶவநீயாத் । நிஶ்யஸ்யஆரகவாடிகாயா
ஸ்ப்ருக்ஷ்ஸ ஸஶ்வத்வாட நகாஞ்ஜிகாம் ந: ॥ (8)

**ஹே அவ்யாதவபாதரக்ஷே**-வாராய் பெருமாளுடைய திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே! **அஹார்யம்**-குறைவில்லாமலி

ருக்கிறதும், (ஒடியாததாயும்) ஆநந்ஹ்யம்-கொண்டாடத்தகுந்ததாயு மிருக்கிற, த்வதீயாம்-உன்னுடையதாக இருக்கிற, இந்த்ரநீல-இந்திர நீலக்கல்லுக்களுடைய, ருசிம்-காந்தியை, நிச்ரேயஸத்வார-மோக்ஷத்தினுடைய வாசப்படியினுடைய, கவாடிகாயா:-கதவுக்கு, உத்காடநே-திறப்பதற்கு, குஞ்சிகாம்-திறவுகோலாக, மந்யே-நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற இந்திரநீலக்கல்லுக்களுடைய காந்தியானது ஓரே கம்பிபோலவும், ரொம்ப சிலாக்யமாகவுமிருக்கிறது. அதைப்பார்த்தால் மோக்ஷ வாசப்படி கதவைத்திறப்பதற்கு ஒடியாத இரும்புத் திறவுகோல் போலிருக்கிறது.

ஆழ்வார் பாசுரங்களின் கருத்தையுள்ளபடி அறிந்தவனுக்கு மோக்ஷத்திற்கு ஸந்தேஹமில்லை. மனதில் படுவது கஷ்டம். மனதில் படவில்லையென்று தோன்றுவதும் கஷ்டம். (8)

(௬அ௯) ஜீவயத்யம்ருதவர்ஷிணீ ப்ரஜாஸ்த்வத்கா தாநவ
வைரிபாதுகே । கோரஸம்ஸரணகர்மநாசிநீ
காளிகேவ ஹரிநீலபங்க்தி: ॥ (9)

தாநவ-அஸுரர்களுக்கு, வைரி-சத்துருவான பெருமாளுடைய, பாதுகே-வாராய் பாதுகையே! அம்ருதவர்ஷிணீ-அமிருதமாகிற மழையைப்பெய்கிறதாயும், கோர-பயத்தை உண்டு பண்ணுகிற ஸம்ஸரண-பிறக்கிறதும், செத்துப்போகிறதுமாகிற, கர்ம-கோடையை, நாசிநீ-போக்கடிப்பதாயுமிருக்கிற, த்வத்கா-உன்னுடையதான, ஹரிநீல-இந்திரநீலக்கல்லுக்களுடைய, பங்க்தி:-வரிசையானது, காளிகேவ-கருண்டமேகங்களுடைய வரிசைபோல, ப்ரஜா:-ஜனங்களை, ஜீவயதி-பிழைக்கப்பண்ணுகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! மேகங்கள் மழைபெய்து கோடையைப்போக்கி,பயிர் முதலானதை உண்டுபண்ணி லோகத்தைக் காப்பாற்றுவதுபோல உன்னுடைய இந்திரநீலரத்னங்கள் ஜனங்களுக்கு மோக்ஷமாகிற மழையைப்பெய்து ஸம்ஸாரமாகிற கோடையைப்போக்குகின்றன.

ஆழ்வார் ஆசார்யர்களுடைய பாசுரங்களின் கருத்தை உள்ளபடி அறிந்தவர்களுக்கு ஸம்ஸாரத்தினால் உண்டாகும் வருத்தம் முழுவதும் போய் மோக்ஷம் கிடைக்கிறது. (9)

(ஶ்லோ-௰) ஹரிநீலஶகலைஸ்ஸுந்தரா விஹரஸே
முராந்தகபாதுகே। மணிகிரீடஶ்ரேணிஷு திவௌ
கஸாம் மதுகரீவ ஸுந்தரபங்க்திஷு ॥ (10)

முராந்தக-முரன் என்கிற அஸுரனைக்கொன்ற பெருமாளுடைய, பாதுகே-வாராய்ப் பாதுகையே! ஹரிநீல-இந்திரநீலக்கல்லுக்களுடைய, ஶகலை-துணுக்கைகளாலே, (துணுக்கைகள்போல) ஸுந்தரா-இன்பமாயிருக்கிற, த்வம்-நீ, ஸுந்தர-இன்பமாயிருக்கிற, பங்க்திஷு-வரிசையையுடைத்தாயிருக்கிற, திவௌகஸாம்-தேவதைகளுடைய, மணிகிரீட-கல்லிழைத்தகிரீடங்களுடைய, ஶ்ரேணிஷு-வரிசைகளிலே, மதுகரீவ-பெண்வண்டுபோல, விஹரஸே-விளையாடுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுக்கள் இழைத்திருக்கின்றன. அதனால் உன்னைப்பார்த்தால் வண்டு போலிருக்கிறது. கோவில்களில் உன்னை எல்லா தேவதைகளின் கிரீடங்களில் ஸாதிக்கிறபோது அவைகளில் வண்டு உட்காருவது போலிருக்கிறது.

வண்டுகள் தேனை எடுப்பதற்காக எல்லாப்பூக்களிலும் உட்காரும். ஆசார்யாள் ஞானமாகிற தேனைக் கொடுப்பதற்காக எல்லா ஜனங்களோடேயும் சேருகிறார்கள். (10)

(ஶ்லோ-௧௧) அத்⁴யுஷிதாம் க்ஷிதிம் த்வத³நந்யரம்யாம்
ஸம்யக்ப்ரபோ³த⁴ஜநநீம் ப்⁴ருதக்ருஷ்ணஸாரா।
பாதா³வநி ஸ்பு²ரஸி வாஸவரத்நரம்யா
தே³வ்யா ஸமாதி⁴நயநஸ்ய கநீநிகேவ ॥ (11)

ஹே பாதாவநி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! வாஸவரத்ந-இந்திரநீலக்கல்லுக்களாலே, (இந்திரநீலக் கல்லுகள்போலே) ரம்யா-இன்பமாயும், ஸம்யக்ப்ரபோதஜநநீம்-நல்ல அறிவையுண்டுபண்ணுகிறவளாயும், ப்⁴ருத-அடையப்பட்

டிருக்கிற, க்ருஷ்ணரூபா - கருப்பு ரூபத்தை உடைத்தாயும் (கிருஷ்ணனுடைய உடம்பையுடைத்தாயும்,) இருக்கிற, த்வம் - நீ, அநந்யத்ருச்யம் - பெருமாளைத்தவிர வேறு தேவதையையும் வே று பிரயோஜனத்தையும் நினைக்காதவர்களாலே பார்க்கத் தகுந் தாயிருக்கிற, கிமபி - இன்னதென்று சொல்லமுடியாத, தத்வம் - உயர்ந்த வஸ்துவை, அதாவது பெருமாளை, அநுத்யாதாம் - தியா னம் பண்ணுகிறவர்களுடைய, ஸமாதி - தியானமாகிற, நயந ஸ்ய - கண்ணினுடைய, மத்யே - நடுவிலே, கநீநிகேவ - கரு ப்பு விழிபோல, ஸ்புரஸி - விளங்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுக் கள் இழைத்திருக்கின்றன. அதனால் நீ கருப்பாக இருக்கிறாய்; எல்லாருக்கும் நல்லஅறிவை உண்டுபண்ணுகிறாய், நீ பெருமாளைத் தூக்குகிறாய், உன்னைப் பார்த்தால் பெருமாளை அடைவதற்காகத் தியானம் பண்ணுகிறவர்களுடைய தியானமாகிற கண்ணுக்குக் கருப்புவிழிபோல இருக்கிறாய். அதாவது பாதுகையைத் தியா னம் பண்ணாமல் பெருமாளைப் பார்க்கமுடியாது. கருப்புவிழியில் லாத கண்ணால் ஒரு வஸ்துவைப் பார்க்கமுடியாததுபோல.

நல்ல ஆசார்யாளிடத்தில் மனதாரப் பக்தியில்லாமல்போனால் பெருமாளை அறியவும், பார்க்கவும், அடையவும் முடியாது. (11)

(சஅ௨) மாதஸ்ஸலீலமுபயாய விஹாரவேலாம்
காஞ்சீம் ஸமச்நுஷே காஞ்சநபாதுகே த்வம்
லக்ஷ்மீகடாக்ஷருசிரை ஹரிநீலரத்நை
ரங்காதிராஜ விஹரஜ்ஜவிகந்திவாராம் ‖

ஹே மாத: - தாயாராயிருக்கிற, காஞ்சநபாதுகே - ஸ்வர்ணமயமான பாதுகையே ! த்வம் - நீ, ஸலீலம் - விளை யாட்டோடேகூட, விஹாரவேலாம் - ஸஞ்சரிக்கிற ஸமயத்தை, (ஸமுத்திரக்கரையை) உபயாய - அடைந்து, லக்ஷ்மீ - மஹாலக்ஷ் மியினுடைய, கடாக்ஷ - பார்வைபோல, ருசிரை: - இன்பமா ருக்கிற, ஹரிநீலரத்நை: - இந்திரநீலக்கல்லுகளாலே, ரங்க ராஜ: - ஸ்ரீரங்கநாதனுடைய, லாவண்ய - அழகாகிற, ஸிந்து - முத்திரத்தினுடைய, வீசிகேவ - திவலைகளாலேபோல, காஞ்சீம் - மழகை. ஸமச்நுஷே - அடைகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற இந்திரநீலக்கல்லுக்களைப்பார்த்தால் மஹாலக்ஷ்மியினுடைய பார்வைபோலவுமிருக்கிறது. பெருமாளுடைய அழகாகிற ஸமுத்ரத்தின் திவலைகள்போலவுமிருக்கிறது.

ஆழ்வாருடைய பாசுரங்கள் பெருமாளுடைய அழகுபோல் இருக்கிறது. அதாவது பாசுரங்களை ஸேவிக்கும்போது பெருமாளை ஸேவிப்பதைக்காட்டிலும் இன்பமாக இருக்கிறது. (12)

(ஶ்லோ. ௧௩) ஸ்யூதாவகுண்டநவிதிர் மணிபாதரக்ஷே
நீலாம்ஶுபிஸ்தவ ஹரிநீலஸமுத்பவைஸ்தை: |
ஸம்யுஜ்யதே முநிஜநஸ்ய மதி: ஸமாதௌ
ராத்ரௌ ஸமஸ்தஜகதாம் ரமணேந லக்ஷ்ம்யா: ||

ஹே மணிபாதரக்ஷே - வாராய் கல்லிழைத்த பாதுகையே! முநிஜநஸ்ய - ருஷிகளுடைய, மதி: - புத்தியானது (ஒரு அபிசாரிப் பொம்மநாட்டியானவள்) ஸமஸ்தஜகதாம் - எல்லா லோகங்களுக்கும், ராத்ரௌ - ராத்திரியாயிருக்கிற, ஸமாதௌ - த்யானம்பண்ணுகிற ஸமயத்திலே, தே - உன்னுடைய, தை: ஹரிநீலஸமுத்பவை:- இந்திரநீலக்கல்லுக்களாலேஉண்டாயிருக்கிற, நீலாம்ஶுபி: - கருப்பு காந்திகளாலே, (கருப்புத்துணிகளாலே) ஸ்யூத - பண்ணப்பட்டிருக்கிற, அவகுண்டந - உடம்பை முழுவதையும்மூடிக்கொள்வதாகிற, விதி:-கார்யத்தையுடைத்தானதாய்க்கொண்டு, லக்ஷ்ம்யா: ரமணேந - லக்ஷ்மிக்கு ஆம்படையானை பெருமாளோடே (வேறொரு புருஷனோடே), ஸம்யுஜ்யதே - சேர்கிறது. (சேர்கிறாள்.)

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுகள் இழைத்திருக்கின்றன. அவைகளுடைய காந்திகளைப் பார்த்தால் கருப்புப்புடவைமாதிரி இருக்கிறது. யோகிகளுடைய புத்தியாகிற ஒரு பெண் ராத்திரி என்று சொல்லப்பட்ட த்யானம் பண்ணுகிற வேளையிலே, அந்தப்புடவையைப் போத்திக்கொண்டு லக்ஷ்மிக்குஆம்படையானை பெருமாளோடேஅபிசாரிஆடுகிறாள். அதாவது யோகிகள் இந்திரநீலக்காந்தியை நினைத்துக்கொண்டு பெருமாளைத் தியானம்பண்ணுகிறார்கள். ராத்திரியில் இருட்டா

கையால் ஒரு வஸ்துவும் கண்ணுக்குத் தெரியாது அதுபோல் உலகத்தில் பெரும்பாலும் எல்லா ஜனங்களும் பிள்ளை பெண்டாட்டி முதலான ஸங்கதிகளையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கிறபடியால் பெருமாள் த்யானம் என்பது அவர்களுக்குத் தெரியாது. அதனால் த்யானத்தை ராத்ரியாகச் சொல்லுகிறது.

ஆழ்வாருடைய பாசுரங்களின் கருத்தை உள்ளபடி அறிந்தவர்கள் எப்பொழுதும் பெருமாளையே நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களைப் பிள்ளை பெண்டாட்டி முதலான ஸங்கதிகளால் கலக்கமுடியாது. (13)

(கூகச) த்ரஷ்டும் கதாசந பதாவநி நைவ ஜந்து:
ஶக்நோதி ஶாஶ்வதநிதிம் நிஹிதம் குஹாயாம் |
க்ருஷ்ணாஞ்ஜநாபேவ ஹரிநீலவிஶேஷத்ருஶ்யா
ஸித்தாஞ்ஜநம் த்வமஸி யஸ்ய ந தேவி த்ருஷ்டே: ||

ஹே தேவிபதாவநி - விளங்காநிற்கிறவாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! க்ருஷ்ண - பெருமாளுக்கு, அஞ்ஜநாபேவ - தகுந்ததாக இருக்கிற, ஹரிநீல - இந்திரநீலக் கல்லுக்களாலே, விஶேஷத்ருஶ்யா - மிகவும் பார்க்கத்தகுந்தவளாகவிருக்கிற, த்வம் - நீ, யஸ்ய - யாதொருத்தனுடைய, த்ருஷ்டே:- கண்ணுக்கு(அறிவுக்கு) ஸித்தாஞ்ஜநம்- உயர்ந்த மையாக, நாஸி - ஆகவில்லையோ, ஸ: - அந்த, ஜந்து: - பிராணியானவன், கதாசந - ஒருக்காலும், குஹாயாம் - ஹிருதயத்திலே, நிஹிதம் - வைக்கப்பட்டிருக்கிற, ஶாஶ்வத - அழிவில்லாமலிருக்கிற, நிதிம் - புதையலான பெருமாளை, த்ரஷ்டும்-பார்ப்பதற்கு, நைவஶக்நோதி - ஸமர்த்தனாகிறதேயில்லை. (க்ருஷ்ண - கருப்பாயும், அஞ்ஜநாபேவ-புதையலைப்பார்க்கத் தகுந்ததாயும், இந்திர நீலக்கல்லுப்போலே பார்க்கத்தகுந்ததாயும்)

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுகள் இழைத்திருக்கின்றன. அதனால் நீ கருத்த மைபோலிருக்கிறாய். நீயாகிற மையை எவன் கண்ணில் இட்டுக்கொள்ளவில்லையோ (அதாவது உன்னைப் பார்க்கவில்லையோ) அவனால் ஹிருதயத்திலிருக்கிற பெருமாளாகிற உயர்ந்தபுதையலைப் பார்க்கவேமுடியாது.

உலகத்தில் கண்ணுக்கு மையிட்டுக்கொள்ளாதவனாலே புதையலைப் பார்க்கமுடியாது.

ஆழ்வார் ஆசார்யாள் அனுக்ரஹமில்லாதவனாலே பெருமாளை கண்டுபிடிக்கமுடியாது. இப்போது பெரும்பாலும் ஜனங்களுக்குப் பிள்ளை பெண்டாட்டி பணம் முதலானவைகளில்தான் உண்மையான ப்ரீதியிருக்கிறது. தெய்வம் ஆசார்யாள் முதலானவர்களிடத்தில் உண்மையான ப்ரீதியுள்ளவன் எத்தனைபேரில் ஒருவனோ. எல்லாருக்குமே ஏதோ கொஞ்சம் இருக்கிறது. நமக்கு ப்ரீதியில்லையென்று அறிந்துகொள்வதும் ரொம்ப அரிது. (14)

(௩௩௫) பாவயே ரங்கந்ருபதே: மணிபாதுகே த்வாம்
க்ருஷ்ணாபிராமருசிபி: ஹரிநீலரத்னை: |
விச்வாபராதஸஹனாய பதம் ததீயம்
விச்வம்பராம் ஸுமஹதீம் ஸமயே பஜந்தீம் ||

ரங்கந்ருபதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, ஹே மணிபாதுகே - வாராய் கல்லிழைத்த பாதுகையே! க்ருஷ்ண-பெருமாளுக்கு, அபிராம - இஷ்டமாயிருக்கிற, ருசிபி: - காந்தியையுடைத்தாயிருக்கிற, (பெருமாளைப்போல் கருப்பாகவிருக்கிற,) ஹரிநீலரத்னை: - இந்திரநீலக்கல்லுக்களோடே சேர்ந்திருக்கிற, த்வாம் - உன்னை, விச்வாபராதஸஹனாய - எல்லா லோகங்களுடைய எல்லா குற்றங்களையும் பெருமாள் பொறுத்துக்கொள்வதற்காக, ஸமயே - குற்றம்பண்ணினவர்கள் பெருமாளிடத்தில் வருகிற காலத்திலே, ததீயம் - அந்தப் பெருமாளுடையதாக இருக்கிற, பதம் - திருவடியை, பஜந்தீம் - அடைந்திருக்கிற, ஸுமஹதீம் - ஒரு குற்றமுமில்லாமல் எல்லா நற்குணங்களுமுள்ளவளான, விச்வம்பராம் - பூதேவியாக, பாவயே - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுகள் இழைத்திருக்கின்றன. அதனால் நீ கருப்பாக இருக்கிறாய். உன்னைப்பார்த்தால் எல்லையில்லாத குற்றமுள்ள ஜனங்களைப்பற்றி பெருமாளிடத்தில் சிபார்சுபண்ணுவதற்காக பூதேவி வந்திருக்கிறது போலிருக்கிறது. உலகத்தில் தப்புப்பண்ண குழந்தைகளுக்காகத் தாயார் புருஷனிடத்தில் சிபார்சுபண்ணுவதுபோல் மஹாலக்ஷ்மீ

பூமிதேவி, நீளாதேவி, ஆண்டாள் இவர்கள் எல்லாரும் தப்புப் பண்ண ஜனங்களுக்காகப் பெருமாளிடத்தில் சிபார்சு பண்ணுவதாகச் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. (மகாலக்ஷ்மி சிகப்பாகவும், பூதேவி, நீளாதேவி, ஆண்டாள் இவர்கள் மூன்றுபேர்களும் இந்திரநீலக்கல்லுபோல் கருப்பென்றும் சொல்லியிருக்கிறது) அவர்களைப்போல் ஆசார்யர்களும் சிபார்சுபண்ணுகிறார்களென்று சொல்லியிருக்கிறது.

பக்தி சரணாகதி என்கிற இரண்டு கார்யமும் நல்ல ஆசார்யாளுடைய அனுக்ரஹத்தாலும் நல்ல உபதேசத்தாலும்தான் நிறைவேறவேணும். மோக்ஷத்திற்காகச் சரணாகதியைத் தானும் பண்ணலாம். தனக்காக ஆசார்யரும் பண்ணலாம். தான் பண்ணுகிறதாக இருந்தால் ஜீவன் தெய்வம் முதலான ஸங்கதிகளில் நல்ல தெளிவும், ஸம்ஸாரத்தில் அலுப்பும் இவை முதலானவைகள் வேண்டும். அது நல்ல ஆசார்யர்களாலேதான் ஏற்படும். நமக்காக ஆசார்யர்களே சரணாகதிபண்ணினால் நம்முடைய எல்லா லோகமும் அவர்கள்அதீனம். (15)

(௧௬) மத்வா மஷீம் பரிமிதாம் ப⁴வதீ தத³ந்யாம்
ஶௌரே: பத³ரஸிகே மணிபாது³கே ஸ்வாந்|
லிக²ஸி ஸ்வயம் கிரணஸோபஸ்கரைரிந்த்³ரநீலை:
ஆஶாதடேஷு ஸுகி²தா சரிதவர்ணாந் ‖

ஶௌரே: - பெருமாளுடைய, பதே³ - திருவடியிலே, ரஸிகே - ஆசையுள்ளவளாயிருக்கிற, மணிபாது³கே - வாராய் கல்லிழைத்த பாதுகையே! ப⁴வதீ - நீயானவள், தத³ந்யாம் - அந்த இந்திரநீலக்கல்லைக்காட்டிலும் வேறாயிருக்கிற, மஷீம் - மசியை, பரிமிதாம் - கொஞ்சமாக, மத்வா - எண்ணி, கிரண - காந்திகளாகிற, ஸோபஸ்கரை: - பூசுவதற்குவேண்டிய வஸ்துக்களையுடைத்தாயிருக்கிற, இந்த்³ரநீலை: - இந்திரநீலக்கல்லுக்களாலே, ஆஶாதடேஷு - திக்குகளின் பிரதேசங்களாகிற கடிதாசிகளிலே, ஸுகி²தா - இன்பமாயிருக்கிற, ஸ்வாந் - தன்னுடையதான, சரிதவர்ணாந் - தன் சரித்திரத்தைப்பற்றின எழுத்துக்களை, ஸ்வயம் - தானே, லிக²ஸி - எழுதுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுகள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தி எல்லா திக்குகளிலும் பரவுகிறது. அதைப்பார்த்தால் உலகத்திலிருக்கும் மசி போராதென்று நினைத்து உயர்ந்தமசிபோலிருக்கிற இந்திரநீலக்கல்லுகளைக்கொண்டு உலகத்தில் எப்பொழுதும் விளங்குவதற்காக உன்னுடைய சரித்திரங்களை எல்லா திக்குகளிலும் எழுதுகிறாப்போலிருக்கிறது.

பாதுகை என்றால் ஆழ்வார், அதனுடைய ரத்நங்கள் என்றால் அவர் ஸாதித்த பாசுரங்கள். ஆழ்வாருடைய பெருமையைத் தனியாக எழுதவேண்டுமா! அவருடைய பாசுரங்களே பிரகாசப்படுத்துகிறது. அந்தமாதிரிப் பாசுரங்களைப் பெருமாளாலே பண்ணமுடியுமா? (16)

(௧௮௭) ஸமஸ்ய மணீநாம் பாஸிர்ப்ஸ்தாவகாநாம்
ஸபதிமஸுபிபோ ரக்ஷ வாஸரைஸ்ஸமேதா ।
ஸலிலஸரணபாஜாம் வல்லவீநாம் ததாஸீத்
ப்ரசிதகுருஜநபய ஸாத்யா ச்ஸர்வரீ காபி துங்கா ॥

மதுரிபுபதரக்ஷே - மது என்கிற அசுரனுக்குச் சத்துருவான பெருமாளுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! தாவகாநாம் - உன்னுடையவைகளாயிருக்கிற, ஸமஸ்யமணீநாம் - இந்திரநீலகல்லுக்களுடைய, பாஸிபி: - காந்திகளாலே, ததா - கிருஷ்ணவதாரம்பண்ணின காலத்திலே, ஸலிலஸரணபாஜாம் - அபிசாரி ஆடுவதில் ஆசையுள்ளவர்களாயிருக்கிற, வல்லவீநாம்-இடைச்சிகளுக்கு, ப்ரசித - போக்கடிக்கப்பட்டிருக்கிற,குருஜந - மாமனார்முதலான பெரியவர்களிடத்திலிருந்து, பய - பயமாகிற, ஸாத்யா: - உபத்திரவத்தையுடைத்தானதாயும், வாஸரை: - பகல்களோடே, ஸமேதா-சேர்ந்ததுமாயிருக்கிற, துங்கா - ரொம்ப உயர்ந்ததாயிருக்கிற, காபி ச - விலக்ஷணமான, ஸர்வரீ - ராத்திரியானது, ஆஸீச் - ஏற்பட்டது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுகள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தியைப் பார்த்தால் பகலில்கூட இராத்திரிபோலிருக்கிறது அதனாலே கிருஷ்ணவ

தாரகாலத்திலே மாமனூர் முதலானவர்களுக்குப் பயந்து ராத்திரியில் கிருஷ்ணனோடு அபிசாரி ஆடின இடைச்சிகளுக்கு அந்த பிரயாஸையில்லாமல் பகலில்கூடப் பயப்படாமல் அபிசாரி ஆடும்படியாய்விட்டது.

உலகத்தில் பெருமாள் முதலான நல்ல ஸங்கதிகளையே நினைப்பதே அரிது. அப்படி யாராவது ஒருவன் நினைத்தால் வீட்டிலிருப்பவர்களும் ஊரிலிருப்பவர்களும் இப்பொழுது முதற்கொண்டு என்னங்காணும் சரணாகதி என்று வைகிறார்கள். அதற்காக பயந்து அவர்கள் ரஹஸ்யமாகப் பெருமாளை நினைக்கிறார்கள். ஆழ்வார் திருவாய்மொழி ஸாதித்தபிறகு அதின் கருத்தையறிந்தால் ஒருவருக்கும் பயப்படாமல் எப்பொழுதும் பெருமாளைத் தியானிக்கலாம். திருவாய்மொழியின் கருத்து நல்ல ஆசார்யர்களின் அனுக்ரஹத்தினால் மனதில்பட்டால் கொஞ்சம் கூட பிரயாஸமில்லாமல் ஸம்ஸாரத்தை விடலாம். (17)

(சாகூஅ) ஶதமகமணிஸங்கைர்பூயஸீபிர்மயூகை:
ஶரணமுபகதாநாம் ரங்கநாதேந ஸாம்யம் ।
ப்ரதயஸி ஜகதி த்வம் பாதுகே ஹேதுகாநாம்
உபநிஷதுபகீதாம் தத்க்ரதுந்யாயஸித்திம் ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! த்வம் - நீ, உரு - அதிகமாயிருக்கிற, மயூகை: - காந்திகளையுடைத்தாயிருக்கிற, ஶதமகமணி - இந்திரநீலக்கல்லுக்களுடைய, ஸங்கை: - துணுக்குகளாலே, ஶரணம் உபகதாநாம் - உன்னைஉபாயமாக நம்பினவர்களுக்கு (உன் கோயிலை அடைந்தவர்களுக்கு,) ரங்கநாதேநஸாம்யம் - ஸ்ரீரங்கநாதன்போல் ஆவதை, பிப்ரதீ - கொடாநின்றுகொண்டு, உபநிஷத் - உபநிஷத்துக்களிலே, உபகீதாம் - சொல்லப்பட்டிருக்கிற, தத்க்ரதுந்யாயஸித்திம் - எப்படி நினைக்கிறானோ அப்படியே ஆகிறான் என்கிற ஸமாசாரத்தை, ஜகதி - உலகத்திலே, ஹேதுகாநாம் - வேதத்தில் சொல்லிய ஸங்கதிகளைப்பற்றி நம்பாமல் யுக்தியைக்கொண்டு இது எப்படிவரும் என்று கேட்கிறவர்களுக்கு, ப்ரதயஸீவ - பிரஸித்தப்படுத்துகிறாய்போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலகல்லுகள் இழைத்திருக்கின்றன. அவைகளின் வர்ணம் பெருமாளுடைய திருமேனி காந்திபோலிருக்கிறது. அதனாலே உன்கிட்ட வருகிற வர்கள்பேரில் அந்தக்காந்திபட்டால் அவர்கள் பெருமாள்போல் கருப்பாக ஆகிவிடுவார்கள். நீ ஏன் அப்படிச் செய்கிறாயென்றால் உபநிஷத்திலே ஒருவன் தனக்கு ஒரு ஸங்கதி வரவேணுமென்று எப்பொழுதும் நினைத்தால் அது அவனுக்கு வந்துவிடுமென்று சொல்லியிருக்கிறது. அது எப்படி வருமென்று சிலர்கேட்கிறார்கள். அவர்களுக்கு அது கட்டாயம் வருமென்று காட்டிக்கொடுப்பதற் காக ஆழ்வாரிடத்திலிருக்கும் நல்ல ஸங்கதிகளையறிந்து அந்த ஸங் கதிகள் தனக்கு வரவேணுமென்று ஆழ்வாரிடத்தில் பக்திபண்ணி னால் அது அவனுக்குக் கட்டாயம் வந்துவிடும்.

ஸம்ஸர்கஜா தோஷகுணா பவந்தி என்று ஒரு பழமொழி.

அதாவது நல்லவனோடு சேர்ந்தால் நல்லதுவரும். கெட்டவ னோடு சேர்ந்தால் கெட்டது வருமென்று. அதில் கெட்டது வரு வது நிச்சயமில்லை ஏனென்றால் தயவுள்ள தெய்வத்திற்கு கெட் டதைக்கொடுக்கவேணுமென்று எண்ணமில்லை. தெய்வத்திற்கு இஷ்டமாயிருப்பதால் நல்லது கட்டாயம் வரும், நல்ல ஆசாரி யாளிடத்தில் பக்திபண்ணினால் அவர்களுக்கு மோக்ஷம் கட்டா யம் வரும். அதாவது பெருமாளைப்போல் ஸுகத்தையனுபவிப் பார்கள். நல்ல ஆசாரியர்கள் சொன்னபடி கேட்கிறார் பெருமாள். நல்ல ஆசார்யர்கள் அகப்படுவது கஷ்டம். பெருமாளை ஸ்வாதீ னப்படுத்துவது ரொம்ப சுலபமென்றும் சொல்லலாம். ரொம்ப கஷ்டமென்றும் சொல்லலாம். தன்னை இளப்பமாக நினைத்தவ னுக்குப் பெருமாள் ஸ்வாதீனம். (18)

(ககஅக) **பரிசரதி விதௌ த்வாம் பாதுகே ரங்கபர்த்து:**
**பதஸரஸிஜஹ்ருத்யைர் ஜ்ஞாநஸாரோபரிஷ்டை நீலை:**
**ப்ரகடிதயமுநாபா ஸக்திநத்யஸ்ய ஸம்பேதா:**
**பரிணமயஸி வர்ணாவிஷ்ணுபத்யா: ப்ரயாகம் ॥**

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! த்வாம் - உன்னை, விதௌ - பிரும்மாவானவர், பரிசரதி - ஆராதிக்கிறபோது, ரங்கபர்த்து: - ஸ்ரீரங்கநாதனுடைய, பத - திருவடிகளாகிற,

ஸாரஸிஜ - தாமரைப்பூக்களுக்கு, ப்ருங்கை: - வண்டுகள்போல் இருக்கிற, ஸாஸந்நை: - விளங்காநிற்கிற, இந்த்ரநீலை: - இந்திரநீலக்கல்லுக்களாலே, வ்யஞ்ஜித - பிரகாசப்படுத்தப்பட்டிருக்கிற, யமுநா - யமுனையினுடைய, ஓக - வெள்ளத்தையுடைத்தாயிருக்கிற, த்வம் - நீ, பக்த்யா - பக்தியினாலே, நம்ரஸ்ய - வணங்கியிருக்கிற, ஸம்போ: - சிவனுடைய, மூர்த்நா - தலையிலிருக்கிற, விஷ்ணுபத்யா: - கங்கைக்கு, வ்யாமிஸ்ரம் - யமுனையினுடைய சேர்க்கையை, வ்யதநுஷி - உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பிரும்மா உன்னை ஆராதனம் பண்ணுகிறார். அப்போது சிவன் வந்து உன்னை ஸேவிக்கிறார். உன்னிடத்தில் இந்திரநீலக்கல்லுகள் இழைத்திருக்கின்றன. உன்னை ஸேவிக்கும்போது அந்த இந்திரநீலக்கல்லுகளின் காந்திகள் சிவன் தலையிற்படுகிறது. அந்த காந்தியைப்பார்த்தால் யமுனை மாதிரி இருக்கிறது. அதனால் சிவன் தலையிலிருக்கும் கங்கை யமுனையோடு சேர்ந்ததுபோலிருக்கிறது. பெருமாளுடைய உள்ளங்கால் செந்தாமரைப் பூப்போலும், சிகப்பாயும், மெதுவாயும், வாஸனையுள்ளதாயுமிருக்கிறது. உன்னுடைய இந்திரநீலக்கல்லுகள் அந்தத் தாமரைப்பூவுக்கு வண்டுகள்போலிருக்கின்றன.

ஆழ்வார் பெருமாளை உள்ளபடி அறிந்து எல்லையில்லாத பக்தியினால் பெருமாள் திருவடியைப்பற்றிப் பாடின பாசுரங்களை அதின் ரஸமறிந்த எல்லோரும் வைத்துக்கொண்டாடுகிறார்கள். சொல்லக்கூடாது. உப்புப்புளியில்வளர்ந்த நம்வீட்டு சின்னக்குழந்தைகளுடைய கால்கள் ரொம்ப மெதுவாயும் சிகப்பாகவுமிருக்கிறது. பெருமாள் திருவடி தாமரைப் பூப்போலிருக்கிறதென்று சொல்லவும் வேண்டுமோ. (19)

(எ௦௦) பதகிஸலயஸங்காத் பாதுகே பத்மராக-
ப்ரபவஸமிதிராகாத் நிர்ந்நிமேஷாவிமேஷா: ।
பதவஸமிதநீலா ஸாரிதாவர்த்யஸிதா
ப்ரபிலதததாரா காதவி வேதாவநீ த்வம் ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! பதகிஸலய - துளிர்போலிருக்கிற திருவடியினுடைய, ஸங்காத் - சேர்க்கையி

ளாலே, வஜ்ரஸூசீ:- இலையுள்ளதுபோல் விளங்காநிற்கிற, உதா ரை: - ரொம்ப சிலாக்கியமாகவிருக்கிற, நவமணி- வைரங்கள் போலிருக்கிற நகங்களாலே, நித்ய - எப்பொழுதும், நிஷ்பந்ந - ஏற்பட்டிருக்கிற, புஷ்பா - பூக்களையுடைத்தானவளாயும், மரகத மணி - இந்திரநீலக்கல்லுகளாலே, (கல்லுகள்போல) நீலா - கருப்பாயுமிருக்கிற, த்வம் - நீ, நிபிடதர - ரொம்ப நெருக்கமாக இருக்கிற, தமால - பச்சலை மரங்களையுடைத்தாயிருக்கிற, மாரி - பெருமாளுடைய, லாவண்ய - அழகாகிற, ஸிந்தோ: - ஸமுத்திரத்தினுடைய, காபி - இன்னதென்று சொல்லமுடியாத (அதாவது ரொம்ப உயர்ந்த) வேலா வநீவ - கரையிலிருக்கிற காடுபோலிருக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளுடைய அழகைப்பார்த் தால் ஸமுத்திரம்போலிருக்கிறது. உன்னைப் பார்த்தால் அதின் கரையிலிருக்கும் ஒரு காடுபோலிருக்கிறது. உன்பேரிலிருக்கும் இந்திரநீலக்கல்லுக்கள் பச்சலைமரங்கள்போலிருக்கின்றன. உன் பேரிலிருக்கும் பெருமாள் திருவடிநகங்கள் பூக்கள்போல் இருக் கின்றன. திருவடி துளிர்போல் இருக்கிறது. ஆழ்வாராலேபெரு மாளுக்கு ரொம்ப அழகு ஏற்படுகிறது. (20)

**(௭௦௧) த்வயி விநிஹிதமேதத் கேசித் பச்யந்தி தந்யா மரகதமணிஜாலம் மாதவீ பாதரக்ஷே ।**
**வயமிஹ விஷ்ணு ப்ராணிநாம் த்யாயதாம் ஸ்ரீமத் ரங்கதாம ஸ்ரீமதா ஸ்வயம் ॥**

மாதவீ - பெருமாளுடைய, பாதரக்ஷே - திருவடி யைக் காப்பாற்றுகிற பாதுகையே ! கேசித் - சில, தந்யா: - கவ னித்துப் பார்க்காதவர்கள், த்வயி - உன்னிடத்தில், விநிஹிதம் - வைக்கப்பட்டிருக்கிற, ஏதத் - இந்தக் கருப்பாயிருக்கிறவஸ்து வை, மரகதமணி - இந்திரநீலக்கல்லுக்களுடைய, ஜாலம் - கூட்டமாக, பச்யந்தி - பார்க்கிறார்கள். வயம்-நாங்களோவென் றால், இஹ - இந்த உன்னிடத்திலிருக்கிற, இதம் - இதை, த்யா யதாம் - உன்னைத்தியானம் பண்ணுகிற, ப்ராணிநாம்-பிரா

ணிகளுடைய, ஹ்ருதய - மனதாகிற, க்ருஹ - வீட்டினுடைய, கர்பாகாரத:-உள்ளிலே இருந்து, பீதம்-சாப்பிடப்பட்டிருக்கிற, ஜாட்யம் - ஒன்றும் தெரியாமல் பண்ணுகிறதாயிருக்கிற, தமிஸ்ரம்- அக்ஞானமாகிற இருட்டாக, விது: - நினைக்கிறோம்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் கருப்பாக ஒரு வஸ்துஇருக்கிறது. அதைச்சிலர் இந்திரநீலக்கல் என்றுசொல்லுகிறார்கள். அவர்கள் நன்றாய் கவனித்துப்பார்க்கவில்லையென்று எங்களுக்குத் தோன்றுகிறது. பின்னே என்னவென்றால், உன்னை தியானிக்கிறவர்களுடைய மனஸ்ஸுக்களிலிருந்து உன்னால்சாப்பிடப்பட்ட அக்ஞானமாகிற இருட்டாக நினைக்கிறோம்.

ஆழ்வாருடைய பாசுரங்களின் கருத்தை நல்ல ஆசாரியர்களுடைய அனுக்ரஹத்தினாலும் உபதேசத்தினாலுமறிந்தால் அவர்களுக்குத் துளிக்கூட அக்ஞானமிருக்காது. அறியவேண்டிய ஐந்து ஸங்கதிகளை ரொம்ப நன்றாய் அறிவார்கள். அதாவது (1) ஜீவன், (2) பெருமாள், (3) நம்முடைய பாபம், (4) பெருமாளைக் கெஞ்சிக்கேட்கிறது, (சரணாகதி) (5) பெருமாளுக்கு இஷ்டமான வேலைகளைச் செய்கிறது. ஆசார்யர்கள் கீழ்ச்சொன்ன ஐந்து ஸங்கதிகளை நன்றாய் அறிந்து பெருமாளை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு தன்னிடத்தில் வரும் சிஷ்யர்களுக்கு நல்ல அறிவை உண்டாக்கிக் கெட்டகுணங்கள் முதலானவைகளைப் போக்கவேணும். இந்தக்காலத்தில் அந்தமாதிரி ஆசாரியர்கள் அகப்படுவது ரொம்ப அரிது.

(21)

(எ0௨) கல்ப்தஶ்யாமா மணிபிரஸிதை: க்ருஷ்ணபக்ஷேண ஜுஷ்டா ஶ்ரேய: பும்ஸாம் ஜநயதி கதிம் தக்ஷிணாம் சாஹஸ்ரீ । தேநாஸ்மாகம் ஶமயதி பாபம் பாதுகே த்வத்விபூதி: ப்ராக்ஜந்ம த்ருஷ்டாம் நிஶா வசஸாம் ஶக்திகாராவ்யவஸ்தாம் ‖

ஹே பாதுகே - ஸ்ரீபாதுகையே! அஸிதை: - கருப்பாயிருக்கிற, மணிபி: - இந்திரநீலக்கல்லுக்களாலே, கல்ப்த - உண்டுபண்ணப்பட்டிருக்கிற, ஶ்யாமா - கருப்புருபத்தையுடைத்தானவளாயும் (ராத்திரியை உடைத்தானவளாயும்) க்ருஷ்

வடுக்ஷண-கிருஷ்ணனுக்குவேண்டியவர்களாலே, (கிருஷ்ணபக்ஷத்தாலே) ஜுஷ்டா - ஸேவிக்கப்பட்டவளாயும், (அடையப்பட்டவளாயும்) உத்தரா-ரொம்ப இன்பமாயிருக்கிற, கதிம்-ஸஞ்சாரத்தை (தக்ஷிணாயனத்தை) உபஹதீ - அடைந்தவளாயுமிருக்கிற, த்வம் - நீ, தேஹபாஜாம் - பிராணிகளுக்கு, ஶ்ரேயஃ- மோக்ஷத்தை, ஜநயஸி - உண்டுபண்ணுகிறாய். தேந - அதனாலே, தத்வவித்பிஃ - உண்மையை அறிந்தவர்களாலே, நிகமவசஸாம் - வேதவாக்குக்களுடைய, மௌளௌ - தலையிலே அதாவது உபநிஷத்திலே, த்ருஷ்டாம் - பார்க்கப்பட்டிருக்கிற, அதாவது அறியப்பட்டிருக்கிற, உத்க்ராந்தி - மோக்ஷத்திற்குப்போகிற ஸமயத்தினுடைய, அவ்யவஸ்தாம் - கட்டுப்பாடில்லாமையை அதாவது மோக்ஷத்திற்காகச்செய்யவேண்டிய உபாயத்தைச்செய்தவர்களுக்கு எந்த காலத்தில்செத்துப்போனாலும் மோக்ஷம் உண்டு என்பதை, அஸ்மாகம் - எங்களுக்கு, வ்யஞ்ஜயஸிவ - தெரியப்படுத்துகிறாய் போல.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திர நீலக்கல்லுக்கள் இழைத்திருக்கின்றன அதனால் நீ கருப்பாயிருக்கிறாய்; எப்பொழுதும் பெருமாளுடைய பக்தர்கள் உன்னை ஆராதிக்கிறார்கள். உன்னைச்சாத்திக்கொண்டு பெருமாள் ரொம்ப இன்பமாக எழுந்தருளுகிறார். நீ உன்னை அடைந்த எல்லாருக்கும் மோக்ஷம் வரையிலுள்ள எல்லாக்ஷேமங்களையும் கொடுக்கிறாய். இந்த சுலோகத்தில் இன்னொருவிதமான அர்த்தம் கிடைக்கிறது. நீ ராத்திரியாயும், கிருஷ்ணபக்ஷமாயும் தக்ஷிணாயநமாயுமிருக்கிறாய். அப்படி இருந்தாலும் மோக்ஷத்தைக் கொடுக்கிறாய். அதனால் வியாஸர் முதலான பெரிய ரிஷிகளாலே உபநிஷத்துக்களில் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு ஸங்கதியை எங்களுக்குத் தெரியப்படுத்துகிறாய். அதாவது - மோக்ஷத்திற்காக பக்தி பிரபத்தி முதலான வேலைகளைச்செய்தவர்கள் ராத்திரி முதலான காலங்களில் செத்துப்போனாலும் மோக்ஷம் உண்டு. யாகம் முதலான மற்ற புண்ணியங்களைச் செய்தவர்கள் அந்த காலங்களில் செத்துப்போனால் அவர்களுக்கு நல்லகதி கிடையாது. ஏனென்றால் மோக்ஷத்திற்காக வேலைகளைச் செய்தவர்களிடத்தில் பெருமாளுக்கு எல்லையில்லாத பிரீதி இருக்கிறது. அதனால் அவர்களை எப்போதுபோனாலும்

அழைத்துக்கொண்டு போகிறார். அவர்களுக்கு மோக்ஷம் ஸொந்த வீடுபோல. உதாரணம் ஒருவன காஞ்சீபுரத்தில் ராத்திரி 12 மணி ரயிலில் வந்து இறங்குகிறான். அவனுக்கு அந்தவூரில் ஸொந்தவீடு இருக்கிறது. உடனே ஸொந்தவீட்டுக்குள் போய்விடுகிறான். ஸொந்தவீடும் ஸ்நேகிதர்களும் இல்லாதவன் ரயில்ஸ்டேஷனிலேயா வது சத்திரம் சாவடிகளிலாவது படுத்துக்கொள்ளவேணும். ஏனெ ன்றால் ராத்திரி 12 மணிக்கு யார்வீட்டில்போய் கதவு இடிக்கிறது, யார் கதவைத் திறப்பார்கள், அதுபோல. (22)

**(ஏ०௩) ஸத்³பி⁴ர்ஜுஷ்டா ஸமுதி³தவிபு⁴ர்ஜைத்ரயாத்ரா**
**விநோதே³ஷ்வாத³த்தா ரஜநிமநவாமிந்த்³ரநீலாம்ஶு**
**ஜாலை: । சித்ரம் ப்ரக்²யா குமுத³வநத: பாது³கே**
**புஷ்ணாஸி த்வம் ப்ரபோ³தக்ஷமம் விபு³த⁴வநிதா**
**வக்த்ரபத்³மோத்கராணாம் ॥**

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! ஸத்³பி⁴: - பெரி யோர்களாலே, (நக்ஷத்திரங்களாலே) ஜுஷ்டா - ஸேவிக்கப்பட் டவளாயும், ஸமுதி³த - சேர்ந்திருக்கிற, விபு⁴: - பெருமாளை (சந்திரனை) உடைத்தானவளாயும், ஜைத்ர-ஜயத்துக்காகவிருக் கிற, யாத்ரா - பிரயாணமாகிற, விநோதே³ஷு - ஸந்தோஷகா லங்களிலே, இந்த்³ரநீல - இந்திரநீலக்கல்லுக்களுடைய, அம்ஶு - கிரணங்களுடைய, ஜாலை: - கூட்டங்களாலே, அநவாம் - குற்றமில்லாமலிருக்கிற, ரஜநிம் - ராத்திரியை, ஆத³த்தாம் - உண்டுபண்ணுகிறவளாயும், குமுத³ - ஆம்பல் பூக்களுடைய, வநத: - காட்டினாலே, ப்ரக்²யா-பிரஸித்தையாயுமிருக்கிற, த்வம்- நீ, விபு³த⁴வநிதா - தேவஸ்திரீகளுடைய, வக்த்ர-முகங்களாகிற, பத்³மோத்கராணாம் - தாமரைப்பூக்களுக்கு, ப்ரபோ³தக்ஷமம்-மல ர்த்தியை, புஷ்ணாஸி - உண்டுபண்ணுகிறாய், சித்ரம்-ஆச்சர்யம்

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திர நீலக்கல் லுக்கள் இழைத்திருக்கின்றன; அந்த காந்தியினாலே பெருமாள் உன்னைச்சாத்திக்கொண்டு அஸுரர்களை ஜயிப்பதற்காக எழுந்தரு ளும்போது ஸூரியன் முதலானவர்களாலேகூட போக்கமுடியாத ராத்திரியை உண்டுபண்ணுகிறாய். அதாவது அந்த காந்தியைப்

பார்த்தால் ராத்திரிபோலிருக்கிறது. உன்னைப்பெரியோர்கள் எல்லாரும் ஸேவிக்கிறார்கள். நீ எல்லா தேவஸ்திரீகளுக்கும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறாய். அதாவது பெருமாள் உன்னைச் சாத்திக்கொண்டு எழுந்தருளி அஸுரர்களைக் கொல்லுகிறார். அதனால் தேவதைகள் ஸந்தோஷப்படுகிறார்கள்.

ஆழ்வார் அவதரித்ததினாலேதான் சாந்தி, பக்தி, விரக்தி, தயை, பொறுமை நல்லபுத்தி இவை முதலான நல்ல குணங்கள் உலகில் விளங்குகின்றன. இந்த சுலோகத்தில் ஒரு அர்த்தம் தோன்றுகிறது. ஆம்பல் புஷ்பங்களை மலர்த்துகிற நக்ஷத்திரங்களோடும் சந்திரனோடும்கூடிய ராத்திரியானது தாமரைப்பூக்களை மலர்த்துகிறது. இது ரொம்ப ஆச்சரியம். அநேக அர்த்தங்களை தோன்றப்பண்ணக்கூடிய வார்த்தைகளைச்சொல்வது கவிகளுக்கு ஒரு விசேஷமான சக்தி. (23)

(௨௪) நித்யம் ஶ்ரீநயநருசிரை: ஶோபிதா ஶக்ர-
நீலைஶ் ஶாலக்ராமக்ஷிதிரிவ ஶுபைஶ் ஶார்ங்கி-
ணோ ரூபபேதை: । ஸாகேதாதேஸ் ஸமதிகதரா-
ம் ஸம்பதம் உபதிஶந்தீ முக்திக்ஷேத்ரம் முநிபி-
ரகிலை: பட்யஸே பாதுகே த்வம் ॥

ஹே பாதுகே - வாராய்பாதுகையே! ஶுபை: - ரொம்பவும் க்ஷேமத்தைப்பண்ணுகிறவைகளாக இருக்கிற, ஶார்ங்கிண: - பெருமாளுடைய, ரூபபேதை: - ஒருவிதமான திருமேனிகளாலே, ஶாலக்ராமக்ஷிதிரிவ - ஸாளக்ராமம்விளைகிற பூமிபோல, ஶ்ரீ - மஹாலக்ஷ்மியினுடைய, நயந - கண்கள் போல, ருசிரை: - அழகாக இருக்கிற, ஶக்ரநீலை: - இந்திரநீலக்கல்லுக்களாலே, நித்யம் - எப்பொழுதும், ஶோபிதா - விளங்கப்பண்ணப்பட்டவளாயும், ஸாகேதாதே:-அயோத்தி முதலானவிடங்களைக்காட்டிலும், ஸமதிகதராம்-ரொம்ப உயர்ந்ததாக இருக்கிற, ஸம்பதம் - ஐசுவரியத்தை, உபதிஶந்தீ-காண்பியாநிற்கிற, த்வம் - நீ, அகிலைர்முநிபி: - எல்லாருஷிகளாலேயும், முக்திக்ஷேத்ரம் - மோக்ஷம் கொடுக்கிற இடமாக பட்யஸே - சொல்லப்படுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திர நீலக்கல் லுக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளைப்பார்த்தால் ஸாளக்கிராமம் மாதிரி இருக்கின்றன. உன்னை எல்லாருஷிகளும் மோக்ஷம் கொடுக்கின்றதாகச் சொல்லப்பட்ட அயோத்தி முதலான இடங்களைக் காட்டிலும் உயர்ந்தவளாகச் சொல்லுகிறார்கள். (அயோத்யை, மதுரை, காசி, காஞ்சி, துவாரகை, மாயை, அவந்தி என்கிற ஏழுபட்டணங்கள் முக்தி க்ஷேத்திரங்கள்) அயோத்யை முதலான இடங்களிலிருந்து மோக்ஷத்தை அடைவதைக் காட்டிலும், ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்களை அடைந்தால் மோக்ஷத்தைப்பிரயாஸை யில்லாமல் அடையலாம். அதுவும் தவிர அறிவு தயை பொறுமை முதலானவைகளையும் அடைந்து விசேஷ ஸுகத்தையும் அடையலாம். (24)

(௨௫) பாதந்யாஸப்ரியஸகீம் பாதுகே வாஸ
ஸௌதாத் த்வாமாருஹ்ய த்ரிபதவபுஷம் நிர்கதே
ரங்கநாதே । அந்தஸ்ஸ்திதை ரஸதிஸஹிதா வேணி
விச்லேஷவிதித்ஸு: ச்யாமலாயம் பவதி பவநம் சக்ர
நீலாம்சுபிஸ்தே ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே, ரங்கநாதே - ஸ்ரீரங்கநாதனானவர், பாதந்யாஸ - அடிவைப்புக்கு, ப்ரிய ஸகீம் - இஷ்டமான தோழியாயிருக்கிற, த்வாம் - உன்னை, ஆருஹ்ய - ஏறி, வாஸஸௌதாத் - இருப்பிடத்திலிருந்து; அதாவது ரங்கவிமானத்திலிருந்து, த்ரிபதவபுஷம் - மூன்று நாலு அடி, நிர்கதே - வெளிப்பட்டபோது, பவநம் - கோவிலானது, ஸ்திதை: - பிசுக்குள்ளவைகளாயும், அஸதீஸஹிதா வேணிவிச்லேஷவிதித்ஸு: - அஸதிஸ்திரீகள் தலைமயிரைவிரித்துப்போடுவதற்கு தோழனாயிருக்கிற, அதாவது அதுபோலவும், அதை உண்டுபண்ணுவதாயுமிருக்கிற, தே - உன்னுடைய, சக்ர நீல - இந்திர நீலக்கல்லுக்களுடைய, அம்சுபி:-காந்திகளாலே, அந்த: - உள்ளே, ச்யாமலாயம் - கருப்புக்காந்தியை உடைத்தானதாக, பவதி - ஆகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திர நீலக்கல்லுக்கள் இழைத்திருக்கின்றன. உன்னைச்சாற்றிக்கொண்டு பெருமாள் வெளியில் நாலடி எழுந்தருளுகிறபோது ஸந்நிதிக்குள் எங்கும் ஒரே கருப்பாக போகிறது. சத்துருக்களைக் கொல்லுவதற்காக உன்னை சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளின உடனே அஸுரர்கள் எல்லாரும் செத்துப்போனபடியால் அவர்கள் பெண்டாட்டிகள் தலையை விரித்துக்கொண்டு கீழே விழுகிறார்கள். ரொம்பவும் கருப்பாயும் பூமி எங்கும் பரவினதாயுமிருக்கிற அவர்கள் மயிர்கள்போலிருக்கிறது உன்பேரில் இழைத்திருக்கிற இந்திர நீலக்கல்லுக்களின் காந்தி.

ஆழ்வாருடைய பாசுரங்களின் கருத்தை நல்ல ஆசாரியர்களுடைய அனுக்கிரகத்தினாலும் உபதேசத்தினாலும் உள்ளபடி அறிந்தவனுக்குக்கெட்ட குணங்களெல்லாம்போய், பக்தி, ஒழிவு, தயை பொறுமை முதலான நல்ல குணங்கள் எல்லை இல்லாமல் வந்து விடுகின்றன. (25)

**(௭௦௯) யாதே பாஹ்யாங்கணம் ஸ்ரயதஃ பாதுகே ரங்க
நாதஸ்ய ஸஞ்சாரேஷு ஸ்புரதி விததிஸ் ருக் நீலோபலா
நாம் | விஷ்வக்ஸேநப்ரப்ருதிபிரஸௌ த்ருஸ்யதே வே
த்ரஹஸ்தைர் ப்ரூவிக்ஷேபஸ்தவ த்ரிதஸாநாம்
ஆஹ்வாநஹேதுஃ ||**

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! பாஹ்யாங்கணம் - வெளிக்கட்டை, ஸ்ரயதஃ - அடையாநின்றிருக்கிற, ரங்கநாதஸ்ய - ஸ்ரீரங்கநாதனுடைய, ஸஞ்சாரேஷு - ஸஞ்சாரங்களிலே, தே - உன்னுடைய, ருக் நீலோபலாநாம் - இந்திர நீலக்கல்லுக்களின் காந்திகளுடைய, யா விததிஃ - யாதொரு பரம்புதலானது, ஸ்புரதி - தோன்றுகிறதோ, அஸௌ - அதானது, வேத்ரஹஸ்தைஃ - பிரம்பைக்கையில் உடைத்தாயிருக்கிற, விஷ்வக்ஸேநப்ரப்ருதிபிஃ - விஷ்வக்ஸேநர் முதலானவர்களாலே, த்ரிதஸாநாம் - தேவதைகளுடைய, ஆஹ்வாநஹேதுஃ - அழைப்பதற்குக்காரணமாக இருக்கிற, தவ - உன்னுடைய, ப்ரூவிக்ஷேபஃ - புருவத்தினுடைய அசக்கலாக த்ருஸ்யதே - நினைக்கப்படுகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திர நீலக்கல்லுக்கள் இழைத்திருக்கின்றன. உன்னைச்சாற்றிக்கொண்டு பெருமாள் வெளியில் எழுந்தருளுகிறபோது உன்னுடைய இந்திரநீலக் காந்தி பரம்புவதைக் கையில் பிரம்பை வைத்துக் கொண்டிருக்கிற விஷ்வக்ஸேநர் முதலானவர்கள் பார்த்து, அதைத்தேவதை அழைக்கிறதற்கு நீ புருவத்தால் ஜாடைகாட்டினதாக நினைக்கிறார்கள். அதாவது உடனே உத்ஸவத்திற்கு எல்லா தேவதைகளையும் கூப்பிடுகிறார்கள்.

ஆசார்யர்களுடைய பூர்ணனுக்ரஹம் ஒருவனுக்குவந்தால் அவனுக்கு எல்லா நல்லகுணங்களும் வந்துவிடுகிறது. நித்யஸூரிகள் முதல்கொண்டு அவனுக்கு கைகட்டி காத்துக்கொண்டிருக்கிறார்கள். (26)

(௨௨௭) அக்ஷ்ணாமஞ்ஜநகல்பநா யவநிகா நாட்யஸ்ய ஹேதோர்
கதேர் தீகங்காயமுநா சௌரேர்ஜலதேர்வேலா
தமாலாடவீ। காந்தாகுந்தலஸந்ததி: ஶ்ருதிவது
கஸ்தூரிகாலங்க்ரியா நித்யம் ரத்நபதாவநி ஸ்புர
தி தே நீலா மணிஶ்ரேணிகா ॥

ஹே ரத்நபதாவநி - வாராய் கல்லிழைத்த பாதுகையே, தே - உன்னுடைய, நீலா - கருப்பாக இருக்கிற, மணி - இந்திரநீலக்கல்லுக்களுடைய, ஶ்ரேணிகா - வரிசையானது, அக்ஷ்ணாம் - கண்களுக்கு, அஞ்ஜநகல்பநா - மை இடுகிறதாகவும், நாட்யஸ்ய - கூத்துக்கு, ஹேதோ: - காரணமாக இருக்கிற, கதே: - ஸஞ்சாரத்துக்கு, யவநிகா - திரையாகவும், தீ - ஞானமாகிற, கங்கா - கங்கைக்கு, யமுநா - யமுனையாகவும், சௌரே: - பெருமாளாகிற, ஜலதே: - ஸமுத்திரத்தினுடைய, வேலா - கரையிலிருக்கிற, தமாலாடவீ - பச்சிலை மரக்காடாகவும், காந்தா - மஹாலக்ஷ்மி முதலான ஸ்திரீகளுடைய, குந்தல - மின்னிச்சி மயிர்களுடைய, ஸந்ததி: - வரிசையாகவும், ஶ்ருதி - வேதமாகிற, வது - ஸ்திரீகளுக்கு, கஸ்தூரிகாலங்க்ரியா - கஸ்தூரியினுடைய பூச்சாகவும், நித்யம் - எப்பொழுதும், ஸ்புரதி - விளங்குகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன் பேரில் இந்திர நீலக்கல்லுக்கள் இழைத்திருக்கின்றன. அதைப்பார்த்தால் ஸேவிக்கிறவர்கள் கண்களுக்கு மையாகவும், பெருமாள் எழுந்தருளுகிறதற்கு திரையாகவும், அறிவு என்கிற கங்கைக்கு யமுனையாகவும், பெருமாளாகிற ஸமுத்திரத்தின் கரையிலிருக்கும் காடாகவும், மகாலக்ஷ்மிமுதலானவர்களுடைய மயிர்களாகவும், வேதங்களாகிற பெண்கள்நெற்றிக்கு இட்டுக்கொள்கிற கஸ்தூரியாகவும்தோன்றுகிறது.

ஆழ்வார் பாசுரங்களின் கருத்தை உள்ளபடி அறிவது உயர்ந்த புதயல்களை காட்டக்கூடிய கண்ணுக்கு இட்டுக்கொள்கிற மைபோலவும், உடனே பெருமாள் எழுந்தருளுவதற்கு காரணமாயும், நல்ல ஞானத்தை வளர்ப்பதாயும், மகாலக்ஷ்மி முதலானவர்களாலே கொண்டாடக்கூடியதாகவும், வேதங்களுக்கு அலங்காரமாயுமிருக்கிறது. (27)

**(௨௮) நிரந்தரமஹாநீலோபலஸம்பவாம் த்யுதிம் தாவகீம்**
**அவைமி மணிபாதுகே ஸரணிஸங்கினீம் ரங்கிண: ।**
**ததீயநவயௌவநத்விரதமுக்யகண்டஸ்தலீ**
**கலந்மதஜலப்ரவாஹபஹுலகஜ்ஜலஶ்யாமிகாம் ॥**

ஹே மணிபாதுகே - ரத்னக் கல்லிழைத்த பாதுகையே, தாவகீம் - உன்னுடையதாயிருக்கிற, நிரந்தர - நெருக்கமாக இருக்கிற, மஹாநீலோபலஸம்பவாம் - இந்திர நீலக்கல்லுக்களாலே உண்டாயிருக்கிற, ரங்கிண: - ஸ்ரீரங்கநாதனுடைய, ஸரணிஸங்கினீம் - வழியிலேயிருக்கிற, த்யுதிம்-காந்தியை, ததீய- அந்தப் பெருமாளுடையதாயிருக்கிற, நவ-புதிதாக இருக்கிற, யௌவந - யௌவநமாகிற, த்விரதமுக்ய - யானை சிரேஷ்டத்தினுடைய, கண்டஸ்தலீ - கன்னத்திலிருந்து, கலத்-பெருகாநிற்கிற, மத - மதஜலத்தினுடைய, ஜலப்ரவாஹ - வெள்ளத்தினுடைய, பஹுல - அதிகமாக இருக்கிற, கஜ்ஜல - மைபோலிருக்கிற, ஶ்யாமிகாம் - கருப்பாக, அவைமி - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இந்திரநீலக்கல்லுக்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்தி பெருமாள் உன்னைச் சாத்திக்கொண்டு வெளியில் எழுந்தருளும்போது வழியில் பாம்பு

கிறது. அதைப் பார்த்தால் பெருமாளுடைய யௌவனமாகிற யானையின் கன்னத்திலிருந்து பெருகின மதஜலம் தேங்கியிருக்கும் இடத்திலுள்ள கருப்பு மாதிரி தோன்றுகிறது. ஆழ்வார் பெருமாளுடைய யௌவனம்முதலான குணங்களுக்குத்தோற்று அவரைப் பாடினார். (28)

(எ௦௬) ப்ரதீமஸ்த்வாம் பாதாவநி ஸஹவஸதோ ரங்கவஸதே
கநீபூதாவஸ்தாம் பதகமலமாத்வீபரிணதிம் ।
ஸ்புரந்த: பர்யந்தே மதபரவசநிஸ்ஸஹதயா மதுப
ப்ரஸக்திம் யத்ரைதே விதததி மஹாநீலமணய: ॥

ஹே பாதாவநி - வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, த்வாம் - உன்னை, இத்தம் - இந்த பாதுகா ரூபமாக, கநீபூதாம் - தோய்ந்திருக்கிற, ரங்கவஸதே: - ஸ்ரீரங்க விமானத்திலிருக்கிற பெருமாளுடைய, பத - திருவடியாகிற, கமல - தாமரைப்பூவினுடைய, மாத்வீ - தேனினுடைய, பரிணதிம் - ஒரு விதமான மாறுதலாக, அஃதாவது ஒரு விதமான இருப்பாக, ப்ரதீம: - நினைக்கிறோம். யத்ர - யாதொரு உன்னிடத்திலே, பர்யந்தே - ஸமீபத்திலே, ஸ்புரந்த: - விளங்காநிற்கிற, ஏதே - இந்த, மஹாநீலமணய: - இந்திர நீலக்கல்லுக்கள், மதபரவச - ரொம்பக்கொழுப்பினாலே, நிஸ்ஸஹ - அசங்காமலிருக்கிற, மதுப - வண்டுகளுடைய, ப்ரஸக்திம் - பிரஸ்தாபத்தை, விதததி - பண்ணுகின்றனவோ.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப்பார்த்தால் பெருமாளுடைய திருவடியாகிற தாமரைப்பூவிலிருந்து தேன் பெருகி கெட்டியாகத் தோய்ந்துபோனாப் போலிருக்கிறது. உன்னிடத்தில் இழைத்திருக்கிற இந்திர நீலக்கல்லுக்களைப் பார்த்தால் அந்தத் தேனை ஏராளமாய்க்குடித்து மயங்கிப்போய் அசங்காமலிருக்கிற வண்டுகளைப்போலிருக்கிறது.

ஆழ்வாரைப் பார்த்தால் பெருமானைப்பற்றின பக்தி வடிவு கொண்டு வந்ததுபோலிருக்கிறது. அவர் ஸாதித்த பாசுரங்களெல்லாம் மெய்மறந்து பாடினவைகள். அந்தப்பாசுரங்களின் கருத்தை அறிந்த அவருடைய பக்தர்கள் மெய்மறந்துபோகிறார்கள். (29)

(௭௩௰) நதாநாம் நிஜேந்த்ரநீலஸம்பவேந ஶௌரிபாதா
ஶ்ரிதே பவதீ । தமஸா நிரஸ்யதி தம: கண்
டகிவ கண்டகேநைவ ॥

இதி ஸ்ரீகவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே இந்த்ரநீலபத்ததிஸ் ஸம்பூர்ணா: ॥

---

ஹே ஶௌரிபாதாஶ்ரிதே-வாராய் பெருமாளுடையபாது கையே! பவதீ - நீயானவள், நிஜ - தன்னுடையதாக இருக்கிற, இந்த்ரநீலஸம்பவேந - இந்திரநீலக்கல்லுக்களிலிருந்து உண்டாயிருக்கிற, கண்டகேநைவ - முள்ளுப்போலிருக்கிற, தமஸா - இருட்டுப்போலிருக்கிற காந்தியினாலே, நதாநாம் - வணங்கினவர்களுடைய, கண்டகிவ - முள்ளுப்போலிருக்கிற, தம: - அஜ்ஞானமாகிற இருட்டை, நிரஸ்யதி - போக்கடிக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் இழைத்திருக்கிற இந்திர நீலக்கல்லுக்களுடைய காந்தியைப்பார்த்தால் இருட்டுப் போலிருக்கிறது. அந்த இருட்டினாலே உன்னை ஸேவிக்கிறவர்களுடைய அஜ்ஞானமாகிற இருட்டைப்போக்கடிக்கிறாய். இருட்டினால் இருட்டைப் போக்கமுடியுமோ வென்றால், காலில்தைத்த முள்ளை இன்னொரு முள்ளினால் எடுப்பதுபோல் முடியலாம்.

பாதுகை யென்பது ஆழ்வார். நீலரத்னங்கள் என்பது பெருமாளை அடையாததினால் வந்த துக்கத்தினாலே யுண்டான அவருடையபாசுரங்கள். அவைகளின் கருத்தை அறிந்தவர்களுக்கு ஸம்ஸாரத்தினால் உண்டாகிற துக்கம் போய்விடுகிறது. ஒருவன் தன்னுடைய குற்றங்களையும், பெருமாள் தனக்கு அகப்படவில்லையே என்றும் நினைத்துத் துக்கப்பட்டால், அவனுக்கு எல்லாஸம்ஸார துக்கங்களும் போய்விடும். பெருமாள் அகப்படவில்லையே என்கிற துக்கம் துக்கமில்லை, அது ஸந்தோஷமே. (30)

இருபதாவதான இந்திர நீல பத்ததி முற்றிற்று.

ஶ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம: ||

ஶ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரம்

ஏகவிம்ஶதி பிம்பப்ரதிபிம்ப பத்ததி: ||

(௭௧௧) ஶௌரேஶ்ஶுத்தாந்தநாரீணாம் விஹாரமணிதர்ப்பணம் | ப்ரஸத்தேரிவ ஸம்ஸ்தாநம் பதத்ராணமுபாஸ்மஹே ||

ஶௌரே:-பெருமாளுடைய, ஶுத்தாந்தநாரீணாம்-அந்தப்புரத்து ஸ்திரீகளுடைய அதாவது மகாலெக்ஷ்மிமுதலான தேவிமார்களுடைய, விஹார-விளையாட்டுக்காகஇருக்கிற, மணிதர்ப்பணம்-ரத்நக்கண்ணுடிபோலவும், ப்ரஸத்தே:-தெளிவு என்பதினுடைய, ஸம்ஸ்தாநம்-வடிவுபோலவுமிருக்கிற, பதத்ராணம் - திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையை, உபாஸ்மஹே-த்யானிக்கிறோம்.

(கருத்து) இந்த பத்ததியில் கண்ணுடிபோல் இன்னொரு வஸ்துக்கள் பிரதிபலிக்கக்கூடிய பாதுகையின் பளபளப்பைப்பற்றி வர்ணிக்கிருர். பளபளப்பினுல் பாதுகை தாயார் முதலானவர்களுக்கு ரத்நக்கண்ணுடிபோலிருக்கிறது. தெளிவு என்பதேவடிவு எடுத்துக்கொண்டதுபோலிருக்கிறது. அப்பேர்ப்பட்ட பாதுகையை த்யாநிக்கிறேன்.

மகாபதிவ்ரதைகளான மகாலெக்ஷ்மி முதலானவர்களும் ஆழ்வாரைப்பார்த்துத்தங்களை ஒக்கப்பண்ணிக்கொள்ளவேண்டியதாக இருக்கிறது. உலகத்தில் கண்ணுடியைப்பார்த்துத்தான் தன்முகத்திலிருக்கும் குணதோஷங்களை அறிகிருர்கள். பாதிவிருத்யத்தில் மகாலெக்ஷ்மிக்கு ஸமானமாக ஆழ்வாரைத் தான் சொல்லலாம். ஆழ்வார் ஜனங்கள் ஸுகத்தை அடையவேணுமே என்கிற கவலையே வடிவுகொண்டாப்போலிருக்கிருர். (1)

(௭௧௨) கமலாபதிபாதுகே க்ஷமாவிவிதஸம்ப்ரஸ்வயி பிம்பிததா விபாதி | ஸவிலாஸமசேஷரங்கஸத்ருஷ்டிஜாட்யநிவாரணாய தூகார: ||

கமலாபதி-மகாலெக்ஷ்மிக்கு பர்த்தாவாயிருக்கிற பெருமாளுடைய, பாதரக்ஷே-வாராய் பாதுகையே, கதாசித்-ஒருக்கால், த்வயி-உன்னிடத்திலே, பிம்பித:-ப்ரதிபலித்திருக்கிற, விஹகேந்த்ர:-பக்ஷிகளுக்கெல்லாம் ராஜாவான கெருடனானவர், ரங்கபதே:-ஸ்ரீரங்கநாதனுடைய, ஸவிலாஸகதேஷு-விளையாட்டாக ஸஞ்சரிக்கிற காலத்திலேயும், நிஜம்-தன்னுடையதான, தநும்-உடம்பை, உபயாதுமநா இவ-பெருமாளுக்கு வாஹநமாகக்கொடுக்கவேணுமென்று எண்ணமுள்ளவர்போல, விபாதி-விளங்குகிறார்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் கெருடன் பிரதிபலிக்கிறார். உன்பேரில் பெருமாள் திருவடியைவைக்கும்போது கெருடன்பேரில் வைக்கிறதுபோலிருக்கிறது, அதைப் பார்த்தால் பெருமாள் உன்னைச்சாற்றிக்கொண்டு வேடிக்கையாக எழுந்தருளுகிற காலத்தில்கூட தன்பேரில் ஏறிக்கொள்ளவேணுமென்கிற ஆசையினால் கெருடன் உனக்குள் புகுந்ததுபோலிக்கிறது.

ஆழ்வாருடைய பாசுரங்கள் வேதத்தினுடைய பொருளாயிருப்பதினாலே இந்தப் பாசுரங்களைக் கேட்கும்போது, வேதத்தினுடைய ஞாபகம்வருகிறது- இந்தப்பாசுரங்களுக்குள் வேதம்இருக்கிறது. கெருடன் வேதஸ்வரூபமாகையால் கெருடன் என்றால் வேதம். (2)

(எகஉ) மணிபத்ததிஷு தே திசாமதீசா: ப்ரதிபிம்பாநி நிஜாநி வீக்ஷமாணா: । அபியாந்தி முகுந்தபாதரக்ஷே த்வாமதிகாரவ்யத்யயஸம்சயேவ ॥

ஹே முகுந்தபாதரக்ஷே-வாராய் பெருமாளுடைய பாதுகையே, திசாம்-திக்குகளுக்கு, அதீசா:-ராஜாக்களான இந்திரன் முதலானவர்கள், தே-உன்னுடைய, மணிபத்ததிஷு-ரத்தினங்களுடைய வரிசைகளில், நிஜாநி - தங்களுடையவைகளான, ப்ரதிபிம்பாநி-பிரதிபிம்பங்களை, வீக்ஷமாணா: - பார்த்தவர்களாய்க்கொண்டு, அதிகாரவ்யத்யயஸம்சயேவ-வேறுஇந்திரன் முதலானவர்களை உண்டுபண்ணினார்களோ என்கிற சந்தேஹத்தினாலேபோல, த்வாம்-உன்னை, அபியாந்தி-அடைகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! இந்திரன் முதலானவர்கள் உன்னை ஸேவிக்கவரும் காலத்தில் உன்னிடத்தில் பிரதிபலிக்கிறார்கள். அப்போது அவர்கள் உன்னிடத்தில் தங்கள் பிரதிபிம்பங்களைப் பார்த்து நம்முடைய வேலைக்கு வேறு ஒருவர்களை ஏற்படுத்திவிட்டார்களா என்ன என்று பயப்படுகிறார்கள்.

மோக்ஷம் ஒன்றையே ஆசைப்பட்டுபகவானிடத்தில் எல்லையில்லாத பக்தி பண்ணுகிறவர்களுடைய அனுக்கிரகத்தினாலே பிரும்மபட்டம் முதலானவைகள்கூட பிரயாஸமில்லாமல் கிடைக்கும்.

(எகச) மணிமௌலிஷு பஹுதேந பிம்பிதேந ப்ரணதாநாம்
பரித: ஸுராஸுராணாம் | முரபிந்மணிபாது
கே மஹிம்நா யுகபத்தேஷு ஸமவிபக்தேவ பாஸி ||

ஹே முரபிந்மணிபாதுகே-முரன் என்கிற அஸுரனைக் கொன்ற பெருமாளுடைய வைரமாய் கல்லிழைத்த பாதுகையே! ப்ரணதாநாம்-வணங்கி இருக்கிற, ஸுராஸுராணாம்-தேவதைகளென்ன அஸுரர்களென்ன இவர்களுடையதும், பரித:-உன் பேரில் நாலுபக்கத்திலும், பிம்பிதேந-பிரதிபலித்துமிருக்கிற, மணிமௌலி-ரத்ந கிரீடங்களுடைய, பஹுதேந-அனேகத்தினாலே, மஹிம்நா-எல்லையில்லாத சக்தியினாலே, தேஷு-அந்தக்கிரீடங்களிலே, யுகபத்- ஒரே காலத்திலே, ஸமவிபக்தேவ- ஸாதிக்கப்பட்டவள்போல, பாஸி-விளங்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னை ஸேவிப்பதற்கு தேவதைகள் அஸுரர்கள் எல்லாரும் வருகிறார்கள். அவர்களுடைய ரத்ந கிரீடங்கள் உன்னிடத்தில் பிரதிபலிப்பது அந்தந்த கிரீடங்களின் பேரில் நீ இருப்பது போலிருக்கிறது. அதனால் நீ ஒருவளாயிருந்தாலும் பதினாயிரமாகத் தோன்றுகிறாய், ஒருத்தி எப்படிப்பதினாயிரமானாய் என்றால், கிருஷ்ணன் அநேக உருவத்தை எடுத்துக்கொண்டதுபோல், உயர்ந்த சக்தியினாலே நீயும் அனேக உருவத்தை எடுத்துக்கொண்டது போலிருக்கிறது. ஆசார்யாளுடைய சக்திக்கு எல்லை இல்லை. (4)

(எகரு) உபநீதமுபாயநம் ஸுரேந்த்ரை: ப்ரதிபிம்ப
ச்சலதஸ்த்வயி ப்ரவிஷ்டம் | ஸ்வயமேவ கிரந் ப்ரஸாத
ஸஹஸா ப்ரதிக்ருஹ்ணாஸி முகுந்தபாதுகே த்வம் ||

ஹே சரண்யபாதுகே-வாராய் பெருமாளுடைய பாதுகையே, த்வம் - நீ, ஸுரேந்த்ரை:-உயர்ந்த தேவதைகளாலே, உபநீதம்- கொண்டுவரப்பட்டும், ப்ரதிபிம்பவ்யாஜத: - பிரதிபிம்பம் என்கிற வியாஜத்தினாலே, த்வயி - உன்னிடத்தில், ப்ரவிஷ்டம்-நுழைந்துமிருக்கிற, உபாயநம்-உபஹாரத்தை, ப்ரஸாத-தெளிவினுடைய, (அநுக்ரகத்தினுடைய) ஸம்ருத்யா-ஆதிக்யத்தினாலே, ஸ்வயமேவ - தானாகவே, ப்ரதிக்ருஹ்ணாஸி இவ - வாங்கிக் கொள்கிறாய் போல.

(கருத்து)ஏ பாதுகையே! தேவதைகள் உனக்காகக்கொண்டு வந்த உபஹாரங்கள் உன்னிடத்தில் பிரதிபலிக்கின்றன. அதைப்பார்த்தால் ரொம்ப கிருபையினாலே அவைகளை நீ நேரில் வாங்கிக்கொள்ளுகிறாய் போலிருக்கிறது. பெருமாளைக்காட்டிலும் ஆசாரியர்கள் தங்களிடத்தில் வந்தவர்களிடத்தில் அதிகமாகக் கிருபை பண்ணுகிறார்கள். (5)

(எ௧௬) ரங்கேச்வரஸ்ய நவபல்லவலோபநீயௌ
பாதௌ கதம் நு கடிநா ஸ்வயமுத்வஹேயம் ।
இத்யாகலய்ய நியதம் மணிபாதுகே த்வம்
பத்மாஸநம் வஹஸி தத்ப்ரதிபிம்பலக்ஷாத் ॥

ஹே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! த்வம்-நீ, நவ-புதிதாயிருக்கிற, பல்லவ-துளிர்போல, லோபநீயௌ-ஆசைப்படத்தகுந்ததாக இருக்கிற, ரங்கேச்வரஸ்ய-ஸ்ரீரங்கநாதனுடைய, பாதௌ-திருவடிகளை, கடிநா-கெட்டியாயிருக்கிறநான், ஸ்வயம்-தானே கதம் நு-எப்படி, உத்வஹேயம்-தூக்குவேன், இதி-என்று, ஆகலய்ய-நினைத்து, தத்- அந்த பத்மாஸநத்தினுடைய, ப்ரதிபிம்பலக்ஷாத்-பிரதிபிம்பம் என்கிற வியாஜத்தினாலே, பத்மாஸநம் - பத்மாஸநத்தை, வஹஸி-தூக்குகிறாய், நியதம் - நிச்சயம்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் எழுந்தருளியிருக்கிற பத்மாஸநம் உன்பேரில் பிரதிபலிக்கிறது. அதைப் பார்த்தால் நல்லதுளிரைக் காட்டிலும் மிருதுவாயிருக்கிற பெருமாள் திருவடி

யை ரத்னம் முதலானவைகளாலே கெட்டியாயிருக்கிற நான்நேரில் தூக்கக் கூடாதென்று நினைத்து, பத்மாஸனத்தை உன்பேரில் வைத்துக் கொண்டிருப்பது போலிருக்கிறது.

உலகத்தில் ரொம்பமிருதுவான தாமரைப்பூ முதலான எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் ஆசாரியர்கள்தான் மிருது முதலான எல்லா குணங்களாலும் மிகவும் உயர்ந்தவர்கள் என்று நினைத்து, அவர்களிடத்தில் பெருமாள் வஸிக்கிறார். உண்மையில் அவர்கள் தான் உயர்ந்தவர்கள். ஆனாலும் அவர்கள் தங்களை ஒரு குணமும் இல்லாதவர்கள் என்று நினைக்கிறார்கள். ரொம்பப் பெரியோர்கள் பெருமாள் தங்களுக்கு நேரில் ஸேவைசாதிக்கச் செய்தேயும்கூட, தாங்கள் ரொம்ப இளப்பமென்று ஒதுங்குகிறார்கள். நம்மாழ்வார் அப்படிச் செய்ததாகச் சொல்லி இருக்கிறது. இப்போது இருக்கிறவர்கள் பெருமாளுடைய பெயர்கூடத் தெரியாமலிருக்கும் போது, தங்களைப்பெருமாளாகவே நினைத்துக் கொள்ளுகிறார்கள்.

(எஎஉ) பாதாவநீஸ்ப்ருஶதோ ஹரித்ருஷத்ரம்யே
மத்யே தவ ப்ரதிபலந் மணிபாதரக்ஷே |
மந்யே நிதர்சயதி ரங்கபதிர்யுகாந்தே
ந்யக்ரோதபத்ரசயிதம் நிஜமேவ ரூபம் ||

ஹே மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே, ரங்கபதி:-ஸ்ரீரங்கநாதனானவர், பாதாவநீஸ்ப்ருஶத:-எழுந்தருளுகிறதற்காக உன்னிடத்தில் திருவடியை வைப்பதற்கு முன்னே, ஹரித்ருஷத்-பச்சைரத்னங்களால், ரம்யே-அழகாயிருக்கிற, தவ-உன்னுடைய, மத்யே-நடுவிலே, ப்ரதிபலந்-பிரதிபலியாநின்றுகொண்டு, யுகாந்தே-பிரளயகாலத்திலே, ந்யக்ரோதபத்ரே-ஆலிலையிலே, சயிதம்-படுத்துக்கொண்டிருக்கிற, நிஜம் ரூபமேவ-தன்னுடைய திருமேனியையே, நிதர்சயதி - உபமானமாகக்காட்டுகிறார், மந்யே - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் எழுந்தருளுகிறதற்காக உன்னைச்சாத்திக்கொள்வதற்கு முன்னே உன்பேரில் இழைத்திருக்கும் பச்சைரத்னங்களில் பிரதிபலிக்கிறார். அதைப்பார்த்தால்

பெருமாள் ஆலிலையில் சயனித்துக்கொண்டிருப்பது போலிருக்கிறது. பிரளயகாலத்தில் பெருமாள் ஜீவன்களைப்பற்றிக்கவலையில்லாமல் ஆலிலையில் சயனித்துக் கொண்டிருக்கிறார். அதுபோல் ஆசார்யர்கள் எழுந்தருளியிருக்கிற காலத்திலும் கவலை யில்லாமலிருக்கிறார். (7)

(௭௯௮) யாத்ராவஸாநமதிகச்சதி ரங்கநாதே
விச்ராணயஸ்யநுபதம் மணிபாதுகே த்வம் ।
ப்ராய: ப்ரயாணஸமயே ப்ரதிபிம்பிதாநாம்
தீர்த்தாவகாஹமவரம் த்ரிதசேச்வராணாம் ॥

ஹே மணிபாதுகே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! த்வம் - நீ, ரங்கநாதே - ஸ்ரீரங்கநாதனுனவர், யாத்ரா - அந்தந்த உத்ஸவங்களுடைய, அவஸாநம் - முடிவை, அயிகச்சதி-அடைகிறபோது, ப்ரயாணஸமயே - பிரயாணகாலத்திலே, ப்ரதிபிம்பிதாநாம் - பிரதிபலித்திருக்கிற, த்ரிதசேச்வராணாம்-உயர்ந்த தேவதைகளுக்கு, அவரம் - சந்திரபுஷ்கரணிஸ்நானத்தைக் காட்டிலும் வேறாக இருக்கிற, தீர்த்தாவகாஹம் - புண்யதீர்த்தத்தில் ஸ்நானத்தை, அநுபதம் - அடிக்கடி, விச்ராணயஸி ப்ராய: - கொடுக்கிறாய்போல.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளுடைய உத்ஸவத்துக்கு எல்லாத்தேவதைகளும்வந்துபெருமாள் தீர்த்தம் ஸாதிக்கிறபோது சந்திரபுஷ்கரணியில் தீர்த்தமாடி மறுபடியும் அவரவர்கள் லோகத்துக்குப் போகிறபோது உன் பேரில் பிரதிபலிக்கிறார்கள். உன்னுடைய ரத்நகாந்திகள் வெள்ளம் போலிருப்பதால் மறுபடியும் அடிக்கடி தீர்த்தமாடுகிறார்கள் போலிருக்கிறது. (8)

(௭௯௯) உத்ஸவேஷு தவ ரத்நமயேஷு ஸாத
தேவ்யா: ப்ரயாணஸமயே ப்ரதிபிம்பிதாங்கா: ।
ஸ்ரஷ்டு: ஸபாஸதோ மணிபாதுகே த்வா
ஸாமாஜிகத்வமமராவநவஜ்ஞ்க்தி மஹாத்ரௌ ॥

ஜாதம்-தாயாராகிய, கைடபஜித:-மது என்கிற அஸுரனைக் கொன்ற பெருமாளுடைய, மணிபாதரக்ஷே-மணிகளாய் கல்லிழைத்த பாதுகையே! உத்ஸவஸேவாஸு - எல்லை இல்லாமலிருக்கிற, தவ-உன்னுடைய, ரத்னஸ்ரேணிஷு - ரத்நங்களுடைய கூட்டங்களிலே, ப்ரயாணஸமயே - பிரும்மலோகத்துக்குப்போகிற ஸமயத்திலே, ப்ரதிபிம்பித-பிரதிபலித்திருக்கிற, தநு:-உடம்பை உடைத்தாயிருக்கிற அதாவது பிரதிபிம்பங்களைப் பார்த்தவராயிருக்கிற. வேதா:-பிரும்மாவானவர், த்வாம்-உன்னை, ஆகாமிகல்ப-வரப்போகிற கல்பங்களுக்கு ஏற்பட்டிருக்கிற, கமலாஸன-பிருமமாக்களுடைய, வஸதி-வரிசையை, அந்த:-உள்ளே உடைத்தானதாக, அவைதி - நினைக்கிறார்.

(கருத்து) ஏ பாதுகையே! உத்ஸவத்துக்கு வந்து விட்டு பிரும்மா தன் லோகத்துக்குத் திரும்பிப்போகும்போது பாதுகைகளின் கணக்கில்லாத ரத்நங்களில் தன்னுடைய பிரதிபிம்பங்களைப் பார்த்து வரப்போகிற கல்பங்களுக்கு ஏற்பட்டிருக்கிற பிரும்மாக்களோ வென்று நினைக்கிறார்.

தேவதைகளுக்குள் பிரும்மாதான் ரொம்பஉயர்ந்தவர். அந்த பிரும்மபட்டத்துக்குத் தகுந்தவர்கள் லக்ஷக்கணக்காக அகப்படுவார்கள். மோக்ஷத்தையே ஆசைப்படுகிறவர்களும், பெருமாளைத்தவிர வேறு தேவதைகளையும் வேறு பிரயோஜனங்களையும் ஆசைப்படாதவர்களும் ஒருவர்கூட அகப்படுவது அரிது. (9)

(எஉ௦) ஆமோதரஸ்மி நியதாம் மணிபாதுகே த்வாம்
ஆருஹ்ய ஸஞ்சரதி ரங்கபதௌ ஸலீலம் ।
அந்த:புரேஷு யுகபத்ப்ரதிபிம்பபாஜ:
ஸௌதாயிரோஹணரஸம் ஸ்வயமேவ தாரா: ॥

ஹே மணிபாதுகே-மணிகளாய் கல்லிழைத்த பாதுகையே! ரங்கபதௌ-ஸ்ரீரங்கநாதனானவர், ஆமோத - அசங்கிக்கொண்டிருக்கிற, ரஸ்மி - கிரணங்களாலே, நியதாம் - நிரம்பியிருக்கிற, (ரஸ்மி-கயிர்களாலே, நியதாம்-கட்டப்பட்டிருக்கிற,) த்வாம் - உன்னை, ஆருஹ்ய-ஏறி, அந்த:புரேஷு - அந்தப்புரங்களில்,

ஸலீலம்-விளையாட்டோடு கூட, ஸஞ்சரதி-ஸஞ்சரிக்கிறபோது, த்வயி-உன்னிடத்தில், பிம்பித-பிரதிபலித்திருக்கிற, ஸதநவ:- திருமேனியை உடைத்தாயிருக்கிற, ஸுத்ருச:-ஸ்திரீகள், யுகபத் - ஒரேகாலத்திலே, தோலாதிரோஹண - ஊஞ்சலில் ஏறுகிறதினால் உண்டான, ரஸம் - ஸந்தோஷத்தை, ஸமச்நுவதே - அடைகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச்சாத்திக்கொண்டு ஸ்ரீ ரங்கநாதன் அந்தப்புரத்தில் எழுந்தருளுகிறார். உன்பேரிலிழைத் திருக்கும் ரத்நகாந்திகளைப் பார்த்தால் கயிர்கள் போலிருக்கிறது. உன்னைப்பார்த்தால் ஊஞ்சல் போலிருக்கிறது. உன்னிடத்தில் எல்லா ஸ்திரீகளும் பிரதிபலிக்கிறார்கள். அப்போது எல்லாரும் ஒரே காலத்தில் ஊஞ்சலாடுவதுபோலிருக்கிறது. (10)

(௭௨௧) காலேஷு ராகவபதாவநி பக்திநம்ர:
காரயாணி தேவி பரதோ விநிவேதயம்ஸ்தே ।
த்வத்ரத்நபிம்பிததயாபி முஹு: ஸ்வகீயாம்
ராஜாஸநஸ்திதிமவேக்ஷ்ய ப்ருசம் லலஜ்ஜே ॥

தேவி-விளங்கா நிற்கிற, ராகவபதாவநி-ஸ்ரீராமனுடைய திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! காலேஷு-அந்தந்த ஸமயங்களிலே, பக்தி-பக்தியினாலே, நம்ர: - வணங்கியிருக்கிற, பரத: - பரதரானவர், தே - உன்பொருட்டு, காரயாணி-செய்யவேண்டிய வேலைகளை, விநிவேதயந் - தெரியப்படுத்தா நின்றுகொண்டு, த்வத்-உன்னுடைய, ரத்ந - ரத்நங்களிலே, பிம்பிததயாபி - பிரதிபிம்பரூபமாகவும்(அவர் உண்மையில் உட்காரவில்லை) ஸ்வகீயாம் - தன்னுடையதாயிருக்கிற, ராஜாஸந - ஸிம்மாஸநத்திலே, ஸ்திதிம் - இருப்பை, அவேக்ஷ்ய - பார்த்து, முஹு:-அடிக்கடி, ப்ருசம்-ரொம்ப, லலஜ்ஜே-வெட்கப்பட்டார்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ ஸிம்மாஸநத்தில் எழுந்தருளி யிருக்கும்போது பரதர் ; அந்தந்தகாலங்களில் நடக்கவேண்டிய காரியங்களை பக்தியுடன் வணங்கி உன்னிடத்தில் தெரியப்படுத் திக்கொண்டார். அப்போது உன் ரத்நங்களில் பிரதிபலித்தார்,

அப்போது தான்ஸிம்மாஸனத்தில் இருப்பதுபோல் தோன்றிற்று, அதே மாதிரி அடிக்கடி பார்த்து ரொம்ப வெட்கப்பட்டார்.

ஸாதுக்கள் தப்புக்காரியங்கள்செய்ததாக ஸ்வப்நம் கண்டு, பிறகு ஸ்வப்நம் என்று அறிந்தும் நடுங்குவார்கள். (11)

(எஉஉ) ப்ரத்யாகதே விஜயிநி ப்ரயதெ ரகூணாம்
விந்யஸ்யதி த்வயி பதம் மணிபாதரக்ஷெ ।
ரத்நௌகபிம்பிதநிசாசரவாநராம் த்வாம்
ஸங்க்ரஹக்ஷணபுவம் புஷ்பகமிவ ஸமைக்ஷந்த ॥

ஹே மணிபாதரக்ஷெ-வாராய் கல்லிழைத்த பாதுகையே! ஜநா:-ஜனங்கள், விஜயிநி-ராக்ஷஸர்களைஜயித்து, ப்ரத்யாகதெ-திரும்பிவந்திருக்கிற, ரகூணாம் ப்ரயதெ-ரகுவம்சத்துராஜாக்களுக்குள் உயர்ந்தவரான ஸ்ரீராமனவர், த்வயி - உன்னிடத்தில், பதம் - திருவடியை, விந்யஸ்யதி ஸதி - வைத்திருக்கிற போது, ரத்நௌக - ரத்நங்களுடைய கூட்டங்களில் பிம்பித-பிரதிபலித்திருக்கிற, நிசாசர- ராக்ஷஸர்களென்ன, வாநரா:-குரங்குகளென்ன இவர்களை உடைத்தாயிருக்கிற, த்வாம்-உன்னை, ஸங்க்ரஹக்ஷணபுவம், உன்னைச்சாத்திக்கொள்வதற்குமுன் க்ஷணத்திலிருந்த, புஷ்பகமிவ . புஷ்பகவிமானத்தைப்போல, ஸமைக்ஷந்த - பார்த்தார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீராமன் ராவணன் முதலான ராக்ஷஸர்களை ஜெயித்து விபீஷணன் முதலான ராக்ஷஸர்களுடனும் ஸுக்ரீவன் முதலான வானரர்களுடனும் புஷ்பகவிமானத்திலேறித் திருவயோத்திக்கு எழுந்தருளினர். அதை விட்டு இறங்கி, பரதரால் கொண்டுவந்து ஸமர்ப்பிக்கப்பட்ட உன்னைச்சாத்திக்கொள்ளும்போது எல்லா ராக்ஷஸர்களும் வானரர்களும் உன்னிடத்தில் பிரதிபலித்தார்கள். அப்போது, உன்னைப் பார்த்தால் க்ஷணத்துக்கு முன்னே எல்லாரையும் தூக்கிக்கொண்டிருந்த புஷ்பகவிமானம் போலிருந்தது.

பெருமாள் எல்லா உலகத்தையும் காப்பாற்றுகிறார். அவருக்குக் காப்பாற்றுவதற்கு உலகங்கள் போராதேயொழிய சக்தி போராதில்லை. அது போலவே நல்ல ஆசாரியர்களுக்கு எல்லா உலகத்தையும் காப்பாற்றுவதற்கு சக்தியுண்டு. (12)

(எஉங) தௌஸ்த்யம் ஶமயிதும் ஜகதோ வஹந்த்யா
ரக்ஷாதுரம் ரகுதுரந்தரபாதரக்ஷே ।
ப்ராஜ்யம் யஶ: ப்ரசுரசாமரபிம்பலக்ஷ்யாத்
ப்ராயஸ்த்வயா கபளிதம் ப்ரதிபார்திவாநாம் ॥

ரகுதுரந்தர - எல்லா ரகுவம்சத்து ராஜாக்களுடையவும் காரியத்தை நடத்த சக்தியுள்ள ஸ்ரீராமனுடைய, பாதரக்ஷே - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, ஜகத: - உலகத்தினுடைய, தௌஸ்த்யம்-காப்பாற்றுகிறவர்கள் இல்லாத்தினால் உண்டாகும் தொந்தரவை, ஶமயிதும்-போக்கடிப்பதற்கு, ரக்ஷாதுரம் - காப்பாற்றுகிறதாகிற சுமையை, வஹந்த்யா-தூக்கா நிற்கிற, த்வயா - உன்னாலே, ப்ரசுர-அதிகமாகஇருக்கிற, சாமர - சாமரங்களுடைய, பிம்ப - பிரதிபிம்பத்தினுடைய, லக்ஷ்யாத் - வியாஜத்தினாலே, ப்ரதிபார்திவாநாம்-சத்ருராஜாக்களுடைய, ப்ராஜ்யம்-அதிகமாக இருக்கிற, யஶ:-கீர்த்தியானது, கபளிதம் ப்ராய: - சாப்பிடப்பட்டதுபோல.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீராமன் காட்டுக்கு எழுந்தருளினபோது ராஜாக்களில்லாத்தினால் உண்டான உலகத்தின்கஷ்டத்தைப் போக்குவதற்காக நீ ராஜ்யத்தை ஒப்புக்கொண்டாய். அப்போது உனக்கு வெகுபேர்கள் வெகுசாமரங்களை வீசினார்கள். அவைகளெல்லாம் உன்னிடத்தில் பிரதிபலித்தன, அதைப் பார்க்கிறபோது சத்ரு ராஜாக்களின் ஏராளமான கீர்த்தியை யெல்லாம் நீ விழுங்கிவிட்டது போலிருந்தது. (கவிகள் கீர்த்தியை வெளுப்பாக வர்ணிப்பது வழக்கம்)

சாஸ்திரத்தில் சொல்லிய லக்ஷணங்களோடுகூடிய நல்லஆசார்யர்கள் உலகத்தைக் காப்பாற்றினால் மற்ற பிசகான மதங்கள் எல்லாம் போய்விடும். உலகத்திலிருக்கும் மற்ற எல்லா மதங்களும் ஸ்ரீ பாஷ்யகாரருடைய மதத்தைக் காட்டிலும் ரொம்ப இளப்பம். ஆனால் அதின் உண்மையை அறிந்து நடத்துகிற நல்ல ஆசாரியர்கள் இப்போது கலியினுடைய கொடுமையினால் ரொம்ப அரிதாக இருக்கிறது, இல்லை யென்றுமில்லை. (13)

(௭௨௪) ப்ரதிதிஶமுபயாதே தேவி யாத்ரோத்ஸவாய
த்வயி விஹரணகாலே பிம்பிதே ஜீவலோகே ।
வஹஸி மணிகணைஸ்த்வம் பாதுகே ரங்கபர்த்து:
கபளிதஸகலாம் காஞ்சிதந்யாமவஸ்தாம் ॥

தேவி - விளங்கா நிற்கிற, பாதுகே - வாராய் பாதுகையே! த்வம்-நீ, யாத்ரா - வெளியில் எழுந்தருளுகிறதாகிற, உத்ஸவாய-எல்லாருக்கும் ஸந்தோஷத்தைக்கொடுக்கிற காரியத்தை ஸேவிப்பதற்காக, ப்ரதிதிஶம்- திக்குகள்தோறும், உபயாதே-வந்திருக்கிற, ஜீவ-பிராணிகளுடைய, லோகே-கூட்டமானது, விஹரணகாலே-நீ எழுந்தருளுகிற காலத்திலே, மணி - ரத்னங்களுடைய, கணை: - கூட்டங்களோடு கூடிக்கொண்டிருக்கிற, த்வயி - உன்னிடத்லே, பிம்பிதே ஸதி - பிரதிபலித்திருக்கிற போது, கபளித - சாப்பிடப்பட்டிருக்கிற, ஸகலாம்- எல்லா வஸ்துக்களையும் உடைத்தாயிருக்கிற, அந்யாம் - இப்போது இருப்பதைக்காட்டிலும், வேறாகஇருக்கிற, ரங்கபர்த்து:- ஸ்ரீரங்கநாதனுடைய, காஞ்சித்- ஒரு, அவஸ்தாம் - இருப்பை (அதாவது பிரளயகாலத்து இருப்பை), வஹஸி-வஹிக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உத்ஸவகாலங்களில் ஸ்ரீ பெருமாள் உன்னைச் சாத்திக்கொண்டு வெளியில் எழுந்தருளுகிறார். அந்த உத்ஸவத்தை ஸேவிக்கிறதற்காக வந்திருக்கிற எல்லா ஜனங்களும் உன்னிடத்தில் பிரதிபலிக்கிறார்கள். அப்போது உன்னைப் பார்த்தால் பிரளயகாலத்தில் எல்லா உலகங்களையும் தன்வயிற்றுக்குள் வைத்துக் கொண்டிருக்கிற பெருமாள்போல் இருக்கிறது.

ஆசார்யர்கள் பெருமாளைக் காட்டிலும் அதிகமாக உலகத்தைக் காப்பாற்றுகிறார்கள். (14)

(௭௨௫) பகவதி ரங்கபத்யௌ போகநாகாதிபேந்த்ரா
த்வயி விநிஹிதபாதே ஸந்நிவேஶாப்ரயந்தீ ।
ஶௌரிசரணரக்ஷே ரத்நஜாலை: ப்ரதீபே
ப்ரதிபலிதநிஜாஜ்ஞாஸ்ரூபஸாரா ஸவந்தி ॥

ஶௌரிசரணரக்ஷே - வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! பகவதி-ஸ்ரீரங்கநாதனானவர், ரங்கபத்யௌ ஸதி

கருடவாஹனத்தில் எழுந்தருளியிருக்கும்போது, வாஹநஸ்தா:-அவரவர்கள் வாஹநங்களிலே இருக்கிற, ஸுரேந்த்ரா:-உயர்ந்த தேவதைகள், ஶ்ரீபதி - பெருமாளானவர், த்வயி - உன்னிடத்திலே, விநிஹித-வைக்கப்பட்டிருக்கிற, பாதேஸதி-திருவடியை உடைத்தானபோது, க்ஷிதிமேவ-பூமியையே, ஆஶ்ரயந்தி-அடைகிறார்கள். ததபி-அப்படி இருந்தாலும், த்வதீயே-உன்னுடையதாயிருக்கிற, ரத்நஜாலே- ரத்நங்களுடைய கூட்டத்திலே, ப்ரதிபலித-பிரதிபலித்திருக்கிற, நிஜ - தன்னுடையதான, தநவ: - உடம்பை உடைத்தானவர்களாய்க்கொண்டு, தாத்ருஶ-ஒரே மாதிரியாக இருக்கிற, வாஹா:- வாஹநத்தை உடைத்தானவர்களாக, பவந்தி - ஆகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் கெருடவாஹநத்தில் எழுந்தருளுகிறபோது அந்தந்த தேவதைகள் அவரவர்கள்வாஹநத்தில் ஏறிக்கொண்டார்கள். பெருமாள் வாஹநத்திலிருந்துஇறங்கி உன்னைச்சாத்திக்கொண்டபோது எல்லாதேவதைகளும் வாஹநங்களை விட்டு பூமியிலேயே இருந்தார்கள். அப்போது உன்பேரில் பிரதிபலித்தார்கள். அப்போது பெருமாளைப்போல எல்லா தேவதைகளும் உன்பேரிலேயே இருந்ததுபோல் தோன்றிற்று.

நல்ல ஆசார்யர்கள் தன்னை அடைந்தவர்களைப் பெருமாளைப் போலவே பண்ணிவிடுகிறார்கள். (15)

(எஉகூ) ஸ்வாகாராம் ஸுரயுவதய: ஸ்வப்ரதிஷ்டு ஶக்ஷ்யாஸ் தாஹமெ ஶ்வம் ப்ரணதிஸமயெ பாதுகெ ஸாபிமாநா: । ஶ்ரீரங்காநாம் பரிபவ விடயஸ ஸூதிமாத்ரெண தக்ஷாம் நீரெசக்தபூம நாரஸவதுநெ நாரஓவகுபீதஸுராஜதாம் ॥

ஹே பாதுகெ - வாராய் பாதுகையே! ஸுரயுவதய: - தேவஸ்திரீகள், ஸாபிமாநா:-ஆக்ரஹத்தோடு கூடினவர்களாய்க்கொண்டு, ஶ்ரீரங்காநாம் - உயர்ந்த ஸ்திரீகளுடைய, பரிபவவிடயெ-அவமானம் பண்ணுவதில், ஸூதிமாத்ரெண-பிறந்த மாத்திரத்திலேயே, தக்ஷாம் - கெட்டிக்காரியாக இருக்கிற, நார

ஸவ்ய॒ஸாசிந: - நரன் என்பவருக்குத் தோழரான நாராயணரிஷியினுடைய, ஊரு॒ஜாதாம் - தொடையிலிருந்து உண்டாயிருக்கிற, ஊர்வஶீம் - ஊர்வசி என்கிற அப்ஸரஸ்ஸை, நீசைஃ - இளப்பமாக, கர்த்தும் - பண்ணுவதற்கு, ஸ்வச்ச - பளபளப்பாயிருக்கிற, ஆகாராம் - திருமேனியை உடைத்தாயிருக்கிற, த்வாம் - உன்னை, ப்ரணதிஸமயே-ஸேவிக்கிற ஸமயத்திலே, ஸ்வப்ரதிச்சந்தவ்யாஜாத் - தங்கள் பிரதிபிம்பம் என்கிற, வியாஜத்தினாலே, ப்ரவிஶந்தி - பிரவேசிக்கிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! முன்னொருகாலத்தில் நாராயணரிஷி என்பவர் தபஸ்பண்ணினாராம். அந்த தபஸ்ஸைக்கெடுப்பதற்காக இந்திரனால் ஏவப்பட்டு சில அப்ஸரஸ் ஸ்திரீகள் அவரிடம் போனார்களாம், அந்த நாராயணரிஷி துடையைத்தட்டினாராம். அப்போது ஊர்வசி என்று ஒரு அப்ஸரஸ்ஸு அவர் துடையிலிருந்து உண்டானாளாம், அவளைப்பார்த்து வந்த அப்ரஸ்ஸுக்கள் அவமானப்பட்டு திரும்பி ஓடிப்போனார்களாம்- என்று புராணத்தில் சொல்லியிருக்கிறது. அந்த அப்ஸரஸ்ஸுக்கள் உன்னை ஸேவிக்கவருகிறபோதுஉன்னிடத்தில் பிரதிபலிக்கிறார்கள். அதைப் பார்த்தால் முன்னே அவமானத்தை அடைந்தவர்கள் ஆக்ரஹத்தினாலே நாராயணரிஷியின் துடையிலுண்டான அந்தஊர்வசியை அவமானப் படுத்துவதற்காக அவளைக் காட்டிலும் அதிகமான அழகு முதலான குணங்களை அடைவதற்காக அவரைக்காட்டிலும் உயர்ந்த உனக்குள் நுழைந்தார்கள் போலிருக்கிறது.

பெருமாளுடைய பக்தர்களைக்காட்டிலும் பெருமாளுடைய பக்தர்களுடைய பக்தர்கள் மிகவும் உயர்ந்தவர்கள். "ஏத்தியிருப்பாரைவெல்லுமே மற்றவரைச்சாற்றியிருப்பார் தவம்" என்று திருமழிசைப் பிரான் அருளிச் செய்தார்.

(௭௨௧) ஸ்வஸ்வாமிந்யா ஸஹ வஸுமதீ ஸ்வஸ்வபாஸ்வத்யாஶா ரோஹிணி ரோஹிணி நிஹிதபதோ ரேணுநாபி ந விஷ்ணோர் மாதுர் ந நந்தநாய꞉ । ஸம்வாராணே ஸஹஸ்ரமிக்யா ரோ ஷப்ராயஶ்சித்தாதி த்வாம் ந ஜஹதி நந்தநா꞉ ஸ்வப்ரதிச்சந்தவ்யாஜாத் ॥

ஹேபாது³கே - வாராய்பாதுகையே! த்வயி - உன்னிடத்திலே, நிஹித - வைக்கப்பட்டிருக்கிற, சரண: - திருவடியை உடைத்தானவராய்க்கொண்டு, ஸ்வைரகேளீ-தன்னுடைய இஷ்டப்படி விளையாடுகிற காலத்திலே, ப்ரியஸஹசரீம் - இன்பமாகக் கூடவிளையாடுகிறவளாயும், ஸ்வ - அழுக்கில்லாமலிருக்கிற, ரத்ந - ரத்னங்களாலே, ருசிராம் - அழகாயிருக்கிற, த்வாம் - உன்னை, ஸ்தானே ஸ்தானே - அந்தந்த இடங்களிலே, நிவிசமாநு - அநுபவியா நிற்கிற, ரங்கநாத: - ஸ்ரீரங்கநாதனுனவர், ஸஞ்சாராந்தே - ஸஞ்சாரத்தினுடைய முடிவிலே, த்வாம் - உன்னை, த்யக்த்வா - விட்டு, கமலயா ஸஹ - மகாலக்ஷ்மியோடுகூட, ஶேஷ - ஆதிசேஷனுகிற, ஶய்யா - படுக்கையை, அதிரோஹதி - ஏறியிருந்தாலும், ஸ்வப்ரதிபிம்பவ்யாஜாத் - தன்னுடைய பிரதிபிம்பம் என்கிற வியாஜத்தினுலே, பூ⁴ந: - மறுபடியும், ந த்யஜதி - விடவில்லை.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச்சாத்திக்கொண்டு அந்தந்த காலங்களில் பெருமாள் வெளியில் எழுந்தருளுகிறார். பிறகு உன்னைவிட்டு தாயாரோடுகூட ஆதிசேஷனுகிற படுக்கையில் எழுந்தருளினூர். அப்போது உன்பேரில் பிரதிபலித்தார். அதைப் பார்த்தால் உன்னைவிட்டும் விடாததுபோலிருக்கிறது.

நல்ல ஆசார்யாள் பகவானை எந்த அவஸ்தையிலும் விடுகிறதில்லை. பகவானும் அவர்களை ஒருக்காலும் விடுகிறதில்லை. (17)

**(எஉஅ) த்வாமேகாமதிக³தவதீ கேளிஸஞ்சாரகாலே பாதௌ³ ஶ்ரீஸ்த்வயி நிஹிதபாதா³ரவிந்தா³ ஶௌரே: । த்வத்ஸம்ப³ந்தா⁴த் ப்ரதிப³த⁴யோ: ஸ்தா²நயோ: ஸாக்ஷாத்ஸ்வர்ண்ணரூபதீ ஸா பாதௌ³ தௌ³ரேர: ॥**

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! ஸா த்வம் - நீயானவள், கேளிஸஞ்சாரகாலே - விளையாட்டாக எழுந்தருளுகிற காலத்திலே, த்வாம் ஏகாமேவ - உன்னை ஒருத்தியையே, அதிக³தவதீ - அடைந்திருக்கிற, ஶௌரே: - பெருமாளுடைய, பார்ஶ்வே - பக்கத்திலே, ஸ்தி²த்வா - இருந்து, அநந்யலக்ஷ்யம் -

உ௭

வேறு ஒரு வஸ்துவைப் பார்க்காமல், விநிஹித - வைக்கப்பட்டிருக்கிற, த்ருசோ: - திருக்கண்களை உடைத்தாயிருக்கிற, ஸ்வரத்நேஷு - உன்னுடைய ரத்னங்களிலே, ப்ரதிபலித யோ: - பிரதிபலித்திருக்கிற, ஸநாதந்யயோ:-ஸ்ரீமகாலெக்ஷ்மியென்ன, பூமிதேவியென்ன இவர்களுக்கு, நித்ய - எப்பொழுதும், அலப்ய - காணத்தகுந்ததாக இருக்கிற, ப்ரஸாதா-தெளிவை (ஸந்தோஷத்தை) உடைத்தானவளாய்க்கொண்டு, சௌரே: - பெருமாளுடைய, பாதஸேவாம் - திருவடிஸேவையை, திசஸி - கொடுக்கிறாய்.

(கருத்து ஏ பாதுகையே! பெருமாள் வெளியில் எழுந்தருளியபோதெல்லாம் உன்னையே சாத்திக்கொண்டு எழுந்தருளுகிறார். தாயாருக்கும் பூதேவிக்கும் நம்மபேரில் திருவடியை வைக்கவில்லையே என்று ரொம்ப வருத்தம் இருந்தது. அப்படியிருக்கும் போது உன்னிடத்தில் அவர்கள் பிரதிபலித்தார்கள். நீ ரொம்பவும் சந்தோஷப்பட்டு அவர்களுக்குத் திருவடிஸேவையைக்கொடுத்தாப்போலிருந்தது.

பெருமாளுக்குத்தாயார்களிடத்தில் காட்டிலும் ஆசார்யாளிடத்தில் கிருபை அதிகம். (18)

**(௭உகூ) ஏக: ஏகாம் கில நிரவிசத் த்வாரகாயாம் விலாஸீ க்லுப்தாநேகப்ரதிதவபு: ஷோடசஸ்த்ரீஸஹஸ்ரம் । பாதுகே பாதவிந்யஸ்தே ஸ்ருதிஜாவே ஸதா நித்யம் ஸ்வ ஸ்வயம் ஸமர்த்தாம் ஸ்வஸ்தாம் ஸஹஸ்ரம் ॥**

த்வம் தேவி பாதுகே - விளங்காநிற்கிற வாராய் பாதுகையே! விலாஸீ - விளையாட்டில் ஆசையுள்ளவராய் இருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனானவர், த்வாரகாயாம் - துவாரகாபட்டணத்திலே; க்லுப்த - பண்ணப்பட்டிருக்கிற, அநேகப்ரதிதவபு: - அநேகம் திருமேனியையுடைத்தானவராய்க்கொண்டு, ஷோடசஸ்த்ரீஸஹஸ்ரம் - பதினாயிரம்ஸ்திரீகளிடத்திலே, ஏகாம் - ஒருத்தியை, ஏக: - ஒருவராக, நிரவிசத் கில-அனுபவித்தாராம்; ஸ: - அந்த கிருஷ்ணன், ஸ்பாரே - பளபளப்பாயும், ஸ்வரத்ந

ஸிம்பப்ரதிஸிம்பவத்தீ: |

நீவிதே - உன்னிடத்தில் இழைக்கப்பட்டிருக்கிற, ரத்நஜாலே - ரத்னங்களுடைய கூட்டத்திலே, ஸிம்பிதஸ்ய - பிரதிபலித்தவராய்க்கொண்டு, ஸஹஸ்ரகாரம் - வேஷங்களுடைய அதாவது திருமேனிகளுடைய, ஸஹஸ்ரைஸ்து: - ஆயிரங்களாலே, ஸததம் - உன்னை, நித்யம் - எப்பொழுதும், ஸாக்ஷாத்கேவலம் - அனுபவிக்கிறாரென்பது பிரஸித்தம்.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீபெருமாள் கிருஷ்ணாவதாரம் பண்ணினபோது (16000) பதினாறாயிரம் ஸ்திரீகளை ஒரு ஸ்திரீக்கு ஒரு உருவமாய்க்கொண்டு அனுபவித்தாராம். இப்போது உன் பேரில் இழைத்திருக்கிற அநேக ரத்னங்களில் பிரதிபலிக்கையால் உன்னை ஒருத்தியை அனேக ரூபங்களை எடுத்துக்கொண்டு அனுபவிக்கிறாப்போலிருக்கிறது

ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்களைப்பெருமாளுக்கு எத்தனை ரூபம் எடுத்துக்கொண்டு அனுபவித்தாலும் ஆசை அடங்கவில்லை

(எ௬௱) ஹரிபதநகேஷு ஸதீ ப்ரதிபலதி தவைதே
உபே ரத்நேஷு உசிதா மிதஃ பதாவநி ஸிம்பப்ரதி
ஸிம்பதா யுவயோ: ||

இதி கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
ஸிம்பப்ரதிஸிம்பபத்ததிரேகவிம்ஶதி: ||

---

ஹே பதாவநி - வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஸதீ - நீயானவள், ஹரி - பெருமாளுடைய, பத - திருவடியினுடைய, நகேஷு - நகங்களில், ப்ரதிபலதி - பிரதிபலிக்கிறாய், ஏதத்உபே - இந்த நகங்களும், தவ - உன்னுடைய, ரத்நேஷு - ரத்னங்களிலே, ப்ரதிபலதி - பிரதிபலிக்கிறது. யுவயோ: - உங்களுக்கு, மிதஃ - ஒருவருக்கொருவர், ஸிம்பப்ரதிஸிம்பதா - பிம்பமாயும், பிரதிபிம்பமாயுமிருக்கையானது, உசிதா - தகுந்தது.

(கருத்து) ஏ பாதுகையே! நீ பெருமாளுடைய நகங்களில் பிரதிபலிக்கிறாய், நகங்கள் உன்னிடத்தில் பிரதிபலிக்கின்றன. நீயும் நகங்களும் பிம்பமாயும் பிரதிபிம்பமாயும் இருக்கிறீர்கள் அது நியாயம் தான், இரண்டுபேரும் கிட்டத்தில் இருக்கிறீர்கள். பளபளப்பாய் இருக்கிறீர்கள். இரண்டுபேரும் திருவடியை ஆச்ரயிக்கிறீர்கள்.

பெருமாளிடத்தில் உண்மையான பக்தியுள்ள இரண்டு பேர்கள் ஒருவருக்கொருவர் வேலைக்காரராயும் யஜமானராயும் இருக்கிறார்கள். (20)

இருபத்தோன்றாவதான பிம்பப்ரதிபிம்பபத்ததி முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம꞉ ॥

ஸ்ரீரங்கநாத பாதுகாஸஹஸ்ரே

த்³வாவிம்ஶதி꞉ காஞ்சநபத்³த⁴தி꞉ ॥

(௭௩௧) கல்யாணகல்பித வபு꞉ ஸஹஜாம் காஞ்சந ஶ்ரியம் । வஹந்தீம் பாதுகாம் ஶௌரே꞉ பத³மாத்ர நிவேஶிதாம் ॥

கல்யாண - எல்லா லோகங்களுக்கும் க்ஷேமத்தைக்கொடுக்கிறதாயிருக்கிற, கல்பித-ஸ்வபாவத்தை உடைத்தானதும், (கல்யாணகல்பிதம் - தங்கத்தாலே செய்யப்பட்டதும்) காஞ்சந தங்கத்தினாலே, ஶ்ரியம் - பளபளப்பை, (காஞ்சந - இன்னதென்று சொல்லமுடியாத், ஶ்ரியம் - அழகை, காஞ்சந-ஒரு, ஶ்ரியம்-லக்ஷ்மியை) ஸம்பத்தை, ஸஹஜாம்-அடைந்ததாயும், பத-திருவடிக்கு (பத-உயர்ந்தபட்டத்துக்கு) ஸஹஜாம்-தகுந்ததாயும், பதமாத்ர-திருவடியிலே மாத்திரம் (உயர்ந்த பட்டத்திலேயே) நிவேஶிதாம்-வைக்கப்பட்டுமிருக்கிற, ஶௌரே꞉-பெருமாளுடைய, பாதுகாம்-பாதுகையை, வந்தே-ஸேவிக்கிறேன். (ஸ்தோத்திரம் பண்ணுகிறேன்.)

(கருத்து) இந்த பத்ததியில் பாதுகை தங்கமாயிருப்பதைப் பற்றி வர்ணிக்கிறார். பாதுகை தங்கத்தினால் செய்யப்பட்டிருக்கிறது, அதினுடைய பளபளப்பைச் சொல்லிமுடியாது. அதைப்

பெருமாள் தன் திருவடிக்குத் தகுந்ததாக இருக்கிறபடியால் திருவடியிலேயே சாத்திக்கொண்டிருக்கிறார். அந்தப் பாதுகையை ஸேவிக்கிறேன். பெருமாளுடைய திருமார்பில் மாத்திரம் ஒரு மஹாலக்ஷ்மி இருக்கிறாள். இந்தப்பாதுகையைப்பார்த்தால், அவளைக் காட்டிலும் உயர்ந்த, திருவடியில் மாத்திரம் இருக்கிற இன்னொரு மஹாலக்ஷ்மிபோல் இருக்கிறது. இந்தப்பாதுகை பகவானுடைய ஸ்தானத்துக்குத் தகுந்ததாகையாலே, அதற்கு ஸ்ரீராமன் தன் ஸ்தானத்தையே கொடுத்தார். நல்ல ஆசார்யாளுடைய ஸ்வபாவத்தின் தன்மையை அளவிடமுடியாது, அவர்களுடைய அழகையும், அறிவையும், அவர்களுக்கு இருக்கும் ஸம்பத்துக்களையும் பகவானால் கூட அளவிடமுடியாது. பெருமாள் தன் ஸ்தானத்திலேயே அவர்களை வைத்திருக்கிறார். பெருமாள் தான் நல்ல ஆசார்யாள் ரூபமாக அவதரிக்கிறார். ஆசார்ய பதத்துக்குத்தகுந்தவர்களைத்தான் ஆசார்யபதத்தில் வைக்கலாம். ஸ்ரீநிகமாந்தமகாதேசிகனுக்கு "நல்ல ஆசார்யர்களையுடைந்தவர்களுக்கு மோக்ஷம் கிடைப்பதில் ஸந்தேகமில்லை. நல்ல ஆசார்யர்களை அடையாதவர்கள் எவ்வளவு உயர்ந்த குணமுடையவர்களாய் இருந்தாலும் அவர்களைப் பகவான் தன்னிடம் அழைத்துக்கொள்வதில்லை" என்று திருவுள்ளம். இதைத்தான் ஸ்ரீகுருபரம்பராஸாரத்தில் ஸாதித்திருக்கிறார். உலகத்தில் இப்போது நல்ல ஆசார்யர்கள் அகப்படுவது மிகவும் அரிது. ஆசார்ய சிஷ்யபாவத்தைப்பற்றி ஒருவன் செவ்வையாய் கவனிக்கவேணும் என்பதற்காகத்தான் ஸ்ரீ தேசிகன் முதலான ஆசார்யர்களுடைய ஸூக்திகளில் ஏற்படுகிற அபிப்பிராயத்தைப் பல தடவை எழுதுகிறது. ஒருவரைத் தூஷிப்பதற்காக இல்லை.

உயர்ந்த நல்ல ஸ்வபாவம், அதனால் ஸகல ஸம்பத்தையும் அடைந்தான். உயர்ந்த பதவிக்குத் தகுந்தவன், உயர்ந்த பதவியில் வைக்கப்பட்டான். (1)

(எ௩௨) மது஼ஜித்பதகாஞ்சநஸ்ய ஸாராணாம் ஜநுஷா நாம ஹயம் வியாதாஸாரா। வயமேவ தவேஷாம் சாரூபம் யஸ்ஸ பவதீ காஞ்சநபாதுகே விஹாதி ॥

ஹே காஞ்சநபாதுகே - வாராய் தங்கமயமான பாதுகையே! மதுஜித் - மது என்ற அஸுரனை ஜெயித்த பெருமா

னுடைய, தநோ - திருமேனியினுடைய, காந்தி - அழகை, தஸ்க ராணாம் - திருடியிருக்கிற, ஜலதாநாம் - மேகங்களுக்கு, அபயம் - பயமில்லாமையை, விதாதுகாமா - பண்ணவேணுமென்று ஆசைப்பட்டதாய்க்கொண்டு, ததங்க்ரிம் - அந்தப்பெருமாளுடைய திருவடியை, ஆஶ்ரயந்தீ - அடைந்திருக்கிற, தடிதிவ - மின்னல்போல், விபாதி - விளங்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்திலிருக்கிற தங்கத்தைப் பார்த்தால் மின்னல்போலிருக்கிறது. அதனால் உன்னைப் பார்த்தால் பெருமாள் திருவடியை அடைந்திருக்கிற மின்னல் போலிருக்கிறது. மின்னலுக்கு மேகத்திலிருப்பது வழக்கம். அது பெருமாள் திருவடியில் வருவானேன் என்றால், மின்னலை மேகத்துக்கு அகமுடையாளாகச் சொல்லியிருக்கிறது மேகங்கள் பெருமாளுடைய திருமேனியின் அழகை திருடிக்கொண்டது. அதற்காக அவைகளைப் பெருமாள் தெண்டிக்காமலிருப்பதற்காக மின்னல் பெருமாள் திருவடியை அடைந்திருக்கிறது.

உலகத்தில் பெரும்பாலும் எல்லாஜனங்களும் எல்லையில்லாமல் பெருமாளுக்குத்தப்பு பண்ணுகிறார்கள். அந்த ஜீவர்களை அந்த பெருமாள் நாகத்தில்போட்டும், பலஜன்மங்கள் பலவியாதிகள் இவை முதலானவைகளைக்கொடுத்தும், தொந்தரவு செய்யாமலும், தன்னுடைய உயர்ந்த பதத்தைக்கொடுத்து காப்பாற்றுவதற்காகவும், நல்ல ஆசார்யர்கள் ஸ்ரீபெருமாளுடைய திருவடிகளில் சரணாகதி பண்ணுகிறார்கள். தாங்கள் சரணாகதியினால் பகவானை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு தாங்களைச்சேர்ந்த குற்றவாளிகளைக் காப்பாற்றுகிறார்கள். (2)

(௭௧௧) நிகஷீக்ருதரத்ந க்ருஷ்ணரத்நா பவதீ காஞ்சந
ஸம்பவம் பிபர்த்தி । பரிபஶ்யதி பாதுகே
யதீக்ஷா ஸஹஸா ச ஸ்யமேவ காஞ்சநஶ்ரீ: ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! நிகஷீக்ருத உரைகல்லாகப்பண்ணப்பட்டிருக்கிற, ருசிர - அழகாக இருக்கிற, க்ருஷ்ணரத்நா - கருப்பு ரத்னங்களை (இந்திரநீலரத்னங்களை) உடைத்தாயிருக்கிற, பவதீ - நீயானவள், காஞ்சந - தங்கத்தினுடைய, (இன்னதென்று சொல்லமுடியாத) ஸம்பவம் - பளபளப்பை

(அறிவாகிற ஸமுத்ரத்தை) வ்யநக்தி - பிரகாசப்படுத்துகிறாய், யஸ்ய - யாதொரு பளபளப்பினுடைய, (யாதொரு அறிவினுடைய) ப்ரேக்ஷா - பார்வையானது, ஸஹஸா - உடனே, ந: - நமக்கு, ஸமம் - ஒரேமாதிரியாக இருக்கிற, லோஷ்ட - ஓட்டாஞ்சல்லி என்ன, காஞ்சந - தங்கமென்ன இவைகளை உடைய பிருக்குகைகளை, வ்யவஸ்யதி - உண்டுபண்ணுகிறதோ.

கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் தங்கமுமிருக்கிறது. இந்திரநீலக்கல்லுகளும் இழைத்திருக்கின்றன. கருப்பான இந்திரநீலக்கல்லுகள் பக்கத்தில் இருப்பதினாலே உன் தங்கத்துக்கு எல்லையில்லாத பளபளப்பு உண்டாகிறது. அதைப்பார்த்தபிறகு யாருக்கும் உலகத்திலிருக்கும் தங்கமும், ஓட்டாஞ்சல்லியும், ஒரேமாதிரியாகத் தோன்றுகிறது.

ஒருவன் நல்ல ஆசார்யர்களை அடைந்தால் அவனுக்கு ஜீவஸ்வரூபம், பரமாத்மஸ்வரூபம் முதலானவைகள் உள்ளபடி தெளிவாகத்தோன்றுகிறது. அவனுக்குப்பிரும்மபட்டம்கூடப் பிடிக்கிறதில்லை. உலகத்தில் வெறுப்பு உண்டாய்விடுகிறது. (3)

**(ஏகூ) ஸாரஸ்வதீ நிகமைஸ் ஸம்ருத்தகாமா கநகோத்கர்ஷவதீ பதாவநி த்வம் | திஶஸி வ்ருதிவஶசௌரஶ்ரீ: அநிஶமுதித்வரமஶோகவைபவம் ந: ||**

ஹே பதாவநி - வாராய் திருவடியைக் காப்பாற்றுகி; பாதுகையே! நிகமை: - வேதங்களாலே, ஸாரஸ்வதீ - வாஸனையுள்ளவளாயும், ஸம்ருத்த - ரொம்பியிருக்கிற, காமா - குணங்களை உடைத்தானவளாயும், கநக - தங்கத்தினுடைய, உத்கர்ஷவதீ - உயர்த்தியை உடைத்தானவளாயும், வ்ருதிவஶ - அடையப்பட்டிருக்கிற, சௌர - பெருமாளுடைய, ஸ்ரீ: - ஸம்பத்தையுடைத்தானவளாயுமிருக்கிற, த்வம் - நீ, ந: - எங்களுக்கு, அநிஶம் - எப்பொழுதும், உதித்வரம் - பிரகாசித்துக்கொண்டிருக்கிற, அஶோக - ஒருவித துக்கமுமில்லாமலிருக்கிற, வைபவம் - ஸம்பத்தை அதாவது மோக்ஷத்தை, திஶஸி - கொடுக்கிறாய். (நிகமை: - குயில்களோடு கூடிக்கொண்டிருக்கிற, ஸம்ருத்த - ரொம்பியிருக்கிற, காமா - மன்மதனை அதாவது ஆசையையுடைத்தாயிருக்கிற,

சம்பக - செண்பகமரத்தினுடைய, உத்கர்ஷவதீ - உயர்த்தியை உடைத்தாயும், ப்ரதிபந்ந - அடையப்பட்டிருக்கிற; மாதவ - வைகாசிமாஸத்தினுடைய, ஸ்ரீ:- அழகை உடைத்தாயுமிருக்கிற, வஸந்த: - வஸந்தகாலமானது, அநிசோந்நதம் - (முன்போல்) அசோக - அசோகமரத்தினுடைய, ஸம்ருத்திம் - ஸம்ருத்தியை, திசதி - கொடுக்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்தில் உயர்ந்த தங்கம் இழைத்திருக்கிறது. வேதவாஸனை இருக்கிறது. உயர்ந்த நல்ல குணங்கள் இருக்கின்றன. நீ பெருமாள் மாதிரியே இருக்கிறாய். நீ உன்னை அடைந்தவர்களுக்கு ஒருவித குறைவுமில்லாத எல்லா ஸம்ருத்தியோடுகூடிய மோக்ஷஸாம்ராஜ்யத்தைக்கொடுக்கிறாய். வஸந்த காலத்தில் எங்கும் குயில்கள் கூவுகின்றன. செண்பகமரம், அசோகமரம், முதலியவைகள் துளிர்த்து புஷ்பிக்கின்றன. ஜனங்களுக்கு ஆசை மிகவும் வளர்கின்றன என்று ஒரு அர்த்தம் தோன்றுகிறது.

நல்ல ஆசார்யர்கள் பெருமாளைப்போலவே இருக்கிறார்கள். தங்களிடத்தில்வந்தவர்களுக்கு எல்லையில்லாத ப்ரீதியுடன் வேதங்களில் சொல்லப்பட்ட நல்ல ஸங்கதிகளைத் தெறிவித்து, மோக்ஷம் வரும்படி செய்கிறார்கள் (4)

(எ௫) ஸதி வர்ணோத்கர்ஷே ஹாடகஜாதே:
ஜகதி வ்யாதமஸௌரப்யாதவர்ணம் |
ச்ருதிஸௌரப்யசாலிநா ஸ்வேந ஹேம்நா
பவதீ சௌரிபதாவநி வ்யமூமுஷ: ||

ஹே சௌரிபதாவநி - பெருமாளுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! பவதீ - நீயானவள் ஹாடகஜாதே: - தங்கம் என்கிற ஜாதிக்கு, வர்ணோத்கர்ஷே உயர்ந்த பளபளப்பு என்கிற குணமானது, ஸதி - இருந்தாலும் அஸௌரப்யாத் - வாஸனை இல்லாததாலே, ஜகதி - உலகத்திலே வ்யாதம் - பரவியிருக்கிற, அவர்ணம் - அபவாதத்தை, ச்ருதிஸௌரப்யசாலிநா - வேதவாஸனை உள்ளதாயிருக்கிற, ஸ்வேந ஹேம்நா - தன்னுடைய தங்கத்தினாலே, வ்யமூமுஷ: - போக்கடித்தாய்.

கருத்து) ஏ பாதுகையே! உலகத்திலே தங்கத்துக்கு நல்ல பளபளப்பு இருக்கிறது, ஆனால் வாஸனையில்லை. அதனால் அதற்கு ஒரு குறைவு ஏற்பட்டிருக்கிறது. அந்தக்குறைவை நீ வேத வாஸனையோடு கூடிய உன் தங்கத்தினால் போக்கடித்துவிட்டாய்.

உலகத்தில் கணக்கில்லாத எவ்வளவோ மதங்கள் இருக்கின்றன. ஆனால் அவைகளுக்கு ஸரியான ஆதாரங்களும் யுக்திகளும், உலகத்து அனுபவத்துக்கு ஒத்திருக்கையும் பெரும்பாலுமில்லை. ஆழ்வார் முதலான ஆசார்யர்களால் நடத்தப்பட்ட நம்முடைய மதத்துக்கு எல்லாம் ஒத்திருக்கிறது. ஒருவன் பிராம்மணன் முதலான உயர்ந்த குலத்தில் பிறந்து உயர்ந்த குணங்களை அடைந்திருந்தாலும், ஆழ்வார் ஸம்பந்தம் இல்லாவிட்டால் அதாவது ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியின் உள்ளபடியான அறிவில்லாவிட்டால், அவனுக்கு ஒருவிதமான ஸுகமுமில்லை. அது இருந்தால் எல்லா ஸுகமும் கிடைக்கும். ஏனென்றால் ஆழ்வாருடைய பிரபந்தங்கள் எல்லா வேதங்களுடைய ஸாரமான அர்த்தம். (5)

(௭௧௬) ஶ்ரிதவந்மயூரகண்டருச்நா
பரிஶுத்தேந பதாவநி ஸ்வகேந
கமலாஸ்தநபூஷணோசிதம் தத்
பவதீ ரத்நமலங்கரோதி ஹேம்நா

ஹே பதாவநி - வாராய்த்திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஶ்ரிதவந் - அடையப்பட்டிருக்கிற, மயூரகண்ட - மயில் கழுத்தினுடைய, ருச்நா - பளபளப்பை உடைத்தாயிருக்கிற, பரிஶுத்தேந - ஒருவித குற்றமுமில்லாமலிருக்கிற, ஸ்வகேந - தன்னுடையதாயிருக்கிற, ஹேம்நா - தங்கத்தினாலே, கமலாஸ்தநபூஷணோசிதம், கமலா - மஹாலக்ஷ்மியினுடைய, ஸ்தந - ஸ்தனங்களுடைய, பூஷண - அலங்காரத்திற்கு, உசிதம் - தகுந்ததாயிருக்கிற, தத் - பிரஸித்தமான, ரத்நம் - பெருமாளாகிற ரத்னத்தை, அலங்கரோதி - அலங்காரம் பண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! மகாலக்ஷ்மி பெருமாள் என்கிற இந்திரநீலக்கல்லை எல்லையில்லாமல் உயர்ந்ததான உன்னுடைய தங்கத்தில் கட்டி தனக்கு ஆபரணமாகப்போட்டுக்கொண்டிருக்கிறாள்.

தாயாரும் பெருமாளுமாக இந்த எல்லா உலகத்தையுமுண்டு பண்ணினார்கள். அந்த தாயாருக்கு உலகத்தில் எல்லா ஜீவன்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கவேணுமென்கிற ஆசை எல்லையில்லாமலிருக்கிறது. தன் அகமுடையானான பெருமாளுக்கு அறிவு, சக்தி முதலான எல்லா குணங்களுமிருக்கிறது. ஆனால்குற்றம் பண்ணினால் தண்டிக்கிறது என்கிற ஒரு குணமுமிருக்கிறது, உலகத்திலோ எல்லா ஜீவன்களும் அளவில்லாத குற்றங்களைப் பண்ணியிருக்கிறார்கள். அதனால் அவளுக்கு வருத்தமாயிருக்கிறது. ஆழ்வார் முதலான ஆசார்யர்களின் சிபார்சினால் பெருமாள் எல்லா ஜீவன்களின் குற்றங்களையும் மன்னித்து எல்லாருக்கும் மோக்ஷம் கொடுக்கிறபடியால் அந்த வருத்தம் தீர்ந்து பகவானைக் கண்டு ஸந்தோஷப்படுகிறாள். (6)

(௭௩௭) காந்த்யா பரம் பூருஷமாஶ்ருணபாத் ஸ்வர்ணம்
கர்தும் க்ஷமா த்வமஸி காஞ்சநபாதரக்ஷே ।
அந்யாத்ருஶம் ஶிரஸி யா விநதஸ்ய தூராத்
ஆரக்வதஸ்தபகஸம்பதமிந்துமௌலே: ॥

ஹே காஞ்சநபாதரக்ஷே - வாராய் தங்கமயமான பாதுகையே! த்வம் - நீ, காந்த்யா - உன்னுடைய தங்க காந்தியினாலே பரம்பூருஷம் - உயர்ந்த புருஷனான பெருமாளை, ஆஶ்ருணபாத் - நகம் முதல் தலைவரையில், ஸ்வர்ணம் - தங்கமாக, கர்தும் - பண்ணுவதற்கு, க்ஷமா - தகுந்தவளாக, அஸி - ஆகிறாய். யா - யாதொருநீயானவள், தூராத் - ரொம்ப தூரத்திலே, விநதஸ்ய - வணங்கியிருக்கிற, இந்துமௌலே: - சந்திரனைத் தலையில் உடைத்தாயிருக்கிற சிவனுக்கு, அந்யாத்ருஶம் - வேறுமாதிரியாயிருக்கிற, ஆரக்வதஸ்தபக - கொன்னைப்பூக்கொத்தினுடைய, ஸம்பதம் - அழகை, ஶிரஸி - கொடுக்கிறாயோ.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் நீருண்டமேகம்போல் கருப்பாக இருக்கிறார். இருந்தாலும் உன்பேரிலிருக்கும் தங்கத்தின் காந்தி பெருமாள்பேரில் படுகிறபோது பெருமாள் திருமேனி முழுவதும் தங்கம்போலேயே ஆய்விடுகிறது. சிவன் உன்னை ரொம்ப தூரத்திலேயே ஸேவிக்கிறார். அப்பொழுது அவர்தலையில்

உன் தங்கக்காந்தி படுகிறபோது அவர்தலையில் இருக்கும் சந்திரன் இதுவரையில் இல்லாததான ரொம்ப ஆச்சர்யமான ஒரு கொன்னைப்பூங்கொத்துப்போலாகிவிடுகிறான்.

பெருமாள் எவ்வளவு தயையுள்ளவராயிருந்தாலும் பொறுக்க முடியாத ஜீவன்கள் பண்ணுகிற கொடுமையான குற்றங்களைப் பார்த்து தண்டிக்கநினைக்கும் ஸமயத்தில் ஆசார்யர்களின் இன்பமான சொற்களாலே அந்த நினைவுமாறி எல்லையில்லாத ஸுகமான மோக்ஷத்தைக் கொடுக்கவேண்டுமென்று நினைக்கிறார். உலகத்தில் ஜீவன் என்றும், தெய்வம் என்றும், தெய்வத்தின் உத்திரவென்றும், அந்தப்படி நடக்கவேண்டுமென்றும் கொஞ்சங்கூட நினைவில்லாமல் தன் மனம்போனபடி செய்து தெய்வத்துக்கு எதிரிகளாக இருக்கிறவர்களும் ஆழ்வார்பாசுரத்தின் கருத்தையுள்ளபடி அறிந்த மகான்களைக்கொண்டு அதை அறிந்தால் அவர்களும் முன்னிருந்த எண்ணங்கள் மாறி பூர்ணமான தெய்வபக்தியுள்ளவர்களாக ஆய்விடுவார்கள். (7)

(எஅ) சந்த்ராக்ருதி: கதமகல்பயதாஸ்ததாநீம்
தேவாங்கநயிநீவதநாம்புஜாநாம் ।
விக்ராந்திகாலே விததேந நிஜேந பாஸா
பாலாதபம் பலிவிமர்த்தநபாதரக்ஷே ॥

ஹே பலிவிமர்த்தநபாதரக்ஷே - மஹாபலியை அடக்கின பெருமாளுடைய பாதுகையே! சந்த்ராக்ருதி:-தங்கமான உடம்பை உடைத்தாயிருக்கிற, (சந்திரனாக இருக்கிற) த்வம் - நீ, ததாநீம் - அந்த திருவிக்கிரமாவதாரகாலத்திலே, விக்ராந்திகாலே - உலகத்தை அளக்கிற சமயத்திலே, விததேந-பரம்பியிருக்கிற, நிஜேந - தன்னுடையதாயிருக்கிற, பாஸா - தங்கக்காந்தியினாலே, தேவாங்கநயிநீ - தேவஸ்திரீகளுடைய, வதந-முகங்களாகிற, அம்புஜாநாம் - தாமரைப்பூக்களுக்கு, பாலாதபம் -இளம் வெய்யிலை, கதம்-எப்படி, அகல்பயதா:-செய்தாய்.

(கருத்து) ஏ பாதுகையே! முன்னொரு காலத்தில் மகாபலி சக்கரவர்த்தியினால் தேவதைகள் ரொம்ப தொந்திரவுபட்டார்கள். அந்த ஸமயத்தில் பெருமாள் வாமனாவதாரம் பண்ணி உடனே

திருவிக்ரமாவதாரம் பண்ணினார். அந்த காலத்தில் எங்கும் பரம்பின உன்னுடைய தங்ககாந்தியினாலே தொக்கிரவு நீங்கின தேவதைகளுடைய ஸ்திரீகளுக்கு ஸந்தோஷமுண்டாகி முகம் மலர்ந்துவிட்டது. அதை ஸ்ரீ தேசிகன் வேடிக்கையாக ஸாதிக்கிறார். சந்திர என்கிற சொல்லுக்கு தங்கம் என்றும், சந்திரன் என்றும் பொருள். நீ சந்திரனாக இருந்து தேவஸ்திரீகளுடைய முகங்களாகிற தாமரைப்பூக்களை மலரப்பண்ணக்கூடிய இளம்வெய்யிலை எப்படி உண்டுபண்ணினாய் என்று.

ஆழ்வாருடைய பாசுரத்தின் கருத்தை அறிந்தவரிடத்தில் தயை, க்ஷமை, சாந்தி, பக்தி, விரக்தி முதலான தேவஸ்திரீகளுக்கு எல்லையில்லாத ஸந்தோஷம் உண்டாகிறது. (8)

(௭௱௯) ஜஹே ததா ப்ரப்ருதி நூநமியம் பவத்யா:
காந்த்யா கவேரதநயா கநகாபகாத்வம் |
யாவந்முகுந்தபதஹேமபதாவநி த்வம்
பாவநம் விபூஷிதவதீ புலிநம் ததீயம் ||

முகுந்த - பெருமாளுடைய பத - திருவடியினுடைய, ஹேமபதாவநி - தங்கபாதுகையே, த்வம் - நீ, யாவத்-எப்போது ததீயம் - அந்தக்காவேரியினுடையதாயிருக்கிற, பாவநம் - பரிசுத்தமாயிருக்கிற, புலிநம் - மணல்குன்றை அதாவது ஸ்ரீரங்கத்தை, விபூஷிதவதீ-அலங்கரித்தாயோ, ததா ப்ரப்ருதி-அதுமுதல்கொண்டு, இயம் கவேரதநயா-இந்தக்காவேரியானது (கவேரன் என்று ஒரு ராஜா அவனுடைய பெண் காவேரி) பவத்யா: - உன்னுடைய, காந்த்யா - பளபளப்பினாலே, கநகாபகாத்வம் - தங்க ஆறாக இருப்பதை, ஜஹே - அடைந்தது.

(கருத்து) ஏ பாதுகையே! காவேரிக்கு பொன்னி, தங்கஆறு என்று பெயர் இருக்கிறது. நீ ஸ்ரீரங்கத்துக்கு வந்தாய், உன்னுடைய தங்கக் காந்திபட்டது. அதுமுதல் தங்கஆறாக ஆயிற்று.

ஸ்ரீரங்கநாதன் என்பவர் எல்லையில்லாத பெருமையுள்ளவர் தான். அதாவது (ஆள்) புருஷன், பெரும்(பெரிய)ஆள்-பெருமாள் என்பது ஸ்ரீமந்நாராயணன் தான் அவனைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் பெண்தான். ஸ்ரீரங்கநாதன் பெருமாளான ஸ்ரீராம

னால் ஆராதிக்கப்பட்டபடியால்பெரியபெருமாள். அப்படியிருந்தாலும் ஸ்ரீநம்மாழ்வாரால் பாடப்பட்டபடியால்தான் அவருக்கு இவ்வளவு பெருமை வந்தது. 9)

(௭௯௦) சித்ரம் ஸரோஜநிலயாஸஹிதஸ்ய ஸௌரே:
வாஸோசிதாநி வரணாவநி ஸம்விதித்ஸோ: ।
ஸத்யோ விகாஸமுபயாந்தி ஸமாதிபாஜாம்
சந்த்ராதபேந தவ சேதஸபங்கஜாநி ॥

ஹே வரணாவநி - திருவடியைக்காப்பாற்றுகிறபாதுகையே, ஸமாதிபாஜாம் - பெருமாளைத்தியானம் பண்ணுகிறவர்களுடைய, சேதஸபங்கஜாநி - மனஸ்ஸாகிற தாமரைப் பூக்கள், ஸரோஜநிலயாஸஹிதஸ்ய - தாமரைப்பூவை இருப்பிடமாக உடைய ஸ்ரீமஹாலெக்ஷ்மியோடு கூடிக்கொண்டிருக்கிற, ஸௌரே: - பெருமாளுடைய, வாஸோசிதாநி - வஸிக்கிறதற்குத் தகுந்ததாயிருக்கிற இடங்களை, ஸம்விதித்ஸோ: - ஏற்படுத்தவேணுமென்று ஆசையுள்ளவளாயிருக்கிற, தவ - உன்னுடைய, சந்த்ராதபேந - தங்கத்தினுடைய காந்தியினாலே நிலாவினாலே, ஸத்ய: - உடனே, விகாஸம்- மலர்ச்சியை, உபயாந்தி - அடைகின்றன, சித்ரம் - ஆச்சர்யம்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ தாயாரோடுகூட பெருமாளுக்கு வஸிக்கக்கூடிய அநேக இடங்களை ஏற்பாடு செய்யவேணுமென்று ஆசைப்பட்டு பெருமாளைத் தியானம்செய்கிறவர்களுடைய மனஸ்ஸாகிற தாமரைப்பூக்களை உன்னுடைய தங்ககாந்தியினாலே மலரச் செய்தாய், ஆச்சரியம். சந்திர என்கிற சொல்லுக்கு தங்கமென்றும் சந்திரனென்றும் இரண்டு பொருள் உண்டு. அதைப்பற்றி நிலாவினால் தாமரைப்பூவை மலர்த்தினது ஆச்சர்யமென்று வேடிக்கையாக ஸாதித்தார். நிலா புறப்பட்டால் தாமரைப்பூக்கள் மூடிப் போகும்.

தாயாருக்கும் பெருமாளுக்கும் எல்லா ஜீவன்களும் தங்களை நினைக்கவேணுமென்று ஆவலாக இருக்கிறது. எல்லா ஜீவன்களும் ஜீவன் என்றும் தெய்வம் என்றும் இவைமுதலான ஸங்கதிகளை அறியாததினால் பிள்ளை பெண்டாட்டி முதலானவைகளையே

நினைக்கிறார்களேயொழிய ஒருவராவது பெருமாளைநினைக்கிறதில்லை அதற்காக ஸ்ரீஆழ்வார் அவதரித்து தங்கம்போன்ற பாசுரங்களை ஸாதித்தபிறகு வெகுபேர்கள் அந்த பாசுரங்களின்கருத்தைப்பெரியோர்களால் உள்ளபடி அறிந்து மனதுதெளிந்து பகவானை த்யானம் பண்ணுகிறார்கள். (10)

(௭௨௧) த்வய்யேவ பாதமதிரோப்ய நவம் ப்ரவாஹம்
நாதே பதாவநி நிரீக்ஷிதும் ப்ரவ்ருத்தே ।
ஆத்மீயகாஞ்சநருசா பவதீ வ்யதத்தே
ஸௌவர்ணாரவிந்தபரிதாமிவ ஸைகதிநீம் ॥

ஹே பதாவநி - வாராய்த்திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! பவதீ - நீயானவள், நாதே - ஸ்ரீரங்கநாதனுனவர், த்வய்யேவ - உன்னிடத்திலேயே, பாதம் - திருவடியை, அதிரோப்ய - வைத்துக்கொண்டு, நவம் - புதிதாக இருக்கிற, ப்ரவாஹம் - வெள்ளத்தை, நிரீக்ஷிதும் - பார்ப்பதற்கு, ப்ரவ்ருத்தே - எழுந்தருளுகிறபோது, ஸைகதிநீம் - காவேரியை, ஆத்மீய - தன்னுடையதாக இருக்கிற, காஞ்சந - தங்கத்தினுடைய, ருசா - காந்தியினாலே, ஸௌவர்ணாரவிந்த - தங்கத்தாமரைப் பூக்களாலே, பரிதாமிவ - நிறைந்ததுபோல, வ்யதத்தே - பண்ணுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீரங்கநாதன் உன்னைச் சாத்திக்கொண்டு காவேரியின் புதுவெள்ளத்தை கடாக்ஷிப்பதற்காக எழுந்தருளும்போது (அதாவது 18ம்பெருக்குக்கு திருச்செவியில் எழுந்தருளும்போது) உன்னுடைய தங்ககாந்திகள் அந்த காவேரியில் பாம்புகிறது. அப்போது அந்த காவேரிமுடிய தங்கத்தாமரை பூத்ததுபோலிருக்கிறது.

(பெருமாள் திருச்செவியில்எழுந்தருளும்போதெல்லாம் பாதுகையைச்சாத்திக்கொண்டு எழுந்தருளுவதாகவும், வாஹநங்களில் எழுந்தருளும்போது அது இல்லையென்றும் ஸம்பிரதாயம்.)

ஆழ்வார் பாசுரங்களின் கருத்து ஒருவனுக்கு உள்ளபடி மனதில் பட்டால் மனது துளிர்த்து பூத்ததுபோலாகிறது. அதாவது தனக்கும் பிறர்களுக்கும் ரொம்ப இன்பமாக இருக்கிறது.

(எசஉ) விஹரதி வாலுகே நஷு ஸக்தவே ரங்கநாயகே
காவேரீயம் தே பாதுகே ஹேமபாஸா ।
வஹதி ஸலிலகேலீ ஸங்க்ராந்த சோள
ஸுந்தரீ ஹரித்ரா விஷவஸ்நாக ॥

ஹே பாதுகே - பாதுகையே! இயம் காவேரீ - இந்தக்காவேரியானது, ஸக்தவே - உன்னோடு கூடிக் கொண்டிருக்கிற, அதாவது உன்னைச் சாத்திக்கொண்டிருக்கிற, ரங்கநாயகே - ஸ்ரீ ரங்கநாதனுனவர், வாலுகே நஷு - மணல் குன்றுகளிலே, விஹரதி - எழுந்தருளுகிறபோது, தே - உன்னுடைய, ஹேம - தங்கத்தினுடைய, பாஸா - காந்தியினலே, ஸலிலகேலி - ஜலக்கிரீடை பண்ணும்போது, ஸங்க்ராந்த - கரைந்திருக்கிற, சோள - சோழராஜாவினுடைய, ஸுந்தரீ - அந்தப்புர ஸ்திரீகளுடைய, ஸ்தந - பெருத்த ஸ்தனங்களுடைய, ஹரித்ரா - மஞ்சள் குழம்பினலே, விஷ - பொன்வர்ணமாயிருக்கிற, ஸ்வஸ்நாக - இருப்பை, வஹதி - அடைகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச் சாத்திக்கொண்டு பெருமாள் காவேரியின் மணல்குன்றில் எழுந்தருளும்போது உன்னுடைய தங்கக்காந்தி காவேரியில் பரம்புகிறது. அதைப் பார்த்தால் சோழராஜா அநேக ஸ்திரீகளோடு காவேரியில் ஜலக்ரீடை பண்ணும்போது அந்த ஸ்திரீகள் பூசிக்கொண்ட மஞ்சள் கரைந்து கலந்துவந்த ஜலம்போலிருக்கிறது. (12)

(எசஙூ) ஸாரஸி நிகமகந்தா ஸௌரப்யபத்மாகரஸ்தா
காஞ்சநீவ லக்ஷ்மீஸே பாதுகே ப்ர
ஜாதவ பத்மா ஸ்வாம் ஸ்ராவ்ய நாநாவிஹார:
ஸம்ஸாரிநீதேஹே ராஜ்யநா ॥

ஹே பாதுகே - பாதுகையே! ஸாரஸி: - மூக்குக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கிறதான, நிகமகந்தா - வேதமாகிற வாஸனையை உடைத்தானதாயும், ஸௌரப்ய - ரொம்ப இன்பமாகஇருக்கிற, பத்மா - மஹாலெக்ஷ்மியினுடைய, கரஸ்தா - கையில் இருப்பவளாயும், (பத்மாகரஸ்தா - தாமரைக்குளத்தில் இருப்ப

வளாயும்) இருக்கிற, த்வம் - நீ, கநககமலிநீவ-தங்கத்தாமரைப் பூப்போல, த்ருச்யஸே - பார்க்கப்படுகிருய். ஸ்ராவ்யா - அடையப்பட்டிருக்கிற; நாநா - அனேகவிதமாக, விஹாரை: - சஞ்சாரத்தை உடைத்தாயும், மஹேந்த்ரநீலை: - இந்திர நீலக்கல்லு போல கருப்பாயும் இருக்கிற, சார்ங்கபாணி - சார்ங்கம் என்கிற வில்லை உடைய பெருமாளானவர், ஸதா - எப்பொழுதும், ப்ரமர இவ - வண்டுபோல, த்வாம் - உன்னை, ஸேவதே - அடைகிருர்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப் பார்த்தால் தங்கத் தாமரைப்பூப்போலிருக்கிறது. உன்னிடத்தில் வேதவாஸனையிருக்கிறது. உன்னிடத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாளைப்பார்த்தால் தாமரைப்பூவில் வண்டு சுற்றுகிறதுபோலிருக்கிறது.

மிகுந்ததேன் நிரம்பிய தாமரைப்பூவை எப்படி நல்ல வண்டானது விடாமல் அனுபவிக்குமோ அதுமாதிரி ஆழ்வாரைப்பெருமாள் க்ஷணம்கூட விடாமல் வெகு ஆசையுடன் அனுபவிக்கிருர். (13)

(எஉ௪) கநகருசிரவர்ணாம் பாதுகே ஸஹ்யஜா த்வாம்
ச்ரியமிவ மஹநீயாம் ஸிந்துராஜஸ்ய பத்நீ |
ஸ்வயமிஹ ஸவிதஸ்தா ஸௌம்யஜாமாத்ருயுக்தாம்
உபசரதி ரஸேந ச்வாசுரம் த்வாபிமாநாத் ||

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! ஸிந்துராஜஸ்ய பத்நீ - ஸமுத்ரராஜனுடைய அகமுடையாளான, ஸஹ்யஜா - காவேரியானவள், இஹ - இந்த ஸ்ரீ ரங்கத்திலே, ஸ்வயம் - தானே, ஸவிதஸ்தா - ஸமீபத்தில் இருந்துகொண்டு, கநக - தங்கத்தாலே, தங்கம்போல, ருசிர - அழகான, வர்ணாம் - ரூபத்தை உடைத்தாயிருக்கிற, ஸௌம்யஜாமாத்ருயுக்தாம் - அழகிய மணவாளனேடே, அதாவது ஸ்ரீ ரங்கநாதனேடே சேர்ந்திருக்கிற, ச்ரியமிவ - மஹாலெக்ஷ்மியைப்போலே, மஹநீயாம் - கொண்டாடத் தகுந்தவளாக இருக்கிற, த்வாம் - உன்னை, ச்வாசுரத்வாபிமாநாத் - பெண்ணு என்கிற அபிமானத்தாலே, ரஸேந - சந்தோஷத்தினலே, உபசரதி - கொண்டாடுகிருர்கள்.

(கருத்து) ஏ பாதுகே! உன்னைச்சாத்திக்கொண்டு ஸ்ரீரங்கநாதன் எழுந்தருளும் காலத்தில் காவேரி உன்னைத் தன்னுடைய

பெண்ணை மகாலெக்ஷ்மியாகநினைத்து மாப்பிள்ளையோடுசேர்ந்து பெண் ஆத்துக்கு வந்ததுபோல் உபசாரம் பண்ணுகிறூர். உன்னை ஏன் பெண்ணை மகாலெக்ஷ்மியாக நினைத்தாரென்றால், மகாலெக்ஷ்மிபோல்சிகப்பாக இருப்பதாலும்,ஸகலலோகமும் உன்னைக் கொண்டாடுகிறபடியினாலேயும் க்ஷணங்கூட பெருமாளைவிட்டுப் பிரியாமலிருப்பதாலும்தான்.

பெரியோர்கள் ஆழ்வார் முதலான ஆசார்யர்களை மகாலெக்ஷ்மியினுடைய இன்னொரு வடிவமாக நினைக்கிறூர்கள். (14)

சரு) க்ஷணம்க்ஷணமுபஜீவ்யா த்ருஶ்யஸே நிர்ஜராணாம்
த்ரிபுரமதநமௌளௌ ஶேகரத்வம் ப்ரயாந்தீ ।
ப்ரதிபதமபி ப்ராப்தஶ்ருங்காஸி ஶௌரே
ஸ்ததபி சரணரக்ஷே ஸர்ணபூர்ணேந்துகாந்தி: ॥

ஶௌரே: சரணரக்ஷே - பெருமாளுடைய திருவடிகளைக் காப்பாற்றுகிற பாதுகையே! த்வம் - நீ, க்ஷணம்க்ஷணம் - ஒவ்வொருக்ஷணமும், பதினறில் ஒரு பங்கில், நிர்ஜராணாம் - தேவதைகளுக்கு, முக்தர்களுக்கு, உபஜீவ்யா - தங்களைக்காப்பாற்றுவதற்காகவும்ஆஹாரத்துக்காகவும்அடையத்தகுந்தவளாக, த்ருஶ்யஸே - காணப்படுகிறுய். த்ரிபுரமதந - திரிபுராசுரனைக்கொன்ற சிவனுடைய, மௌளௌ - தலையில், ஶேகரத்வம் - அலங்காரமாகயிருக்கையை, ப்ரயாந்தீ-அடையா நின்றுகொண்டு, ப்ரதிபதம் - ஒவ்வொரு அடிவைப்பையும், ப்ரதமையை, அபி ப்ராப்ய - அடைந்து, ப்ராப்த - அடையப்பட்டிருக்கிற, ஶ்ருங்கா - நுனியை உடைத்தானவளாக, அஸி - ஆகிறுய். ததபி - அப்படியிருந்தாலும், ஸர்ணபூர்ணேந்துகாந்தி: - உருவம்முழுவதும் தங்கமாக இருக்கிறுய், பூர்ணசந்திரன்போல் இருக்கிறுய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைஸகலமான தேவதைகளும் தங்களுடைய க்ஷேமத்துக்காக வந்து அடைகிறூர்கள். முக்தர்களும்நித்யஸூரிகளும் உன்னைக்கொண்டாடுகிறூர்கள். சிவன் உன்னைத் தலைக்கு அலங்காரமாக வைத்துக்கொள்கிறூர். பெருமாள் உன்னை ரொம்ப உயர்ந்தவாக நினைத்து ரொம்ப கௌரவத்

தோடு உன்னை அடிக்கடி திருவடிகளில் சாத்திக்கொள்ளுகிறார். திருமேனி முழுவதும் தங்கமாக இருக்கிறாய்.

இதில் இன்னொரு விதமான பொருள் தோன்றுகிறது. இரண்டு பொருளாகும்படியான ஒரு சொல்லை எழுதினால் அதில் கவிகளுக்கு ஒரு பெருமை. சந்திரனுக்கு 16 கலையென்றும், ஒவ்வொரு கலையை ஒவ்வொரு தினத்தில் ஒவ்வொரு தேவதை ஸாப்பிடுகிறான் என்றும் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. ஆகையால் சந்திரனைத் தேவதைகள் தங்கள் ஸாப்பாட்டுக்காக உபயோகித்துக்கொள்கிறார்கள். சந்திரனைச் சிவன் தன்தலைக்கு அலங்காரமாக வைத்துக்கொள்கிறார். பிரதமை திதியில் சிலகாலத்தில் சந்திரகலை ஒரு பக்கம் உயர்ந்திருக்கிறது. சந்திரன் ஒரு கலையாக இருக்கும்போதும் பூர்ணசந்திரன் போலிருக்கிறது

பிரும்மபட்டத்தைக்கூட த்ருணமாக நினைத்து மோக்ஷத்தையே உயர்ந்த பிரயோஜனமாக நினைக்கிற ஆழ்வாரைப் போலொத்த மகான்களைப் பார்த்து பிரம்மா ருத்திரன் முதலான உயர்ந்த தேவதைகளும் ஆச்சரியப்பட்டு வணங்குகிறார்கள். பெருமாளும் இப்படியும் உலகத்தில் ஜீவன்கள் இருக்கிறார்களே என்று [illegible]ம் [illegible]க்கொண்டாடுகிறார்

ஆழ்வார் முதலான ஆசார்யர்கள் திருமேனியை ஸேவிக்கும்போது பூர்ணசந்திரனைப் பார்ப்பதுபோல் கொஞ்சமேனும் அலுப்புத்தட்டாமல் மிகவும் இன்பமாக இருக்கிறது. (15)

(௭௪௬) கநகமபி த்ருணம் யே மந்வதே வீதராகா:
த்ருணமபி கநகம் தே ஜாநதே த்வத்ஸ்வர்ணகாந்தே:।
மதுரிபுபதரக்ஷே யத்வதேயாவதீதா:
பரிணயமபி ஸௌதாம் தேவி தேவாஜ்ஞராதீந்॥

மதுரிபு-மது என்கிற அசுரனுக்குச் சத்ருவான பெருமாளுடைய, பதரக்ஷே-திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! வீத - போயிருக்கிற, ராகா: - ஆசையை உடைத்தாயிருக்கிற, யே - எவர்கள், கநகமபி - தங்கத்தைக்கூட, த்ருணம்-புல்லாக, மந்வதே - எண்ணுகிறார்களோ, தே - அவர்கள், த்ருணமபி - புல்லையும், தவஸ்வர்ணகாந்தே: - உன்னுடைய தங்

க்காந்திகளாலே; கநகம் - தங்கமாக, ஜாநதே - எண்ணுகி றார்கள். யத: - யாதொரு, காரணத்தாலே, த்வத³ர்பணாய நீதாநி - உனக்காகச்சமர்ப்பிப்பதற்காகக் கொண்டுவரப்பட்டிருக் கிற, நவ்யதூர்வாதீநி-இளம்அருகம்பில்லுமுதலானவைகளை, ஹைமாநி - தங்கமாக, பரிணமயஸி - பண்ணுகிறாயோ.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளிடத்தில் மிகுந்த ஆசை யுள்ளவர்கள் தங்கத்தைப் புல்லுக்கு ஸமானமாக நினைக்கிறார்கள். அவ்வளவு ஒழிந்தவர்களைக்கூட புல்லைத் தங்கமாக நினைக்கும்படி செய்கிறாய். அதாவது உன் தங்கக்காந்தி பச்சைப்புல்லின்பேரில் படும்போது அது தங்கமாகத் தோன்றுகிறது. உன்னுடைய ஆராதனத்துக்காக பச்சையானஇளம் அருகம்புல் கொண்டுவந்து வைத்திருக்கிறார்கள். உன் தங்கக்காந்தி அதின்பேரில் படும் போது அது தங்கம் போல் ஆய்விடுகிறது.

பிறப்பு முதலானவைகளாலே ரொம்பவும் இளப்பமாகஇருக் கிறவனும் ஆழ்வாருடைய அனுக்ரகத்தாலே அவருடைய பாசுரங் களின் கருத்தை உள்ளபடி அறிகிறான். அப்படி அறிந்தபோது மிகவும் உயர்ந்த பெரியோர்களும் அந்தஅறிவைக்கண்டு அவனைக் கொண்டாடுகிறார்கள். (16)

(௭௬௭) விஶுத்³தி⁴முபைதி ஜ்வலநஸங்க³மாத் காஞ்சநம்
விது³ஶ்ச ஜக³ந்தி தத³வசோ தத்³விபர்யஸ்யதி ।
கத²ம் கநகபாது³கே கமலலோசநே ஸாக்ஷிணி
த்வயைவ பரிஶுத்³தா⁴ ஸம்ஸ்ருதிஸஞ்ஜ்வாலிஜாவ்யப்ரேதே ॥

ஹே கநகபாது³கே - தங்கமயமான பாதுகையே! காஞ்சநம்-தங்கமானது, ஜ்வலநஸங்க³மாத் - நெருப்போடு சேர்வதினாலே, அதாவது புடம் போடுவதினாலே, விஶுத்³தி⁴ம் - அழுக்கு இல்லாமையை, உபைதி - அடைகிறது. தத் - அந்த ஸங்கதி யை, ஜக³ந்தி - எல்லா உலகங்களும், விது³: - அறிகின்றன. தத் - அந்த ஸங்கதியானது, ந விபர்யஸ்யதி - மாறுகிறதில்லை என்பதுபிரஸித்தம். கமலலோசநே - தாமரைப்பூபோன்ற கண் ணையுடைத்தான பெருமாளானவர், ஸாக்ஷிணி - பார்த்துக் கொண்டிருக்கும்போது, கத²ம் - எப்படி, ஸம்ஸ்ருதஸஞ்ஜ்வாலி

அக்னிக்குக் கூட, ஸ்வயமேவ - உன்னாலேயே, வரிமஸுத்தா - அழுக்கில்லாமையானது, ஜாயதே - ஏற்படுகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உலகத்தில் தங்கத்தில் அழுக்கு இருந்தால் புடம்போடுவது வழக்கம். போட்டால் தங்கம் சுத்மாய் விடும். தங்கத்துக்கு அழுக்காவது மற்ற லோஹங்களுடைய சேர்க்கை. நெருப்பு தங்கத்தோடு சேர்ந்திருக்கிற வெள்ளி முதலான லோஹங்களை சாம்பலாய்ப்பண்ணிவிடுகிறது. தங்கத்தை ஒன்றும் செய்யமுடியாது. இது எல்லா உலகத்துக்கும் தெரிந்த விஷயம். இந்த ஸங்கதிக்கு நாளது வரையில் மாறுதல் கிடையாது. நெருப்பு தவிர இன்னென்றினால் தங்கத்தைச் சுத்தம் பண்ணமுடியாது. அப்பேர்ப்பட்ட நெருப்பும் உன்னாலே சுத்தமாகிறது. என்ன ஆச்சரியம். அதாவது அக்னி தேவதைக்கும் பெருமாளுடைய பாதுகையை தலையில் ஸாதித்துக்கொள்வதினால்தான் எல்லா தோஷங்களும் போகிறது. உலகத்தில் ஒருவன் எவ்வளவு கெட்டவனுக இருந்தாலும் நல்லவர்களுடைய சேர்க்கையினாலே அவனுக்கு எல்லா தோஷங்களும் போய்விடுகிறது. அப்பேர்ப்பட்ட நல்லவன் என்பவன் யார் என்றால் ஆழ்வாருடையவும் அவருடைய பக்தர்களுடையவும் அனுக்ரஹத்தினாலே, அவருடைய பாசுரங்களின் கருத்தை உள்ளபடி அறிந்தவர்கள். பெருமாள் ஒரு கெட்ட ஜீவனை நல்ல ஆசார்யர்களுடன் சேர்க்கிறார். ஆசார்யர்கள் எல்லாப்பாடும்படுகிறார்கள். பெருமாள் ஸாக்ஷியாகமட்டும் இருக்கிறார். அதாவது பார்த்துக்கொண்டிருக்கிறார்.

(எசஅ) தாரானுஷங்காத் ப்ரதிதவிபவாம் சாதகும்பாபிராம-
ச்ரீகாம் ஸ்வச்சாமுபஹிதவதீம் பாதுகே ரங்கநாத: ।
ஸம்ஸாரிணாம் ஸஹஜமலினாம் ஸௌதஷா ஜீவஜாதா
ம்ருத்யுஜிஷ்ணுர் நயதி நிகிலம் ஸாக்ஷிமாத்ர: ॥

பாதுகே - ஸ்ரீமாய் பாதுகையே! ரங்கநாத: - ரங்கநாதனவர், தார - பிரணவத்தினுடைய, முத்தினுடைய, அநுஷங்க - சேர்க்கையினாலே, ப்ரதித - ப்ரஸித்தமாக இருக்கிற, விபவாம் - பெருமையை உடைத்தாயும், சாதகும்பாபிராம - அழகாயிருக்கிற தங்கத்தினுடைய காந்தியையுடைத்தா

ணதாயும், த்ரிதசமஹிதாம் - தேவதைகளாலே கொண்டாடப் பட்டிருக்கிற, த்வாம் - உன்னை, ஆரூடவாந் - ஏறினவராய்க் கொண்டு, ஸஞ்சாரிணீம் - நடக்கிறதாயிருக்கிற, ஸுமேருகி ரிணஃ - மேருபர்வதத்தினுடைய, ஏகாம் தடீம் - தாழ்வரையி லே, தஸ்துஷா - உட்கார்ந்துகொண்டிருக்கிற, உத்ரிக்தத்விரதபதி நா - மதம்பிடித்த உயர்ந்த யானையோடு, ஸமீக்ஷ்யாம் - பார்க்கத் தகுந்ததாயிருக்கிற, ஸாத்ருச்யம் - ஒரேமாதிரியாக இருக்கு கையை, யாஸி - அடைகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீரங்கநாதன் உயர்ந்த தங்கத் தாலே செய்யப்பட்ட உன்பேரில் ஏறிக்கொண்டு அதாவது உன் னைச் சாத்திக்கொண்டு எழுந்தருளுகிறபோது மேரு பர்வதம் என்கிற தங்கமலையினுடைய ஒரு பாகம் ஒரு மதம் பிடித்த உயர்ந்த யானையை ஏற்றிக்கொண்டு நடந்துபோவதுபோலிருக்கி றது. பெருமாள் பிரணவத்தில் சொல்லியபடி தன்னிடத்தில் எல்லையில்லாத ஆசையுள்ள ஆழ்வாரிடத்திலிருக்கும்படி தனக்கு கிடைத்ததை நினைத்து, தங்கமலைமேல் ஏறிக்கொண்டு உல்லாஸ மாக நடக்கிற மதம்பிடித்த யானைபோல் இருக்கிருர். அதுபோல் அவ்வளவு ஸந்தோஷத்தை அடைகிருர். (18)

(௭௱௯) கநகருசிரா காவ்யச்ராவ்யா சநைச்சர
ணோசிதா ச்ரிதகுருபுதா ஸாலங்காரா
விராஜயிபவேபவிதா । விமதவிபவா நித்யம்
விசேஷ்ணாஃ பதே மணிபாதுகே க்ரஹபதி ரஹதீ
விச்லேஷாம் நச்யதா க்ரஹமண்டலீ ॥

ஹே மணிபாதுகே - வாராய் கல்லிழைத்தபாதுகையே! கநக - தங்கத்திலுலே (அங்காரகன் போல) ருசிரா - அழ காயும், காவ்ய - ராமாயணம் முதலானகாவ்யங்களாலே, (சுக் ராசாரியாராலே) ச்ராவ்யா-சொல்லப்பட்டவளாயும், சநைஃ- மெள்ள, சரண-ஸஞ்சாரத்துக்கு, (சநைச்சரண - சனிக்கு) உசிதா - தகுந்தவளாயும், ச்ரித - அடையப்பட்டிருக்கிற, குரு - ஆசார்யாள் என்ன, புத - வித்வான்களென்ன, (கு

ர-பிருஹஸ்பதி என்ன, வ-புதனென்ன) இவர்களையு டைத்தாயும், ஸாஷ்ரு - பளபளப்பான, ரூபா-திருமேனி யையுடைத்தாயும், (ஸாஷ்ரூபா - ஸூர்யரூபமாயும்,) த்விஜாதிபை - பிராமணசிரேஷ்டர்களாலே, (சந்திரனாலே) ஸேவிதா - ஸேவிக்கப்பட்டும், நித்யம் - எப்பொழுதும், விஷ்ணோ: - பெருமாளுடைய, பதே - திருவடியிலே, (விஷ்ணோ:பதே - ஆகாசத்திலே,) விஹித விபவா - பண்ணப்பட்ட ஸம்பத்தையு டைத்தாயிருக்கிற, உந்நதீ-ரொம்ப உயர்ந்தவளாயிருக்கிற, த்வம்-நீ, விஶ்வேஷாம்ந: - எங்கள் எல்லோருக்கும், ஶம்-க்ஷேமத் தைப்பண்ணுகிற, க்ரஹாணாம் - நவக்ரஹங்களுடைய கூட்ட மாக இருக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் தங்கம் இழைத்தி ருக்கிறது. ராமாயணம் பாரதம் முதலான காவ்யங்கள் உன்னைப் பற்றிச் சொல்லுகிறது. பெருமாள் உல்லாஸமாய் ஸஞ்சரிப்ப தற்கு நீ உதவியாக இருக்கிறாய். ஸகல ஆசார்யர்களும் எல்லா வித்வான்களும் உன்னை அடைந்திருக்கிறார்கள். ஸூரியனுக்கு மேலே பளபளப்பாய் இருக்கிறாய். உயர்ந்த பிராமணர்கள் எல் லாரும் உன்னை ஸேவிக்கிறார்கள். உன்னாலே பெருமாளுடைய திருவடிக்கு விசேஷமான பெருமை ஏற்படுகிறது. அப்பேர்பட்ட நீ எல்லா உலகங்களுக்கும் நவக்ராஹங்களாலே ஏற்படுகிற எல்லா உபத்திரவம் முதலான கஷ்டங்களையும் போக்கி எல்லாஸௌக்யங் களையும் கொடுக்கிறாய்.

நல்ல ஆசார்யர்களை அடைந்தவர்களுக்கு க்ரஹ பீடை முத லான ஒரு உபத்திரவமும் கிடையாது.

(எ௱௦) ப்ரஸூதவஸுதேவதிஹ்ருத்ஸ்ரணீயம் ஸ்வாம் ஹிர
ண்யவிஷயாஹ்ருதி: । ஆவஹந் ஜாதவேதா:
ப்ரியவிவ ந: பாதுகே நித்யம் ॥

இதி கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஶ்ரீவேங்கடநாதஸ்ய ஶ்ரீவேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஶ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
காஞ்சநபத்ததிஶ்சத்வாரிம்ஶீ ॥

ஹே பாது³கே - வாராய் பாதுகையே! ஸ்ப்ருஜீவித - பிரகாசித்துக்கொண்டிருக்கிற, பஞ்சஹேதி: - சக்ரம் முதலான ஐந்து ஆயுதங்களை உடைத்தாயிருக்கிற (ஐந்து ஜ்வாலைகளையுடைத்தாயிருக்கிற) ஹிரண்யவிஷயாஸஹ:-ஹிரண்யனைக் கொல்லத் தகுந்தாயிருக்கிற (தங்கத்தை உருக்கத்தகுந்தாயிருக்கிற) ஜாதவேதா:-பகவானானவர், (அக்னியானது) ஹிரண்மயீம் - தங்கத்தாலே ரொம்பியிருக்கிற, ஸ்ரியமிவ-ஸம்பத்தைப்போல, ஹிரண்மயீம் - தங்கமாயிருக்கிற, த்வாம்-உன்னை, ந: - எங்களுக்கு, நித்யம்-எப்பொழுதும், ஆவஹது - கொடுக்கவேணும்.

(கருத்து) ஏ பாதுகையே! சாஸ்திரத்தில் அக்னியை த்யானம் பண்ணினால் ஸம்பத்துண்டாகுமென்றுசொல்லியிருக்கிறது. ஆகையால் தன்னை த்யானம்பண்ணுகிறவர்களுக்குஅக்னி ஸம்பத்தைக்கொடுப்பதுபோல் பெருமாள் எப்பொழுதும் எங்களுக்கு ஆசார்யாளைக் கொடுக்கவேணும். அதாவது—அவர்களை எப்பொழுதும் நினைப்பது எப்பொழுதும வாக்கினால் சொல்வது அவர்களுக்கு வேலை செய்வது, அவர்களைப்பார்ப்பது, அவர்கள் வார்த்தைகளைக் காதால் கேட்பது- இவை முதலானவைகளைக்கொடுப்பது. நாங்கள் ஆசார்யாளிடத்தில் பெருமாளைக் கேட்கவில்லை. பெருமாளிடத்தில் ஆசார்யாளைக் கேட்கிறோம். (20)

இருபத்திரண்டாவதான காஞ்சந பத்ததி முற்றிற்று.

---

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ॥

ஸ்ரீ ரங்கநாயகபாது³காஸஹஸ்ரே

த்ரயோவிம்ஶதிஶ்ஶேஷவஶக்தி: ॥

---

(எ௱க) ஸ்ப்ருஷ்டாம் ஸஹஸ்ரவத³நேந நித்யம் ஶேஷவஶாம்ஸிநா। ஶுத்³தா⁴ம் ஸம்ஸாரயாஸி த்வாம் ஸ்வாஶாத்ராம்இவ பாது³கே ॥

ஹே பாது³கே - வாராய் பாதுகையே! ஸஹஸ்ரவத³நேந-ஆதிசேஷனாலே, நித்யம்-எப்பொழுதும், ஶேஷவஶாம்ஸிநா - வே

லக்காரனென்று சொல்லும்படியாக, க்ஷிதௌ - பூமியிலே, ஸ்ருஷ்டாம் - உண்டுபண்ணப்பட்டிருக்கிற, த்வாம் - உன்னை, அநந்தேந - பெருமாளாலே, ஶேஷஸம்ஜ்ஞிநா - வேலைக்காரனாக, ஸ்ருஷ்டாம் - உண்டுபண்ணப்பட்டிருக்கிற, ஆத்மாநமிவ - தன்னைப் போல, ஸம்பாவயாமி - நினைக்கிறேன்.

(கருத்து) இந்த பத்ததியில் பாதுகை ஆதிசேஷனுடைய அவதாரம் என்பதைப்பற்றி வர்ணிக்கிறார். பாதுகாரூபமாக ஆதிசேஷனே ஆயிருக்கிறார் என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. பெருமாள் தான் பாதுகாரூபமாக இருக்கிறாரென்று எனக்குத் தோன்றுகிறது.

ஆழ்வார் நித்யஸூரிகளுடைய அவதாரமென்று சிலர் சொல்லுகிறார்கள், பெருமாளுடைய அவதாரமென்றுதான் எனக்குத் தோன்றுகிறது. (1)

(௭௫௨) பத்மாபோகாத் த்வதுபகே ரங்கநாதஸ்ய
பாதஸ்பர்ஶாத் போகமநந்யம் ப்ருவிஷ்டா: |
ஶேஷஸ்யைகாம் ஸம்ஹிகாம் ஸ்வயம் வீக்ஷ
ஊசுர் யமுனாசார்யா: அநகா: ॥

ஹே பாதுகே - வராய்ப்பாதுகையே! ஆசார்யாணாம் - ஆசாரியர்களுக்குள்ளே, உதார்ணா: - உயர்ந்தவராக இருக்கிற, யாமுநேயா: - ஆளவந்தாரானவர், த்வாம் - உன்னை, பத்மா - மகாலெக்ஷ்மியினுடைய, போகாத் - சுகத்தைக்காட்டிலும், அந்யம் - வேறாயிருக்கிற, (அதாவது உயர்ந்ததாக இருக்கிற,) ரங்கநாதஸ்ய - ஸ்ரீ ரங்கனாதனுடைய, பாதஸ்பர்ஶாத் - திருவடியாலே மிதித்ததினாலே உண்டாயிருக்கிற, போகம் - ஸுகத்தை, ப்ருவிஷ்டா: - அடையவேண்டுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிற, ஶேஷஸ்ய - ஆதிசேஷனுடைய, ஏகாம் - ஒரு, ஸம்ஹிகாம் - அவதாரமாக, ஊசு: - சொன்னார்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளுடைய திருவடியையே மஹாலக்ஷ்மீ அனுபவிக்கிறாள். அதைக்காட்டிலும் உயர்ந்தஸ்தானத்தை-அதாவது பாதுகையாக இருந்து முழுத் திருவடிகளாலும்

மிதிபடுகிறது என்கிற சுகத்தை-அடையவேணுமென்கிற ஆசையி ஞல் பாதுகாரூபமாக அவதரித்தாரென்று ஆசார்யர்களுக்குள் உயர்ந்தவரான ஆளவந்தார் ஸாதித்தார். ஆழ்வார் முதலான ஆசாரியர்கள், மஹாலெக்ஷ்மீமுதலானவர்கள்பெருமாளையனுபவிக் கிற ஸுகத்தைக்காட்டிலும் உயர்ந்தசுகத்தைஅனுபவிக்கிருர்கள்.

(எருங) ஶேஷத்வம் ஸம்ஶ்ரயதி ஶ்ரேஷ்ட்யம் த்வதாத்மிகாம் ஸமதிகம்ய பந்நகராஜ: ।
த்வாமேவ பக்திநமிதைர்வஹதாம் ஶிரோபி: காஷ்டாம் கதம் ததிஹ கேஶவபாதரக்ஷே ॥

கேஶவபாதரக்ஷே-பெருமாளுடையதிருவடிகளைக் காப்பாற்றுகிற தாயாராகிய பாதுகையே! பந்நகராஜ: - ஆதி சேஷனைவர், த்வதாத்மிகாம்- பாதுகாரூபமான அவதாரத்தை, ஸமதிகம்ய - அடைந்து, ஶ்ரேஷ்ட்யம் - உயர்ந்த, ஶேஷத்வம் - பக வானுடைய வேலையை, (தணிவை) ஸம்ஶ்ரயதி-அடைகிருர் தான். பக்திநமிதை: - பக்தியினுல் வணங்கியிருக்கிற, ஶிரோ பி: - தலைகளினுல், த்வாமேவ - உன்னையே, வஹதாம் - தூக்கின வர்களுடைய, தத்-அந்த வேலையானது, (தணிவானது) காஷ்டாம்- அதைக்காட்டிலும் உயர்த்தியை, கதம் - அடைந்தது.

(கருத்து) ஏ பாதுகையே! ஆதிசேஷன் பாதுகாரூபமாக இருந்து பெருமாளை முழுக்கத்தூக்குகிருர். அதனுல் பெருமாளைக் காட்டிலும் அவருக்குத் தணிவு ஏற்படுகிறது. அந்தத் தணி வைக் காட்டிலும் அந்தபாதுகையைப்பக்தியோடே எவர்கள் தலை யாலே தூக்குகிருர்களோ, அவர்கள் தணிவு ரொம்ப உயர்ந்தது. பெருமாளுக்குச் செய்கிறதைக்காட்டிலும் ஆழ்வார் முதலான பக்தர்களுக்குச் செய்கிறது ரொம்ப புண்ணியம். இதேமாதிரி கீழே போகப்போக உயர்ந்தது. (3)

(எருச) ஶாஸ்த்ரீயம் தவ விஷ்ணுபதஸ்ய நித்யம் விஶ்வம்பரஸ்ய வஹநாத்யதிதே தஶா ।
யத்தத்வமாஸ்யயா ஶ்ரீவாதுகே த்வம் ஶேஷாத்மநா வஹஸி ஶதீம் நிஜமேவ ஶந்த்யா ॥

ஹே மணிபாது³கே-பாராய்கல்லிழைத்தபாதுகையே! இயம்-இந்தபூமியானது, மயி - என்னிடத்தில், நிஷண்ணா-இருக்கிற, பத³ஸ்ய - திருவடியையுடைத்தாயிருக்கிற, விஶ்வம்ப⁴ரஸ்ய - எல்லா லோகத்தையும் தூக்குகிற பெருமாளுடைய, வஹநாத் - தூக்குகிறதினாலே, வ்யதி²தா - வருத்தப்பட்டதாக, மாஸ்ம பூ⁴த் - ஆகவேண்டாம், இதி - என்று, மத்வா - எண்ணி, த்வம் - நீ, ப³லேந - பலத்தினாலே, ஸமப்⁴யதி⁴கயா - ரொம்ப உயர்ந்ததான, ப²ணிபதிதநுர்⁴மா - ஆதிசேஷரூபமான, நிஜயா-தன்னுடையதான, மூர்த்யா - உருவத்தினாலேயே, வஸுமதீம் - பூமியை, த⁴த்ஸே - தூக்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ ஆதிசேஷனுடைய அவதாரமாக இருந்து எல்லா உலகத்தையும் தூக்குகிறபெருமாளைத் தூக்குகிறாய். உன்னை இந்த பூமி தூக்குகிறது. அதினால் பூமிக்கு ரொம்ப தொந்திரவு உண்டாம் என்று நினைத்து, நீயே ஆதிசேஷனென்கிற உன் உருவத்தாலே பூமியைப்பாதளலோகத்தில் தூக்குகிறாய்.

ஆழ்வார்முதலான ஆசாரியர்களின் தயைக்கு அளவுஇல்லை. அதாவது ஜீவன்கள் ஸௌக்கியத்தை அடையவேண்டுமென்ற தயையினாலே ஜீவன்களுக்கு பலவிதமான வேலையைச் செய்கிறார்கள். எந்த வேலைகளாலே ஜீவன்களுக்கு ஏதாவது வருத்தம் உண்டாகுமோவென்று நினைத்து அந்த வருத்தத்திற்கும் ஸமாதானம் செய்கிறார்கள். அதாவது ஆழ்வார் முட்டாள்களுக்கு உபதேசம் பண்ணும்போது முட்டாள்களே என்று சொன்னால் நாங்கள் முட்டாள்களாக இருக்கோமே என்று நினைத்து வருத்தப்படப் போகிறார்களே என்று அவர்களை "வம்மின் புலவீர்" என்று ஸாதிக்கிறார். வித்வான்களே வாருங்கள் என்று அதின் பொருள்.

(௭௫) தத்³ருʼஶா நிஜப³லேந நிர்மிதாம்
ஶ்ருதிஷ்வபி ப²ணீஶ்வரேஶ ஸா ஷ்வ: ।
ஶாரேண ஸதத்வபஸா யதா³ நகரோ ஷாபரம்
பொரஸம் பரா வஸுமதீம் ஸவதீ நியந்தா ॥

ஹே பாது³கே - பாராய் பாதுகையே! தத்³ருʼஶா - அப்படிப்பட்டதான, நிஜப³லேந - தன்னுடைய பலத்தினாலே

ப்ரஸித்த - ப்ரஸித்தமான, கீர்த்திஃ - கீர்த்தியையுடையவரான, ஸஷேஃ ஶேஷஃ - இந்த ஆதி சேஷனானவர், தவ - உன்னுடைய, பரிணாமவிஶேஷஸ்ய - ஒரு விதமான அவதாரம் தான், யத் - யாதொருகாரணத்தாலே, ஸத்யவ்ரதா - பொய் சொல்லாதவரான, ராமேண - ராமனாலே, அநந்யஸாத்யாம் - வேறொருவராலே தூக்கமுடியாமலிருக்கிற, வஸுமதீம் - பூமியை, வோடும் - தூக்குவதற்கு, வநம் - ராமன் காட்டுக்கு எழுந்தருளினபோது, ஸா த்வம் - நீயானவள், நியுக்தா - ஏவப்பட்டாயோ.

(கருத்து) ஏ பாதுகையே! நீ ஆதி சேஷனுடைய அவதாரமா ஆதிசேஷன் உன் அவதாரமா? அதாவது நீ உயர்த்தியா? ஆதிசேஷன் உயர்த்தியா என்று ஒரு ஸந்தேஹம். சில காரணங்களால் நீ தான் உயர்த்தியென்று ஏற்படுகிறது. ஏனென்றால், ஸ்ரீராமன் காட்டுக்கு எழுந்தருளினபோது, பூமிக்குத் தகுந்த ராஜா இல்லாத்தாலே ஸங்கடப்பட்டபோது அவர் உன்னைத்தானே ராஜாத்தியாக ஏற்படுத்தினார். ஆதிசேஷனை ஏற்படுத்தக் கூடாதா?

ஆழ்வாரை நித்யஸூரிகளுடைய அவதாரமாகச் சொல்லியிருக்கிறது. ஆனாலும் ஆழ்வார் நித்யஸூரிகளைக் காட்டிலும் உயர்ந்தவர். (5)

(எ௱௬) ஶேஷக்ஷ்வபீஶ நியதாம் ஶணிபாதரக்ஷே
க்ஷாமாமஶாஃ கலயந்தி தவ ஸாலபாதாஃ ।
த்வந்மூர்திபேதஶயிதஸ்ய பரஸ்ய பும்ஸஃ
பாதோபதாநஶயிதா ஶதமஜ்யாநயஸி ॥

ஹே ஶணிபாதரக்ஷே - வாராய் கல்லிழைத்தபாதுகையே, ஆமநாஃ - வேதங்கள், ஶேஷக்ஷ்வபீஶநியதாம் - பகவானிடத்தில் தணிவினுடைய எல்லையிலே தவராமலிருக்கிற, (அதாவது பகவான் விஷயத்திலே இதுமாதிரி இன்னொருவரால் தணியமுடியாது) த்வந்மூர்திபேத - ஆதிசேஷன் என்கிற உன்னுடைய ஒருவிதமான திருமேனியில், ஶயிதஸ்ய - படுத்துக்கொண்டிருக்கிற, பரஸ்ய பும்ஸஃ - உயர்ந்த புருஷனான பெருமானுடைய, உபதாநே - தலையணையிலே, ஶயிதாம்-படுத்துக்கொண்

டிருக்கிற, த்வாம் - உன்னை, பாலகா: ஶ்ருதீநாம்-கைக்குழந்தைகள், ஶ்ருதய: பதிவ்ரதேவ - பதிவிரதையான தாயாரைப்போல, உப தாநயந்தி - தலையணையாகப் பண்ணுகின்றன. அதாவது உன் பேரிலிருக்கின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னுடைய ஒருவித உருவமான ஆதிசேஷன்பேரில் பெருமாள் சயனித்துக்கொண்டிருக்கிறார். அப்போது அவருடைய திருவடித்தலைபணையில் நீ இருக்கிறாய். உன்னிடத்தில் ஸகல வேதங்களும் நல்லபதிவிருதையான தாயாரிடத்தில் கைக்குழந்தைகளிருப்பது போல் இருக்கின்றன. அதாவது-அந்த வேதங்களை நீதான் காப்பாற்றுகிறாய்.

ஆழ்வார் பிரபந்தம் எழுதாதபோனால் வேதங்களின் உண்மையான அர்த்தம் ஒருவருக்கும் தெரியாது. வேதங்களின் உண்மையான அர்த்தம் வெளிவராதவரையில், வேதங்கள்செத்ததுபோல. தகப்பனுக்கு உதவக்கூடிய தசையில் உதவாதபிள்ளைகள் செத்ததுபோல. பதிவிருதை குழந்தைகளைக் காப்பாற்றுவது பர்த்தாவின் பலத்தினால். அதுபோல ஆழ்வார் வேதங்களில் உண்மையான அர்த்தங்களை அறிந்தது பகவானுடைய பலத்தினாலே

(௭௱௭) பரதஶிரஸி ரூடாம் பாதுகே உபாரதஸ்த்வாம்
ஸ்வதநாவபி வவந்தே லக்ஷ்மணஶ்ஶேஷபூத: ।
கிமிஹ கிமிதம் சித்ரம் நித்யயுக்தஸ்ஸிஷேவே
தஶரததநயஸ்ஸந் ரங்கநாத: ஸ்வமேவ ॥

ஹே பாதுகே-வாராய் பாதுகையே! ஶேஷபூத:- (பெருமைப்படுத்துகிறவராய்) ஆதிசேஷனுடைய அவதாரமாய் இருக்கிற, லக்ஷ்மண: - லக்ஷ்மணனனவர், பரதஶிரஸி - பரதனுடைய தலையிலே, ரூடாம் - சேர்ந்திருக்கிற, த்வாம் - உன்னை, ஸ்வதநாவபி - தன்னுடைய உருவமாயிருந்தாலும், உபாரத:- தூரத்திலேயே, வவந்தே - ஸேவித்தார். இஹ - இந்த லோகத்திலே, இதம் - இதானது, கிம் சித்ரம் - என்ன ஆச்சர்யம்! நித்யயுக்த: - ரொம்ப ஜாக்கிரதையுள்ளவராயிருக்கிற, ரங்கநாத: - ரங்கநாதனனவர், தஶரததநயஸ்ஸந் - தசரதருக்குப் பிள்ளையாயிருந்துகொண்டு, ஸ்வமேவ - தன்னையே, ஸிஷேவே- ஸேவித்தாரே.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீராமன் காட்டிலிருந்து திரும்பி எழுந்தருளும்போது பரதர் உன்னைத் தலையில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு எதிர்கொண்டு வந்தார். அப்போது லக்ஷ்மணர் பரதருடைய தலையிலிருக்கிற உன்னைப்பார்த்து ரொம்ப தூரத்திலேயே நீ அவருடைய உருவமாக இருக்கச்செய்தேயும் உன்னை ஸேவித்தார் இது என்ன ஆச்சரியம். ஸ்ரீரங்கநாதனே தசரதருக்குப் பிள்ளையான ராமனாக இருந்து தன்னையே ஸேவித்தாரே.

பெருமாளும்நித்யஸூரிகளும் உலகத்தில்அவதரித்தால்சாஸ்திரத்திற்கு உட்பட்ட ஜனங்கள் போல செய்யவேண்டியகாரியங்களைச்செய்தும் தள்ளவேண்டியதைத்தள்ளியும் நடத்துகிறார்கள் உலகத்தாருக்கு அந்த ஸங்கதியைக்காட்டிக்கொடுப்பதற்காக. (7)

(௭௱௮) ஸக்ருதஸக்ருத் விகூர்ணமாநே யஸ்ய ஸங்கல்ப
ஸிந்தௌ ப்ரஹ்மேஶாநப்ரப்ருதய இமே புத்பு
த்வம் பஜந்தி । தஸ்யாஜாதே: ப்ரலயஸமயே லோக
சிந்தாநித்ராநுரூபம் க்ரீடாதல்பம் கிமபி த
நுதே பாதுகே ஸூதிகாऽந்யா ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! அந்யா - வேறு யிருக்கிற, ஸூதிகா - உன்னுடைய அவதாரமான ஆல இலையானது, இமே - இந்த, ப்ரஹ்மேஶாநப்ரப்ருதய: - பிரும்மா சிவன் முதலானவர்கள், ஸக்ருதஸக்ருத் - அடிக்கடி, விகூர்ணமாநே - அசங்காமலும் அசங்கிக்கொண்டுமிருக்கிற, யஸ்ய - யாதொரு பெருமாளுடைய, ஸங்கல்ப - நினைவாகிற, ஸிந்தௌ - சமுத்திரத்திலே, புத்புதத்வம் - நீர்க்கொப்பளமாக இருக்குகையை, பஜந்தி - அடைகிறார்களோ, அஜாதே: - பிறப்பில்லாமலிருக்கிற, தஸ்ய - அந்த பெருமாளுக்கு, ப்ரலயஸமயே - பிரளய காலத்திலே, லோக - உலகங்களைப்பற்றி நினைக்கிறதாகிற, நித்ரா - தூக்கத்திற்கு, அநுரூபம் - தகுந்த, கிமபி - இன்னதென்று சொல்லமுடியாத, க்ரீடாதல்பம் - விளையாட்டுப் படுக்கையை, தநுதே - பண்ணுகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாளுடைய நினைவாகிற ஸமுத்ரம் ஒரு ஸமயம் அசங்குகிறது. ஒருஸமயம் அசங்காமல்

இருக்கிறது. அதாவது— பிர்ம்மலோகம் வரையிலுள்ள லோகங்களை ஒரு ஸமயம் உண்டுபண்ணுகிறார். ஒரு ஸமயம் ஒன்றுமில்லாமல் பண்ணிவிடுகிறார். அசங்குகிறபோது அதாவது உண்டுபண்ணுகிறபோது இந்த உலகத்திற்குள் ரொம்ப உயர்ந்தவர்களான பிர்ம்மா சிவன் முதலானவர்கள் ஒரு பெரியஸமுத்திரத்தில் கொப்பளாம்போலிருக்கிறார்கள். அப்பேர்ப்பட்ட பெருமாளுக்கு பிரளய காலத்திலே அதாவது உலகங்களையெல்லாம் அழித்தகாலத்திலே, நீ ஆலிலைஉருவமாகஇருந்து இன்பமானபடுக்கையாகவிருக்கிறாய்.

(௭௫௧) அஹீநாதா ரங்கக்ஷிதிரமணபாதாவநி ஸதா
ஸதாமிஷ்டம் த்ராணாஸக்த்யா ப்ரதிதநிஜஸத்த்வவிபவா ।
ஸுவித்யாயாமிந்யா: ஸ்ப்ருஶஸி பதவீமேகாஹவஹநீம்
க்ரதூநாமாராத்யா க்ரதுரபி ச ஸர்வத்வமஸி ந: ॥

ஹே ரங்கக்ஷிதிரமணபாதாவநி- ஸ்ரீரங்கநாதனுடைய, பாதாவநி-வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! அஹீநா- ஆதிசேஷனுடைய அவதாரமாக இருக்கிற, (அஹீநம் என்கிற யாகஸ்வரூபமாயும்) ஸதா-எப்பொழுதும், ஸதாம் - பெரியோர்களை, இஷ்டம் - இந்தமாதிரி, த்ராணாஸக்த்யா - காப்பாற்றுகிறதிலுலே, ப்ரதித - பிரஸித்தமான, நிஜ - தன்னுடையதான, ஸத்த்வ - ஸத்துக்களைக் காப்பாற்றுகிறதாகிற, (ஸத்ரயாகமாக இருக்குகையாகிற,) விபவ-பெருமையை உடைத்தாயிருக்கிற, த்வம் - நீ, ந: - எங்களுடைய, ஸுவித்யா யாமிந்யா: - நல்ல ஸங்கதியை அறியாமையாகிற ராத்திரிக்கு, ஏகாஹ - ஒரே பகலினுடைய, (ஏகாஹம் என்கிற யாகத்தினுடைய) பதவீம்-வழியை, அதாவது பகல்போல் இருக்குகையை, ஸ்ப்ருஶஸி - தொடுகிறாய். அதாவது அடைகிறாய். க்ரதூநாம் - எல்லா யாகங்களாலேயும், ஆராத்யா - ஸந்தோஷப் படுத்தத்தகுந்தவளாயும், ஸர்வ: க்ரதுரபி - எல்லாயாகங்களாகவும், அஸி- ஆகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ ஆதிசேஷனுடைய அவதாரம். உலகத்தில் எல்லா ஸாதுக்களையும் காப்பாற்றுகிறாய் என்று பிரஸித்தியை அடைந்திருக்கிறாய். உலகத்திற்கு நல்ல ஸங்கதியை

அறியாமையாகிற ராத்ரிக்கு ஒரே பகலாயிருக்கிறாய். அதாவது- எல்லாஜனங்களுக்கும் நல்ல ஸங்கதிகளை மறவாமல் தெரிவிக்கிறாய். எல்லா யாகங்களையும் உன்னுடைய ப்ரீதிக்காகத்தான் எல்லா ஜனங்களும் செய்கிறார்கள். நீயே எல்லா யாகங்களாயும் இருக்கிறாய். சாஸ்திரங்களில் யாகங்கள் 'ஏகாஹம்' என்றும் 'அஹீநம்' என்றும் 'ஸத்ரம்' என்றும் பலவிதமாகச்சொல்லப்பட்டிருக்கிறது. 'அஹீநம்' முதலான சொற்களுக்கு இரண்டுவிதமான பொருள் இருக்கிறது ஒரு பொருளைக்கொண்டு பாதுகையை யாகமாக இருக்கிறதாக சொல்லியிருக்கிறது. அதாவது- 'அஹீநம்' என்கிற சொல்லுக்கு ஆதிசேஷன் என்றும், 'அஹீநம்' என்கிற யாகம் என்றும் பொருள்.

ஆழ்வார் முதலான ஆசார்யர்கள் அறிவு பக்தி முதலான உயர்ந்த நல்ல குணங்களை அடைந்து உலகத்தில் நல்ல ஜனங்களுக்கு நல்ல ஸங்கதிகளைச் சொல்லிக் கொடுப்பதாலும், தங்களுடைய உயர்ந்த நடவடிக்கைகளாலும் ஜனங்களுக்கு இருக்கும் அக்ஞானத்தை மறுபடியும் வாராமல் போக்கிக் காப்பாற்றுகிறார்கள். உலகத்தில் ஜனங்கள் எந்த நல்ல ஸங்கதிகளைச் செய்கிறதும் அவர்களுடைய ஸந்தோஷத்திற்குத்தான். (9)

(எகூ௦) ப3ஹுவித4மக2ஸங்க3தைர்நிரூட்4யா வி
ஶாக2யூபபதை3: ஶேஷாத்மிகா பாதா3வனி நிஷே
வ்யஸே ஶேஷஸத்ரதைஸ்த்வம் ॥

இதி கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
ஶேஷபத்3ததிஸ்த்ரயோவிம்ஶதி: ॥

ஹே பாதா3வனி-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! ஶேஷாத்மிகா-ஆதிசேஷனுடைய அவதாரமாக இருக்கிற, த்வம்- நீ, ப3ஹுவித4மக2ஸங்க3தை:- ப3ஹுவித4- அனேகவிதமான, மக2 - யாகங்களோடு, ஸங்க3தை: - சேர்ந்தவர்களாயும், (அனேகம் தலைகளை உடைத்தான உடலோடு சேர்ந்ததாயும்,) நிரூட்4யா - எல்லாகர்மங்களாலும் விடு

பட்டத்திலுலே, விஶாகம் - ஒருவிதமான குற்றமும் இல்லாமை யை, க்ருபஷெணுஃ-அடைந்தவைகளும், (நிர்மோக தயா-தோல் உரித்ததிலுலே, விஶாகம் - வெளுப்பை, க்ருபஷெணுஃ - அடைந் தவைகளுமான) ஶேஷஹ ஷெஷைஃ-பெருமாளுடைய வேலைக்காரர் களாலே, (பாம்புகளாலே) நிஷெவ்யஸெ - ஸேவிக்கப்படுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! ஆதிசேஷனுடைய அவதாரமாக இருந்து எப்பொழுதும் பகவானுக்கு வேலைசெய்கிற உன்னை இந்த லோகத்தில் இருக்கும் பகவத்பக்தர்களும், மோக்ஷத்தை அடைந் தவர்களும் நித்யஸூரிகளும் எல்லாரும் உன்னைக் கொண்டாடு கிறார்கள். ஆழ்வாரை கீழ்ச்சொன்ன எல்லாரும் கொண்டாடு கிறார்கள். (10)

---

இருபத்திமூன்றுவதான சேஷபத்ததி முற்றிற்று.

---

ஸ்ரீரங்கநாயகிவ்யமணிபாதுகாஸ்யாம் நமஃ ||

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நமஃ ||

---





ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ||

ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே

சதுர்விம்ஶதி: யுக்மபத்ததி: ||



(எ௨௧) உபாயே பாதுகாரூபம் ப்ரணவஸ்ய கலாத்வயம் | ஓதம் விததம் யஸ்மிந்நநந்தஸ்யாபி த
த்பதம் || (௧)

பாதுகாரூபம்-பாதுகாரூபமாக இருக்கிற, ப்ரணவஸ்ய-ப்ரணவத்தினுடைய, ஓதம்-'ஓ' என்கிற, கலாத்வயம் 'அ' 'உ'-என்கிற இரண்டு பாகத்தை, உபாயே-உபாயமாக நம்புகிறேன். யஸ்மிந்-யாதொரு இரண்டு பாதுகைகளிலே, (யாதொரு 'ஓ' என்கிற இரண்டு எழுத்திலே,) அநந்தஸ்யாபி-அளவில்லாதவராயிருக்கிறபெருமாளுடையவும், தத்-ப்ரஸித்தமான, இதம்-இந்த, பதம்-திருவடியானது, (ப்ரணவம் என்ற பதமானது) விததம்-அளக்கப்பட்டிருக்கிறதோ, ('ஓ' என்கிற எழுத்தோடே சேர்ந்திருக்கிறதோ)

(கருத்து) இந்த பத்ததியில் பாதுகைகள் எப்பொழுதும் பிரியாமல் இரண்டாகவே இருப்பதைப்பற்றி வர்ணிக்கிறார். இந்த இரண்டையும் பார்க்கும்போது ப்ரணவத்தினுடைய 'அ, உ' என்கிற இரண்டு எழுத்துக்களும் சேர்ந்த 'ஓ' என்கிற எழுத்துப் போலிருக்கிறது. அந்த இரண்டையே நம்புகிறேன்.

பெருமாளுக்கு அநந்தன் என்று பெயர். அதாவது இடம் காலம் வஸ்துக்கள் என்கிற மூன்றிலும் அளவில்லாதவர்என்று. அப்பேர்ப்பட்ட பெருமாளுடைய அளவில்லாத திருவடி பாதுகைகளால் அளக்கப்பட்டிருக்கிறது. 'ஓ' என்கிற எழுத்தானது 'அ, 'உ' என்கிற இரண்டு எழுத்துக்களையும்விட்டு எப்படிப்பிரியாதோ, 'அ' என்கிற எழுத்துக்குப்பொருளான பெருமாளும் 'உ' என்கிற எழுத்துக்குப்பொருளானதாயாரும் எப்படிப்பிரியமாட்டார்களோ

அதுபோல இந்தப்பாதுகைகளும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிகிற தில்லை. அந்த இரண்டு எழுத்துக்களும் எப்படி கீழ்ச்சொன்ன பொருள்களைவிட்டுப்பிரியாதோ அதுபோல் திருவடிகளைவிட்டுப் பிரிகிறதில்லை. அந்த இரண்டு பொருள்களும் (பெருமாளும்தாயா ரும்) எப்படி ஒன்றேடொன்று பிரியாமல் இருந்து உலகத்தைக் காப்பாற்றுகிறார்களோ, அப்படியே இந்த இரண்டு பாதுகைகளும் ஒன்றேடொன்றும் பெருமாளுடைய திருவடிகளையும் விட்டுப் பிரியாமல் உலகத்தைக்காப்பாற்றுகின்றன. பாதுகையைப் பிடித் தவன் பெருமாளுடைய திருவடியைப் பிடித்தவன்தான். 'ஓ' என் கிற எழுத்து 'ம்' என்கிற எழுத்தோடு சேர்ந்தால் அது பெருமா ளுக்குப்பெயரான ப்ரணவமாகிறது. ப்ரணவத்தில் எப்பொழுதும் 'ஓ' என்கிற எழுத்து 'ம்' என்கிற எழுத்தோடு சேர்ந்தே இருக்கி றது. 'ஓ' என்கிற எழுத்தின் பொருளான பெருமாளும் தாயா ரும் 'ம்' என்கிற எழுத்தின் பொருளான ஜீவனோடு சேர்ந்தே இருக்கிறார்கள். அவனைக் காப்பாற்றிக்கொண்டேயிருக்கிறார்கள். அதுபோல் 'ஓ' என்கிற எழுத்தைப்போன்ற பாதுகைகள் திருவடி களோடு சேர்ந்தும் அவைகளைக் காப்பாற்றிக் கொண்டும் இருக்கின்றன. ஆழ்வார்முதலான ஸ்ரீஆசார்யாளும் பெருமா ளும் ஒருவருக்கொருவர் பிரியாமலிருப்பதினால் ஆசார்யாளை அடைந்தவன் பெருமாளை அடைந்தவன்தான். பெருமாள் ஆசார் யாளுக்குள் அடங்கியிருக்கிறார். அதாவது ஸ்வாதீனமாயிருக்கிறார்.

(௭௱௨) மணிபாதுகயோர்யுகம் முராரேஸ்ஸஹஜம் நித்யம்
விஷயாந்தரஸங்கமாநி | அபிலக்ஷ்ய சராசரஸ்ய
ரக்ஷாம் தயாக்ஷமயோரிவாவதாரௌ ||

சராசரஸ்ய, சர-அசைகிறவைகளென்ன, அசர-அசையாத தான மரம் முதலானவைகளென்ன இந்த இருவகையான உல கத்தினுடைய, ரக்ஷாம்-காப்பாற்றுதலை, அபிலக்ஷ்ய-உத்தே சித்து, (அதாவது காப்பாற்றுவதற்காக) தயா-தயை என்ன, க்ஷமயோ:-பொறுமையென்ன இவைகளுடைய, அவதா ரௌ-பிறப்புப்போலிருக்கிற, (இவை இரண்டும் உருவம் எடுத்து வந்ததுபோலிருக்கிற) முராரே:-பெருமாளுடைய, மணிபா துகயோ:-கல்லிழைத்த பாதுகைகளுடைய, யுகம்-இரண்டா

ணது, மே-எனக்கு, நித்யம்-எப்பொழுதும், இஹாமுத்ர-இந்த லோகத்திலும் வேறு லோகத்திலும் க்ஷேமங்களை, விதாதும் பண்ணவேணும்.

(கருத்து) உலகத்தைக் காப்பாற்றுவதற்கு தயை, பொறுமை இந்த இரண்டும் வேணும். இந்த இரண்டும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது. பெருமாளுடைய இந்த இரண்டும் வடிவெடுத்துவந்தது போலிருக்கிறது இந்த இரண்டு பாதுகைகள். இவைகள் எனக்கு இந்த லோகத்தில் குறைவில்லாத அளவற்ற உயர்ந்த ஸுகங்களையும் மோக்ஷஸுகத்தையும் கொடுக்கவேணும். ஆழ்வார் முதலான ஆசார்யர்கள் தயை, பொறுமை இவையிரண்டும் வடிவு எடுத்துவந்ததுபோல் இருக்கிறார்கள். தயை என்பது ஒரு ஜீவன் வருத்தப்படுகிறபோது இன்னொருவனுக்கு காசுமுதலான ப்ரயோஜனத்தில் ஆசையில்லாமல் அந்த வருத்தத்தைப் போக்கவேணும் என்கிற நினைவு. இந்த நினைவு கையால் ஆகாதவனுக்கு உண்டானால் அது துக்கரூபமாக ஆகும். வருத்தத்தைப் போக்கவல்லவனுக்கு துக்கத்தைக் கொடுக்காது. ஜீவன்கள் துக்கப்படும்போது பெருமாள் துக்கப்படுகிறார் என்று சிலர் சொல்லுகிறார்கள். எல்லாவற்றையும் அறிந்து எல்லாவற்றையும் நினைத்தபடி செய்யக்கூடிய பெருமாளுக்கு துக்கம் எப்படி வரும்? யாரும் இதைக் கவனிக்கவேணும். (2)

(எசாரு) சரணௌ ப்ரணிபாத்ய பாதுகே ஶௌரே:

ப்ரணதாநாம் பரிரக்ஷணம் ப்ரபந்நௌ ।

விபதாமிஹ தைவமாநுஷீணாம்

ப்ரதிகாரம் பவதோர்த்வயம் ப்ரதீம: ॥

ஹே பாதுகே - வாராய் கல்லிழைத்தபாதுகைகளே! ப்ரணதாநாம்-வணங்கினவர்களை, பரிரக்ஷணம்-காப்பாற்றுகிறதற்கு, ஶௌரே:-பெருமாளுடைய, சரணௌ-திருவடிகளை, ப்ரபந்நௌ-அடைந்திருக்கிற, பவதோ:-உங்களுடைய, த்வயம்-இரண்டை, இஹ-இந்த லோகத்திலே, தைவமாநுஷீணாம்-தைவத்தினாலும் மனுஷ்யாளாலும் ஏற்படுகிற, விபதாம்-ஆபத்துக்களுக்கு, ப்ரதிகாரம்-ஸமாதானம் பண்ணுகிறதாக, ப்ரதீம:-நினைக்கிறோம்.

(கருத்து) ஓ பாதுகைகளே! நீங்கள் இரட்டையாகஇருப்பதைப் பார்த்தால், லோகத்தாருக்கு ஆபத்துக்கள் தைவத்தினாலும் மனுஷியாளாலும் ஏற்படுகிறது. அந்த இரண்டையும் போக்குவதற்காக நீங்கள் இரண்டுபேர்களாக இருந்து பெருமாளுடைய இரண்டு திருவடிகளையும் அடைந்திருக்காப்போலிருக்கிறது.

நல்ல ஆசார்யர்களை அடைந்தவர்களுக்கு தைவத்தினாலும் தொந்தரவில்லை, மனுஷ்யாளாலும் தொந்தரவில்லை. (3)

எகூச) முரபிந்மணிபாதுகே பவத்யோ
விஹிதோ நூநமஸௌ மிதோ விபாக: |
ஸஜதாமஸௌஹ்ருத்யாநா
மவிரோதாய ஸுராஸுரேஶ்வராணாம் ||

முரபித:-முரன் என்கிற அஸுரனைக்கொன்ற பெருமாளுடைய, மணிபாதுகே-வாராய் கல்லிழைத்தபாதுகைகளே! பவத்யோ: உங்களுக்கு, அஸௌ-இந்த, மிதஃ-ஒருவர்க்கொருவர், விபாகஃ-பிரிவானது, ஸஜதாம்-பெருமாளிடத்தில் பக்தி பண்ணி நின்றிருக்கிற, அஸௌஹ்ருத்யாநாம்-ஒருவர்க்கொருவர் ப்ரீதி இல்லாமலிருக்கிற, ஸுராஸுரேஶ்வராணாம்-உயர்ந்ததேவதைகளுக்கும், உயர்ந்த அஸுரர்களுக்கும், அவிரோதாய-சண்டையில்லாமலிருப்பதற்காக, விஹித:-ஏற்படுத்தப்பட்டது.

(கருத்து) ஓ பாதுகைகளே! நீங்கள்இரண்டாகஇருப்பதைப் பார்த்தால், தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் ஒருவருக்கொருவர் பலமான சண்டை. இரண்டுபேர்களும் பெருமாளிடத்தில் பக்திபண்ணுகிறார்கள், அவர்களுக்கு உங்கள்விஷயத்திலும் சண்டை வராமலிருப்பதற்காகப்பெருமாள் உங்களை இரண்டாக ஏற்படுத்தியிருக்கிறார் போலிருக்கிறது. (4)

(எகூரு) ஶமிதோந்நயநாய ஸம்ஶ்ரிதாநாமுபசாரோக்த
புநருக்தயேத வா | கரயோர்த்வ ரதாங்கசங்க
ஜந்மா மதுஹந்து: பதயோர்த்வ பாதுகே வ ||

மதுஹந்து:-மது என்கிற அஸுரனைக்கொன்ற பெருமாளுடைய, கரயோ:-இரண்டு திருக்கைகளிலிருக்கிற, ரதாங்-

சக்கரமென்ன, வாஞ்ஜநளவ-சங்கமென்ன இந்த இரண்டும், வடியொ:-திருவடிகளிலே இருக்கிற, வெ வாதுகெவ-பிரஸித்தமான பாதுகைகளும், ஆலொகவெஜந-தங்களைப்பார்த்த மாத்திரத்தினாலே, தங்களுடைய ப்ரகாசமாத்திரத்தினாலே, ஶவெதாவா-தங்களுடைய பெயர்களாலேயும் (சங்கினாலும்பாதுகைகளாலும் உண்டாகிறசப்தத்தினாலும்) ஸாஸ்ரீ தாநாம், தன்னை அடைந்தவர்களுடைய, ஊஹிதொநநாய-கஷ்டங்களை அடியோடு போக்குவதற்கு, ஊலம்-போதுமானவை.

(கருத்து) பெருமாள் தன்னையடைந்தவர்களுடைய ஆபத்தைப்போக்குவதற்கு திருக்கைகளில் சங்கம் சக்ரம் இரண்டையும் வைத்துக்கொண்டிருக்கிறார், திருவடிகளில்இரண்டுபாதுகைகளைச் சாத்திக்கொண்டிருக்கிறார். சங்கசக்ரங்களைப்பார்ப்பதினாலும்சக்ரத்தினுடைய பிரகாசத்தினாலும் சங்கத்தினுடைய சப்தத்தினாலும் எல்லா உலகங்களுக்கும் எல்லா கஷ்டங்களும் அடியோடுபோய் விடுகின்றன. அப்படியே பாதுகைகளை ஸேவிக்கிறதினாலும், பாதுகைகளுடைய சப்தத்தினாலும் கஷ்டங்கள் போகின்றன. ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யாளை ஸேவிக்கிறதினாலும் அவர்களின் உபதேசத்தினாலும்எல்லாருக்கும் எல்லாஆபத்துகளும்போகின்றன

(எசுஅ) ஊவயீரித வாயவஜநா

ஊலவாநாம் மயுவெவரிவாதுகெ வெ ।

ஐதரெதரவாஹவயம்

ஆதிவெ ஐவ வெஜவெளாவெஷ நஃ ॥

வெ மயுவெவரிவாதுகெ-மது என்கிற அசுரனுக்குத் துவேஷியாயிருக்கிற பெருமாளுடைய இரண்டுபாதுகைகளும் ஊவயீரித-அலக்ஷ்யம் பண்ணப்பட்டிருக்கிற, ஸாய-பெரியவர்களுடைய, வஜநாம்-வழிகளை, (செய்கைகளை) உடையதாயும் ஊலவாநாம்-சோம்பேரிகளாயுமிருக்கிற, நஃ-எங்களுக்கு, ஐதரெதரவாஹவயம்-ஒன்றுக்கொன்றுதுணையாக இருக்கையை, ஆதிவெ-அடைந்திருக்கிற, (அதாவது சேர்ந்திருக்கிற) வெஜவ-தைவத்தினுடைய வேலை என்ன, வெளாவெஷ ஐவ, மனுஷ்யனுடைய வேலையென்ன, இவைகள் போலிருக்கின்றன.

(கருத்து) உலகத்தில் ஒரு காரியம் நடக்கிறதற்கு தைவ ஸஹாயம் மனுஷ்யயத்நம் இரண்டும் வேணும், உலகத்தில் நம்மை போலொத்தவர்கள் தைவமென்று பேசுகிறோமேயொழிய தைவம் இருக்கிறது என்றும், அநுக்ரஹ என்றும், அதை மீறினால் தண்டனை என்றும் எண்ணமேயில்லை. அதனால் நாம் ஆரம்பிக்கிற காரியத்துக்கு தைவம் ஒத்தாசை பண்ணாது. அதுவும்தவிர சோம்பலினால் நாம் ஒரு காரியத்தை ஆரம்பிக்கிறதுமில்லை. இந்த இரண்டினாலும் நாம் ஒரு சுகத்தையடையாமலிருக்கிறோம். உங்களிரண்டுபேரையும் பார்க்கும்போது எங்களுடைய க்ஷேமத்திற்காக தைவம் செய்யவேண்டிய வேலையும் மனுஷ்யன் செய்ய வேண்டிய வேலையும் இரண்டும் உருவமெடுத்துவந்ததுபோல் இருக்கிறது.

ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்கள் உலகத்தின் க்ஷேமத்திற்காக ஜநங்கள் செய்யவேண்டிய வேலைகளைத்தாங்களே செய்து அதற்கொத்தாசையான வேலைகளையும் தைவத்தையும் செய்துவித்து காப்பாற்றுகிறார்கள். ஸீதையைத் தொந்தரவுபண்ணின ராக்ஷஸிகளுக்கு த்ரிஜடை செய்ததுபோல. (6)

(எகூஎ) பார்ஶ்வயோஸ்ஸரஸிஜாவஸுந்தரே பாதயோஶ்ச
மணிபாதுகே யுவாம் । ஸந்நிக்ருஷ்யேத ந சேத்
மதுவித்விஷ: கிங்கரிஷ்யதி க்ருதாகஸாம் கண: ॥

ஹே மணிபாதுகே-கல்லிழைத்தபாதுகையே! மதுவித்விஷ:-மது என்கிற அசுரனுக்குச்சத்துருவாயிருக்கிற பெருமாளுடைய, பார்ஶ்வயோ:-இரண்டு பாகங்களிலும், ஸரஸிஜா-மஹாலக்ஷ்மியென்ன, வஸுந்தரா-பூதேவி என்ன இந்த இரண்டு பேர்களும், பாதயோ:-இரண்டு திருவடிகளில், யுவாம்-நீங்களிரண்டு பேர்களும், ந ஸந்நிக்ருஷ்யேத சேத்-இராமல்போனால், க்ருத-பண்ணப்பட்டிருக்கிற, ஆகஸாம்-குற்றத்தையுடைத்தானவர்களுடைய, (அதாவது குற்றம்செய்தவர்களுடைய,) கண:-கூட்டமானது, கிங்கரிஷ்யதி-என்னசெய்யும்

(கருத்து) சாஸ்திரங்களில் உடம்புகளில் அழியாத ஜீவன் என்று ஒன்றும், அதற்கு யஜமானனைதைவம் என்று ஒன்றும்

அதின் உத்தரவு என்றும் அந்த உத்தரவுபடி நடந்தால் ஸ்வர்கம், மீறிநடந்தால் தண்டனை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. நாம் நெடுநாளாய் குற்றவாளிகளாயிருக்கிறோம். ஒரு ஸமயத்தில் நாம் குற்றங்களைப்பண்ணி தண்டனைக்குபயந்து அந்த தைவத்தினிடம் (பெருமாள்) போகப்போனால் எல்லையில்லாத தயை உள்ளவனாலும் பொருக்கமுடியாத குற்றங்களைப்பண்ணியிருப்பதால் அந்த தைவத்துக்கு நம்மைக்கண்டவுடனே ரொம்ப கோபம் வருகிறது. அந்த ஸமயத்தில் பக்கங்களிலிருக்கிற மஹாலெக்ஷ்மியும் பூதேவியும் திருவடிகளிலிருக்கிற நீங்களும் அந்த கோபத்தை ஸமாதாநம் பண்ணி சிபார்சுபண்ணிக் காப்பாற்றுகிறீர்கள். நீங்களில்லாவிட்டால் அந்தக்குற்றவாளி எப்படிப்பிழைப்பன்? நல்ல ஆசார்யர்கள் குற்றவாளிகளைப் பெருமாளிடம் சேர்க்கும்போது தாயார்கள் சிபார்சுபண்ணி கோபத்தைப்போக்கி தாயாரும் பெருமாளும் மோக்ஷத்தைக் கொடுக்கிறார்கள். (7)

(௭௯௮) பாதுகே பவபயப்ரதீபயோர் பாவயாமி யுவயோஸ் ஸஹசாரிதாம் ।
ஸக்தயோர் தநுஜவைரிண: பதே வித்யயோரிவ பராபராத்மநோ: ॥

ஹே பாதுகே-ஓ பாதுகைகளே! பவபய-ஸம்ஸாரத்தினால் உண்டாகிற பயத்துக்கு, ப்ரதீபயோ:-சத்துருவாயிருக்கிற, தநுஜவைரிண:-அசுரர்களுக்குச் சத்துருவாயிருக்கிற பெருமாளுடைய, பதே-திருவடியில், (ஸ்வரூபத்தில்) ஸக்தயோ:-சேர்ந்திருக்கிற, யுவயோ:-உங்களுடைய, ஸஹசாரிதாம்-சேர்க்கையை, பராபராத்மநோ: வித்யயோ:-பரையென்னும், அபரையென்னும் சொல்லப்பட்ட இரண்டு வித்யைகளுடைய, ஸஹசாரிதாமிவ-சேர்க்கையைப் போலே, பாவயாமி-நினைக்கிறேன்.

(கருத்து) சாஸ்திரங்களைக்கொண்டு பகவானையும் அவனையடைவதற்காகச் செய்யவேண்டிய காரியங்களையும்பற்றித்தீர்மானிப்பதற்கு அபரவித்தை என்றுபெயர். பகவானுடையத்யானத்துக்குப் பரவித்தையென்று பெயர். உங்களிரண்டுபேர்களையும் பார்க்கும் போது அந்தஇரண்டு வித்தைகள்போலிருக்கின்றன. ஆசார்யர்கள் கீழ்ச்சொன்னஇரண்டுவித்தைகள்போலிருக்கிறார்கள். வித்தைஎன்றால் அறிவு. ஒருவன் சாஸ்திரங்களைக்கொண்டு அறியவேண்டிய

ஸங்கதிகளையறிந்து பகவானைத்தியானம் செய்தோ அல்லது ப்ரபத்திசெய்தோ (கெஞ்சிக்கேட்டுக்கொண்டோ) மோக்ஷத்தை அடைகிறான். இந்த ஸங்கதிகளைத்தன்னால் செய்யமுடியாவிட்டால் இவனுக்காக நல்ல ஆசார்யர்கள் ப்ரபத்திபண்ணினால் இவனுக்கு மோக்ஷம் கிடைக்கிறது என்று சொல்லியிருக்கிறது. ஆசாரியர்கள் அந்த வித்தைபோலிருக்கிறார்கள். வித்தையினால் மோக்ஷம் உண்டாகிறது. ஆசார்யர்களாலும் மோக்ஷமுண்டாகிறது.

(௭௫௧) ரங்கஸீம்நி ரதாங்கலக்ஷணப்ருதோ விதர்கயாமி தபநீய
பாதுகே | ஶாபதோஷஶமநாய தத்பதே சக்ர
வாகமிதுநம் க்ருதாஸ்பதம் ||

ரங்கஸீம்நி-ரங்கவிமானத்திலிருக்கிற, ரதாங்க-சக்கிரத்தை லக்ஷண:-அடையாளமாகவுடைத்தானபெருமாளுடைய, தபநீயபாதுகே-தங்கமயமான பாதுகைகளே, ஶாபதோஷ-சாபத்தினால் வந்தகெடுதியை, ஶமநாய-போக்கடிப்பதையும்பொருட்டு தத்பதே-அந்தபெருமாளுடைய திருவடியில், க்ருத-பண்ணப்பட்டிருக்கிற, ஆஸ்பதம்-இருப்பை உடைத்தாயிருக்கிற, சக்ரவாகமிதுநம்-ஆணும் பெண்ணுமான இரண்டு சக்கரவாகபக்ஷிகளை, போல, விதர்கயாமி-நினைக்கிறேன்.

(கருத்து) பெருமாள் ராமாவதாரம் பண்ணும்போது ஸீதையைவிட்டுப் பிரிந்த ஸமயத்தில் அந்த துக்கம் தாங்கமாட்டாமல் சில வஸ்துக்களைச் சபித்தாராம். அதாவது சக்கிரவாகம் என்கிற பக்ஷிகளுக்கு ராத்திரியில் ஆணுக்கும் பெண்ணுக்கும் சேர்க்கை வேண்டாமென்றும், குயிலைத்தன்தாய் வளர்க்கவேண்டாமென்றும், சம்பகபுஷ்பத்தை வண்டு தொடக்கூடாதென்றும், சந்தனமரத்தில்பாம்புகுடியிருக்கவேண்டுமென்றும், காற்றைப்பாம்பு சாப்பிடவேணுமென்றும், சந்திரனுக்கு நடுவில் கருப்பு இருக்கவேணும் என்றும் சபித்தாராம். பெருமாள் திருவடிகளில் நீங்களிரண்டு பேரும் சேர்ந்திருக்கிறதைப்பார்த்தால் அந்த சாபத்தைப்போக்கிக்கொள்கிறதற்காகசக்கிரவாகபக்ஷிகள்வந்திருக்கின்றனபோல் இருக்கிறது. உலகத்துக்குப்பெருமாளால் நேர்ந்த கஷ்டத்தை ஆசார்யர்கள் பெருமாள் திருவடிகளையடைந்து போக்குகிறார்கள். (9)

(௯௦)ஶாநயாமி ஜமதஸ்தமோவஹே ஶௌரேஶ்ஶணிவா
து³கே யுவாம் । த³க்ஷிணோத்தரமதிக்ரமோ
சிதே வர்த்மநீ இவ ஸஹஸ்ரபா⁴நவ: ॥

ஜமதஃ - லோகத்தினுடைய, தமோவஹே - அஜ்ஞானத்தை (இருட்டை) போக்கடிக்கிறவைகளாயிருக்கிற, ஶௌரே: - பெருமாளுடைய, ஶணிவாது³கே - வாரீர் கல்விழைத்த பாதுகைகளே, யுவாம் - உங்களை, த³க்ஷிண - தெற்காயும், உத்தரமதி - வடக்காயும் போகிறதினுடைய, க்ரம - வரிசைக்கு, உசிதே - தகுந்தவைகளாயிருக்கிற, ஸஹஸ்ரபா⁴நவ: - ஸூர்யனுடைய, வர்த்மநீ இவ - வழிகளைப்போலே, (அதாவது) தக்ஷிணயந உத்தராயணங்களைப்போல, ஶாநயாமி- கொண்டாடுகிறேன்.

(கருத்து) பாதுகைகளே ! உங்களைப் பார்த்தால் தக்ஷிணயந உத்தராயணங்களைப் போலிருக்கிறது. அவைகள் உலகத்துக்கு இருட்டைப் போக்கி வெளிச்சத்தைக் கொடுக்கின்றன. நீங்கள் நல்ல அறிவை உண்டுபண்ணி அஜ்ஞாநத்தைப் போக்குகிறீர்கள். நல்ல ஆசார்யர்கள் அனுக்ரஹத்தாலும் உபதேசங்களாலும் அஜ்ஞாநத்தைப்போக்குகிறார்கள். அப்படிப்பட்ட ஆசார்யர்கள்இப்போது அகப்படுவது ரொம்ப அருமை. (10)

(௯௧) ரங்கநாயவாதயோரலங்க்ரியா ராஜதே கநகவாது³காஉயீ । தவிஹஸ்ருதியுமலீவ தாத்ருஶீ மந்தஸங்கவிஹாமஶாஶ்ரிதா ॥

ரங்கநாய - ஸ்ரீரங்கநாதனுடைய, வாதயோ: - திருவடிகளுக்கு, அலங்க்ரியா - அலங்காரமாக இருக்கிற, கநகவாது³காஉயீ - தங்கபாதுகைகளின் இரண்டானது, மந்தஃ - பெருமாளுடைய இஷ்டத்தினாலே, ஸவிஹாமம் - ஒரேமாதிரியான பிரிவை- ஆஶ்ரிதா - அடைந்திருக்கிற, தாத்ருஶீ - அப்பேர்ப்பட்டதாயிருக்கிற, தஸ்ய - அந்த பெருமாளுடைய, விஹஸ்ருதியுமலீவ - லீலாவிபூதி நித்யவிபூதி என்கிற இரண்டு போலே ராஜதே - விளங்குகிறது.

(கருத்து) எல்லா உலகமும் பெருமாளுடைய ஸொத்தாம். பிரஹ்மாண்டம் என்பது 14 லோகங்களடங்கிய ஒரு இடம். பூமிக்குக்கீழ் ஏழுலோகம், மேல் ஏழுலோகம். இந்த மாதிரி பிரஹ்மாண்டங்களுக்குக் கணக்குக் கிடையாது. இதற்கு லீலா விபூதி என்று பெயர். இது கொஞ்சகாலமிருந்து போய்விடுகிறது. அழிவில்லாததாய் பரமபதம் என்றும், வைகுண்டம் என்றும் சொல்லப்படுகிற ஒரு லோகமிருக்கிறது. அதற்கு நித்ய விபூதியென்று பெயர். அதற்கு அழிவில்லை. லீலாவிபூதியைக் கால்பாகமென்னும், நித்யவிபூதியை முக்கால்பாகமென்னும் சாஸ்திரம் சொல்லுகிறது, இந்த இரண்டு பாதுகைகளையும் பார்த்தால் அப்படியில்லாமல் இரண்டையும் சரிபாதியாய்ப் பண்ணப்பட்ட இரண்டு விபூதிகள் போலிருக்கின்றன. உங்களைப்பார்த்தால் நல்ல ஆசார்யர்கள் அகப்பட்டால் இரண்டு விபூதிகளும் கிடைத்தாப் போல. (11)

(௨௭௨) ஸாக்ஷாத்பதம் மதுபிதஃ ப்ரதிபாதயந்த்யௌ
மாநோபபத்திநியதே மணிபாதுகே தே ।
அந்யோந்யஸங்கதிவசாதுபபந்நசர்யாம்
மாஜ்ஞாம் ஶ்ருதிஸ்ம்ருதிமயீமவதாரயாமி ॥

மதுபிதஃ - மதுஎன்கிற அஸுரனைக்கொன்ற பெருமாளுடைய, பதம் - திருவடியை, ஸாக்ஷாத் - எல்லாரும் கண்ணால் பார்க்கும்படி, ப்ரதிபாதயந்த்யௌ - எல்லாருக்கும் கொடுக்கிறதாயும், (பதம் - ஸ்வரூபத்தை, ஸாக்ஷாத் - சக்திஎன்கிற வ்ருத்தியினாலே, ப்ரதிபாதயந்த்யௌ - தெரிவிக்கிறவைகளாயும்,) மாந - திருவடிக்கு சரியான அளவென்ன, உபபத்தி - திருவடிக்குப் பொருத்தமென்ன இவைகளாலே, நியதே - தவறாமலிருக்கிற, (மாந - பிரமாணமென்ன, உபபத்தி - யுக்திகளென்ன இவைகளாலே,) தே மணிபாதுகே - கல்லிழைத்த இரண்டு பாதுகைகளை, அந்யோந்யஸங்கதிவசாத் - ஒன்றுக்கொன்று சேர்ந்திருக்கையாலே, உபபந்ந - நன்றாக நேர்ந்திருக்கிற, சர்யாம் - ஸஞ்சாரத்தை உடைத்தாயிருக்கிற, (அனுஷ்டானத்தை உடைத்தாயிருக்கிற) ஶ்ருதிஸ்ம்ருதிமயீம் - வேதம்

ஸ்மிருதிகள் ரூபமான, ஆஜ்ஞாம் - உத்தரவாக, அவதாரயாமி - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகைகளே! உங்களைப்பார்த்தால் வேதமும் ஸ்மிருதியும் மாதிரி இருக்கிறது. அவைகள் ஒன்றை விட்டு ஒன்று பிரியாது. பாதுகைகளே! நீங்கள் பெருமாளை எல்லாருக்கும் கொடுக்கிறீர்கள்- உங்களைச்சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறபடியினால் நாய்முதல் எல்லாருக்கும் ஸேவை ஸாதிக்கிறார். பெருமாளுடைய திருவடிக்குச் சரியான அளவாயும் பொருத்தமாயுமிருக்கிறீர்கள். வேதத்துக்கு ஒத்திருக்கின்றன ஸ்மிருதிகள். அதனால் அதில் சொல்லியபடியே செய்கிறார்கள். வேதங்களும் ஸ்மிருதிகளும் பகவானுடைய உத்திரவு. அதை ஒருவரும் மீறக்கூடாது. அதில் சொல்லியபடிதான் ஜனங்கள் நடக்கிறார்கள். வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் சொல்லிய ஸங்கதிகள் பிரமாணங்களுக்கும் யுக்திகளுக்கும் ஒத்தவைகள். ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்கள் சரணாகதி முதலான கார்யங்களால் பெருமாளை ஸ்வாதீனப்படுத்தியிருக்கிறபடியால் பெருமாளால் ஆசார்யர்களை மீறமுடியாது. சிஷ்யர்களாலும் மீறமுடியாது. (21)

(௨௨) விஶ்வோபகாரமதிக்ருத்ய விஹாரகாலே-
ஷ்வந்யோந்யத: ப்ரதமமேவ பரிஸ்புரந்த்யோ:।
த்ருஷ்டாந்தயந்தி யுவயோர்மணிபாதரக்ஷே
திவ்யம் ததேவ மிதுநம் த்ரிதஶைர்நிஷேவ்யம்॥

மணிபாதரக்ஷே - கல்லிழைத்த பாதுகைகளே! விஶ்வ லோகங்களுடைய, உபகாரம் - உபகாரத்தை, அதிக்ருத்ய உத்தேசித்து, விஹாரகாலேஷு - ஸஞ்சரிக்கிற காலங்களிலே, அந்யோந்யத: ப்ரதமமேவ - ஒருவருக்கொருவர் முன்னதாகவே (அதாவது போட்டிபோட்டுக்கொண்டு) பரிஸ்புரந்த்யோ: - போகாநிற்கிற, யுவயோ: - உங்களுக்கு, த்ரிதஶை: - ப்ரும்ஹாமுதலான தேவதைகளாலே, நிஷேவ்யம் - ஸேவிக்கத்தகுந்ததாயும், திவ்யம் - பரமபதத்தில் இருக்கிற, தத் - ப்ரஸித்தமாயிருக்கிற, மிதுநமேவ - மஹாலெக்ஷ்மி நாராயணன் என்கிற இரண்டுவஸ்துவையே, த்ருஷ்டாந்தயந்தி - உபமானமாகச்சொல்லுகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகைகளே! பெருமாள் உங்களைச் சாத்திக் கொண்டு உலகத்தைக் காப்பாற்றுவதற்காக எழுந்தருளும்போது திருவடிகளை மாத்தி மாத்தி வைக்கும்போது நான்தான் முன்னே காப்பாற்றுவேன் நான்தான் முன்னே காப்பாற்றுவேன் என்று போட்டி போட்டுக்கொள்ளுகிறாப்போலிருக்கிறது. அந்த உங்களைப் பார்த்தால் போட்டிபோட்டுக்கொண்டு உலகத்தைக்காப்பாற்றுகிற தாயார் பெருமாள் போலிருக்கிறது என்று ஜநங்கள் சொல்லுகிறார்கள். உலகத்தைக் காப்பாற்றுவதற்கு பெருமாள் அனேகாசாரிய ரூபமாய் அவதரித்திருக்கிறார். அவர்கள் ஒருவர்க்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு காப்பாற்றுகிறார்கள். அவர்களுக்குக் காப்பாற்றுவதில் அவ்வளவு ஆசை. ஒருவருக்கு ஒருவர் பொறாமையில்லை. (13)

(௭௭௪) த்வாவேவ யத்ர சரணௌ பரமஸ்ய பும்ஸ:
தத்ர த்விதா ஸ்திதவதீ மணிபாதுகே த்வம் |
யத்ரைவ தர்ஶயதி தேவி ஸஹஸ்ரபாத்த்வம்
தத்ராபி நூநமஸி தர்ஶிததாவதாத்மா ||

தேவி மணிபாதுகே - விளங்காநிற்கிற கல்லிழைத்த பாதுகையே, த்வம் - நீ, பரமஸ்ய பும்ஸ: - பெருமாளுக்கு, யத்ர - எந்த இடத்தில், சரணௌ - திருவடிகள், த்வாவேவ - இரண்டேதானோ, தத்ர - அந்த இடத்தில், த்விதா - இரண்டாக, ஸ்திதவதீ - இருக்கிறாய், யத்ர - எந்த இடத்தில், ஸஹஸ்ரபாத்த்வமேவ - ஆயிரம் திருவடியை உடைத்தாயிருக்கையையே, தர்ஶயதி - காண்பிக்கிறாரோ, தத்ர - அந்த இடத்தில், தர்ஶித - காண்பிக்கப்பட்டிருக்கிற, தாவதாத்மா அபி - அவ்வளவு திருமேனியை உடைத்தானவளாகவும், அஸி - ஆகிறாய், நூநம் . நிச்சயம்.

(கருத்து) பாதுகையே! பெருமாளுக்குத் திருவடிகள் இரண்டாக இருந்தால் நீங்களும் இரண்டாக இருக்கிறீர்கள். பெருமாள் ஆயிரம் திருவடிகளோடு ஸேவை ஸாதித்தால் நீங்களும் ஆயிரமாக இருக்கிறீர்கள். கோவில்களில் பெருமாள் இரண்டு திருவடிகளோடு எழுந்தருளியிருக்கிறபடியால் பாதுகைகளும்

இரண்டாயிருக்கிறது. ஆசார்யர்கள் பெருமாள் திருவுள்ளத்தை அநுஸரித்தே யிருக்கிறார்கள்.

(௭௭௫) பர்யாயத: ஸஞ்சரத: மணிபாதுகே த்வே
பூர்வாபரக்ரமநியமம் வ்யதீதயுக்தே |
மந்யே யுவாம் உந்நதி விஷ்ணுபதே ஸ்புரந்த்யௌ
ஸந்த்யே ஸமஸ்தஜகதாம் அபிவந்தனீயே ॥

மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகைகளே, பர்யாயத: - மாறிமாறி, ஸஞ்சரத: - ஸஞ்சரிக்கிறதினாலே, பூர்வாபரக்ரமநியமம் - இதுதான் முன்னே இதுதான் பின்னே என்கிற கட்டுப்பாட்டையும், இதுபின்னே தான் இது முன்னே தான் என்கிறகட்டுப்பாட்டையும், வ்யதீதயுக்தே - தாண்டியிருக்கிற, யுவாம் - உங்களை, உந்நதி - உயர்ந்ததாயிருக்கிற, (பெரியதாயிருக்கிற) விஷ்ணுபதே - பெருமாள் திருவடியிலே, (ஆகாசத்திலே) ஸ்புரந்த்யௌ - விளங்காநிற்கிற, ஸமஸ்தஜகதாம் - எல்லாலோகங்களாலும், அபிவந்தனீயே - ஸேவிக்கத் தகுந்தவை களாயுமிருக்கிற, ஸந்த்யே - ப்ராதஸ்ஸந்த்யை ஸாயம்ஸந்த்யை என்கிற இரண்டு ஸந்த்யைகளாக, அதாவது காலவேளை-ஸாயங்காலம் என்கிற இரண்டுவேளைகளாக, மந்யே - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகைகளே! உங்களைச் சாத்திக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறபோது மாறிமாறி நடக்கிறபடியால் இந்த பாதுகைதான் முன்னே இந்த பாதுகைதான் பின்னே என்கிற கட்டுப்பாடு இல்லை. உங்களை எல்லாலோகமும் ஸேவிக்கிறது ஆகையால் உங்களைப் பார்த்தால் ப்ராதஸ்ஸந்த்யை ஸாயம்ஸந்த்யை என்கிற இரண்டு ஸந்தியாகாலங்கள் போலிருக்கிறது. நல்ல ஆசார்யர்களை எல்லாலோகங்களும் கொண்டாடுகிறது. அவர்களுக்கு நல்ல ஸங்கதிகளை நடத்துகிற விஷயத்தில் முன்னே இருந்தவர்களுக்கும் பின்னே இருந்தவர்களுக்கும் வித்தியாஸம் கிடையாது. (15

(௭௭௬) அப்ராக்ருதஸ்புரணயோர் நிஜஸம்ஸ்ரயோ மா
த்ருஷ்டாந்ததாம் அரணிவம்சஜயோர் ஜிஹீர்ஷோ: |
சாந்தோ யுவாம் ரகுபதேர் மணிபாதுகே த்வே
விஸ்ரம்ப ஸாந்தி வஹனம் கபி வேதயாமி ॥

ரகுபதே: - ஸ்ரீராமனுடைய, மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகைகளே, அக்லாந்த - ஓச்சலில்லாமலிருக்கிற, ஸஞ்சரண - நடையை உடைத்தாயிருக்கிற, சரணபங்கஜயோ: - தாமரைப்பூப்போலிருக்கிற திருவடிகளுக்கு, நிஜஸாஹ்யயோகாத் - தன்னுடைய சேர்க்கையினாலே, அக்லாந்திம் - வாட்டமில்லாமையை, திஸந்த்யௌ - கொடுக்கிறவைகளாயிருக்கிற, யுவாம் - உங்களை, பலாம் - பலை என்னும், அதிபலாம் - அதிபலையென்னும் சொல்லப்படுகிற, வித்யே - வித்யைகளாக, விம்ருஶாமி - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகைகளே! ஸ்ரீ ராமாவதாரத்தில் விச்வாமித்ரர் என்கிற ரிஷி ராமனையும் லெக்ஷ்மணனையும் நடத்தி தன் ஆச்ரமத்திற்கு அழைத்துக்கொண்டு போனாராம். குழந்தைகளுக்கு ச்ரமமாக இருக்குமே என்று நினைத்து அவர்களுக்கு பலை அதிபலை என்கிற இரண்டு வித்தைகளை உபதேசம் பண்ணினாராம். பிறகு அந்தக் குழந்தைகளுக்கு கொஞ்சங்கூட ச்ரமமில்லையாம் என்று ஸ்ரீ ராமாயணத்தில் சொல்லியிருக்கிறது. அது போல் பெருமாள் எழுந்தருளுங்காலங்களில் நீங்களும் அதேமாதிரி பெருமாளுக்கு ச்ரமமில்லாமல் செய்கிறபடியால் உங்களை அந்த வித்தைகளாகவே நினைக்கிறேன்.

நல்ல ஆசார்யர்களை ஆச்ரயித்தவர்களுக்கு இந்த லோகத்து ஸுகத்துக்கும் மோக்ஷஸுகத்துக்கும் குறைவு கிடையாது. இந்த காலத்தில் சாஸ்திரத்தில் சொல்லிய லக்ஷணத்தோடுகூடிய ஆசார்யர்கள் அகப்படுவதும் அவர்களைத் தேடிக்கண்டு பிடித்து அடைவதும் ரொம்ப கஷ்டம். (16)

(௭௭௭) அக்லேஶஹாநிவிஹிதவ்ரதசாதுரீதம் யதாவத்
ஸம்ப்ராப்ய ஸம்விதிதவதாம் பாதுகே பாவ
ஸோகாந் ! நித்யம் ஹஸ்தே ரகுநந்தனதயா
நாமபாதம் ஸஜ்ஜநாந் நிஷேவ ஸாக்ஷாத் ஸ்வய
மிஹ யுவாம் ஜ்ஞாநகாத்ரதீகே ந: ॥

ஹேவாதே-ஏபாதுகைகளே, ஈஹெரே-மனஷ்யக்கு நல்ல ஸங்கதிகளைக் கண்டுபிடிக்கக்கூடிய தெளிவுஇல்லா திருலே, தத்தம் - ஜீவாத்மா பரமாத்மாக்களுடைய உண்மையை, யதாவத் - உள்ளபடி, அவிதிதவதாம் - அறியாதவர்களாயும், இதம் - இப்போதுநடக்கிறபடி, பாபஸோகம் - நரங்களைக் கொடுக்கக்கூடிய, வழ்மம் - வழியை, வரிவிதவதாம் - பழக்கிக்கொண்டிருக்கிற, நஃ - எங்களுக்கு, இஹ - இந்த லோகத்திலே, ஸக்தேஃ - பக்தியோகத்திற்கு, பெருமாளுடைய யானத்துக்கு, உபகாரதயா - உதவியாக, நாய-பெருமாளுடைய, பாதம் - திருவடியை, நித்யம் - எப்பொழுதும், ஸ்வயம் - தாங்களாகவே, ஸஜந்த்ய-அடைந்தவைகளாயிருக்கிற, ஸாக்ஷாத் - கண்ணாலே பார்க்கக்கூடியவைகளாயிருக்கிற, ஜ்ஞாந கர்மநிஷ்டே - ஜ்ஞாநயோகம் கர்மயோகம் என்று சொல்லப்படுகிற இரண்டுகளாக, ஸ்தஃ - இருக்கிறீர்கள்.

(கருத்து) ஏ பாதுகைகளே! ஒருஜீவன் இந்த உலகத்தில் பிறந்து கர்மயோக ஜ்ஞானயோகங்களைச் செய்து ஜீவாத்மாவுடைய ஸ்வரூபத்தை உள்ளபடி. பார்த்து பக்தியோகத்தைப் பண்ணி மோக்ஷத்தை அடையவேணும் என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. நாமெல்லோரும் பிள்ளை பெண்டாட்டி பணம் முதலானவைகளில் மயங்கி ஆத்மாக்களின் உண்மையையே அறியாமலும் நல்ல கர்மங்களைச் செய்யாமலும் நரகத்தைக் கொடுக்கக் கூடிய கர்மங்களை எல்லாருமறியும்படியாய்ச் செய்து கொண்டுமிருக்கிறோம். எங்களுக்கு பக்தியோகம் கிடைக்க வேண்டியதற்காக ஜ்ஞானயோகம் கர்மயோகம்என்கிற இரண்டும் உங்கள் ரூபமான வடிவை எடுத்துக்கொண்டு பெருமாள் திருவடியை அடைந்தாப்போலிருக்கிறது. நல்ல ஆசார்யர்களை ஆச்ரயித்தால் அவன் எவ்வளவு பாபியாயிருந்த போதிலும் அவனுக்கு கர்மயோகம், ஜ்ஞான யோகம், பக்தியோகம், மோக்ஷம் எல்லாம் கிடைக்கும்.

(எஎஅ) ந்யஸ்தம் விஷ்ணோ: பதமிஹ மஹத் ஸ்வேந ஸம்ருத்த்யா வஹந்த்யௌ ஸ்ருத்யாக்யாம் அஸ்கலிதகதிம் வர்தயந்த்யௌ நிஜாஜ்ஞாம் | ஆஸந்நாநாம் ப்ரணயபதவீம் ஆத்மநா பூரயந்த்யௌ த்வைராஜ்யஸ்ரீர்பவதி ஜகதாமைகராஜ்யே பவத்யோ: ||

ஹே பாதுகே-ஏ பாதுகைகளே, இஹ-இந்த லோகத்திலே, ந்யஸ்தம் - வைக்கப்பட்டிருக்கிற, மஹத் - ரொம்ப உயர்ந்ததாயிருக்கிற, விஷ்ணோ: - பெருமாளுடைய, பதம் - திருவடியை, (பட்டத்தை) ஸ்வேந - தன்னுடையதான, ஸம்ருத்த்யா - பெருமையிலே, வஹந்த்யௌ - தூக்குகிறவர்களாயும், ஸ்ருத்யாக்யாம் - வேதம் என்று பெயருள்ள, நிஜாஜ்ஞாம் - தன்னுடைய உத்திரவை, அஸ்கலித - தடுக்கப்படாமலிருக்கிற, கதிம் - நடப்பை உடைத்தானதாக, வர்தயந்த்யௌ - இருக்கும்படி செய்கிறவர்களாயும், ஆஸந்நாநாம் - கிட்டவந்தவர்களுடைய, ப்ரணய - ஸ்னேஹத்தினுடைய, பதவீம் - வழியை, ஆத்மநா - தானாகவே, பூரயந்த்யௌ - நிரப்புகிறவர்களாயுமிருக்கிற, பவத்யோ: - உங்களுக்கு, ஜகதாம் - லோகங்களுக்கு, ஐகராஜ்யே - ஒரே ராஜாவாக இருக்கையானது, ஸத்யபி - இருந்த போதிலும், த்வைராஜ்ய - இரண்டு இராஜாக்களாக இருக்கையினுடைய, ஸ்ரீ: - தோற்றமானது, பவதி - இருக்கிறது.

(கருத்து) ஏ பாதுகைகளே நீங்கள் இந்த உலகத்துக்கு ராஜாக்களாக இருக்கிறீர்கள். (அதாவது) ரொம்பவும் உயர்ந்ததான பெருமாளுடைய திருவடிகளைத் தூக்குகிறீர்கள். (அதாவது) கோஸலராஜ்யத்தை ஆளுகிறீர்கள். வேதம், ஸ்மிருதி முதலான உங்களுடைய உத்தரவை உலகத்தில் தவிராமல் நடத்துகிறீர்கள். உங்கள் ஸமீபத்தில் வந்த மாத்திரத்திலேயே யாருக்கும் உங்களிடத்தில் எல்லையில்லாத பிரீதியை உண்டுபண்ணுகிறீர்கள். நீங்கள் இரண்டுபேரும் உலகத்துக்கு ஒரே ராஜாவாக ஆனாலும் உருவம் இரண்டாயிருப்பதால் இரண்டு ராஜாக்கள் போல் தோன்றுகிறது. நல்ல ஆசாரியர்கள் ஒருவராலும் செய்யமுடியாத பகவானிடத்தில் தியானத்தைச் செய்கிறார்கள். பகவானுடைய உத்திரவுப்படி

நடக்கிறார்கள், அவர்களிடத்தில் எப்பேர்பட்ட கெட்டவர்கள் வந்தாலும் அவர்களுக்கு அவர்களிடத்தில் எல்லையில்லாத ப்ரீதி உண்டாகிறது. அது ஆசாரியர்கள் சக்தி. இந்த மாதிரியாக அவர்கள் பெருமாளைக்காட்டிலும் அதிகமாக உலகத்தை ஆளுகிறார்கள். ஆனால் அவர்கள் அநேகம் பேர்களாக இருக்கிறார்களே ஒழிய எல்லாரும் ஒரேமாதிரியான வேலைகளைச் செய்கிறபடியால் அவர்களெல்லோரும் ஒருவர் என்றே சொல்லலாம். பெருமாள் ஒருவரே பலஉருவை யெடுத்துக்கொண்டு லோகோபகாரம் செய்கிறார். ஆனால் பெருமாள்ஒருவரே ஆசார்யாள் அனேகம்பேர். (18)

(௧௯) அப்ராப்தாநாமுபஜநயத: ஸம்பதாம் ப்ராப்திமேவம்
ஸம்ப்ராப்தாநாம் ஸ்வயமிஹ புந: பாலநா
யாம் யதேதே । ஸாக்ஷாத்ரங்கக்ஷிதிபதிபதம்
பாதுகே ஸாதயந்த்யௌ யோகக்ஷேமௌ ஸுச
ரிதவஶாந்மூர்த்திமந்தௌ யுவாம் ந: ॥

ஹே பாதுகே - ஏ பாதுகைகளே! ரங்கக்ஷிதிபதி - ஸ்ரீரங்கநாதனுடைய, பதம் - திருவடியை, ஸாக்ஷாத் - நேராகவே, (அதாவது இன்னொன்றை நடுவில் வைத்துக்கொள்ளாமல்) ஸாதயந்த்யௌ - கொடுக்குகிறவர்களாயிருக்கிற, யுவாம் - நீங்கள், ந: - எங்களுக்கு, அப்ராப்தாநாம் - இதுவரையில் அடையப்படாமலிருக்கிற, ஸம்பதாம் - ஐச்வர்யங்களுடைய, ப்ராப்திம் - அடைகிறதை, உபஜநயத:-உண்டுபண்ணுகிறீர்கள். புந: - மறுபடியும், ஸம்ப்ராப்தாநாம் - அடையப்பட்டவைகளுடைய, பாலநாயாம் - காப்பாற்றுவதற்கு, ஸ்வயம் - தானாகவே, யதேதே - ப்ரயத்னப்படுகிறீர்கள், ஸுசரிதவஶாத் - எங்களுடைய பாக்யத்தினாலே, யுவாம் - நீங்கள், மூர்த்திமந்தௌ - வடிவை எடுத்துக்கொண்டிருக்கிற, யோகக்ஷேமௌ - யோக - இல்லாததைக்கொடுக்கிறது என்ன, க்ஷேம-கொடுத்ததைக்காப்பாற்றுகிறதென்ன இவைகளாக, ஸ்த: - இருக்கிறீர்கள்.

(கருத்து) ஏ பாதுகைகளே! உலகத்தில்யோகக்ஷேமம் என்று சொல்லுகிறார்கள். யோகம் என்றால் இல்லாதவஸ்து அகப்படுவது,

க்ஷேமம் என்றால் அது குறைவில்லாமலிருப்பது. உங்களைப்பார்த்தால் உருவம் எடுத்த இந்த இரண்டுபோலிருக்கிறது.

நல்ல ஆசார்யர்கள் இந்த லோகத்து ஸுகமோ, வேறு லோகத்து ஸுகமோ ஸகலஸுகத்தையும் கொடுத்து அதற்கு ஒரு குறைவும் இல்லாமல் பண்ணுகிறார்கள். (பத³ம்-திருவடியை, வாஹயந்த்ய: - நடத்துகிறவர்களாக இருக்கிற)

(௭௱ம்) பத்³த⁴ஹரிபாத³யுக³லம் யுக³லம் தபநீயபா
து³கே யுவயோ: । மோசயதி ஸம்ஶ்ரிதாநாம்
புண்யாபுண்யாக்²ய ஶ்ருங்க²லாயுக³லம் ॥

இதி ஸ்ரீ கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்³வேங்கடநாத²ஸ்ய வேதா³ந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீ ரங்க³நாத²பாது³காஸஹஸ்ரே த்³வந்த்³வபத்³த⁴தி:
ஸப்தவிம்ஶீ ॥

---

ஹே தபநீயபாது³கே-ஏ தங்கபாதுகைகளே! பத்³த⁴ - அடையப்பட்டிருக்கிற, ஹரி-பெருமாளுடைய, பாத³-திருவடிகளுடைய, யுக³லம் - இரண்டை உடைத்தாயிருக்கிற, யுவயோ: - உங்களுடைய, யுக³லம் - இரண்டானது, ஸம்ஶ்ரிதாநாம்-உங்களையடைந்தவர்களுடைய, புண்யாபுண்யாக்²ய- புண்ணியம் பாபம் என்றுசொல்லப்படுகிற, ஶ்ருங்க²லா-விலங்கினுடைய, யுக³லம் - இரண்டை, மோசயதி - விடுவிக்கிறது.

(கருத்து) ஏ பாதுகைகளே! நீங்களிரண்டுபேரும் பெருமாளுடைய இரண்டு திருவடிகளையும் பிடித்துக்கொண்டு உங்களை அடைந்தவர்களுக்கு புண்ணியம் பாபம் என்கிற இரண்டு விலங்கையும் வெட்டி அழிவில்லாத பகவானுடைய ஸ்தானத்தைக்கொடுக்கிறீர்கள். ஒரு ஜீவன் பெருமாளுடைய நிலையான லோகத்தை அடையவேணும். அதற்கு இவனால் செய்யப்பட்ட பாபம் நரகத்தை உண்டுபண்ணுகிறது. புண்ணியம் பணம், சுவர்கம் முதலான ஸுகத்தை உண்டுபண்ணுகிறது. நீங்கள் அந்த இரண்டையும் போக்கி உங்களை அடைந்தவர்களுக்கு பெருமாளுடைய ஸ்தானத்தைக் கொடுக்கிறீர்கள்

ஒருவன் பாபங்களையே செய்யக்கூடாது. புண்ணியங்களையும் பணம், பிள்ளை, சுவர்க்கம் முதலான பலன்களை உத்தேசித்து செய்யக்கூடாது. சாஸ்திரத்தில் செய்யவேணும் என்று சொல்லப் பட்ட காரியங்களை மோக்ஷத்திற்காக (பெருமாளை அடைவதற்காகவே) செய்யவேணும். பெருமாளைத்தவிர மற்ற பலன்களை ஆசைப்பட்டவனைப் பெருமாள் தன்னிடம் அழைத்துக்கொள்கிற தில்லை. பெருமாளைத் தங்களுக்கு ஸ்வாதீனமாக வைத்துக் கொண்டிருக்கிற நல்ல ஆசார்யர்கள் தங்களை அடைந்தவர்களுக்கு நல்ல அறிவையும் ஒழிவுமுதலான குணங்களையும் உண்டுபண்ணி மோக்ஷத்தை அடையும்படி செய்கிறார்கள். (20)

இருபத்துநான்காவதான த்வந்த்வபத்ததி முற்றிற்று.

---



ஶ்ரீ: ॥

ஶ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:

ஶ்ரீரங்கநாயகபாதுகாஸஹஸ்ரே

பஞ்சவிம்ஶீ ஸந்நிவேஶபத்ததி: ॥



(௬அ௧) அணோரணீயஸீம் விஷ்ணோர்மஹதோऽபி மஹீயஸீம் । ப்ரபத்யே பாதுகாம் நித்யம் தத்பதேநைவ ஸம்மிதாம் ॥

அணோ: - சிறியதான திருவடியைக்காட்டிலும், அணீயஸீம் - ரொம்ப சின்னதாயும், மஹதோऽபி - பெரியதான திருவடியைக்காட்டிலும், மஹீயஸீம்-ரொம்பவும்பெரியதாயும், நித்யம் - எப்பொழுதும், தத்பதேநைவ - அந்த பெருமாளுடைய திருவடியோடேயே (ஸ்வரூபத்தோடேயே) ஸம்மிதாம், ஒரே அளவுள்ளதாயுமிருக்கிற, விஷ்ணோ: - பெருமாளுடைய- பாதுகாம்-பாதுகையை, ப்ரபத்யே-உபாயமாக நம்புகிறேன்

(கருத்து) இந்தப் பத்ததியில் பாதுகையினுடைய ஸந்நிவேசம் (அதாவது) உருவம் இன்னமாதிரியென்று ஸாதிக்கிறார். பெருமாள் வாமனாவதாரம் பண்ணும்போது திருவடி சின்னதாக இருந்தால் அதைக்காட்டிலும் சின்னதாக இருக்கிறது. த்ரிவிக்ரமாவதாரகாலத்தில் திருவடி பெரியதாயிருந்தால் அதைக்காட்டிலும் பெரியதாயிருக்கிறது. அதாவது உலகத்தில் பாதுகையென்பது காலுக்கு பெரியதுமில்லை சிறியதுமில்லை. காலளவுதானிருப்பது வழக்கம். வேணுமானால் பெரிதாயும் சிறியதாயும் பண்ணிக்கொள்ளலாம். அது போல பாதுகையென்பது பெருமாள் திருவடியளவு இருக்கிறது. பெருமாளுடைய ஸ்வரூபம் போலிருக்கிறதென்றும் ஒரு அர்த்தம் ஏற்படுகிறது. பெருமாளுடைய ஸ்வரூபத்தை சின்னதைக்காட்டிலும் சின்னதென்றும், பெரியதைக்காட்டிலும்பெரியதென்றும்சொல்லியிருக்கிறது. அதாவது, ஒருமண்ணை ஸன்னமாகப்பொடிபண்ணி ரொம்பவும் வழுவழுவென்று இருக்கும் பலகையில் வைத்தால் அந்தமண் அந்தப்பலகையிலிறங்காது. ஒருசொட்டு ஜலத்தைவிட்டால் அந்தஜலம் அந்தப் பலகையினுள்ளே இறங்குகிறது. ஆகையால் மண்ணைக்காட்டிலும் ஜலம் சின்னது. தவலையில் ஜலத்தை வைத்து, தீயை அடியில் போட்டால் தவலைவழியாய்ஜலத்தில் தீ ஏறுகிறது. ஜலத்தைக்காட்டிலும் நெருப்பு ஸூக்ஷ்மம். ரொம்ப சின்னதான வஸ்துக்களிலும் ஈச்வரஸ்வரூபம் நுழையக்கூடியது. அதனால் அதை சின்னதைக்காட்டிலும் சின்னது என்று சொல்லியிருக்கிறது. நல்ல ஆசார்யர்கள் பெருமாளுக்கும் தன்னுடைய ஆசார்யர்களுக்கும் அறிவில்லாததுணி முதலானவைகளைப்போல உபயோகிக்கத்தகுந்தவர்கள். பெருமாள் அவர்களை உயர்த்திவைத்தாலும் தாழ்த்திவைத்தாலும் அவர்களுக்கு ஸந்தோஷமே யொழிய வருத்தமில்லை. நல்ல ஆச்சார்யர்கள்பெருமாளைப்போலேயேஇருக்கிறார்கள்.

(எ௲உ) ப்ரதிதிஷ்டதி பாதஸம்மிதாயாம் த்வயி நித்யம்
மணிபாதுகே முகுந்த:। ஜதரே தவ விச்வமா
ஸ்ய ஸ்தே விஸ்வவ்ருஜநதௌ ஸவஜீ ॥

ஹே மணிபாதுகே - வாராய் கல்லிழைத்தபாதுகையே!
[illegible] - பெருமாள் பாதஸம்மிதாயாம் - திருவடிக்கு சரி

யான அளவுள்ளதாயிருக்கிற, த்வயி - உன்னிடத்தில்; நித்யம் - எப்பொழுதும், ப்ரதிதிஷ்டதி - இருக்கிறார். தே - அந்த, ஸதே - இந்த, இதரே - வேறாயிருக்கிற, பரிபர்ஹா:-குடை முதலிய ஸாமான்கள், விபவப்ரக்ஞ - பெருமையைத் தெரியப் படுத்துவதற்கு, ஹேதவ:-காரணங்களாக, பவந்தி-ஆகின்றன.

(கருத்து) பெருமாள் நின்றுகொண்டிருக்கும் காலத்திலும், எழுந்தருளுகிற காலத்திலும் பாதுகைகள்தான் பெருமாளுடைய திருமேனிக்கு உதவுகின்றன, நகை முதலானவைகளெல்லாம் பெருமைக்குத்தானிருக்கிறது. ஒருவனுக்கு எவ்வளவு பணம் முதலானவை இருந்தாலும் அன்னந்தானவனை வளர்க்கிறது. மீதி எல்லாம்பெருமைக்கு,உலகத்தில் எவ்வளவோ வஸ்துக்களிருக்கின்றன. பெருமாளுக்கு ரொம்பவும் இஷ்டமான ஜீவன்களைக் காப்பாற்றுவது என்கிற கார்யத்துக்கு ஆசார்யர்களைத் தவிற மற்றவர்களால் உதவியில்லை. (2)

(எஅங) தவ ரங்கநரேந்த்ரபாதரக்ஷே ப்ரக்ருதிஸ்ஸத்யபி
பக்திபாரதந்த்ர்யாத் | பவதீம் வஹதீவ ஸஶே
ஷ: ப்ரதிதஸ்வஸ்திகலக்ஷணைஶ்ஶிரோபி: ||

ஹே ரங்கநரேந்த்ர பாதரக்ஷே - ஸ்ரீரங்கநாதனுடைய திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! ஸஶேஷ: - ஆதிசேஷனவர், தவ - உனக்கு, ப்ரக்ருதி:ஸத்யபி - காரணமாகியிருந்தாலும், ப்ரதித - பாதுகையின் ஆகாரமுள்ளதாக பிரஸித்தமாயிருக்கிற, ஸ்வஸ்திக - வலது கையை இடது தோளிலும் இடதுகையை வலதுதோளிலும் வைத்துக்கொண்டாப்போலிருக்கிற, லக்ஷணை: - அடையாளங்களையுடைத்தாயிருக்கிற, ஶிரோபி: - தலைகளாலே, பக்திபாரதந்த்ர்யாத் - பக்திக்கு அதீனமாயிருக்கையாலே, பவதீம் - உன்னை, வஹதீவ - தூக்குகிறார்போல.

(கருத்து) பாதுகையின் ஸன்னிவேசம் (அதாவது உருவம்) பெருமாளுடையதிருவடி போலிருக்கிறது. ஆதிசேஷன் படத்தில் பெருமாள்திருவடிமாதிரி ஒரு அடையாளமிருக்கிறது. அதாவது

நல்லபாம்பின் தலைகளில் எல்லாத்திலுமிருக்கிறதே, அதுபோலிருக்கிறது அதைப்பார்த்தால்ஆதிசேஷன், பாதுகை தன் அவதாரமாக இருந்தாலும் அதனிடத்தில் பக்தியால் அதையே தன் தலையால் தூக்குவது போலிருக்கிறது. ஆசார்யர்கள் நித்யஸூரிகள் அவதாரமாக இருந்தாலும் நித்யஸூரிகளே அவர்களைக் கொண்டாடுகிறார்கள். (3)

(எஅச) பரமஸ்ய பும்ஸ: பதஸந்நிவேசாந்
ப்ரயுஞ்ஜதே பாவிதபஞ்சராத்ரா: ।
அகப்ரதீபாந் அபதிச்ய ம்ருத்ஸ்நா
அங்கேஷு ரங்கேசயபாதுகே த்வாம் ॥

ஹே ரங்கேசயபாதுகே! - பாராய் ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகையே! பாவித - நினைக்கப்பட்டிருக்கிற, அதாவது பரிசயம்பண்ணப்பட்ட, பஞ்சராத்ரா:-பாஞ்சராத்ரசாஸ்திரத்தையுடையவர்கள், அக-பாபங்களுக்கு, ப்ரதீபாந் - சத்ருவாயிருக்கிற, பரமஸ்யபும்ஸ: - உயர்ந்த புருஷனான பெருமாளுடைய, பதஸந்நிவேசாந்-திருவடிபோன்ற உருவத்தையுடைத்தாயிருக்கிற, ம்ருத்ஸ்நாந் - திருமண்களை, அபதிச்ய - வியாஜமாகப்பண்ணி, த்வாம் - உன்னை, அங்கேஷு - உடம்புகளில், ப்ரயுஞ்ஜதே - வைத்துக்கொள்கிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! ஸ்ரீபாஞ்சராத்ரசாஸ்த்ரத்தைப்பரிசயம்பண்ணின மஹான்கள் பெருமாள்திருவடிமாதிரியிருக்கிற பன்னிரண்டு திருமண்களை உடம்புகளிலிட்டுக் கொள்ளுகிறார்கள். திருமண் என்று பெயரேயொழிய உன்னைத்தான் வைத்துக்கொள்கிறார்கள். திருமணும் பாதுகையும் திருவடி போலிருப்பதால் திருமண்களைப் பாதுகையாக ஸாதித்தார். (4)

(எஅரு) விஸ்ருஜ்ய ரங்காதிபதிம் பராயா:
ச்ருதே: ஸ்திதாம் மூர்த்நி பாதுகே த்வாம்
பஜந்தி ப்ராஜ்ஞாஸ்ஸமயே ப்ரபந்நாம்
ஸ்வதந்த்ரதந்த்ராஹரணாநி ஸந்த: ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! வ்ருத்தா: - ரொம்ப பெரியவர்கள், த்வாம் - உன்னை, ரங்கந்ருபதிம் வராயா: - ஸ்ரீ ரங்கநாதனை அகமுடையானாக வைத்துக்கொண்டிருக்கிற, ச்ருதே: - வேதமாகிற பொம்மனாட்டியினுடைய, ஶிரஸி - தலையிலே, அதாவது உபநிஷத்திலே, ஸ்திதாம் - இருக்கிறவளாக, விம்ருஶ்ய - யோசித்து, ஸமயே - கலியாணகாலத்திலே, வதூநாம் - கலியாணப்பெண்களுடைய, மௌலௌ - தலையிலே, த்வத்ப்ரதிக்ருதீ - உன்னைப்போன்ற அடையாளமுள்ளதாயிருக்கிற அதாவது திருமண்போட்ட, ஆபரணானி-நகைகளை அதாவது திருமங்கலியங்களை, வஹந்தி - வைக்கிறார்கள்.

(கருத்து) லோகத்தில் பெரியோர்கள் கலியாணகாலத்தில் பெண்கள் தலையில் நுகத்தடியை வைத்து திருமங்கல்லியத்தையும் வைக்கிறார்கள். திருமங்கல்லியத்தில் திருமண் போட்டிருக்கிறது. திருமண் பாதுகைமாதிரி யிருக்கிறது. ஏன் அப்படிவைக்கிறார்கள் என்று கேட்டால் வேதங்கள் தலையில் பாதுகையிருக்கிறது. (அதாவது, பாதுகையையே வேதங்களின் தலையானஉபநிஷத்துக்கள்சொல்லுகின்றன.) அதனால் வேதமாகிற பெண்கள் நித்யஸுமங்கலிகளாயிருக்கிறார்கள். அதுபோல்நம்பெண்கள் தலையிலும்பாதுகையை வைத்தால் இவர்களும்நித்யஸுமங்கலிகளாயிருப்பார்களென்று நினைத்து உன்னைச்சிரஸ்ஸில வைக்கிறார்கள். (5)

(எஅகா) வஹந்தி ரங்கேஶ்வரபாதரக்ஷே

தீர்காயுஷாம் தர்ஶிதபக்திபாரா: ।

ஆஶாதிபாநாமவரோதநார்ய:

த்வத்ப்ரதிக்ருதிகாம் ஜாதஹேமஸம்ப்ருதை: ॥

ஹே ரங்கேஶ்வரபாதரக்ஷே - ரங்கநாதனுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! தீர்காயுஷாம் - வெகுநாள் பிழைத்திருக்கிற, ஆஶாதிபாநாம் - கிழக்கு முதலான திக்குகளுக்கு ராஜாக்களான இந்திரன் முதலானவர்களுடைய, அவரோதநார்ய:- அந்தப்புரஸ்திரீகள், தர்ஶித - காண்பிக்கப்பட்டிருக்கிற, பக்திபாரா: - அதிகமான பக்தியையுடைத்தானவர்களாய்க்கொண்டு, ஜாதஹேமஸம்ப்ருதை: - தங்கத்தினால்

செய்யப்பட்ட திருமங்கலியச்சரடுகளாலே, ஸ்வரூபாகாரம் - டன் அடையாளத்தை, வஹந்தி - தூக்குகிறார்கள்.

கருத்து) ஒவ்வொருதிக்குக்கு ஒவ்வொருதேவதையை யஜமானனுக்குச் சொல்லியிருக்கிறது. அவர்களுடைய பெண்டாட்டிகள் திருமங்கல்லியத்தில் உன் மாதிரி அடையாளங்களை வஹிக்கிறார்கள். அதனால் அவர்கள் தீர்க்க ஸுமங்கலிகளாக இருக்கிறார்கள். (6)

(௧அ௭) வ்யூஹக்ரமேண ப்ரதிதாரமத்ர
ஸந்தர்ஶயந்தீம் மணிபாதுகே த்வாம் |
பாதும் த்ரிலோகீம் பதபத்மஜம்
ஸௌதர்ஶநீம் யந்த்ரமவைமி ஶௌரே: ||

ஹே மணிபாதுகே. வாராய் கல்லிழைத்த பாதுகையே! அத்ர - தன் மேலே, வ்யூஹக்ரமேண - வாஸுதேவன் ஸங்கர்ஷணன் முதலானவர்களுடைய வரிசையினால், ப்ரதிதாரம் - பிரஸித்தராயிருக்கிற பெருமாளை. (கூட்டமாயிருக்கிற ரீதியினாலே பிரஸித்தமான அரங்களை) ஸந்தர்ஶயந்தீம் - காண்பியாநிற்கிற, த்ரிலோகீம் - மூன்று லோகத்தையும், பாதும் - காப்பாற்றுவதற்காக, ஶௌரே:-பெருமாளுடைய, பதபத்மஜம் - தாமரைப்பூ போலிருக்கிற திருவடியை அடைந்திருக்கிற, (தாமரைப்பூபோன்ற கோட்டுக்கு உள்ளேயிருக்கிற) ஸௌதர்ஶநீம் யந்த்ரம் - ஸுதர்சன யந்த்ரமாக, அவைமி - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! வாஸுதேவன், ஸங்கர்ஷணன் முதலான பெருமாளை உன்பேரில் எல்லாருக்கும் காண்பிக்கிறாய். (அதாவது அவர்கள் உன்னைத் திருவடிகளில் சாத்திக்கொண்டிருக்கிறார்கள் மூன்று லோகத்தையும் காப்பாற்றுவதற்காக.) நீ பெருமாள் திருவடியை அடைந்திருக்கிறாய். உன்னைப் பார்த்தால் ஸுதர்சநயந்த்ரம் மாதிரியிருக்கிறது. பாதுகைகளுடைய கூட்டத்தை காட்டுகிற ஸுதர்சனயந்த்ரமாக நினைக்கிறேன். இவ்விடத்தில் ஸுதர்சன யந்த்ரத்தை எழுதிக் காண்பிக்கிறது எல்லா லோகத்தையும் காப்பாற்றுவதற்காக. ஆசார்யனிடத்தில் எல்லாப்பெருமாளும் எழுந்தருளி யிருக்கிறார்கள். ஒவ்வொரு பெருமாளை

லேஸேவித்தால் அந்தந்த பெருமாளை ஸேவித்ததாக ஆகும். ஆசார்யர்களை ஸேவித்தால் எல்லாப்பெருமாளையும் ஸேவித்ததாகஆகும்.

(௭௮௮) க்ருதாஸிகா கநகபங்கஜகர்ணிகாயாம்
மத்யே க்ருஶா முரரிபோர்மணிபாதரக்ஷே த்வம்
ஸந்த்ருஶ்யஸே ஸரஸிஜாஸநயா ஶ்ரிதம்
ரூபாந்தரம் கிமபி ரங்கவிஹாரயோக்யம் ॥

முரரிபோ: - முரன் என்கிற அசுரனுக்குச் சத்ருவாய் இருக்கிற பெருமாளுடைய, மணிபாதரக்ஷே - மணிபாதுகையே! கநகபங்கஜ- தங்கத்தாமரைப் பூவினுடைய கர்ணிகாயாம்_காயிலே, க்ருத-செய்யப்பட்டிருக்கிற, ஆஸிகா - இருப்பை உடைத்தாயிருக்கிற, மத்யே-நடுபாகத்தில், க்ருஶா-இளைத்துமிருக்கிற, த்வம்- நீ, ஸரஸிஜாஸநயா-மஹாலக்ஷ்மியினாலே, ஶ்ரிதம்-அடையப் பட்டிருக்கிற, ரங்க -ஸ்ரீரங்கத்திலே, விஹாரயோக்யம் - ஸஞ்சரிக்கத்தக்கதாக இருக்கிற, கிமபி - இன்னது என்று சொல்லமுடியாத அதாவது உயர்ந்ததான, ரூபாந்தரம் - வேறு உருவமாக, ஸந்த்ருஶ்யஸே - காணப்படுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ தங்கத்தாமரைப்பூவின் காயிலே இருக்கிறாய், இரண்டுபக்கத்திலும் அகலமாய் நடுவில் சிறுத்திருக்கிறாய். உன்னைப்பார்த்தால் மஹாலக்ஷ்மியே ஸ்ரீரங்கத்தில் ஸஞ்சரிப்பதற்காக இன்னொரு உருவம் எடுத்துக்கொண்டு வந்தாள்போலிருக்கிறது.

ஆசார்யர்களென்பவர்கள் மிகுந்த தயை பொறுமை முதலான குணங்களாலே மஹாலெக்ஷ்மியின் அவதாரம். இரண்டு பக்கத்திலும் அகந்து நடுவில் சிறுத்திருப்பது பாதுகையின் ஸந்நிவேசம். (8)

(௭௮௯) ஶாணோல்லிகிதஸ்ய உதயீநஜநஸ்ய நித்யம்
ஶாணோத்கத: க்ருபணதேதி விவிஞ்சயந்த்யா !
பத்தீக்ருதம் ப்ரபவதோபி வது ஹ்ருதேஷு
கார்ஶ்யம் த்வயா கமலநாபபதாவநீ ரக்ஷே ॥

கமலேக்ஷணபதரக்ஷே - தாமரைப்பூப்போன்ற திருக்கண் களையுடைய பெருமாளுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாது கையே! நித்யம் - எப்பொழுதும், மர்யாதிகஸ்ய - மர்யாதை பண்ணத் தகுந்ததாயிருக்கிற, மதீயஜநஸ்ய - என்னதீனமான அதாவது என்னை அடைந்த ஜநத்துக்கு, அத: - இதற்கு என்னை அடைந்ததற்குப் பிறகு, கார்பண்யா - ஏழைத்தனம் முதலான இளைப்பு, மா பூத் - உண்டாகவே வேண்டாம், இதி - என்று, விசிந்தயந்த்யா - எண்ணுநிற்கிற, த்வயா - உன்னாலே, கார்ஶ்யம் - இளைத்திருக்கையானது, மத்யதேஶே - நடுபாகத் திலே, பந்திக்ருதம் - சிறையில் போடப்பட்டது, இதி - என்று, மந்யே - நினைக்கிறேன், த்ருவம் - நிச்சயம்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ நடுவே இளைத்திருக்கிறாய், ஏனென்றால் இளைப்பு என்கிற அவஸ்தையை உலகத்தில் வைத் திருந்தால் அது நம்மிடத்தில் பக்திபண்ணுகிற ஜநங்களுக்கும் வந்துவிடும். நம்மை அடைந்தவர்களுக்கு ஒருவிதத்தாலும் தொந்திரவு வரக்கூடாது என்று நினைத்து இளைப்பு என்கிற வஸ்துவை வெளியில் விடாமல் சிறைச்சாலையில் வைத்து விட் டாய். அதாவது உன்னிடத்திலேயே வைத்துக் கொண்டாய் போலிருக்கிறது.

ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்களை அடைந்தவர் களுக்கு இந்த லோகத்திலும் லோகாந்தரத்திலும் ஒரு குறை யும் கிடையாது. (9)

(எகூ0) மத்யே க்ருஶாமுபயத: ப்ரதிபந்நபுஷ்டிம்
மந்யே பவந்தீம் மணிபாதரக்ஷே ।
நித்யம் முகுந்தபதஸங்கவிஶேஷயோக்யாம்
நிஷ்பாதிதே க்ருதயிபிர்விததாங்கயஷ்டிம் ॥

மணிபாதரக்ஷே - வாராய் கல்லிழைத்த பாதுகையே! க்ருதயி: - வித்வான்கள், மத்யே - நடுவில், க்ருஶாம் - இளைத்தும், உபயத: - இரண்டுபக்கத்திலும், ப்ரதிபந்ந - அடையப்பட்ட, புஷ்டிம் - பருமனை யுடைத்தாயிருக்கிற, பவந்தீம் - உன்னை,

ஸமீக்ஷ்ய - பார்த்து, சௌரே: - பெருமாளுடைய, பத - திருவடிகளுடைய, ஸங்கம - சேர்க்கை என்ன, அதாவது த்யானம் பண்ணுவதென்ன, விப்ரயோக-பிரிவென்ன, அதாவது மறப்பதென்ன இவைகளை, ஸாவதீஸுகதுக்கஸாரம் - உயர்ந்த ஸுகமாகவும் உயர்ந்த துக்கமாகவும், நித்யம் - எப்பொழுதும், நிச்சின்வதே - நிச்சயிக்கிறார்கள்.

(கருத்து) ஏபாதுகையே! நீ இரண்டு பக்கத்திலும் பெருத்து நடுவில் இளைத்திருக்கிறாய். வித்வான்கள் அதைப்பார்த்து—இரண்டு பக்கத்திலும் திருவடி பட்டது அதனால் பெருத்தது. நடுவில் படவில்லை. அதனால் இளைத்திருக்கிறது. அதனால் பெருமாளை நினைப்பது உயர்ந்த ஸுகம். பெருமாளை நினைக்காமலிருப்பது உயர்ந்த துக்கம்— என்று தீர்மானிக்கிறார்கள்.

ஆழ்வார் பெருமாளைத் தியானிக்கும் பொழுது நிரம்ப ஸந்தோஷப்படுகிறார். த்யானம் கலையும் போது எல்லையில்லாமல் வருத்தப்படுகிறார். (10)

(௨௭௧) ரங்கேச்வரஸ்ய சரணபங்கஜயோர்பஜந்தீ

ரக்ஷார்த்ததாயதிகல்ப்யஸஹாமவஸ்தாம் |

ச்லாக்யாக்ருதிர்நிவிசஸே மணிபாதரக்ஷே

மத்யே பரிச்சதவிபூஷணஸமஷ்ட்யோரஸ்ய ||

மணிபாதரக்ஷே - வாராய் கல்லிழைத்தபாதுகையே, ச்லாக்யா - கொண்டாடத் தகுந்ததாயிருக்கிற, ஆக்ருதி: - உருவத்தையுடைத்தாயிருக்கிற, த்வம் - நீ, ரங்கேச்வரஸ்ய - ஸ்ரீ ரங்கநாதனுடைய, சரணபங்கஜயோ: - தாமரைப்பூப்போன்ற திருவடிகளுக்கு, ரக்ஷார்த்ததாயதிகல்ப்யஸஹாம் - காப்பாற்றுகிறதா? அல்லது அலங்காரமா என்று சொல்லக்கூடியதான, அவஸ்தாம் - இருப்பை, பஜந்தீ - அடையாநின்றுகொண்டு, பரிச்சதவிபூஷணஸமஷ்ட்யோ: - பரிச்சத - குடை முதலான ஸாமான்களுடையவும், விபூஷண - நகைகளுடையவும், ஸமஷ்ட்யோ: - கூட்டங்களுடைய, மத்யே - நடுவில், நிவிசஸே - இருக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப் பெருமாள் திருவடிகளைக் காப்பாற்றுகிறவளென்றும் சொல்லலாம். அந்தத் திருவடிகளுக்கு அலங்காரம் என்றும் சொல்லலாம். ஆகையால் உன்னைக் குடை முதலிய ஸாமான் வகையிலும், கிரீடம் முதலான நகை வகையிலும் சேர்க்கலாம்.

பெருமாளுக்கு இந்த ஜீவன்களுக்கு உயர்ந்த ஸுகத்தைக் கொடுக்கவேண்டுமென்று திருவுள்ளம். அந்த காரியம் ஆசார்யர்களாலேதான் நடக்கிறது. ஆகையால் ஆசார்யர்களால் பெருமாளுக்கு நிரம்ப ஒத்தாசை. அவர்களால் பெருமாளுக்கு அழகும் ஏற்படுகிறது.

(௭௱௨) அந்யேஷு நிஹிதாந்யகிலாநி காமம்
ப்ரத்யர்ப்பணார்ஹாணி விபூஷணாநி ।
நித்யம் முகுந்தபதபத்மயோரநுரூபம்
நைபத்த்யமம்ப பவதீ நயநாபிராமம் ॥

ஹே அம்ப-ஏ தாயாரான பாதுகையே! அந்யேஷு-பெருமாளுடைய திருவடி தவிர மற்ற அவயவங்களில், நிஹிதாநி - வைக்கப்பட்டிருக்கிற, அகிலாநி விபூஷணாநி - எல்லா நகைகளும், காமம் - வேண்டியபடி, ப்ரத்யர்ப்பணார்ஹாணி - பதில் போடக்கூடியவைகள், பவதீ-நீயோவென்றால், முகுந்த - பெருமாளுடைய, பதபத்மயோ - தாமரைப்பூப் போலிருக்கிற உள்ளங்கால்களுக்கு, அநுரூபம் - தகுந்ததாயும், நயநாபிராமம் - கண்களுக்கு இன்பமாயும், நித்யம் - பதில் போடத்தகாததாயுமிருக்கிற, நைபத்த்யம் - அலங்காரமாயிருக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் எல்லா அவயவங்களிலும் நகைகளைச் சாத்திக் கொள்ளுகிறார். அந்த நகைகளுக்கு பதில் நகை போடலாம். திருவடியில் உனக்குப்பதிலாக வேறொன்றைச் சாத்திக்கொள்ள முடியாது. வேறொன்றினாலும் உன் வேலையைச் செய்யமுடியாது.

ஜீவர்களைக் காப்பாற்றுகிறது என்கிற பெருமாளுடைய காரியம் ஆசார்யர்களாலேயே நடக்கவேண்டும். ஆசாரியனுக்குப் பதிலில்லை. (12)

(𑌏𑌕𑍂𑌈) 𑌯𑍇 𑌨𑌾𑌮 𑌭𑌕𑍍𑌤𑌿𑌨𑌿𑌯𑌤𑌾𑌸𑍍𑌤𑌵 𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑍇𑌶𑌂
𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍍𑌯 𑌨𑍇𑌤𑍍𑌰𑌯𑍁𑌗𑌳𑍈𑌰𑍍𑌨 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 𑌤𑍃𑌪𑍍𑌤𑌿𑌂 ।
𑌕𑌾𑌲𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌕𑌮𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌪𑌾𑌦𑌰𑌕𑍍𑌷𑍇
𑌭𑍂𑌯𑍇𑌣 𑌤𑍇 𑌪𑌰𑌿𑌣𑌮𑌨𑍍𑌤𑌿 𑌸𑌹𑌸𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌃 ॥

𑌕𑌮𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌪𑌾𑌦𑌰𑌕𑍍𑌷𑍇 - தாமரைப்பூப் போன்ற திருக்கண்களையுடைத்தான பெருமாளுடைய திருவடிகளைக் காப்பாற்றுகிற பாதுகையே! 𑌯𑍇 𑌨𑌾𑌮 - எவர்கள், 𑌭𑌕𑍍𑌤𑌿𑌨𑌿𑌯𑌤𑌾𑌃 - பக்திக்கு அதீனமாயிருக்கிற, 𑌨𑍇𑌤𑍍𑌰𑌯𑍁𑌗𑌳𑍈𑌃 - இரண்டுகண்களாலும் - 𑌤𑌵 - உன்னுடைய, 𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑍇𑌶𑌂 - திருமேனியினிருப்பை, 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍍𑌯 - அனுபவித்து, 𑌤𑍃𑌪𑍍𑌤𑌿𑌂 - போருமென்கிற எண்ணத்தை, 𑌨 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 - அடையவில்லையோ, 𑌤𑍇 - அவர்கள், 𑌕𑌾𑌲𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 - கொஞ்சகாலத்தினாலே, 𑌭𑍂𑌯𑍇𑌣 - அநேகமாய், 𑌸𑌹𑌸𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌃 - ஆயிரங்கண்ணுள்ள இந்திரர்களாக, 𑌪𑌰𑌿𑌣𑌮𑌨𑍍𑌤𑌿 - ஆகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னை ஸேவித்து எவருக்கு ஆசை யடங்கவில்லையோ? அவர்களுக்கு பிரம்மப்பட்டம் முதலியவைகளும் கிடைக்கும். மோக்ஷமும் கிடைக்கும். அவர்களுக்கு அகப்படாத புருஷார்த்தமில்லை.

நல்ல ஆசாரியர்களிடத்தில் எல்லையில்லாத ப்ரீதியுள்ளவர்களுக்கு எல்லா புருஷார்த்தங்களும் கிடைக்கும். (13)

(𑌏𑌕𑍂𑌚) 𑌪𑌦𑌮𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌮𑌿𑌤𑌿 𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌂 𑌮𑌤𑌂 𑌮𑌯𑍍𑌯𑌜𑌿𑌤𑍍𑌵𑍇
𑌮𑌹𑌤𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌤𑌿𑌃 । 𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌾𑌤𑌿 𑌤𑌵 𑌚𑌰𑌣𑌾-
𑌵𑌨𑌿 𑌕𑌯𑌾 𑌨𑌿𑌜𑌮𑌾𑌤𑍍𑌰𑌯𑌾 𑌸𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑌾 ॥

𑌚𑌰𑌣𑌾𑌵𑌨𑌿 - வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! 𑌪𑌦𑌂 - திருவடியானது, 𑌅𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 - அளவில்லாதது,

இதி - என்று, வாதிநாம் - சொல்லுபவர்களுடைய, மதம்-எண்ண மானது, மஹதி - ரொம்பஉயர்ந்ததாயிருக்கிற, பகவதங்க்ரௌ - பெருமாளுடைய திருவடியில், ப்ராபஸ்யதே - வரவேண்டாம், இதி - என்கிற நினைவினால், தஸ்ய - அந்தத்திருவடிக்கு, நிகமாந் தநு: - வேதஸ்வரூபியாயிருக்கிற, தவ - உனக்கு, ஸமீசீநதா - ஸரியான அளவை உடைத்தாயிருக்கையானது, வ்யஞ்ஜிதா - தெரியப்படுத்தப் பட்டது.

(கருத்து) பாதுகையின் ஸந்நிவேசம் (அமைப்பு) பெருமாள் திருவடிக்கு ஸரியான அளவாயிருக்கும். அதாவது- பெருமாள் திருவடி எவ்வளவு நீளம் அகலமோ, அதே மாதிரியாயிருக்கிறது பாதுகை. பதம் - சொல்லானது, அஸமீசீநம் - ஒரு ஸங்கதியை ஏற்படுத்திக் கொடுக்கிறதன்று. அதாவது— சொல்லை நம்பக்கூடாது. பகவதங்க்ரௌ - பெருமாளைப் பற்றின சொல்லிலே, ஸமீசீநதா - ஸரியான ப்ரமாணத்தை யுடைத்தாயிருக்கையானது, சொல்லை நம்பக்கூடாதென்று சிலர் சொல்லுகிறார்கள். ஆழ்வார் முதலான ஆசாரியர்கள் வேதம் ப்ரமாணமென்று ஸ்தாபித்து, அதைக் கொண்டு ஜீவன், பெருமாள் முதலான ஸங்கதிகளை ஸ்தாபித்தார்கள். பதம் - இடமானது, அஸமீசீநம் - பிரமாணமில்லாதது, பதம் அஸமீசீநம் - பட்டமானது பிரமாணமில்லாதது. பதம் - திருவடியானது, அஸமீசீநம் - பிரமாணமில்லாதது. பதம் அஸமீசீநம் - ஸ்வரூபமானது பிரமாணமில்லாதது. பகவதஸ் - பெருமாளுடைய, பதே - வைகுண்டமென்கிற ஸ்தானத்திலே, பதே - திருவடியிலே, பதே - ஸ்வரூபத்திலே. மதுவை ஜயித்தார். அதாவது ரஜஸ்ஸை தமஸ்ஸைக் களைப் போக்கினார் என்கிற பட்டத்திலே, ஸமீசீநதா - ஸரியான பிரமாணத்தை யுடைத்தாயிருக்கையானது, அதாவது - உன்னை எது தெரியப்படுத்துகிறதோ, அதுவே அதையும் தெரியப்படுத்துகிறது. ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்களிருப்பதைப் பார்த்தால் பெருமாளிருக்கிறார் என்று கண்டு பிடிக்கிறோம். பெருமாள் தான் ஆசார்யரூபமாக அவதரிக்கிறாரென்று

சொல்லி யிருப்பதால் ஆசார்யர்களைப் போல் பெருமாளுமிருக்கிறார். (14)

(எகூ௫) அபர்யாப்தமேவ ஜகதீத்ரயம் யஸ்ய மாதுமுதிதஸ்ய பாதுகே। அப்ரமேயமிதஸ்ய தத்பதம் நித்யமேவ நநு ஸம்மிதம் த்வயா ॥

ஹே பாதுகே - ஏ பாதுகையே! ஜகத்த்ரயம் - மூன்றுலோகமானது, மாதும் - அளக்கிறதற்கு, உதிதஸ்ய - ஆரம்பித்ததான, யஸ்ய - த்ரிவிக்ரமாவதாரம் பண்ணினபெருமாளுடைய எந்த திருவடிக்கு, அபர்யாப்தம் - போராததாக, அபூத் - ஆயிற்றோ, அமிதஸ்ய - ஒருவஸ்துவாலும் அளக்கப்படாத பெருமாளுடைய, அப்ரமேயம் - அளக்கமுடியாத, தத் - அந்த, பதம் - திருவடியானது, த்வயா - உன்னாலே, நித்யமேவ - எப்பொழுதுமே, ஸம்மிதம் - அளக்கப்பட்டது.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் த்ரிவிக்ரமாவதாரம் பண்ணின காலத்திலே லோகங்களை அளக்க ஆரம்பித்தார். அப்போது உலகங்கள் திருவடிக்குப் போரவில்லை. ஒருவராலும் அளக்கமுடியாத அந்தத் திருவடியை நீ அளந்துவிட்டாய். பாதுகையின் ஸந்நிவேசம் திருவடிபோலிருக்கிறது. பிரமன், ருத்ரன் முதலானவர்களால் அறியமுடியாததான அந்த பகவத்ஸ்வரூபத்தை ஆசார்யர்கள் கண்டு பிடிக்கிறார்கள். (15)

(எகூசு) ஆலவாலமிவ பாதி பாதுகே பாதபஸ்ய பவதீ தயாநிதே:। யத்ஸமீபவிநதஸ்ய சூலிந: ஸாரிணீ பவதி சைலநந்திநீ ॥

ஹே பாதுகே - ஏபாதுகையே, பவதீ - நீயானவள், தயாநிதே: - பெருமாளாகிற, பாதபஸ்ய - கல்பக வ்ருக்ஷத்திற்கு, ஆலவாலமிவ - பாத்திபோலே, பாதி - விளங்குகிறாய், யத் - யாதொரு உன்னுடைய, ஸமீப-ஸமீபத்தில், விநதஸ்ய - வணங்கியிருக்கிற, சூலிந: - சிவனுடைய, சைலநந்திநீ - தலையிலுள்ள கங்கையானது, ஸாரிணீ - கால்வாயாக, பவதி - ஆகிறதோ.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப் பார்த்தால், பெருமாளாகிற கல்பகவிருக்ஷத்திற்குப் பாத்திபோலிருக்கிறது. சிவன் ஸேவிக்கும்போது அவன் தலையிலிருக்கும் கங்கை கால்வாய்போல் பாய்கிறது. மரம் பழத்தைக் கொடுப்பதற்காக அதற்குத் தண்ணீர் பாச்சுவது போல், பெருமாள் ஸந்தோஷிப்பதற்காக சிவன் முதலானவர்கள் பாதுகையை ஸேவிக்கிறார்கள்.

ஆழ்வார் முதலான ஆசார்யர்களைப் பிரும்மா சிவன் முதலானவர்களும் ஸேவிக்கிறார்கள். ஏனென்றால், பிரும்மபட்டம் முதலியவைகளைத் திருணமாக நினைத்து மோக்ஷத்தையே ஆசைப்படுகிறபடியால். (16)

(௧௭) ஸாநந்த³முநிப்³ருந்த³ஷட்பத³வதீ பா⁴தி முக்திமகரந்த³
வர்ஷிணீ । காபி ரங்க³பதே: பதா³ம்பு³
ஜே கர்ணிகா கநகபாது³காத்மிகா ॥

ஸாநந்த³ - ஸந்தோஷத்தையடைந்திருக்கிற, முநி - ருஷிகளுடைய, ப்³ருந்த³ - கூட்டமாகிற, ஷட்பத³ - வண்டுகளை உடைத்தானதாயும், முக்தி - மோக்ஷமாகிற, மகரந்த³வர்ஷிணீ - தேனைப் பெருக்குகிறதாயும், காபி - இன்னதென்று சொல்லமுடியாத, கநகபாது³காத்மிகா - தங்கபாதுகாரூபமாயிருக்கிற, கர்ணிகா - காயானது, ரங்க³பதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, பத³-திருவடியாகிற, அம்பு³ஜே - தாமரைப்பூவிலே, பா⁴தி - விளங்குகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப்பார்த்தால் பெருமாளுடைய திருவடியாகிற தாமரைப்பூவிற்கு உள்ளேயிருக்கும் காய்போலிருக்கிறது. பெருமாளை த்யானம் பண்ணுகிற ருஷிகள் வண்டுகள் போல் கூட்டம் கூட்டமாய் ஸந்தோஷத்துடன் உன்னை மொய்த்துக்கொள்கிறார்கள். மோக்ஷமாகிற தேனைப் பெருக்குகிறாய். தாமரைப்பூவுக்கு காய்போல் திருவடிகளுக்குப் பாதுகைதான் முக்கியம். எவருமே நல்ல ஆசார்யர்களை அடைந்துதான் மோக்ஷத்தையடையவேண்டும். (17)

(௭௱௮) யுக³பத³நுவிதா⁴ஸ்யந் ஷோட³ஶகம் துல்யராக³ம்
யது³பதிரவிந்த³த யாவதீர்ப³ஹுதே³ஹாந் ।
தது³டி⁴திவிகல்ப்யம் பி³ப்⁴ரதீ ஸந்நிவேஶம்
தவ ச பத³ரக்ஷே தாவதீ த்³விகு³ணதநுராஸீத் ॥

பத³ரக்ஷே - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! யது³பதி: - கிருஷ்ணனவர், துல்யராக³ம் - ஒரேமாதிரியான ப்ரீதியை உடைத்தாயிருக்கிற, ஷோட³ஶகம் - பதினாறாயிரம் ஸ்திரீகளின் கூட்டத்தை, யுக³பத் - ஒரே காலத்தில், அநுவிதா⁴ஸ்யந் - அனுஸரிக்கப்போகிறவராய்க்கொண்டு, யாவதீ: - எவ்வளவு, ப³ஹுதே³ஹாந் - அநேகம் திருமேனிகளை, அவிந்த³த - அடைந்தாரோ, தத் - அந்த, ஊட⁴ம் - இந்த சரீரம் எடுத்துக் கொண்டதை, (அநுவிதா⁴ஸ்யந்தீ - அனுஸரிக்கப்போகிறவளாயிருக்கிற,) தவ - உனக்கு, அதிவிகல்ப்யம் - ஸமானமில்லாமலிருக்கிற, ஸந்நிவேஶம் - அவயவங்களின் இருப்பை, பி³ப்⁴ரதீ - அடைந்திருக்கிற, தாவதீ - அவ்வளவு கணக்குள்ள, த்³விகு³ணதநு: - சரீரமானது, ஆஸீத் - உண்டாயிற்று.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள், கிருஷ்ணவதாரம் பண்ணினபோது பதினாறாயிரம் பெண்களைக் கலியாணம் பண்ணிக்கொண்டு, ஒவ்வொரு பெண்களையும் ஸந்தோஷிப்பிப்பதற்காக, ஒவ்வொரு பெண்ணுக்கு ஒவ்வொரு உருவம் எடுத்துக் கொண்டாராம். அப்போது நீயும் ஒரு திருமேனிக்கு இரண்டு உருவம் வீதம் ஆச்சரியமான அழகுடன் அந்த திருவடிகள்மாதிரி முப்பத்திரண்டாயிரம் உருவத்தை யடைந்தாய்.

இங்கு "பின்பு நரகாசுரன் பல திசைகளிலிருந்தும் கொண்டு வந்து சிறைப்படுத்தியிருந்த அந்தக் கன்னிகைகளையெல்லாம் நல்ல நாளிலேநல்ல முகூர்த்தத்திலே சுவாமி அந்தப்பதினாறாயிரத்தொரு நூறுமங்கையருக்கும், தனித்தனி ஒவ்வொருவராயிருக்கும்படி அத்தனையாயிரம் திருமேனியெடுத்து, அங்கங்கே விதிப்படி பாணிக்கிரஹணஞ் செய்தருளினர், அந்தப் பெண்மணிகளில் ஒவ்வொருவரும் தந்தம் கைகளையே பிடித்தார் சுவாமியென்று நினைத்திருந்தார்கள்.

அந்த லோகநாதன் திருக்கல்யாணமஹோத்ஸவத்தில்மாத்திரமன்று இப்படிப் பல ரூபங்கொண்டருளியது; ஒவ்வோரிரவிலும் பல ரூபங்களைக்கொண்டு அந்தந்த பாக்கியவதிகளின் மாளிகைகளிலெழுந்தருளி அவர்களை மகிழ்வித்துக்கொண்டிருந்தார்" என்று ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஐந்தாம் அம்சம் முப்பத்தோராவது அத்யாயத்தில் சொல்லியிருப்பதை அநுஸந்தித்துக்கொள்க.

பெருமாளைக்காட்டிலும் அதிகமாக ஆசார்யர்கள் அவதரித்து ஜீவன்களை மோக்ஷம் அடையும்படி செய்கிறார்கள். (18)

(எகூக) தத்தத்³வ்ருத்த்யநுகு³ணதயா வாமநீம் வ்யாபிநீம்
வா ப்ராப்தே ரங்க³ப்ரதி²தவிப⁴வே பூ⁴மிகாம்
ஸூத்ரதா⁴ரே | மந்யே விஶ்வஸ்தி²திஸமயமஹாநா
டிகாம் நேதுகாமா நாநாகாரா ப⁴வஸி
ப⁴வதீ பாது³கே நர்தகீவ ||

ஹே பாது³கே - வாராய் பாதுகையே! (ரங்க³ப்ரதி²தவிப⁴வே) ரங்க³ - ஸ்ரீரங்கவிமானத்தில், கூத்தாடுகிற இடத்திலே, ப்ரதி²த - பிரஸித்தமான, விப⁴வே - ஸம்பத்தையுடைத்தாயிருக்கிற, ஸூத்ரதா⁴ரே - கூத்துக்குத் தலைவனான ஸ்ரீரங்கநாதனானவர், தத்தத்³வ்ருத்தே: - அந்தந்த வியாபாரத்துக்கு, அநுகு³ணதயா - தகுந்தபடி, வாமநீம் - குட்டையாகவாவது, வ்யாபிநீம் வா - பெரிதாகவாவது இருக்கிற, பூ⁴மிகாம் - வேஷத்தை, ப்ராப்தே ஸதி - அடைந்தபோது, ப⁴வதீ - நீயானவள், (விஶ்வஸ்தி²திஸமயமஹாநாடிகாம்) விஶ்வஸ்தி²தி-லோகத்தைக்காப்பாற்றுதாகிற, ஸமயமஹாநாடிகாம் - பெரியகூத்தை, நேதுகாமா - பெருமாளைக்கொண்டு நடத்தவேணுமென்னும் ஆசைப்பட்டவளாய்க்கொண்டு, நர்தகீவ - கூத்தை நடத்துகிறவள்போல, நாநாகாரா - அநேக உருவங்களை உடைத்தானவளாக, ப⁴வஸி - ஆகிறாய். மந்யே - (என்று) நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! கூத்துக்குத்தலைவனான ஒருவன் அந்தந்தக்கூத்துக்குத்தக்கபடி அநேக வேஷங்களையெடுத்துக்கொள்ளுகிறான். அவனுடைய பத்நியும் அதற்குத்தக்கபடி

வேஷங்களையெடுத்துக்கொண்டு அந்தக் கூத்தை நடத்திவைக் கிருள். அதுபோல், ஸ்ரீ ரங்கநாதன் உலகத்தைக் காப்பாற்று வதற்கு குட்டையாகவும், உலகத்திலுள்ள எல்லாவற்றிற்கும் பெரி தாகவும், அநேகம் உருவங்களை யெடுத்துக்கொள்கிருர். நீயும் அததற்குத்தகுந்த உருவங்களை யெடுத்துக்கொண்டு உதவியா யிருந்து அந்தக் காரியங்களை நடத்துகிருய்.

பெருமாள் எங்கெந்த காலத்தில் எங்கெந்த மாதிரியாக உல கத்தைக்காப்பாற்றவேண்டுமென்று நினைக்கிருரோ, ஆசாரியர்கள் அததற்குத்தக்கபடியிருந்து உதவிபுரிந்து அக்காரியத்தை நடத்து கிருர்கள். கலியுகத்தில் மாறன் என்பது முதலிய குலத்தில் அவதரித்து, தமிழில் பிரபந்தங்களைச்செய்து உலகத்தாரைக் காப் பாற்றும்படி நியமித்தார். அதேமாதிரி செய்தார். அப்படியே ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொரு மாதிரியாக பெருமாள் நிய மித்தபடி ஆசாரியர்கள் நடத்துகிருர்கள். (19)

(அ00) மாநே பரம் ஸமாநேஷ்வபி த்ருகீக்ஷணாகமேஷ்வ-
பி । ஹரிசரணஸ்ய தவாபி து பேதஸ்து
ரக்ஷ்யரக்ஷகபாவாத் ஸ்தித: ॥

இதி கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய
க்ருதிஷு ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
ஸஞ்சாரபத்ததி: பஞ்சவிம்ஶீ

---

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! ஹரிசரண ஸ்ய - பெருமாளுடைய திருவடிக்கும், தவாபி - உனக்கும், த்ருகீக்ஷண - பார்வை முதலானதாலும், ஆகமேஷ்வபி - சாஸ்திரத்திலும், மாநே - அளவு, அறிவு முதலானவைகள், பரம் - மிகவும், ஸமாநேஷ்வபி - ஒரே மாதிரியாயிருந்தாலும், பேதஸ்து - பேதமோ (வேறுபாடோ) வென்றால், ரக்ஷ்ய ரக்ஷகபாவாத் - காப்பாற்றத் தகுந்தது — காப்பாற்றுகிறது என்கிற ஸங்கதிகளாலே, ஸ்தித: - இருக்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே! நீ அகலம் நீளம் முதலிய எல்லாவற்றிலும் பெருமாள் திருவடிபோல்தானிருக்கிறாய். ஆனால் என்னபேதம் (வேறுபாடு) என்றால் நீ காப்பாற்றுகிறாய், பெருமாள் திருவடி காப்பாற்றப்படுகிறது.

நல்ல ஆசார்யர்களுக்கும் பெருமாளுக்கும் ஒருவிஷயத்திலும் வித்யாஸமில்லை. நல்ல ஆசார்யர்களில்லாதபோனால் பெருமாள் காரியம் நடைபெறாது. நல்ல ஆசார்யர்கள் பெருமாளைக் காப்பாற்றுகிறார்கள். (20)

இருபத்தைந்தாவதான ஸந்நிவேசபத்ததி முற்றிற்று.





ஸ்ரீ: ॥

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீரங்கநாத பாதுகா ஸஹஸ்ரம்

॥ யந்த்ரிகா பத்ததி: ஷட்விம்சீ ॥



(௭௫௧) உதக்ரயந்த்ரிகாம் வந்தே பாதுகாம் யந்நிவேஶநாத் ।
உபர்யபி பதம் விஷ்ணோ: ப்ரத்யுப்தாபிஷ ப்ரஸா
தநம் ॥

உதக்ர - மேலே நீட்டிக்கொண்டிருக்கிற, யந்த்ரிகாம் - குமிழை உடைத்தாயிருக்கிற, பாதுகாம் - பாதுகையை, வந்தே - ஸேவிக்கிறேன். யந்நிவேஶநாத் - யாதொரு குமிழை வைத்திருப்பதனால், விஷ்ணோ: - பெருமாளுடைய, பதம் - திருவடியானது, உபர்யபி - திருவடிக்கு மேல் பாகத்திலும், ப்ரத்யுப்தாபிஷ - தள்ளப்பட்ட, ப்ரஸாதநம் - அலங்காரத்தை உடைத்தாயிருக்கிறதோ.

(கருத்து) இந்தப்பத்ததியில் பாதுகையில் குமிழ் இருப்பதைப்பற்றி வர்ணிக்கிறார். பாதுகையில் குமிழ் இருப்பதால் திருவடியின் மேல்பாகத்துக்கும், அதவாது புறங்காலுக்கும் ஒருவிதமான ஆபரணம் வேண்டாம். பாதுகை உள்ளங்காலுக்கும், குமிழ் புறங்காலுக்கும் ஆபரணமாக இருக்கிறது.

நல்ல ஆசார்யர்கள் பெருமாள் திருவுள்ளத்துக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதும் தவிர, பூமிக்கே அலங்காரமாயும் இருக்கிறார்கள். (1)

(௭௫௨) ப்ரஸஹ்ய ப்ரதிருத்ய கண்டகாந் பவதீ
ஶௌரிபதாம்புஜாஶ்ரயா । பதாவநி யா
ரயந்த்ரஶக்திஸம்வித்துராப்யுபரி ப்ரதீக்ஷ்யா ॥

ஹே பதாவநி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே, பவதீ - நீயானவள், ஶௌரி - பெருமாளுடைய,

பதாரவிந்தஸ்ய அதஸ்தாத் - திருவடித்தாமரைக்குக் கீழ், (உள்ளங்காலில்,) கண்டகாதீந் - முள்ளு முதலியவைகளை, ப்ரஸஹ்ய - பலாத்காரமாக, ப்ரதிருத்ய - தடுத்து, தத்ரஸ்தித - அந்த திருவடியில், உசித - தகுந்ததாயிருக்கிற, ச்சாயம் - நிழலை, காந்தியை உடைத்தாயிருக்கிற, ப்ரபீகம் - குமிழ் என்கிற அவயவத்தை, உபர்யபி - திருவடிக்கு மேல் புறத்திலும், தாரயஸி - தாங்குகிறாய்.

(கருத்து) ஏபாதுகையே ! நீ பெருமாளுக்கு உள்ளங்காலில் முள்ளு வெய்யில் இவைகளாலுண்டான உஷ்ணம் முதலியவையில்லாமல் பண்ணுகிறாய். புறங்காலில் குமிழினாலே வெய்யில்படாமல் பண்ணுகிறாய். உன்னுடைய குமிழ் புறங்காலுக்குக் குடைபோலிருக்கிறது.

ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்கள் பெருமாள் திருவுள்ளத்துக்கு உகப்பான கார்யங்களையும் செய்கிறார்கள். ஒரு கெடுதி இல்லாமல் காப்பாற்றவும் காப்பாற்றுகிறார்கள். "யத்ராசார்யாஸம்பவிநோ மஹாத்மநோ மஹீயஸே । ந தத்ர ஸம்பவிஷ்யந்தி வ்யாதிதுர்பிக்ஷதஸ்கரா:" அர்த்தத்தை நினைத்துக் கொண்டு, பக்தியுடன் கணக்கில்லாமல் ஆவ்ருத்திபண்ணி, பெருமாளை ஸந்தோஷிப்பித்தவர்கள் இருக்குமிடத்தில் இந்தலோகத்து ஸுகத்துக்கும் பரலோக ஸுகத்துக்கும் ஒருவித குறையும் கிடையாது என்று சொல்லியிருக்கிறது. இளையபெருமாள் (லக்ஷ்மணன்) கூட இருந்ததினால்தான் ஸீதைக்கும் ராமனுக்கும் ஒருவித தொந்தரவும் கிடையாது. தங்க மான் விஷயத்தில் அவர் சொன்னதைக் கேட்காததால்தான் கடைசியில் கொஞ்சம் கஷ்டமுண்டாயிற்று. (2)

**(௮௦௩) சௌரிப்ரணயிபாதுகே கமநீயாசநவாஞ்சநீய**
**நிர்காசமிவேதி । ஸம்யசௌரிதாம் ப்ரதிபந்நா தே**
**வாஸம் தேவதசக்தித்ரவந்தீ ॥**

சௌரிப்ரணயிபாதுகே - பெருமாளுடைய கல்லிஷமுறைந்த பாதுகையே ! கமநீயம் - மிக இன்பமாயிருக்கிற, கநீயம் - உன்னுடையதான, சஞ்சரணீயகம் - விரனுக்குப் பிடிப்பாக

இருக்கும் குமிழை, ஸ்வயம் - தன்னாலே, உத்ஸ்ருதாம் - உயரே தூக்கப்பட்டும், பரம் - உயர்ந்ததான, தைவதம் - தேவதையானது, ஏகம் - ஒன்றுதான். அதாவது ஸ்ரீமந்நாராயணன் தான், இதி - என்று, ப்ரவதந்தீம் - சொல்லிக்கொண்டிருக்கிற, தே - உன்னுடைய, ப்ரதேசிநீம் - ஆள்காட்டி விரலாக, கலயே - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! மேல் உயர்ந்திருக்கிற உன் குமிழைப் பார்க்கும்பொழுது, "உலகத்தில் ஸ்ரீமந்நாராயணன் தான் உயர்ந்த தெய்வம்" என்று காட்டுகிற ஆள்காட்டிவிரல்போ லிருக்கிறது. ஆழ்வார் பல இடங்களில் ஸ்ரீமந்நாராயணன்தான் உயர்ந்த தெய்வம் என்று ஸாதித்திருக்கிறார். (3)

(அ0ச) ஸுகயதி மணிபாதுகே த்வதீயா பதயுகளாவயவாக்ரஹாய
யந்த்ரிகா விசித்ரா । பரம் புமாம்ஸம் ப்ரகட
யந்தீ ப்ரணவஸ்ய பர்யந்தகா மகாரமாத்ரா ॥

ஹே மணிபாதுகே - ஏ கல்லிழைத்த பாதுகையே! விசித்ரா - ஆச்சர்யமாயிருக்கிற, த்வதீயா - உன்னுடையதாயிருக்கிற, இயம் - இந்த, பதயுகளாவயவாக்ரஹாய - திருவடிகளின் இரண்டு கட்ட விரல்களுக்கும் பிடிப்புக்காக இருக்கிற, யந்த்ரிகா - குமிழானது, பரம் புமாம்ஸம்-உயர்ந்த புருஷனை பெருமாளை, ப்ரகடயந்தீ - தெரியப்படுத்துகிற, ப்ரணவஸ்ய - ப்ரணவத்தினுடைய, பர்யந்தகா - கடைசியிலிருக்கிற, மகாரமாத்ரா - மகாரம் என்கிற அரை மாத்திரையுள்ள எழுத்துப்போல, ஸுகயதி - இன்பமாயிருக்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன் குமிழைப்பார்த்தால் ஜீவ ஸ்வரூபத்தைக்காட்டுகிற ப்ரணவத்தின் மகாரம் போலிருக்கிறது. பாதுகையில் குமிழ்தான் ப்ரதானம். குமிழ் இல்லாவிட்டால் பாதுகையை என்ன செய்கிறது. அதுபோல் ப்ரணவத்தில் மகாரம் ப்ரதானம். ஏனென்றால்? ஜீவன் பெருமாளுடைய மனுஷ்யன் என்பதைக் காட்டுகிறதற்காக ஏற்பட்டது ப்ரணவம். பெருமாள் திருவடிகளில் எல்லையில்லாத பிடிப்புதான்ஆசாரியர்களுக்கு ஸாரமான குணம். (4)

(அ௦ரு) அநுயாதமநிநாரதா மாராரே
ஸுவதீ ஸௌரிதரஸ்ரீயம் ததாதி ।
சரணாவநி யுக்மகா ததைஷா
தநுதே கர்ப்பரஸாவதம் புரஸ்தாத் ॥

அநுயாத - அனுஸரிக்கப்பட்டிருக்கிற, மநோரதா - தன்னை அடைந்தவர்களிடத்தில் ஆசையை உடைத்தாயிருக்கிற, ஸுவதீ-நீயானவள், மாராரே:-பெருமாளுடைய, ஸௌரிதரு - பூந்தேருடைய, ஸ்ரீயம் - சோபையை, ததாதி - தரிக்கிறாய். ஏஷா - இந்த உன்னுடைய, யுக்மகா - குமிழானது, புரஸ்தாத்-முன்னே இருக்கிற, கர்ப்பர - ஏர்க்காலுடைய, ஸாவதம் - சோபையை, தநுதே - உண்டுபண்ணுகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப்பார்த்தால் உன்னை அடைந்தவர்களுடைய இஷ்டங்களைப் பூர்த்தி செய்வதற்காக நினைத்தபோது பெருமாளை அழைத்துக்கொண்டுபோகிற தேர்போலிருக்கிறது. உன்னிடமிருக்கும் இரண்டு குமிழ்களைப் பார்த்தால் ஏர்க்கால் மூக்கணைமாதிரியிருக்கிறது. நல்ல ஆசாரியர்கள் பெருமாள் திருவடிகளை மிகவும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறபடியால் அவர்களையடைந்தவர்களுக்கு எல்லாப் பலன்களையும் பெருமாள் கொடுக்கிறார். (5)

(அ௦சா) மந்யே ஸவத்ருஸ்யமாநம் ப்ருதீகம் ரங்கேசபாதாங்குலிஸம்க்ரஹார்த்தம் । த்ராணாய பாதாவநி விஷ்டபாநாமாஜ்ஞாகரீமங்குலிமுத்ரிகாம் தே ॥

ஹே பாதாவநி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ரங்கேச - ஸ்ரீ ரங்கநாதனுடைய, பாதாங்குலி - திருவடிகளின் விரல்களுடைய, ஸம்க்ரஹார்த்தம்-பிடிப்புக்காகவிருக்கிற, ஸவத்ருஸ: - உன்னுடைய, ப்ருதீகம் - குமிழை, விஷ்டபாநாம் - லோகங்களுடைய, த்ராணாய - காப்பாற்றுவதின்பொருட்டு, ஆஜ்ஞாகரீம் - உத்திரவு பண்ணுகிறதாக இருக்கிற, தே- உன்னுடைய, அங்குலிமுத்ரிகாம் - ஆள்காட்டி விரலைக்காட்டுவது போல், மந்யே - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைத் திருவடிகளில் சாத்திக் கொள்வதற்காக விரல்களுக்குப் பிடிப்பாக இருக்கிற குமிழ் என்கிற அவயவத்தைப் பார்த்தால் லோகத்தில், இருக்கும் ஜனங்களைத் தப்புக்கார்யம் செய்யாதபடிபண்ணிக் காப்பாற்றுவதற்காக ஆள் காட்டி விரலைக்காட்டிஉத்திரவுபண்ணுகிறாப்போலிருக்கிறது.

லோகத்தில் ஆசாரியர்கள் மிருதுவாகவும் கடுமையாகவும் சொல்லி ஜனங்களைத் தப்புக்காரியம் செய்யாமலும் நல்ல காரியங்களைச் செய்யும்படியும் செய்து காப்பாற்றுகிறார்கள். (6)

(௮௦௭) அலங்க்ருதம் கண்டகயோபரிஷ்டா
 துதக்ர நாளம் தவ யந்த்ரிகாம்ஶம் ।
 பத்மாபதே: பாதஸரோஜலக்ஷ்ம்யா:
 ப்ரதைமி பாதாவநி கேலிபத்மம் ॥

ஹே பாதாவநி - ஏ பாதுகையே! உபரிஷ்டாத்-மேலே, கண்டகயா - காயாலே, குமிழ் நுனியில் இருக்கிற ஒரு பாகத்தாலே, அலங்க்ருதம்-அலங்கரிக்கப்பட்டும், உதக்ர-நீட்டிக்கொண்டிருக்கிற, நாளம் - தண்டையுடைத்தானதாயும், மெலிதான விரல் பிடிக்கிறதற்காக இருக்கிற பாகத்தை உடையதாயிருக்கிற, தவ-உன்னுடைய, யந்த்ரிகாம்ஶம் - குமிழ் என்கிற அவயவத்தை, பத்மாபதே: — மஹாலெக்ஷ்மிக்குப் பர்த்தாவான ஸ்ரீ ரங்கநாதனுடைய பாத - திருவடியாகிற, ஸரோஜ - தாமரைப்பூவிலிருக்கிற, லக்ஷ்ம்யா: - லக்ஷ்மியினுடைய, கேலிபத்மம் - விளையாட்டுக்காகக் கையில் வைத்துக்கொண்டிருக்கிற தாமரைப்பூவாக, ப்ரதைமி - நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் குமிழைப்பார்த்தால் பெருமாளுடைய திருவடியிலிருக்கிற தாமரைப்பூப்போலிருக்கிறது. குமிழ் நுனியில் இருக்கிற சின்னதான பாகம் காப்பாற்றுகிறது போலிருக்கிறது. அடியில் விரல்கள் பிடித்துக்கொள்வதற்காக இருக்கிற மெல்லியதான ஒரு பாகத்தைப் பார்த்தால் அந்தப் பூவின் காய் மாதிரியிருக்கிறது. (7)

(௮௦௮) உபரி விநிஹிதஸ்ய கேஶவாங்க்ரே:
 ஶ்ரவஸி பதாவநி யந்த்ரிகாத்ரிகா ஸ்யாத் ।

இதி தவ மஹிமா லகூகரோதி
ப்ரணதஸுரேந்த்ரமௌல்யதிரோஹம் ‖

ஹே பதாவநி - ஏ பாதுகையே! உபரி - உன்மேலே, விநிஹிதஸ்ய - வைக்கப்பட்டிருக்கிற, ஶௌரே - ஸ்ரீ ரங்கநாதனுடைய, அங்க்ரே: - திருவடியினுடைய, உபரி - மேலே, த்வம் - நீ, யந்த்ரிகாத்மநா - குமிழ் ரூபமாக, வர்த்தஸே - இருக்கிறாய், இதி - என்கிற காரணத்தினாலே, தவ - உன்னுடைய, மஹிமா - பெருமையானது, ப்ரணத - வணங்கியிருக்கிற, ஸுரேந்த்ர - தேவச்ரேஷ்டர்களுடைய, மௌலி - கிரீடத்தில், அதிரோஹம் - ஏறுகிறது என்கிற பெருமையை, லகூகரோதி - சிறியதாகப் பண்ணுகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலே பெருமாள் திருவடி இருக்கிறது. அந்தத் திருவடியின்மேலே குமிழ் ரூபமாய் நீ இருக்கிறாய். அதாவது- திருவடியின்மேலே உன் குமிழ் இருக்கிறது. அதனாலே பெருமாள் திருவடிக்கு எல்லா தேவதைகளுடைய கிரீடங்களின்மேலே ஏறுகிறது என்கிற பெருமை இருக்கிறது. அந்தப் பெருமையைக் காட்டிலும் உன் பெருமை பெரியது. அந்தத் திருவடியின்மேலே நீ இருப்பதால் இதனால் பெருமாளைக் காட்டிலும் பாகவதர்கள் உயர்ந்தவர்கள் என்று ஏற்படுகிறது. (8)

(௮௦௯) நித்யம் பதாவநி நிஜைககிரீடஶோபம்
பத்மயா பரிசிதம் பதமுத்வஹந்த்யா: |
அங்கீகரோதி ஸம்க்ராஹ்யத்ஸருகா தே
ஸாம்ராஜ்யஸம்பதநபாயவிதாநதத்த்வம் ‖

ஹே பதாவநி - ஏ பாதுகையே! நித்யம் - எப்பொழுதும், நிஜ - உண்டுபண்ணப்பட்டிருக்கிற, கிரீட - கிரீடங்களின், ஶோபம் - அழகையுடைத்தாயிருக்கிற, பத்மயா - மஹாலக்ஷ்மியினால், பரிசிதம் - பரிசயம் பண்ணப்பட்டிருக்கிற, பதம் - திருவடியை, பட்டத்தை, உத்வஹந்த்யா: - தூக்கிக்கொண்டிருக்கிற, தே - உன்னுடைய, ஸம்க்ராஹ்ய த்ஸருகா - விரலுக்குப் பிடிப்பான குமிழானது, ஸாம்ராஜ்யஸம்பத -

சக்கிரவர்த்தி பட்டத்துக்கு, ஸநாதநம் - தகுந்ததாயிருக்கிற, ஆதபத்ரமிவ - குடைபோல, ரூபம் - அழகை, ஸம்ஶ்ரயதி - அடைகிறது.

(கருத்து) ஏ பாதுகையே ! நீ மஹாலக்ஷ்மியினால் பிடிக்கப்பட்ட பெருமானுடைய திருவடியைத் தூக்குகிறாய். அந்தத்திருவடியைப்பார்த்தால் மூன்று லோகத்துக்கும் ராஜாத்தியாயிருந்த உனக்குக் கிரீடம் மாதிரியிருக்கிறது. உன் குமிழைப் பார்த்தால் வெள்ளைக் குடை மாதிரி இருக்கிறது. (9)

(அ ௧௦) ப்ரதமா கலேவ பவதீ மணிபாதுகே ரங்க
சந்த்ரமஸ: ஶ்ருங்கோந்நதிரிவ யத் ஶ்ரியம் விஹா
பயதி யந்த்ரிகாயோகம் ॥

இதி ஶ்ரீகவிதார்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஶ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஶ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய
க்ருதிஷு ஶ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
யந்த்ரிகாபத்ததிஷட்விம்ஶீ ॥

மணிபாதுகே - ஏ பாதுகையே ! பவதீ - நீயானவள், ரங்கசந்த்ரமஸ: - ரங்கநாதனாகிற சந்திரனுடைய, ப்ரதமா கலேவ - முதல்கலை போல், பாதி - விளங்குகிறாய். யத் - யாதொரு உன்னிடத்தில், யந்த்ரிகாயோகம் - குமிழின் ஸம்பந்தமானது, ஶ்ருங்க - சந்த்ரகலையின் நுனியினுடைய, உந்நதிரிவ - உயர்த்தி போல, ஶ்ரியம் - அழகை, விஹாபயதி - உண்டுபண்ணுகிறதோ.

(கருத்து) ஏ பாதுகையே ! உன்னைப்பார்த்தால் ரங்நாதனாகிற சந்திரனுடைய முதல்கலைபோலிருக்கிறது. உன் குமிழைப் பார்த்தால் கலையின் நுனி உயர்ந்தாப்போல் இருக்கிறது. ஆசாரியாள் பெருமாள் தான். (10)

இருபத்தாறுவதான யந்த்ரிகா பத்ததி முற்றிற்று.

---

ஸ்ரீ: ||

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ||

ஸ்ரீ ரங்கநாதபாதுகாஸஹஸ்ரே

ஸப்தவிம்ஸீ ரேகாபத்ததி: ||

(௮௧௧) ஸந்தர்சயந்தீம் ஸ்வரேகாபிரக்ஷரத்வம் ஸாரஸ்வதீம் | அலேகநீயஸௌந்தர்யாம் ஆச்ரயே சௌரிபாதுகாம் ||

ஸ்வ - தன்னுடையதாக இருக்கிற, ரேகாபி: - கோடுகளாலே, அக்ஷரத்வம் - எழுதத்தகாததாயிருக்கிற, ஸாரஸ்வதீம் - வார்த்தையாயிருக்கிற வேதத்தை, ஸந்தர்சயந்தீம் - தெரியப்படுத்துகிறதாயும், அலேகநீய - எழுதமுடியாத, ஸௌந்தர்யாம் - அழகையுடைத்தாயிருக்கிற, சௌரி - பெருமாளுடைய, பாதுகாம் - பாதுகையை, ஆச்ரயே - அடைகிறேன்.

(கருத்து) இந்தப் பத்ததியில் பாதுகையிலிருக்கும் கோடுகளைப் பற்றி வர்ணிக்கிறார். பாதுகையின்மேலில் கோடுகளிருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் வேதங்களைத் தெரிவிப்பதற்கு ஒருவித அடையாளம் போட்டிருக்கிறாப்போல் இருக்கின்றன. வேதத்தை ஒருவர் சொல்லி கேட்டுருப் பண்ணவேணுமேயொழிய எழுதிப்படிக்கக் கூடாதென்று சொல்லியிருக்கிறது. அதற்காக கோடுகள் ஜாடையாய் அதை க்காட்டுகிறதா போலிருக்கின்றன. பாதுகையின் அழகைக் கண்ணால் பார்த்து ஸந்தோஷிக்கலாமே ஒழிய எழுதமுடியாது. அப்படிப்பட்ட பாதுகையை, காப்பாற்றுகிறதாக நம்புகிறேன்.

நம்மாழ்வாரென்பவர் சூத்திரவம்சத்தில் அவதரித்தார். சூத்திரர்கள் வேதத்தைத் தன் வாக்கினால் சொல்லுகிறதில்லை. அதற்காகத் தன் வார்த்தைகளால் வேதத்தை ஞாபகம் மூட்டுகிறார்.

அதாவது அந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே அந்த வேதத்தின் ஞாபகம் வருகிறது. அந்த மஹானுடைய அழகை வர்ணிக்கமுடியாது. (க)

**(அகஉ) மணிமௌளி நிவேசநாத் ஸுராணாம் வஹஸே காஞ்சந பாதுகே விசித்ராம் । ரங்கபதி பாதபத்மயோகாத் அபராம் லக்ஷணதாம் ஆதிராஜ்ய ஸாராம் ॥**

ஹே காஞ்சநபாதுகே - தங்கமயமான பாதுகையே! த்வம் - நீ, ஸுராணாம் - தேவதைகளுடைய, மணிமௌளி - கல்லிழைத்த கிரீடங்களுடைய, நிவேசநாத்-உரைவதினாலே, விசித்ராம் - ஆச்சர்யமாக இருக்கிற, ரங்கபதி - ரங்கநாதனுடைய, பாதபத்மயோகாத் - தாமரைப்பூப்போலிருக்கிற திருவடிகளில் சேர்ந்திருப்பதைக் காட்டிலும், அபராம் - வேறான, ஆதிராஜ்ய - சக்ரவர்த்தி பட்டத்தை, ஸாராம் - பிரயோஜனமாக உடைத்தாயிருக்கிற, லக்ஷணம் - அடையாளத்தை, வஹஸே - வஹிக்கிறாய்.

(கருத்து.) ஏ பாதுகையே! உன்னைத் தேவதைகள் ஸேவிக்கிறபோது, அவர்கள் கிரீடங்கள் பட்டு அதனால் உன்பேரில் கோடுகள் ஏற்பட்டிருக்கின்றன. நீ பெருமாள் திருவடியில் சேர்ந்திருப்பதே நீ எல்லா லோகத்துக்கும் இராஜாத்தி என்பதற்கு அடையாளம். இந்தக் கோடுகள் அதைக் காட்டிலும் வேறான ஆச்சர்யமான அடையாளமாக இருக்கின்றன.

ஆழ்வார் முதலான ஆசார்யர்கள், எல்லா லோகத்துக்கும் ராஜாக்கள் என்பது பெருமாளிடத்தில் எல்லையில்லாத பக்தி இருப்பதனாலும், ஸகல தேவதைகளும் வந்து அவர்களை ஸேவிப்பதனாலும் ஏற்படுகிறது. (2)

**(அகங) அபிதோ மணிபாதுகே ஸ்புரந்த்யஸ் தவ ரேகாஸ் ததாவிதாயா: । ப்ரதிபாதயந்தி ரங்கநாதஸ்ய ஜகதாதிராஜ்ய சிஹ்நை: ॥**

ஹே மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! அபித: - நாலு பக்கத்திலும், ஸ்புரந்த்ய: - விளங்காநிற்கிற, ததாவிதாயா: - அப்பேர்ப்பட்டதாயிருக்கிற, தவ - உன்னுடைய,

ரேகா - கோடுகளுடைய, விததே: - வரிசைக்கு, சௌரே: - பெருமாளுடைய, பதாரவிந்தே - தாமரைப்பூப்போல் இருக்கிற திருவடியிலே, ஸ்தித்வே: - மூன்றாயிருக்கிற, (அதாவது இருக்கிற,) ஸ்வாராஜ்ய - எல்லா லோகத்துக்கும் ராஜா என்பதற்கு, சிஹ்நை: - அடையாளங்களினுலே, அநந்தரத்வம் - அடுத்த இரண்டாம்படியாயிருக்குகை.

(கருத்து.) ஏ பாதுகையே! ஒருவனுக்கு உள்ளங்கை உள்ளங்கால்களில் சில கோடுகள் இருந்தால், அவன் மஹாராஜாவாயிருப்பன் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. அந்தமாதிரியான பெருமாள் திருவடிகளிலிருக்கிற கோடுகள், உன்னிடத்திலிருக்கிற அந்த மாதிரியான கோடுகளுக்கு இரண்டாந்தரமாக இருக்கின்றன.

பெருமாள் எல்லையில்லாத அழகினுலும், ஆச்சர்யமான தயை பொறுமை முதலிய குணங்களாலும் எல்லா லோகத்துக்கும் ராஜாவாயிருக்கிறுர். ஆழ்வார் முதலான ஆசார்யர்கள் அந்த பாகங்களில் பெருமாளுக்கு ஒருபடி மேலாக இருக்கிறுர்கள். (3)

**(அகச) ரேகாமயா விநமதாம் த்ரிதசாதிபாநாம் கோடீரரத்ந சகரீமகராம்சஜாதா | பாதாவநீ வஹஸி நூநமநந்யலப்யம் ஸௌரிபாதபரிபோகஸமுத்ரலக்ஷணம் ||**

ஹே பாதாவநீ - ஏ பாதுகையே! த்வம் - நீ, விநமதாம் - ஸேவிக்கிற, த்ரிதசாநாம் - தேவதைகளுடைய, கோடீர - கிரீடத்திலிருக்கிற, ரத்நசகரீ - கல்லிழைத்த மீன்போன்ற ஒரு பாகத்தினுடைய, கோடி - நுனியினுலே, உதயா - உண்டாயிருக்கிற, ரேகயா - கோட்டினுலே, அத்புதம் - ஆச்சர்யமாயிருக்கிற, ஸௌரிபாதபரிபோக - பெருமாள் திருவடி உன்னை அனுபவித்ததற்கு, லக்ஷணம் - அடையாளத்தை, வஹஸி - வஹிக்கிருய், நூநம் - நிச்சயம்.

(கருத்து.) ஏ பாதுகையே! தேவதைகள் உன்னை வந்து ஸேவிக்கும்போது அவர்களின் தலைகளில் இருக்கிற கிரீடங்களில் கல்லிழைத்த மீன்போன்ற ஒரு நகை இழைத்திருக்கிறது. அதனுல் உன்பேரில் கோடுகள் இருக்கின்றன. அது பெருமாள் திருவடி உன்னை அனுபவித்தது என்பதற்கு ஆச்சர்யமான அடையாளமாய் இருக்கின்றன.

எல்லா தேவதைகளும் ஆழ்வார் முதலான ஆசார்யர்களை ஸேவிக்கிறார்கள். ஏன் என்றால், பெருமாள் திருவடிகளில் எல்லையில்லாத பக்தி இருப்பதனால். தேவதைகளுக்கு அப்பேர்ப்பட்ட பக்தி, ஒழிவு முதலான குணங்களொன்றுமில்லை. ஒருவர் பெருமாளிடத்தில் எல்லையில்லாத பக்தியுடையவர் என்பதற்கு எல்லாரும் அவரை வந்து ஸேவிப்பதே அடையாளம். (4)

(அகரு) த்ரிதஶமகுடரத்நோல்லேகரேகாவ்யபதேஶாத்
வஹஸி ஶிரஸி பும்ஸாம் பாதுகே மூர்த்நி ஸக்தா ।
நரகஜித ஸேவாஸம்பதம் தாரயந்தீ
நியதிவிலிகிதாநாம் நிஷ்க்ருதிம் துர்லிபீநாம் ॥

பாதுகே - ஏ பாதுகையே! பும்ஸாம் - பிராணிகளுடைய, மூர்த்நி - தலையிலே, ஸக்தா - சேர்ந்திருக்கிற, த்வம் - நீ, நரகஜித - நரகாஸுரனைக் கொன்ற பெருமானுடைய, ஸேவாஸம்பதம் - கைங்கர்யமாகிற (மோக்ஷமாகிற,) ஸம்பத்தை, தாரயந்தீ - உண்டுபண்ணுகிறவளாய்க்கொண்டு, த்ரிதஶ - தேவதைகளுடைய, மகுட - கிரீடத்திலிருக்கிற, ரத்ந - ரத்னங்களுடைய, உல்லேக - கீறலினால் உண்டான, ரேகா - கோடுகளுடைய, வ்யபதேஶாத் - வ்யாஜத்தினாலே, நியதி - தைவத்தினால், விலிகிதாநாம் - எழுதப்பட்டிருக்கிற, துர்லிபீநாம் - கெட்ட எழுத்துக்களுடைய, நிஷ்க்ருதிம் - அழிக்கிறதை, வஹஸி - உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து.) ஏ பாதுகையே! தேவதைகளின் கிரீடத்தில் உள்ள ரத்னங்கள் உன்பேரில் இடித்து மேடுபள்ளமாயிருக்கிறது. அதனால், எல்லா ஜனங்களின் தலையிலும் வந்து அவர்கள் தலையில் இருக்கும் மோக்ஷத்துக்கு இடஞ்சலான எழுத்துக்களையழிக்கிறாய். நல்ல ஆசாரியர்களை யாசிரயித்தால்ஏற்கனவே தலையிலிருக்கிற கெட்ட எழுத்துக்களும் போய்விடும். (5)

(கூகச) பதகமலதலாக்ரஸம்ஶ்ரிதாநாம் தவாந்த:
ஸ்வஜநஸரஸிஜாக்ஷ்யாபத்ரலக்ஷ்மீர்லக்ஷணாநி ।
அவதஸி ஶௌரே: பாதுகே சாஸ்த்ரஸாரா தேஷ: ॥
சரணிசரணதேஹே ஸத்வதேஹி ரேகாவிசேஷா

ஹே தேவி - விளங்கா நிற்கிற பாதுகையே! த்வம் - நீ, ஸ்வை: - தன்னுடையவைகளாயிருக்கிற, த்வயி - உன்பேரில், ஸ்திதை: - உண்டாயிருக்கிற, ரேகாவிசேஷை: - உயர்ந்த கோடுகளாலே, ஸௌரே: - பெருமாளுடைய, பதாப்ஜ - தாமரைப்பூப்போலிருக்கிற திருவடிகளுடைய, தல - உள்ளங்கால்களுடைய, குணா: - கடுவை, ஸம்ஸ்ரிதாநி - அடைந்திருக்கிற, ச்சத்ர - கொடை என்ன, த்வஜ - கொடி என்ன, ஸரஸிஜ - தாமரைப்பூவென்ன, ஆதீநி - இவைகளை முதலாக உடைத்தாயிருக்கிற, ஸார்வபௌமலக்ஷணாநி - எல்லா லோகத்துக்கும் ராஜா என்பதற்கு அடையாளங்களை, மாத்ருசாநாம் - என்னைப் போன்றவர்களுக்கு, அவகமயஸி - தெரியப்படுத்துகிறாய்.

(கருத்து.) ஏ பாதுகையே! உன்பேரில் குடை, தாமரைப் பூ, த்வஜம் இவை முதலிய உயர்ந்த இந்தக் கோடுகளிருக்கின்றன. இதைப் பார்த்து பெருமாள் திருவடிகளிலும் இந்த கோடுகள் இருக்கின்றனஎன்று ஏற்படுகிறது. திருவடிகளில்இல்லாவிட்டால் பாதுகைகளில் எப்படி வரும்? இந்தமாதிரி கோடுகளிருந்தால் உலகத்துக்கெல்லாம் இராஜாக்களாக இருப்பார்கள் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது.

ஆழ்வார் முதலான ஆசார்யர்களிடத்தில் எல்லாஸங்கதிகளையும்உள்ளபடி அறிவது, ஜ்ஞானம், நல்லகாரியங்களை நினைத்தபடி முடிப்பது, சக்தி, தயை, பொருமை இவை முதலிய நல்ல குணங்களிருக்கின்றன. இவைகளைப் பார்த்து பெருமாளிடத்திலும் இப்பேர்ப்பட்ட நல்ல குணங்களிருப்பதாக நாம் நினைக்கிறோம். இல்லாவிட்டால் நாம் பெருமாளை எங்கே பார்த்தோம். (6)

(௮௧௭) ஸ்நாதா பதாவநி சிரம் ஸலிலார்த்ரா
பாதேந ரங்கந்ருபதே: சுபலக்ஷணேந |
ரேகாங்கிதேந பவஸாகரஸேதும்
ஸம்ஸ்காரவந்தமிவ ஸம்ஸ்ரிதே ||

ஹே பதாவநி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஸ்நாதா - ஸ்நானம் பண்ணினவளாயும், சுபலக்ஷண - நல்ல அடையாளங்களை உடைத்தாயிருக்கிற, ரங்கநாதஸ்ய - ரங்கநாதனுடைய, பாதேந - திருவடியினாலே, (ஒரு புருஷ

னாலே,) சிரம்-ரொம்பகாலம், பரிபுஜ்ய - அநுபவித்து, உஜ்ஜிதா - விடப்பட்டவளாயிருக்கிற, த்வம் - நீ, ஸம்ஸ்கார - அலங்காரத்துக்காக இருக்கிற, ஹரிசந்தநபங்க - பூசப்பட்ட குழம்பான சந்தனத்திலே, ஸக்தை: - சேர்ந்திருக்கிற, நவநவை: - புதிதுபுதிதாக இருக்கிற, ரேகாஶதை: - அநேகவிதமான கோடுகளாலே, உபஶோபஸே - விளங்குகிறாய்.

(கருத்து.) ஏ பாதுகையே! பெருமாள் வெளியில் எழுந்தருளும் ஸமயத்தில் உனக்குத் திருமஞ்சனம் பண்ணி, சந்தனங்களை ஸமர்ப்பித்து உன்னைத் திருவடிகளில் சாத்திக்கொள்வதற்காக ஸமர்ப்பிக்கிறார்கள். பெருமாள் ரொம்பநாழி சாத்திக் கொண்டு கழற்றினபிறகு அந்தத் திருவடிக் கோடுகள் முழுமையும் உன்பேரில் பதிந்திருக்கின்றன. அதினால் நீ ரொம்ப விளங்குகிறாய். ஆழ்வாரைப் பெருமாள் அநுபவித்தார் என்பதற்கடையாளம் ஆழ்வாரிடத்தில் திருத்துழாய் வாஸனை இருப்பது என்று திருவாய்மொழியில் அநேகஇடங்களில் ஸாதித்திருக்கிறார். (7)

(௮௧௮) பக்த்யா முஹு: ப்ரணதாநாம் த்ரிதசேஶ்வரா
ணாம் கோடீர கோடிகஷணாதுபஜாயமாநை:।
பாதி ஶௌரிபதாததிகாநுபாவா
ரேகாஶதைஸ்தவ பதாவநி காபி ரேகா ॥

ஹே பதாவநி - ஏ பாதுகையே! பக்த்யா - பக்தியினால், முஹு: - அடிக்கடி, ப்ரணதாநாம் - ஸேவியாநிற்கிற, த்ரிதசேஶ்வராணாம் - தேவச்ரேஷ்டர்களுடைய, கோடீர - கிரீடங்களுடைய, கோடி - நுனியினாலே, கஷணாத் - உரைவதினாலே, உபஜாயமாநை: - உண்டாகாநிற்கிற, தவ - உன்னுடைய, ரேகாஶதை: - அநேக கோடுகளாலே, ஶௌரிபதாத் - பெருமாளுடைய திருவடியைக் காட்டிலும், அதிகாநுபாவா - அதிகமான பெருமையை உடைத்தாயிருக்கிற, காபி - இன்னதென்று சொல்லமுடியாத, (அதாவது உயர்ந்ததான,) ரேகா - கோடானது, பாதி-விளங்குகிறது.

(கருத்து) ஏ பாதுகையே! தேவதைகளெல்லாம் உன்னை வந்து ஸேவிக்கிறார்கள். அவர்களுடைய கிரீடத்தினுடைய நுனி

கள் உன் பேரில் உரைவதினால் பெருமாள் திருவடிகளைக் காட்டி லும் உன் பேரில் அதிகமான கோடுகளிருக்கின்றன. அவைகளி னால் நீ விளங்குகிறாய்.

லோகத்தில் பிரும்மா, ருத்ரன் முதலானவர்களுக்கும் கூட ஐசுவர்யத்தில் அழிவு வரவில்லை. பரமபதத்தில் போய் பெருமா ளுக்குக் கைங்கரியம் பண்ண வேணும் என்கிற ஆசை வரவில்லை. ஆழ்வார் முதலான ஆசார்யாள் ப்ரும்மபட்டத்தைத் திருணமாக எண்ணுகிறார்கள். அதனால் இவைகளைப் பார்த்து ஆச்சர்யப் பட்டு ப்ரும்மா முதலானவர்கள் ஸேவிக்கிறார்கள். (8)

**(௮௯௯) பாதாவநி ப்ரதிபதம் பரபூருஷஸ்ய**
**பாதாரவிந்தபரிபோகவிஶேஷயோக்யா ।**
**ஸ்வாபாவிகாந் ஸுபகபங்க்திவிஶேஷத்ருஶ்யாந்**
**ரேகாத்மகாந் வஹஸி பத்ரலதாவிஶேஷாந் ॥**

ஹே பாதாவநி - ஏ பாதுகையே! **ப்ரதிபதம்** - அடிக்கடி, **பரபூருஷஸ்ய** - உயர்ந்த புருஷனான பெருமாளுடைய, **பாதாரவிந்த** - தாமரைப்பூப் போலிருக்கிற திருவடிகளுடைய, **பரிபோகவிஶேஷ** - உயர்ந்த அநுபவத்திற்கு, அதாவது சாத்திக்கொள்வதற்கு, யோக்யா - தகுந்தவளாயிருக்கிற, **த்வம்**-நீ **ஸ்வாபாவிகாந்** - ஸ்வயமாக ஏற்பட்டிருக்கிற, **ஸுபக** - இன்பமாக இருக்கிற, **பங்க்திவிஶேஷ** - வரிசை வரிசையாக இருப்பதினாலே, (உயர்ந்த பக்தியினால்) த்ருஶ்யாந் - பார்க்கத் தகுந்தவைகளாயிருக்கிற, **ரேகாத்மகாந்** - கோடுரூபமாக இருக்கிற, **பத்ரலதாவிஶேஷாந்** - உயர்ந்த மகரிகாதிபத்திரங்களை, **வஹஸி** - தாங்குகிறாய்.

(கருத்து.) ஏ பாதுகையே! நீ பெருமாள் சாத்திக்கொள்ளக் கூடியவளாயிருக்கிறாய். உன்பேரில் வரிசை வரிசையாகக் கோடுகளிருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் மகரிகாபத்திரங்கள்போலிருக்கின்றன. புருஷர்கள் பொம்மனாட்டிகளை அனுபவிக்குங்காலத்தில் நல்ல தளிர்களை மீன், கிளி இவை முதலானவைகள் போல் செய்து கன்னம் தோள் முதலான இடங்களில் ஒட்டுகிறது வழக்கமாம். அவைகளுக்கு மகரிகாபத்திரம் என்று பெயர்.

பெருமாள் அனுபவிக்கக்கூடியதான உயர்ந்த பக்தி முதலான குணங்கள் ஆழ்வார் முதலான ஆசார்யாளிடத்தில் இருக்

கின்றன. அதனால் அவர்களைப் பெருமான் வெகு ஸந்தோஷத்துடன் அனுபவிக்கிறார். (9)

(அ௨0) ரேகாவ்யபதேஶதஸ்த்வம் ப்ரஶமயிதும் ஸம்ப்லவவி-
ப்லவாஶங்காம் । வஹஸி ஶ்ரீரங்கநாதபதாவநி ஶங்கே
நிகமஸ்ய மாத்ருகாஸம்பதம் ॥

இதி ஸ்ரீகவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே ரேகாபத்ததிஸ்ஸப்தவிம்ஶீ ॥

---

ஹே ஸ்ரீரங்கநாதபதாவநி-ஏ பெருமானுடைய பாதுகையே! நிகமஸ்ய - வேதத்துக்கு, ஸம்ப்லவ - ப்ரளயகாலத்தில், விப்லவ- அழிவினுடைய, ஆஶங்காம் - ஸந்தேஹத்தை, ப்ரஶமயிதும் - போக்கடிப்பதற்கு, ரேகா - கோடுகளுடைய, வ்யபதேஶத:- வ்யாஜத்தினாலே, மாத்ருகா - அனேக புஸ்தகங்களுக்கு முதலாக இருக்கிற, ஸம்பதம்-எழுத்துக்களின் அமைப்பை, வஹஸி தாங்குகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன் பேரில் அனேகம் கோடுகளிருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் ப்ரளயகாலத்தில் வேதம் போய்விடுமோ என்கிற ஸந்தேஹத்தைப் போக்கடிப்பதற்காக உன் பேரில் எழுதி வைத்திருக்கிறாப் போலிருக்கிறது. ஒரு புஸ்தகம் ரொம்ப அபூர்வமாக இருக்கிறது. அதைப் பார்த்து ஆயிரம் பதினாயிரம் அச்சுப்போடுகிறார்கள். முதல் ப்ரதிக்கு மாத்ருகா என்று பெயர். ப்ரளயகாலத்தில் ப்ரக்ருதி ஜீவன் இரண்டும் சின்னதாக இருக்கிறது. ஸ்ருஷ்டிகாலத்தில் விரிவை அடைகிறது. அதாவது ப்ரகிருதி, பூமி முதலானதாக ஆகிறது. ஜீவன் தேவன் மனுஷ்யன் முதலான பேர், உருவம் இவைகளை அடைகிறான். அதுபோல் ப்ரளயகாலத்தில் வேதம் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. ஸ்ருஷ்டிகாலத்தில் விரிவை அடைகிறது. ப்ரளயகாலத்தில் அழிகிறதுமில்லை ஸ்ருஷ்டிகாலத்தில் புதியதாக உண்டாகிறதுமில்லை. உலகில் சில பாஷைகளைப் புதிதாய் உண்டுபண்ணுகிறார்கள். அப்படிப் போல் இல்லை ஸம்ஸ்கிருத பாஷை. சிலகாலம் அனேகம் பேர்கள் படிக்கிறார்கள். சிலகாலம் அதிகம் படிக்கிறதுமில்லை. அவ்வளவுதான். இந்த ச்லோகத்துக்கு சரியான பாவம் (பொருள்) அகப்படவில்லை. (10)

இருபத்தேழாவதான ரேகா பத்ததி முற்றிற்று.



ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீ ரங்கநாயக பாதுகா ஸஹஸ்ரே

அஷ்டாவிம்ஶீ ஸுபாஷித பத்ததி: ॥

—※—

(௮௭௧) கலாஸு காஷ்டாமதிஷ்டாது: மஹிம்நே ஸம்பந்திநாமபி । பாதுகா ரகுபுங்கவஸ்ய பரதாராத்யதாம் கதா ॥

கலாஸு - வித்யைகளில், காஷ்டாம் - உயர்த்தியை, அதிஷ்டாது - அடைந்தவன், ஸம்பந்திநாமபி - தன்னைச் சேர்ந்தவர்களுக்கும், மஹிம்நே - பெருமையின் பொருட்டு, பவதி - ஆகிறான், ரகுபுங்கவஸ்ய - ஸ்ரீ ராமாவதாரம்பண்ணின ரங்கநாதனுடைய, பாதுகா - பாதுகையானது, பரதாராத்யதாம் - பரதருக்கு ஆராதிக்கத் தகுந்ததாக இருக்குகையை, கதா - அடைந்தது.

(கருத்து) இந்தப் பத்ததியில் ராமாயணத்தில் சொல்லப் பட்ட செய்கைகளுக்கு கருத்து அருளிச்செய்கிறார். அதாவது — பெருமாள் அவதாரங்கள் பண்ணினது லோகத்தாருக்கு நல்ல அறிவை உண்டு பண்ணி, தன்மாதிரி நல்ல செய்கைகளைச் செய் விக்கைக்காக. ஆகையால் அந்த செய்கைகளின் கருத்தை ஸாதிக் கிறார். ராமனுடைய பாதுகையைப் பரதர் ஆராதித்தார். அத னால் என்ன ஏற்படுகிறது என்றால், ஒருவன் பெரிய பதவியி லிருந்தால் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் பெருமை கிடைக்கும். அதனால்தான் ஸ்ரீராமனுடைய பாதுகையைப் பரதன் ஆரா தித்தார். ஸ்ரீராமனிடத்தில் எல்லையில்லாத பெருமை இருந்த தினால் அவரைச் சேர்ந்த பாதுகைகளுக்கும் பெருமை கிடைத் தது. உலகத்தில் பெருமாளைச் சேர்ந்தவர்களைக் கொண்டாடுகி றார்கள். இராஜாவின் மனுஷ்யனைக் கொண்டாடுகிறார்கள். இந்த சுலோகத்தில் ஒருவன் கூத்தில் ரொம்ப கெட்டிக்காரனாக இருந் தால், கூத்துத் தெரிந்தவன் அவன் பாதுகையைக் கொண்டாடு கிறான் என்று ஒரு அர்த்தம் ஏற்படுகிறது.

(௮௨௨) ஸந்த: ஸ்வதேஶபரதேஶவிபாகஶூந்யம்
ஸாது ஸ்வக்ருத்யமநகம் ந பரித்யஜந்தி ।
ராஜ்யே வநே ச ரகுபுங்கவபாதரக்ஷா
நைஜம் ஜஹாதி ந கதாசந கண்டகஶோதநம் தத் ॥

ஸந்த: - பெரியோர்கள், ஸ்வதேஶ பரதேஶ விபாகஶூந்யம் - தங்களுடைய ஊர், பிறருடைய ஊர் என்று வாசியில்லாமல், அநகம் - குற்றமில்லாமலிருக்கிற, ஸ்வக்ருத்யம் - தன் வேலையை, ந பரித்யஜந்தி - விடுகிறதில்லை. ரகுபுங்கவ பாதரக்ஷா - ஸ்ரீ ராமனுடைய பாதுகையானது, ராஜ்யே - ராஜ்ஜியத்திலும், வநே - காட்டிலும், தத் - ப்ரஸித்தமான, நைஜம் - தன்னுடையதாயிருக்கிற, கண்டகஶோதநம் - முள்ளில்லாமல் பண்ணுகிறதை, சத்துருக்களில்லாமல் பண்ணுகிறதை, ந ஜஹாதி கதாசந - விடவில்லையன்றோ !

(கருத்து) பெரியோர்கள் ஒரு காரியம் செய்துகொண்டிருந்தால், அந்தக் காரியத்தை உள்ளூரோ அயலூரோ ராத்திரியோ பகலோ எல்லாக் காலத்திலும் எல்லாவிடத்திலும் ஒரே மாதிரி செய்வார்கள். அதனால்தான் ஸ்ரீ ராமனுடைய பாதுகை கண்டகசோதனம் என்கிற கார்யத்தை ராஜ்யத்திலும் காட்டிலும் பண்ணிற்று. (காட்டில் முள் இல்லாமல் பண்ணிற்று. ராஜ்யத்தில் சத்துருக்களில்லாமல் பண்ணிற்று.)

ஆழ்வார் முதலான நல்ல ஆசாரியர்கள் பெருமாளை நினைப்பது முதலான நல்ல காரியங்களை ஒருவருக்காகச் செய்கிறதில்லை. ஸ்வபாவமாக எப்போதும் செய்கிறார்கள். (2)

(௮௨௩) ப்ரஹ்மாஸ்த்ரதாமதிஜகாம த்ருணம் ப்ரயுக்தம்
புண்யம் ஶரவ்யமகமத் பயஸாம் நிதிஶ்ச ।
ப்ருத்வீம் ஶஶாஸ பரிக்ருஹ்ய பதம் பதத்ரம்
கிம் வா ந கிம் பவதி கேளிவிதௌ விபூநாம் ॥

ப்ரயுக்தம் - பிரயோகம் பண்ணப்பட்ட, த்ருணம் - புல்லானது, ப்ரஹ்மாஸ்த்ரதாம் - ப்ரும்மாஸ்த்ரமாக இருக்குகையை, அதிஜகாம - அடைந்தது. புண்யம் - புண்யமும், பயஸாம் நிதி: - ஸமுத்திரமும், ஶரவ்யம் - பாணத்துக்குக் குறியாக,

ஸம்பந்நம் - ஆயிற்று. பரிக்ஷிப்தே - விடப்பட்டிருக்கிற, பதம் - திருவடியை யுடைத்தாயிருக்கிற, பதத்ரம் - ராமபாதுகையானது, ப்ருத்வீம் - பூமியை, ரரக்ஷ - காப்பாற்றிற்று. விபூதிமதாம் - ரொம்ப சக்தி உள்ளவர்களுடைய, கேலிஷு - விளையாட்டு வியாபாரத்தில், கிம் வா - எந்த வஸ்துதான், கிம் ந பவதி - எந்த வஸ்துவாக ஆகமாட்டாது.

(கருத்து) ஒருவன் ரொம்ப வியாபகனாக இருந்தால் எந்த வஸ்துவைக் கொண்டும் எந்தக் காரியத்தையும் பண்ணுவன். ஸ்ரீராமனுக்குப் புல் பிரும்மாஸ்திரத்தின் வேலையைச் செய்தது. ஸ்ரீ ராமன், கைக்கும் கண்ணுக்கும் அகப்படாத ஸ்ரீ பரசுராமனுடைய புண்ணியத்தைப் பாணத்தினால் அடித்தார். ஒரு பாணத்தைப் போட்டு ஸமுத்திரத்தை வற்ற அடித்தார். ஸ்ரீராமன் பாதுகையைப் பரதன் ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளப்பண்ணினார். அந்தப் பாதுகை ஒரு குறைவில்லாமல் பதினான்கு வருஷகாலம் இராஜ்யத்தை ஆண்டது. இதெல்லாம் ஸ்ரீ ராமன் சக்தி. (3)

(அஉச) அந்யேஷு ஸத்ஸ்வபி நரேந்த்ரஸுதேஷு தைவாத்
பதாத் ப்ரஷ்ட: பதமதிகரோதி பதம் பதார்ஹ: ।
ச்சாயோ நிதர்சயத: தத் ப்ரதமோ ரகூணாம்
தத்பாதயோ: ப்ரதிநிதி: மணிபாதுகே வா ॥

அந்யேஷு - வேறான, நரேந்த்ரஸுதேஷு - இராஜாவின் பிள்ளைகள், ஸத்ஸ்வபி - இருந்தாலும், தைவாத் - தைவ ஸங்கல்பத்தினாலே, பதாத் - பட்டத்திலிருந்து, ப்ரஷ்ட: - நழுவினவனான, பதார்ஹ: - பட்டத்துக்குத் தகுந்தவன், பதம் - பட்டத்தை, அதிகரோதி - அடைகிறான், தத் - அந்த ஸங்கதியை, ரகூணாம் ப்ரதம: - ரகுவம்சத்து ராஜாக்களுக்கு முந்தினவரான ராமனும், தத்பாதயோ: - அவர் திருவடிகளுக்கு, ப்ரதிநிதி - பதிலாகவிருக்கிற, மணிபாதுகே வா - கல்லிழைத்த பாதுகைகளும், நிதர்சயத: ச்சாயோ: - காண்பிக்கிறார்கள் போல.

(கருத்து.) உலகத்தில் ஒரு மனுஷ்யனுக்கு ஒரு பதவி வர வேண்டியதாயிருந்தது. அவனும் அதற்குத் தகுந்தவனாக இருக்கும்போது ஏதோ தைவஸங்கல்பத்தினால் அது அப்போது தவறினாலும் அவனுக்கே அந்த பதவி இன்னொரு ஸமயம் வந்து விடும். அப்படி அவனுக்குத் தவறின ஸமயத்தில் பதினாயிரம் பேர்களும் அவனோடு கூடப்பிறந்தவர்களும் இருந்தாலும் அந்தப்பதவிக்குத் தகுந்தவன்தான் அந்தப் பதவிக்கு வருவான். ஸ்ரீ ராமனுக்கு அயோத்தியில் பட்டம் கட்ட வேண்டிய ஸமயத்தில் ஏதோ காரணத்தினால் பட்டாபிஷேகம் நின்றுவிட்டது. அப்போது நின்று விட்டாலும் மறுபடியும் அவருக்கே வந்தது. நின்ற ஸமயத்திலும் அவர் தம்பிமார்கள் இருக்கச் செய்தேயும் பட்டத்துக்குத் தகுந்ததான ஸ்ரீ ராமபாதுகைகளுக்குப் பட்டமாயிற்று. (4)

(அஉரு) சரணமநகவ்ருத்தேஃ கஸ்யசித் ப்ராப்ய நித்யம்
ஸகலபுவநகுப்த்யை ஸத்பதே வர்த்ததே யஃ | நரபதிபஹுமாநம் பாதுகேவாதிகச்சந் ஸ பவதி ஸமயேஷு ப்ரேக்ஷிதஜ்ஞைருபாஸ்யஃ ||

யஃ - யாதொருவன், அநக - குற்றமில்லாமலிருக்கிற, வ்ருத்தேஃ - கார்யத்தை யுடைத்தாயிருக்கிற, கஸ்யசித் - ஒரு பெரியவருடைய, சரணம் - திருவடியை, அவர் அனுஷ்டானத்தை, ப்ராப்ய - அடைந்து, ஸகலபுவநகுப்த்யை - எல்லாலோகத்தையும் காப்பாற்றுவதற்காக, ஸத்பதே - நல்ல வழியிலே, நல்ல நடைத்தையில், வர்த்ததே - இருக்கிறானோ, ஸஃ - அவன் பாதுகேவ - பாதுகை போல், நரபதிபஹுமாநம் - ராஜாக்களுக்கு பண்ணுகிற மர்யாதையை, ராஜாக்களால் செய்யப்படும் மர்யாதையை, அதிகச்சந் - அடையா நின்றுகொண்டு, ஸமயேஷு - அந்தந்தக்காலங்களில், ப்ரேக்ஷிதஜ்ஞைஃ - ஜாடைதெரிந்தவர்களால், உபாஸ்யஃ - ஸேவிக்கத் தகுந்தவனாக, பவதி - ஆகிறான்.

(கருத்து.) ஸ்ரீராமனுக்கு ஒரு ஸமயம் பட்டம் போய் மறுபடியும் பட்டம்வந்ததையும், அவர் பாதுகைக்கு பட்டம்வந்ததை

யும் பார்த்தால், ஒரு பெரியவர் திருவடியை, அவரனுஷ்டானத்தை அடைந்து நல்ல வழியிலிருந்தானேயானல், அவனுக்குப் பெரிய பதவி வரும். ஸ்ரீ ராமன் அவர் தகப்பனரிடத்தில் ரொம்ப பக்தியுள்ளவராய் வஸிஷ்டர் முதலான நல்ல ஆசார்யரிடத்தில் பக்தியுள்ளவராய் இருந்தார். அவர் சக்ரவர்த்தி பட்டத்தை அடைந்து, பதினயிரம் பேர்கள் புருவத்தைப் பார்த்து வேலை செய்யும்படி ப்ரபுவாயிருந்தார். பாதுகை ஸ்ரீ ராமன் திருவடிகளை ஆச்ரயித்தது. நல்ல வழியிலிருந்தது. அதற்குப் பெரிய ராஜ்யம் கிடைத்தது. (5)

(அஉகூ) ராமே ராஜ்யம் பிதுரபிமதம் ஸம்மதஞ்ச ப்ர
ஜாநாம் மாதா வவ்ரே ததிஹ பரதே ஸத்ய
வாதீ ததௌ ச । விஜ்ஞாதீதஸ்ஸமஜநி ததா பா
துகாராஜ்யாபிஷேகோ துர்விஜ்ஞாநஸ்வஹ்ருத
யமஹோ தைவமத்ர ப்ரமாணம் ॥

ராமே-ராமனிடத்தில், ராஜ்யம் - ராஜ்யமானது, பிது:- தகப்பனரான தசரதருக்கு, அபிமதம் - இஷ்டமாயிருந்தது, ப்ரஜாநாம்ச - ஜனங்களுக்கும், ஸம்மதம்-இஷ்டமாயிருந்தது, தத் - அந்த ராஜ்யத்தை, மாதா - தாயாரான கைகேயியானவள், பரதே - பரதனிடத்தில், வவ்ரே - கேட்டாள், ஸத்யவாதீ - நிஜம் சொல்லுகிறவரான தசரதரானவர், ததௌ ச - கொடுக்கவும் கொடுத்தார், ததா - அந்த ஸமயத்தில், விஜ்ஞாதீத: - ஒருவராலும் நினைக்கப்படாத, பாதுகாராஜ்யாபிஷேக:-உயர்ந்த பாதுகையின் பட்டாபிஷேகமானது, ஸமஜநி - நடந்தது, அத்ர - இந்த விஷயத்தில், துர்விஜ்ஞாந-அறியமுடியாமலிருக்கிற, ஸ்வ- தன்னுடைய, ஹ்ருதயம் - மனஸ்ஸை உடைத்தாயிருக்கிற, தைவம் - தைவமானது, ப்ரமாணம் - காரணம்.

(கருத்து) தசரதர் ராமனுக்குப் பட்டம் கட்ட வேணும் என்று நினைத்தார். ஜனங்களும் அப்படியே ஆகவேணுமென்று சொன்னர்கள். கைகேயி ராமனுக்குக் கூடாது, பரதனுக்குக் கட்டவேணும் என்றாள். தசரதரும் ஸத்யம் தவராமல் கொடுத்தார். அப்போது ஒருவரும் நினைக்காத பாதுகைக்குப் பட்டம்

கிடைத்தது. லோகத்தார் நினைத்தபடி ஒன்றும் நடக்கிறதில்லை. தைவம் தனியாக ஒன்றைத் தனியாக நடத்துகிறது என்று ஏற்படுகிறது. (6)

(அஉஎ) நாதிக்ராமதி பதத்ராணநாத் பாதுகா பாத
பீடம் அப்யாஸந்நம் பரிதஸ் ஸதா பாதி ரா
ஜாஸநஸ்ய | பூர்வஸ்யாமேவ ந்யஸ்தம்
ஆஸீத் ராமேண ராஜ்யம் மந்யே பர்த்து:
ப்ரசஸ்திபதம் விக்ரமே ஸாஹசர்யம் ||

பதத்ராணநாத் – திருவடியைக் காப்பாற்றுகிறதினால், பாதுகா - பாதுகையானது, பாதபீடம் – திருவடிமேடையை, நாதிக்ராமதி - அதிக்கிரமிக்காது, அபி – மேலும், பாதபீடம் – திருவடிமேடையானது, ஸதா - எப்பொழுதும், ராஜாஸநஸ்ய - ஸிம்ஹாஸனத்துக்கு, ஆஸந்நம் – கிட்டினதாக, பாதி - விளங்குகிறது, ராமேண - ராமனாலே, ராஜ்யம், பட்டமானது, பூர்வஸ்யாமேவ – முதலில் சொன்ன பாதுகையினிடத்திலேயே, ந்யஸ்தம் – வைக்கப்பட்டதாக, ஆஸீத் - ஆயிற்று, விக்ரமே - நடக்கிறகாலத்தில் (பராக்ரமத்தில்) ஸாஹசர்யம் – கூடநடக்கிறதானது, பர்த்து: - யஜமானனுக்கு, ப்ரசஸ்திபதம் – கொண்டாடுகிறதற்குக் காரணமாக, மந்யே - நினைக்கிறேன்.

(கருத்து.) ஒரு ஸமயத்தில் ராமன் பாதுகையினிடத்தில் ராஜ்யத்தைக் கொடுத்தார், திருவடியைத் தூக்குவதற்காகவோ கொடுத்தார்? இல்லை. அப்படி யிருந்தால் திருவடிமேடைக்குக் கொடுத்திருக்கலாமே! மேலும், அது ஸிம்ஹாஸனத்துக்குக் கிட்டவே இருக்கிறதே. பின் எதற்காக என்றால்? கெட்டிக்காரனாக இருந்து சூரத்தனமாகக் கூட வேலை செய்ததினால் கொடுத்தார். விக்ரமே – என்பதற்கு நடக்கிறது என்று ஒரு அர்த்தம். (7)

(அஉஅ) ப்ரதிபதமவரோதவதீ பாதுகா ரகுபதி
நா ஸ்வயம் நிவேசிதா | ஸஜ்ஜநி நிஸ்ஸ்ருதஸ்ஸ்திதி
ஸ்தா பவதி ஜந: ஸ்ரீயஸஸ்ப்ருஹயாஷாம் ||

பாது³கா - பாதுகையானது, பதே³ பதே³ - அடிக்கடி அடி வைப்புதோறும், சலாऽபி - அசங்குகிறதாக இருந்தாலும், ராக⁴வேந்த்³ராத் - ஸ்ரீ ராமனாலே, ஸ்வபதே³ - தன் பட்டத்தில், நிவேஶிதா - வைக்கப்பட்டதாய்க் கொண்டு ததா³ - அந்த ஸமயத்தில், நிஶ்சல - அசங்காமலிருக்கிற, ஸ்தி²தி: - இருப்பை உடைத்தானதாக, அபூ⁴த் - ஆயிற்று, ஶ்ரியம் - ஸம்பத்தை, ஸமாஶ்ரயமாணாநாம் - அடைகிறவர்களுக்கு, கு³ண: - குண மானது, ப⁴வதி - ஆகிறது.

(கருத்து.) பாதுகை நின்ற விடத்தில் நிற்காது என்பது வழக்கம். அப்படிப்பட்டது ராமனிடத்திலிருந்து பட்டத்தை அடைந்த உடனே ஒரே இடத்தில் நிலையாக இருந்துவிட்டது. இதைப் பார்த்தால் பணம் வந்தால் குணம் வருகிறதென்று ஏற் படுகிறது. அழக்கு பணத்துக்கு ஒழுக்கு சமத்து என்று சொல் லுவார்கள். அது ஸரியாகத்தானிருக்கிறது. (8)

(௩௦௯) ஸஞ்சாரஹேதுராஸீதே³கத்ர பதே³ ஸ்தி²திஹேது
ர்மணிபாது³கா ஏகத்ர | ந ஹி வஸ்துஷு
ஶக்திநியமோ நியதி: கேவலமீஶ்வரேச்ச²யா ||

மணிபாது³கா - கல்லிழைத்த பாதுகையானது, ஏகத்ர பதே³ - ஒரு ஸ்தானத்திலே, அதாவது திருவடியிலே, ஸஞ்சாரஹேது: - ஸஞ்சாரத்துக்குக் காரணமாக, ஆஸீத் - ஆயிற்று, ஏகத்ர பதே³ - ஒரு இடத்தில் அதாவது ஸிம்ஹாஸனத்திலே, ஸ்தி²திஹேது: - காப்பாற்றுவதற்கு, (ஒரு இடத்தில் இருப்பதற்குக்) காரணமாக, ஆஸீத் - ஆயிற்று, வஸ்துஷு - வஸ்துக் களிலே, ஶக்திநியமோ ந ஹி - இன்ன சக்திதான் என்கிற நிச் சயமில்லை, நியதி: - கட்டுப்பாடானது, ஈஶ்வரேச்ச²யா - கேவ லம் - ஈச்வரனுடைய நினைவினால்தான்.

(கருத்து.) பாதுகை பெருமாள் திருவடியில் சாத்திக்கொள் ளும்போது தானும் ஸஞ்சரித்துப் பெருமாளுக்கும் ஸஞ்சாரத் தைக்கொடுத்தது. ஒரேயிடத்தில் நிலையாக விருந்து எல்லா லோ கத்தையும் காப்பாற்றுகிறது. இந்த வஸ்துவுக்கு இந்த சக்தி

தான் என்று கட்டுப்பாடு கிடையாது. தைவமாகப் பார்த்து இல்லாததையும் கொடுக்கலாம். இருக்கிறதையும் இல்லாமல் பண்ணலாம் என்று ஏற்படுகிறது. (9)

(௮௱) அபரிக்ருதோ(அ)பி மஹதா தமேவ ஸேவேத
ஸாதரம் ஸஹிஷ்ணு: | அலபத ஸமயே ராமாத்
பாதாக்ராந்தாபி பாதுகா ராஜ்யம் ||

இதி கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஶ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஶ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே ஸுபாஷித
பத்ததிரஷ்டாவிம்ஶீ ||

---

ஸஹிஷ்ணு: - க்ஷமத்தை யபேக்ஷிக்கிறவன், மஹதா - பெரியமனுஷ்யனாலே, அபரிக்ருதோ(அ)பி - இளப்பமாகப் பண்ணப் பட்டாலும், தமேவ - அந்தப் பெரியவரையே, ஸாதரம் - ஆதரவோடு கூடவே, ஸேவேத - ஸேவிக்கவேணும், பாதுகா - பாதுகையானது, பாதாக்ராந்தாபி - திருவடியாலே மிதிக்கப் பட்டாலும், ஸமயே - ஒரு ஸமயத்திலே, ராமாத் - ராமனிடத்திலிருந்து, ராஜ்யம் - ராஜ்யத்தை, அலபத - அடைந்தது.

(கருத்து.) பாதுகைக்குப் பட்டம் வந்ததினால் என்ன ஏற்படுகிறதென்றால், ஒரு பெரியவராக இருக்கிற ஒருவர், ஒருவரை என்ன அவமானம் பண்ணினாலும் அவைகளைப் பொறுத்துக் கொண்டு ப்ரீதியோடு அவரிடமே இருக்கவேணும். அவமானத்துக்கு பயந்துவிடக் கூடாது. என்றைக்காவது ஒருநாள் விசேஷஸௌக்கியம் கிடைக்கும். பாதுகையை ஸ்ரீராமன் காலில் போட்டு மிதித்துக் கொண்டிருந்தார். அந்த பாதுகை அவரை விடாதிருந்தது. ஒரு ஸமயம் பட்டம் வந்தது. (10)

இருபத்தெட்டாவதான ஸுபாஷிதபத்ததி முற்றிற்று.



ஶ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:॥

ஶ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே

ஏகோநத்ரிம்ஶீ சித்ரபத்ததி:॥



(அநுஷ்) விபௌ ப்ரவ்ருத்தே யத்த்ரவ்யம் ம்ருது ஸம்ஸ்கார நா
மபி: । ஶ்ரேய:ஸாதநமாம்நாதம் தத்பதத்ராணம் ஶ்ரேய
ஸேऽஸ்து மே ॥

த்ரவ்யம் - க்ஷேமத்தைப் பண்ணுகிறதாயிருக்கிற, யத்-யா தொரு பாதுகையானது, விபௌ - பெருமாளானவர், ப்ரவ்ருத்தே - ஸஞ்சாரத்துக்கு ஆரம்பித்தபோது, ம்ருது - மெதுவாயிருப்பது, கனமில்லாமலிருப்பது முதலியவைகள் என்ன, ஸம்ஸ்கார - அலம்புகிறது சந்தனம் பூசுவது முதலியவைகள் என்ன, நாம - பாதுகா பாதரக்ஷா சடகோபம் முதலானபேர்கள் என்ன இவைகளோடு கூடினதாய்க் கொண்டு, ஶ்ரேய: - உயர்ந்ததான, ஸாதநம் - ஸஞ்சாரத்தையுண்டுபண்ணுகிறதாக, ஆம்நாதம் - சொல்லப்பட்டதோ, தத் - அந்த பதத்ராணம் - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையானது, மே - எனக்கு, ஶ்ரேயஸே - ச்ரேயஸ்ஸுக்கு மோக்ஷத்துக்குக் காரணமாக, அஸ்து - ஆகவேணும். விபௌ - யாகமானது, ப்ரவ்ருத்தே - நடத்தப்படும்போது, த்ரவ்யம் - ஆடு முதலான திரவ்யமானது, ம்ருது - வெளுப்பு முதலானதென்ன ஸம்ஸ்கார - ப்ரோக்ஷணம் முதலானதென்ன, நாம - யாகத்தின் பேர்களென்ன இவைகளோடு கூடினதாய்க் கொண்டு, ஶ்ரேய:ஸாதநம் - ஸ்வர்க்கம் முதலானஸுகங்களுக்குக் காரணமாக, ஆம்நாதம் - வேதத்தில் சொல்லப்பட்டது.

(கருத்து.) ரொம்ப மிருதுவாயும் லேசாயுமிருக்கப்பட்ட பாதுகையை அலம்பி சந்தனம் முதலானவைகளைச் சாத்தி பெருமாள் வெளியில் எழுந்தருளும் போது திருவடிகளில் ஸமர்ப்பிக்கிறார்கள். அதைச் சாத்திக் கொண்டு பெருமாள் எழுந்தருளுகி

ளூர். அந்த பாதுகை எனக்கு மோக்ஷம் கொடுக்கவேணும். ஒவ்வொருயாகங்களுக்கும் ஆடு முதலான த்ரவ்யங்கள் வெளுப்புமுதலான குணமுள்ளனவாக இருக்கவேணும் என்றுவேதத்தில் சொல்லியிருக்கிறது. சாஸ்திரத்தில் சொல்லியபடி அந்த திரவ்யங்களுக்குச் சில கார்யங்களைச் செய்து அக்னிஷ்டோமம் வாஜபேயம் இவை முதலான பெயர்களுள்ள யாகங்களைச் செய்தால் ஸ்வர்க்கம் முதலான ஸுகம் யாகம் செய்தவனுக்குக் கிடைக்கிறது என்று சொல்லியிருக்கிறது- என்றும் ஒரு அர்த்தம் ஏற்படுகிறது.

தயை, பொறுமை, விவேகம், இவை முதலிய நல்ல குணங்களுள்ள நல்ல ஆசாரியர்களைக் கொண்டு பெருமாள் உலகத்தைக் காப்பாற்றுகிறார் என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. அந்த ஆசாரியர்கள் எனக்கு க்ஷேமத்தைக் கொடுக்கவேண்டும்.

**விபோ** - பெருமாளானவர், **ஸ்ருஷ்டௌ** - ஒரு ஜீவனுக்கு நல்ல கதியைக் கொடுக்க ஆரம்பித்தபோது, **குண** - தயை முதலான குணங்களென்ன, **ஸம்ஸ்கார** - உபநயனம் முதலான அந்தந்த ஜாதிக்கு ஏற்பட்டவைகளென்ன, பொதுவான பஞ்சஸம்ஸ்காரம் முதலியவைகளென்ன, **நாம** - வைஷ்ணவன் பாகவதன் முதலான பெயர்களென்ன, இவைகளாலே இவைகளை உண்டு பண்ணி, ஶ்ரேயஃஸாதநம்-மோக்ஷத்துக்கு ஸாதனமாக.

(கருத்து) பெருமாள் ஒருவனைக் கடாக்ஷித்தபோது (பார்த்தபோது) நல்ல ஆசார்யாள் ஏற்பட்டு நல்ல அறிவு, தயை, பொறுமை முதலான குணங்களை உண்டுபண்ணி நல்ல ஸம்ஸ்காரங்களையும் பண்ணி, குப்புசாமி, துரைசாமி முதலான பெயர்களை மாற்றி, ஶ்ரீநிவாஸன், ரங்கநாதன், வரதன் இவை முதலான பெயர்களை வைத்து நல்ல கதி வரும்படி செய்கிறார்கள்.

**விபோஃ ஸ்ருஷ்டௌ** நல்ல கர்மம் பரிக்குவமானபோது (பலத்தைக்கொடுக்க ஆரம்பிக்கும்போது.)

இந்த பத்ததியில் பல ஸங்கதிகளைப்பற்றி வர்ணிக்கிறார். ஒரு ஸங்கதி என்ற கட்டுப்பாடு இல்லை. அதனால் இதற்கு ப்ரகீர்ணபத்ததி என்று பெயர். (1)

(௮௯௨) ஸ்மேரஸ்மிதரம்யமௌக்திகஶ்ரீர்விஶஸி வ்யஞ்ஜித
மஞ்ஜுநாதா । ஸஹ ரங்கப்ருதேவ வா
ஸகேஹம் தநுமத்யா மணிபாதுகே த்வமேகா ॥

மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! ஸ்மேர - இன்பமான, ஸ்மித - சிரிப்புப்போலே, ரம்ய - அழகாயிருக்கிற, மௌக்திக - முத்துக்களுடைய, ஶ்ரீ: - காந்தியையுடைத்தாயும், வ்யஞ்ஜித - பிரகாசப்படுத்தப்பட்ட, மஞ்ஜு - அழகான, நாதா: - சப்தத்தையுடைத்தாயும், வார்த்தைகளை உடைத்தாயும், தநுமத்யா - சின்னதான நடுவை உடைத்தாயும், இடுப்பை உடைத்தாயும் இருக்கிற, த்வம் - நீ, ஏகா - ஒருத்தியாயிருந்துகொண்டு, வாஸகேஹம் - இருப்பிடத்தை, அதாவது ரங்கவிமானத்தை, விஶஸி - பிரவேசிக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்து இழைத்திருக்கிறது. அதைப்பார்த்தால் சிரிப்பதுபோல் இருக்கிறது. உன்னைச் சாற்றிக்கொண்டு எழுந்தருளுகிறபோது குமிழின் ரத்னங்கள் சப்திக்கின்றன. அப்படிப்பட்ட உன்னைச் சாற்றிக்கொண்டு தனியாகப் பெருமாள் உள்ளே எழுந்தருளுகிறார்.

நிரம்ப லக்ஷணமுள்ள மகாலக்ஷ்மியோடே தனியாக அந்தப்புரத்துக்கு எழுந்தருளுகிறார் என்று ஒரு அர்த்தம் ஏற்படுகிறது.

(௮௯௩) ஸாமஸ்வரவிஶேஷஸம்ஶ்ரிதாபிஸ்ஸதீ ஶௌ
ரிபதாவநி க்ரியாபி: । அநாதிஶதி நந்தநமா
ஶ்ரிதாநாமவிஶேஷவஶ்யவஶாஞ்ஜிகம் நவீநம் ॥

ஶௌரிபதாவநி - பெருமாளுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஸதீ - நீயானவள், ஸாம - க்ஷேமத்தைப் பண்ணுகிறதாகவிருக்கும், ஸ்வரவிஶேஷ - உயர்ந்த சப்தத்தை(மந்திரங்களை), ஸம்ஶ்ரிதாபி: - அடைந்திருக்கிற, க்ரியாபி: - ஸஞ்சாரங்களாலே, (வேதத்தில் சொல்லியிருக்கும் நல்ல கர்மங்களாலே), ஆஶ்ரிதாநாம் - தன்னை அடைந்தவர்களுக்கு, நவீநம் - புதிதான, அவிஶேஷவஶ்யவஶாஞ்ஜிகம் - எல்லா

உபத்திரவங்களையும் போக்குகிறதான கார்யத்தை, ஸந்தநோஷி - செய்கிறாய், நூநம் - நிச்சயம்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச் சாற்றிக்கொண்டுபெருமாள் எழுந்தருளுகிறகாலத்தில் உன்னுடைய சப்தம் ரொம்ப இன்பமாயிருக்கிறது. அப்படி எழுந்தருளி, தன்னை அடைந்தவர்களுக்கு ஸகலமான கஷ்டங்களையும் போக்குகிறார். அதைப் பார்த்தால் நீ ஜநங்களுடைய கஷ்டத்தைப் போக்குவதற்காக நல்ல மந்திரங்களைச் சொல்லிப் புதிதாக ஒரு யாகம் செய்வது போல் இருக்கிறது. இன்பமான சப்தத்துடன் பெருமாளை வீதியில் எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து எல்லா ஜநங்களுடைய எல்லாக் கஷ்டத்தையும் போக்குகிறாய்.

ஆழ்வார் ஸர்வவேதத்தின் ஸாரமான அர்த்தங்களை, தமிழ்ப்ரபந்தமாகச் செய்து சரணாகதி என்கிற ஸுலபமான உபாயத்தைத் தானும் செய்து உலகத்தாருக்கும்காட்டிக்கொடுத்து, ஒன்றும் தெரியாத ஜநங்களும் ஸுலபமாக மோக்ஷத்தை அடையும்படியான புதிதான ஒரு வழியை ஏற்படுத்தினார். (3)

**(அநுசு) மணிபி: ஶௌரிபாதாவநி பவதீ விக்ரமே**
**பூமஸம்ப்ருதா । யுகபதுத்பவதாம் யுகா**
**ந்தகாலே திவி மோஷம் விததே திவாகராணாம் ॥**

ஶௌரிபாதாவநி - பெருமாள் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! **பவதீ** - நீயானவள், **விக்ரமே** - உலகத்தை அளக்கிறகாலத்தில், **பூமஸம்ப்ருதா** - வளரா நின்றுகொண்டு, **மணிபி:** - உன்னிடத்திலிழைத்திருக்கிற ரத்னங்களாலே, **திவி** - ஆகாசத்திலே, **யுகாந்தகாலே** - பிரளயகாலத்தில், **யுகபத்** - ஒரே ஸமயத்தில், **உத்பவதாம்** - உண்டாயிருக்கிற, **திவாகராணாம்** - ஸூர்யர்களுடைய, **மோஷம்** - சோரணையை **விததே** - பண்ணினாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் திருவிக்ரமாவதாரம் பண்ணினபோது நீ ரொம்ப பெரிதாய் வளர்ந்தாய். அப்போது உன்னிடத்திலிருக்கும் பெரிய பெரிய ரத்நங்களை ஸேவிக்கும்

போது பிரளயகாலத்தில் எல்லையில்லாத ஸூர்யன்கள் உதிப் பார்களென்றுசொல்லியிருக்கிறது. அதுபோலிருந்தது ஆகாசம்.

ஆழ்வார் பாசுரங்களின் உண்மையானகருத்து மனதில் பட்டால் பதினாயிரம்கோடி ஸூர்யன் பிரகாசத்தைக் காட்டிலும் அதிகமான பிரகாசம் உண்டாகிறது. (4)

(௮௫) மஞ்ஜுஸ்வநாநாம் மணிமயூகஸங்குலாநாம் த்வாம்
த்ருஷ்ட்வா ஜடாடவீஸவிதே விநிவேசிதாநாம் ।
நிலீயந்தி ககபதித்வஜபாதரக்ஷே
ஸபூத்காரவந்தி புரவைரிவிபூஷணாநி ॥

ககபதித்வஜ பாதரக்ஷே - கருடனைக் கொடியாக உடைத்தான பெருமாள் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! புரவைரி-த்ரிபுராஸுரனுக்குச் சத்துருவான சிவனுடைய, விபூஷணாநி - நகைகளான பாம்புகள், மஞ்ஜுஸ்வநாநாம் - இன்பமான சப்தத்தை உடைத்தாயும், மணி - ரத்தினங்களுடைய, மயூக - கிரணங்களுடைய, ஸங்குலாநாம்-கூட்டத்தை உடைத்தாயும், ஜடாடவீ - ஜடைக்கூட்டத்தினுடைய, ஸவிதே-ஸமீபத்திலே, விநிவேசிதாநாம் - வைக்கப்பட்டிருக்கிற, த்வாம் - உன்னை, த்ருஷ்ட்வா - பார்த்து, ஸபூத்காரவந்தி - பெருமூச்சு விட்டுக்கொண்டு, நிலீயந்தி-ஒளிகின்றன.

(கருத்து) ஏ பாதுகையே! சிவன் உன்னைத் தலையில் வைத்துக்கொள்ளுகிறார். அப்போது அவருக்கு நகையான பாம்புகள் உன்னைக்கண்டு பெருமூச்சு விட்டுக்கொண்டு ஒளிகின்றன. ஏனென்றால் நீ இன்பமாய் சப்திக்கிறாய். உன்பேரில் வெளுப்பு சிகப்பு முதலான அநேக வர்ணமுள்ள ரத்நங்கள் இழைத்திருக்கின்றன. அந்த காந்திகளைப் பார்க்கும்போது உன்னை மயில் என்று நினைக்கின்றன.

ஆழ்வார் பாசுரங்களின் கருத்தை உண்மையாக அறிந்தவர்களைக்கண்டு எல்லாப் பாபங்களும் நடுங்கி இருந்தவிடம் தெரியாமல் ஓடுகின்றன. (5)

(அநு) மத்⁴யே ஸ்பு²ரிதநிர்மலஹேமதாரா
ப்ராந்தேஷு ரத்னநிகரேண விசித்ரவர்ணா ।
புஷ்ணாஸி ரங்க³நாத²பதேர்மணிபாது³கே த்வம்
சக்ஷுர்வஶீகரணயந்த்ரவிஶேஷஶங்காம் ॥

ரங்க³நாத²பதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, மணிபாது³கே - கல்லிழைத்த பாதுகையே! மத்⁴யே - நடுவில், ஸ்பு²ரித - விளங்காநிற்கிற, நிர்மல - அழுக்கில்லாமலிருக்கிற, ஹேம - தங்கமென்ன, தாரா - முத்துக்களென்ன இவைகளை உடைத்தாயிருக்கிற, ப்ராந்தேஷு - ஓரங்களில், ரத்னநிகரேண - ரத்தினத்தின் கூட்டத்தினாலே, விசித்ரவர்ணா - வெளுப்பு சிகப்பு முதலான அநேக ரூபங்களை உடைத்தாயிருக்கிற, த்வம் - நீ, சக்ஷுர்வஶீகரணயந்த்ரவிஶேஷ - பார்க்கிறவர்களுடைய கண்ணை ஸ்வாதீநப்படுத்தக்கூடிய ஒருவித யந்திரத்தினுடைய, ஶங்காம் - ஸந்தேஹத்தை, புஷ்ணாஸி - உண்டுபண்ணுகிறாய்.

நிர்மல - அப்ரகமென்கிற வஸ்துவிலிருக்கிற, ஹேம - சந்திரன்போலே உருண்டையாயிருக்கிறகோட்டில், தாரா - பிரணவத்தை உடைத்தாயிருக்கிற, விசித்ரவர்ணா - அனேகவிதமான மந்திரங்களுடைய அக்ஷரத்தையுடைத்தாயிருக்கிற.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் உயர்ந்த தங்கத்தில் உயர்ந்த முத்துக்களும் உயர்ந்த பலவிதமான ரத்நங்களும் இழைத்திருக்கின்றன. அதனாலே வெளுப்பு சிகப்பு முதலான அநேக ரூபமுள்ளவளாயிருக்கிறாய். ஜநங்கள் உன்னைப்பார்த்தால் உன்னை விட்டு அந்தக் கண்ணை எடுக்கமுடியவில்லை. அதனால் உன்னைப் பார்க்கும்போது ஜநங்களுடைய கண்ணை ஸ்வாதீனப்படுத்துவதற்காக ஏற்பட்ட ஒருவித யந்திரம்போலிருக்கிறது. அதாவது அப்ரகம் என்கிற தகட்டின் நடுவில் சக்கிரமாக ஒரு கோடு போட்டு அதன் நடுவில் பிரணவத்தை எழுதி ஓரங்களில் ஒரு மந்திரத்தின் எழுத்துக்களை எழுதி நெற்றியில் பொட்டுவைத்துக் கொண்டால் பார்க்கிற ஜநங்களை ஸ்வாதீனம் பண்ணலாமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது.

ஆழ்வார் முதலான ஆசார்யாள் திருமேனியை ஸேவித்தும், அவர்களிடம் இன்பமான வார்த்தைகளையும் கேட்டால், எவ்வளவு

கெட்ட மனுஷ்யனுக இருந்தாலும் அவர்களை விட்டு வெளியில் வர முடியாது. இந்த ஸங்கதியை திருவிருத்தத்தில் தடாவிய வம்பும் என்கிற பாசுரத்தில் ஆழ்வாரே ஸாதித்திருக்கிறார். (6)

௮௬௭) பாதேந ரங்கந்ருபதே: பரிபுஜ்யமாநா
முக்தாமயைர் வ்யக்திதஶ்ரமவாரிபிந்து: ।
உத்கண்டகா மணிமயூகஶதைருதக்ரை:
ஸீத்காரிணீவ பதாவநி ஶிஞ்ஜிதைஸ்த்வம் ॥

பதாவநி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ரங்கந்ருபதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, பாதேந - பாதத்தினாலே, (ஒரு புருஷனாலே), பரிபுஜ்யமாநா - அனுபவிக்கப் பட்டவளாயும், முக்தாமயை - முத்துக்களாலே, வ்யக்தித - ப்ரகாசப்படுத்தப்பட்டிருக்கிற, ஶ்ரமவாரி - வேர்வை ஜலங்களுடைய, பிந்து: - திவிலைகளை உடைத்தாயும், உதக்ரை: - நீட்டிக்கொண்டிருக்கிற, மணி - ரத்நங்களுடைய, மயூக - கிரணங்களுடைய, ஶதை: - அநேகங்களாலே, உத்கண்டகா - கிளம்பியிருக்கிற, மயிர்க்கூச்சலை உடைத்தாயிருக்கிற, த்வம் - நீ, ஶிஞ்ஜிதை: - சப்தங்களாலே, ஸீத்காரிணீவ - ஒரு விதமான உருஞ்சல் சப்தத்தை உடைத்தானவள்போலே, பவஸி - இருக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்து இழைத்திருக்கிறது. உன்பேரில் இழைத்திருக்கிற ரத்திநங்களின் காந்திகள் எல்லையில்லாமல் பரவுகிறது. உன்னைச் சாற்றிக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறபோது நீ இன்பமாக சப்திக்கிறாய். பெருமாள் திருவடியாகிற புருஷன் பாதுகை என்கிற ஸ்திரீயை அனுபவிக்கிறபோது, பாதுகையில் இழைத்திருக்கும் முத்துக்கள் வேர்வைகளாகவும், அதிலிருக்கும் ரத்நகாந்திகள் மயிர்க்கூச்சலாகவும்(அதாவது மயிர் சிலந்துகிறதாகவும்), எழுந்தருளுகிறகாலத்தில் உண்டாகிற சப்தம், புருஷனோடு சேர்ந்த ஸ்திரீயின் ஒரு விதமான சப்தம்ஸீத்காரம், அதுபோலவும் இருக்கிறது.

ஒரு ஸ்திரீக்கு ஒரு புருஷனிடத்தில் மனதாரப் பிரீதி வந்தால் அவள் அவன் விஷயத்தில் எப்படி இருப்பளோ, அப்படி ஆழ்வார் பெருமாள் விஷயத்தில் இருக்கிறார். (7)

(௮௯௮) தூராவலம்பிதகரா நிஜசப்தைர் மணீநாம்
ஆயாதி தைத்யரிபுரித்யஸக்ருத் ப்ருவாணா ।
தைத்யாந் புரஸ்திதவதஸ் ஸதயா த்வமேதாந்
மந்யே நிவாரயஸி ரங்கபதேஸ் பாதுகே த்வம் ॥

ரங்கபதேபாதுகே - ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையே! தூர-வெகுதூரம், ஆலம்பித - நீட்டப்பட்டிருக்கிற, கரா - கிரணங்களாகிற கையை உடைத்தாயும், ஸதயா - உண்டாயிருக்கிற தயையை உடைத்தாயிருக்கிற, த்வம் - நீ, மணீநாம் - குமிழிலிருக்கிற ரத்நங்களுடைய, நிஜசப்தை: - சப்தங்களாலே, தைத்யரிபு: - அஸுரர்களுக்குச் சத்துருவான பெருமாள், ஆயாதி - வருகிறார், இதி - என்று, அஸக்ருத் - அடிக்கடி, ப்ருவாணாஸதீ - சொல்லாநின்றுகொண்டு, புரஸ்திதவத: - எதிரிலிருக்கிற, தைத்யாந் - அஸுரர்களை, நிவாரயஸி - வரவிடாமல் தடுக்கிறாய், மந்யே - (என்று) நினைக்கிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்திலிழைத்திருக்கிற காந்திகள் ரொம்பதூரம் பரவுகிறது. உன்னைச் சாற்றிக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறபோது உன் குமிழில் போட்ட ரத்நங்கள் சப்திக்கின்றன. அதைப் பார்த்தால் நீ ரொம்ப தயையினால் எதிர்த்துச் சண்டைக்கு வருகிற அஸுரர்களைப்பார்த்து கிரணங்களாகிற கையை நீட்டிக்கொண்டு ரத்நங்களின் சப்தங்களாலே "அப்பா சண்டைக்கு வராதே, பெருமாள் கொன்றுவிடுவர்" என்று பிரீதியோடே கையைநீட்டிச் சொல்வதுபோலிருக்கிறது

ஆழ்வார்முதலான ஆசார்யர்கள் எல்லா ஜநங்களையும் பார்த்து நீங்கள் கெட்ட கார்யங்களைச் செய்யாதேயுங்கள் என்று உபதேசிக்கிறார்கள். எந்தக்காலத்திலும் எப்படிப்பட்டவர்களுக்கும் பெருமாள் ஆசார்யனில்லாமல் மோக்ஷம் கொடுக்கிறதில்லை. ஆசார்யாள் உண்மையை அறிந்து எல்லையில்லாத தயையையும் ஒழிவும் வணக்கமும் உள்ளவர்களாய் ஜநங்களுக்கு உபதேசிக்கவேணும், பொருத்துக்கொள்ளவேணும். இப்போது ஆசார்யகம் பண்ணுகிறவர்களுக்குப் பெரும்பாலும் உண்மையான அறிவு இல்லை

என்றே சொல்லலாம், சண்டையை உண்டுபண்ணுகிறார்களேயொழிய சண்டையை அடக்கவில்லை. ஆசார்யகம் என்கிற தொழிலை உண்மையாக அறியவில்லை என்றே சொல்லலாம். புஸ்தகத்துக்கு அர்த்தம் சொல்லுகிறதும், புஸ்தகம் எழுதுகிறதும், கைங்கர்யம் பண்ணுகிற பெருமையும், த்ரவ்யம் சேர்க்கிறதுமாயிருக்கிறது. ஏதாவது ஒரு வ்யாஜத்தைக்கொண்டு தைவம் காப்பாற்ற வேணும். (8)

(௩௱௧௦) அக்ஷுண்ணரச்மிநியதக்ரமரத்நரத்யா
நிஷ்கம்பசக்ரவரநிபம் தததீ ப்ரதீகம் ।
க்ரீடாகதேஷு பகவத்பதபத்மலக்ஷ்ம்யா:
கர்ணீரதத்வமஸி காஞ்சநபாதுகே த்வம் ॥

காஞ்சநபாதுகே - தங்கமயமான பாதுகையே! அக்ஷுண்ண - குறைவில்லாமலிருக்கிற, ரச்மி - கிரணங்களை உடைத்தாயும், நியத - தவராமலும், க்ரம - வரிசையை உடைத்தாயுமிருக்கிற, ரத்நரத்யா - உயர்ந்த ரத்நங்களை உடைத்தாயும், நிஷ்கம்ப - நிலையாயிருக்கிற, சக்ரவரநிபம் - ஏர்க்கால்போல் இருக்கிற, ப்ரதீகம் - குமிழ் என்கிற அவயவத்தை, தததீ - தரியாநிற்கிற, த்வம் - நீ, பகவத் - பெருமாளுடைய, பத - திருவடியாகிற, பத்ம - தாமரைப்பூவிலிருக்கிற, லக்ஷ்ம்யா: - அழகாகிற லக்ஷ்மிக்கு, க்ரீடாகதேஷு - விளையாட்டு ஸஞ்சாரங்களில், கர்ணீரதத்வம் - தோளில் தூக்குகிற தேராக, அஸி - ஆகிறாய்.

அக்ஷுண்ண - அறுக்கமுடியாத, ரச்மி - கடிவாளங்களாலே, நியத - தவராமலிருக்கிற, க்ரம - நடையை உடைத்தாயிருக்கிற, ரத்நரத்யா - உயர்ந்த குதிரைகளை உடைத்தாயிருக்கிறது.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் உயர்ந்த ரத்நங்கள் இழைத்திருக்கின்றன. உன்னைப் பார்த்தால் பெருமாள் திருவடிகளிலிருக்கிற அழகாகிற லக்ஷ்மிக்கு ஒரு தேர்மாதிரி இருக்கிறது.

நல்ல ஆசார்யாள்மேலேறிக்கொண்டுதான் பெருமாள் ஜநங்களினிடத்தில் எழுந்தருளுகிறார். நல்ல ஆசார்யாள் மூலமாகத்தான் பெருமாளை நினைக்கிறது, பெருமாளை அடைகிறது இவை முதலானவைகள். (9)

(௪௱௰) மஞ்ஜுஸ்வநா மரகதோபலஶ்யாமாங்கீ
ஶோணாஶ்மதுண்டருசிரா மணிபாதுகே த்வம் ।
ஸீதாவிஹாரரஸிகஸ்ய பரஸ்ய யூந:
ஸாதர்ம்யதாம் பஜஸி பஞ்ஜரஶாரிகாணாம் ॥

ஹே மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! மஞ்ஜுஸ்வநா - இன்பமான சப்தத்தையுடைத்தாயும், மரகதோபல - பச்சைக்கற்களாலே, பச்சைக்கற்கள்போலே, ஶ்யாம - கருப்பான, அங்கீ - உடம்பையுடைத்தாயும், ஶோணாஶ்ம - செகப்பு ரத்நங்களாகிற, துண்ட - வாயினாலே, ருசிரா - அழகாயும் இருக்கிற, த்வம் - நீ, ஸீதா - மஹாலக்ஷ்மியோடே, விஹார - விளையாட்டிலே, ரஸிகஸ்ய - ஆசையுள்ளவரான, பரஸ்ய - உயர்ந்தபுருஷனை, யூந: - யுவாவாயிருக்கிற பெருமாளுக்கு, பஞ்ஜர - கூட்டிலிருக்கிற, ஶாரிகாணாம் - பெண்கிளிகளுக்கு, ஸாதர்ம்யதாம் - ஸமானமாயிருப்பதை, பஜஸி - அடைகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைப் பார்த்தால் பெருமாள் தாயாரோடுகூட விளையாட்டுக்காக வைத்துக்கொண்டிருக்கிற கிளிபோலிருக்கிறது. நீ பச்சை ரத்தினங்களாலே பச்சையாயிருக்கிறாய். செகப்பு ரத்தினங்களைப் பார்த்தால் கிளிகளின் மூக்குமாதிரி இருக்கிறது. இன்பமாய் சப்திக்கிறாய்.

ஆசார்யர்களைக் கிளிகளாகச் சொல்லியிருக்கிறது.          (10)

(௪௱௰௧) ஶோணோபலைர் பதரக்ஷிணி ஸம்ஶ்ரிதேஷு
சாயாத்மநா மரகதேஷு தவாவகாட: ।
அப்யேதி ஶௌரிரபித: பலபக்வஶோபி
ந்யக்ரோததல்பமிவ ஶயிதம் வடபத்ரதல்பே ॥

பதரக்ஷிணி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஶோணோபலை: - செகப்பு ரத்தினங்களாலே, ஸம்ஶ்ரிதேஷு - அடையப்பட்டிருக்கிற, தவ - உன்னுடைய, மரகதேஷு - பச்சை ரத்தினங்களிலே, சாயாத்மநா - பிரதிபிம்ப ரூபமாக, அவகாட: - பிரவேசித்திருக்கிற, ஶௌரி: - பெருமாளானவர், அபித: - நாலுபக்கத்திலும், பல - பழங்களினு

டைய, பங்க்தி - வரிசையினாலே, ஶோபிநி - விளங்காநிற்கிற, வடபத்ரஸ்ய - ஆலிலையின், மத்யே - நடுவிலே, ஶயிதம் - படுத்துக்கொண்டிருக்கிற, ஸ்வாத்மாநமேவ - தன்னையே, கலயதி அநுஸரிக்கிறார்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் நடுவில் பச்சை ரத்தினங்களும் அதைச்சுற்றிச் செகப்பு ரத்தினங்களும் இழைத்திருக்கின்றன. அந்தப் பச்சை ரத்தினத்தில் பெருமாள் பிரதிபலிக்கிறார். அதைப் பார்த்தால் பிரளயகாலத்தில் நாலுபக்கத்திலும் ஆலம்பழங்களோடு கூடின ஆலிலையில் பெருமாள் சயனித்துக்கொண்டிருக்கிறதுபோல் இருக்கிறது. (11)

(அ௩௧௨) ஸ்பீதம் பாதாவநி தவ ஸவநார்த்ரமூர்த்தே:
ஆஸமுத்ரம் ததமபூத் மணிரஶ்மிஜாலம் |
க்ரீடிதம் ரகுபதேஶ் ஶரவ்யமாஸந்
யாதுதாநா யஸ்ய வலயேந விவேஷ்டிதா: ||

ஹே பாதாவநி - ஏ பாதுகையே! ஸவநே - பட்டாபிஷேகத்திலே, ஆர்த்ர - ஈரமாயிருக்கிற, மூர்த்தே: - திருமேனியை உடைத்தாயிருக்கிற, தவ - உன்னுடைய, ஸ்பீதம் - பருத்ததாயிருக்கிற, மணி - ரத்நங்களுடைய, ரஶ்மி - கிரணங்களுடைய, ஜாலம் - கூட்டமாகிற வலையானது, ஆஸமுத்ரம் - ஸமுத்ரம் வரையில், ததம் - பரம்பினதாக, அபூத் - ஆயிற்று. யஸ்ய - யாதொரு வலையினுடைய, வலயேந - மண்டலத்தினாலே, விவேஷ்டிதா: - சுற்றப்பட்டிருக்கிற, யாதுதாநா: - ராக்ஷஸர்கள், ரகுபதே: - ஸ்ரீராமனுக்கு, க்ரீடிதம் - விளையாடுவதற்குத் தகுந்ததான, ஶரவ்யம் - பாணத்துக்குக் குறிப்பாக, ஆஸந் - ஆனார்களோ.

(கருத்து) ஏ பாதுகையே! உனக்குத் திருவயோத்தியில் பட்டாபிஷேகம் நடந்த காலத்தில் எல்லையில்லாத உன் ரத்நகாந்திகள் வலைபோல் உலகம் முடிய வியாபித்தது. அந்த வலையில் அகப்பட்டுக்கொண்ட ராக்ஷஸர்களாகிற மிருகங்களிடத்தில் ஸ்ரீராமன் வேட்டையாடினார்.

ஆழ்வார் பிரபந்தம் பூமியில் அவதரித்தபிறகு ரொம்ப நாஸ்தி கர்கள்கூட பெருமாளிடத்தில் பக்தி அடைந்தார்கள். (12)

(அசக) ரத்நாம்ஶுபிஸ்தவ ததா மணிபாதரக்ஷே
ஸம்ரஜ்ஞா நவபுஷாம் ரஜநீமுகேஷு ।
அகல்பிதா ததஶி ஜ்வலநௌஷதிஶ்ரீ:
ஸாகேதபத்தநஸமீபருஹாம் த்ருமாணாம் ॥

ஹே மணிபாதரக்ஷே - ஏ பாதுகையே! ததா - நீ அயோத்தியைக் காப்பாற்றின காலத்திலே, தவ - உன்னுடைய, ரத்நாம்ஶுபி: - ரத்நகாந்திகளாலே, ஸம்ரஜ்ஞாந - பளபளப் பாகப் பண்ணப்பட்டிருக்கிற, வபுஷாம் - உடம்பையுடைத்தா யிருக்கிற, ஸாகேதபத்தநஸமீபருஹாம் - அயோத்தியா பட்டணத்துக்கு ஸமீபத்தில் முளைத்திருக்கிற, த்ருமாணாம் - மரங்களுக்கு, ரஜநீமுகேஷு - அஸ்தமிக்கிற ஸமயங்களில், அகல்பிதா - ஒருவரும் நினைக்காமல் வந்திருக்கிற, ஜ்வல ஔஷதிஶ்ரீ: - எரிவல்லிக்கொடியாயிருப்பதானது, ததஶி - பார்க் கப்பட்டது.

(கருத்து) ஏ பாதுகையே! நீ அயோத்தியாபட்டணத் தைக் காப்பாற்றின காலத்திலே, உன் ரத்நகாந்திகள் அந்த ஊர் கிட்டேயிருக்கிற மரங்களில் வியாபித்து, அவைகளெல்லாம் ராத் திரியில் எரிவல்லிக்கொடிகள்போலிருந்தன. அதாவது மலை களில் சில கொடிகள் ராத்திரியில் நெருப்புமாதிரி பளபளப்பா யிருக்குமாம். அவைகளுக்கு எரிவல்லிக்கொடி என்று பெயர்.

ஆழ்வார் முதலான ஆசார்யர்களுடைய அநுக்ரஹத்தாலும் உபதேசத்தாலும் ரொம்ப முட்டாளாயிருக்கிறவர்கள்கூட எல் லாரும் ஜ்ஞாநிகளாக ஆகிறார்கள். (13)

(அசச) ராமே வநம் ஜக்மூஷி ஷ்ரயாதே
நிஷ்கண்டகே விஶ்வதிவா ஸஹ ஸா ஸஹைவ ।
ஸம்யக்ப்ரயுக்தாதிகரா ஸவதீ ரவண்டாம்
ஸம்ய: ஷ்ரிதாபத வஶேநாஷ்யஸம்யஸம்ஹா ॥

பாதுகே - பாதுகையே! ராமே - ஸ்ரீராமன், வநம் - காட்டை, ஜக்மூஷி - அடைந்தபோது, ஜக்மூஷி வ -

தசரதமஹாராஜாவும், திவம் - ஸ்வர்க்கத்தை, ப்ரயாதே ஸதி - அடைந்தபோது, ப்ரியிஷ்ட - அதிகமாயிருக்கிற, ரத்ந கிரணா - ரத்நகாந்தியையுடைத்தாயும், ரகூணாம் - ரகுவம்சத்து ராஜாக்களுடைய, ப்ரியஃ - அதிகமான, ப்ரதாப - பராக்கிரமமாகிற, தபநோதய - ஸூர்யன் புறப்படுகிற காலத்திலிருக்கிற, ப்ரபாதஸந்த்யா - காலைவேளையாயிருக்கிற, பவதீ - நீயானவள், ஸஹஸா - உடனே, நிரஸ்த - போக்கடிக்கப்பட்டிருக்கிற, விச்வதிமிரா - எல்லா இருட்டுகளையும், எல்லா அஜ்ஞானங்களையுமுடைத்தானவளாக, ப்ரபூவ - ஆனாய்.

(கருத்து) அயோத்தியாபட்டணத்தில் ஸ்ரீராமன் காட்டுக்கு எழுந்தருளிவிட்டார், தசரதர் ஸ்வர்க்கத்துக்குப் போய் விட்டார். அந்தக் காலத்தில் நீ ராஜாத்தியாயிருந்து எல்லா லோகத்தின் அஜ்ஞாநங்களையும் துக்கங்களையும் போக்கினாய். கண்ணன் திருநாட்டுக்கு எழுந்தருளினவுடனே லோகமெல்லாம் ஒரே இருட்டாய்விட்டது. அந்த ஸமயத்தில் ஆழ்வார் ஸூர்யன்போல் அவதரித்து எல்லா லோகத்தினுடைய அஜ்ஞாநத்தையும் போக்கினார். (14)

(அ௯௫) மோதந்தே தேவி விபோ: ப்ரதிபாதநீயாம்
பாதாவநி ப்ரதிபதோதிதமஞ்ஜுநாதாம் ।
விந்யாஸ விப்ரமவதீ: ப்ரதிபாதநாஸ்தாம்
பாராயணா நிகமயோநிதிபாரமஸ்த்வா ॥

தேவி - விளங்காநிற்கிற, பாதாவநி - பாதுகையே ! பாராயணாஃ - எல்லா வேதங்களாகிற, நிகமயோநிதி - ஸமுத்திரத்தினுடைய, பாரமாஃ - அக்கரையை அறிந்தவர்கள், மோதந்தே - ஸந்தோஷத்தை அடைந்திருக்கிற, விபோ - பிரபுவினாலே, ப்ரதிபாதநீயாம் - நடத்தத் தகுந்ததாயும், விபோ - ஆசார்யர்களாலே, ப்ரதிபாதநீயாம் - கொடுக்கத்தகுந்ததாயும், ப்ரதிபத - அடிவைப்புத்தோறும், உதித - உண்டாயிருக்கிற, மஞ்ஜுநாதாம் - இன்பமான சப்தத்தையுடைத்தாயிருக்கிற, (ப்ரதிபத - பதங்கள்தோறும், நாதாம் - ஸ்வரத்தையுடைத்தாயிருக்கிற,) மமவதஃ - பெருமாளுடைய, ப்ரதிபாத

நாதஸ்ய - ஸஞ்சாரத்திற்குத் தகுந்ததாயிருக்கிற, ஶ்ருதிவாத நாதஸ்ய - தெரியப்படுத்தத் தகுந்ததாயிருக்கிற) த்வாம் - உன்னை, விதுஷாம் - வேதமாக, விதுஃ - அறிகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னைச் சாற்றிக்கொண்டு பெருமாள் எழுந்தருளும்போது, உன் குமிழில் போட்டிருக்கிற ரத்னங்களால் இன்பமான சப்தங்கள் உண்டாகின்றன. நீ பெருமாளை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து எல்லாருக்கும் கொடுக்கிறாய். எல்லாருக்கும் ஸேவை ஸாதிக்கும்படி பண்ணுகிறாய். நீ வேதம்போலிருக்கிறாய் என்னும் ஒரு அர்த்தம் ஏற்படுகிறது.

பெருமாள் ஆசார்யாள்மேலேறிக்கொண்டு எல்லாரிடத்திலும் வருகிறார். அதாவது ஆசார்யாளாலேதான் பெருமாளை எல்லாரும் அறிகிறார்கள். (15)

(அசுகு) முக்தாம்ஶுபிஃ கேஸரவதீ ஸ்திரவஜ்ரதம்ஷ்ட்ரா
ப்ரஹ்லாதஸம்பத³நுரூபஹிரண்யபேதா³ ।
மூர்திஃ ஶ்ரியோ ப⁴வஸி மாத⁴வ பாது³கே த்வம்
நாத²ஸ்ய நூநமுசிதா நரஸிம்ஹமூர்தேஃ ॥

மாதவபாதுகே - பெருமாளுடைய பாதுகையே! முக்தாம்ஶுபிஃ-முத்துக்காந்திகளாலே, கேஸரவதீ - பிடரிமயிர்களோடு கூடினவளாயும், ஸ்திர - நிலையான, வஜ்ர - வைரங்களாகிற, தம்ஷ்ட்ரா - தெத்துப்பற்களையுடைத்தாயும், ப்ரஹ்லாத - பிரஹ்லாதருடைய, ஸம்பத் - ஸம்பத்துக்கு, அநுரூப - தகுந்ததாயிருக்கிற, ஹிரண்ய - ஹிரண்யாஸுரனுடைய, பேதா - பிளப்பதையுடைத்தாயிருக்கிற, (ப்ரஹ்லாத - ஸந்தோஷத்தினுடைய, ஸம்பத் - ஸம்ருத்திக்கு, ஹிரண்யபேதா - உயர்ந்த தங்கத்தையுடைத்தாயிருக்கிற,) த்வம் - நீ, நரஸிம்ஹமூர்தேஃ - நரஸிம்மாவதாரம் பண்ணின, நாதஸ்ய - பெருமாளுக்கு, உசிதா - தகுந்தவளாயிருக்கிற, ஶ்ரியஃ - மஹாலக்ஷ்மியினுடைய, மூர்திஃ - திருமேனியாக, பவஸி - இருக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்துவைரங்களை உயர்ந்த தங்கத்திலிழைத்திருக்கிறது. அதைப் பார்க்கும்போது எல்லாருக்கும் ஸந்தோஷமுண்டாகிறது. "உன் முத்துக்காந்தி களைப் பார்த்தால் சிங்கத்தின் பிடரிமயிர்போலிருக்கிறது. வைரங்களைப் பார்த்தால் தெத்துப்பல்போலிருக்கிறது. பெருமாள் உன்னைப்பார்த்தால்நரஸிம்மாவதாரம்பண்ணினபோது அதற்குத் தக்கபடி ஸிம்மரூபம் எடுத்துக்கொண்ட மஹாலக்ஷ்மிபோலிருக்கிறது. இந்த ச்லோகத்தில் ஹிரண்ணியனைப் பிளந்து ப்ரஹ்லாதனுக்கு ஸம்பத்தைக் கொடுத்தாய் என்று ஒரு அர்த்தம் ஏற்படுகிறது. (16)

(௩௧௭) ஸம்பாவயந்தி கவய: ஸுகஸஞ்சாராம்

மஞ்ஜுஸ்வநாம் மஹித மௌக்திக ஸாரகுப்தாம் |
ஸ்வாதீந ஸர்வபுவநாம் மணிபாதுகே த்வாம்
ரங்காதிராஜபத பங்கஜ ராஜஹம்ஸீம் ||

ஹே மணிபாதுகே - பாதுகையே! கவய: - ஒரு ஸங்கதியை நன்றாய் விசாரித்துத் தீர்மானிக்கிறவர்கள், (ஜலத்திலிருக்கும் பக்ஷிகள்) ஸுக - இன்பமாயிருக்கிற, ஸஞ்சாராம் - ஸஞ்சாரத்தை உடைத்தாயும், மஞ்ஜுஸ்வநாம் - இன்பமான சப்தத்தை உடைத்தாயும், மஹித - கொண்டாடப்பட்டிருக்கிற, மௌக்திக - முத்துக்களாலே, ஸாரகுப்தா - சரகுள்ளதாயிருக்கிற, கம்பீரம் - உடம்பையுடைத்தாயும், ஸ்வாதீந - தன்னதீனமாய் இருக்கிற, ஸர்வபுவநாம் - எல்லா லோகங்களையும், எல்லா ஜலங்களையும் உடைத்தாயுமிருக்கிற, த்வாம் - உன்னை, ரங்காதிராஜ - ஸ்ரீரங்கநாதனுடைய, பத - திருவடிகளாகிற, பங்கஜ - தாமரைப்பூவுக்கு, ராஜஹம்ஸீம் - ஒருவிதமான பெண்ஹம்ஸமாக, ஸம்பாவயந்தி - நினைக்கிறார்கள். (கால் மூக்கும் சிவந்து உடம்பெல்லாம் வெளுத்திருந்தால் ராஜஹம்ஸம் என்று பெயர்.)

(கருத்து) ஏ பாதுகையே! இன்பமான சப்தத்துடன் இன்பமாக ஸஞ்சரிக்கிறாய். உன்பேரில் உயர்ந்த முத்துக்களிழைத்திருக்கின்றன. எல்லா லோகமும் உன்னதீனமாயிருக்கிறது. நீ பெருமாளுடைய திருவடியாகிற தாமரைப்பூவுக்கு ஹம்ஸம்

போலிருக்கிறாய். ஹம்ஸம் எப்படி தாமரைப்பூவை விட்டுப் பிரியாதோ அப்படியே நீயும் பெருமாள் திருவடியை விட்டுப் பிரிகிறதில்லை.

நல்ல ஆசார்யர்கள் சற்றுகூட விடாமல் எப்பொழுதும் பகவானைத் தியானித்துக்கொண்டு அங்கங்கே போய் இன்ப மான வார்த்தைகளைச் சொல்லி எல்லா லோகத்தையும் தனக்கு ஸ்வாதீனமாக்கிக்கொள்ளுகிறார்கள். (17)

(௮௪௮) முக்தாமயூகருசிராம் மணிபாதரக்ஷே
மஞ்ஜுஸ்வநாம் மணிபிராஹிதவர்ணஸங்காதாம் ।
மந்யே முகுந்தபதபத்மமதுவ்ரதீநாம்
அந்யாமக்ருத்ரிமகிராமதிதேவதாம் த்வாம் ॥

மணிபாதரக்ஷே - கல்லிழைத்த பாதுகையே! முக்தாமயூகை: - முத்துகாந்திகளாலே, ருசிராம் - அழகாயும், மஞ்ஜுஸ்வநாம் - இன்பமான சப்தத்தையுடைத்தாயும், மணிபி: - ரத்நங்களாலே, ஆஹித - உண்டுபண்ணப்பட்டிருக்கிற, வர்ண ஸங்காதாம் - கருப்பு சிகப்புமுதலான ரூபங்களினுடைய கூட்டத்தை உடைத்தாயும், (வர்ண - எழுத்துக்களுடைய) இருக்கிற, த்வாம் - உன்னை, முகுந்த - பெருமாளுடைய, பதபத்ம - தாமரைப்பூப் போலிருக்கிற திருவடிகளுக்கு, மதுவ்ரதீநாம் - பெண்வண்டு களாயிருக்கிற, அக்ருத்ரிமகிராம் - ஒருவராலே செய்யப்படாத வார்த்தையாயிருக்கிற வேதங்களுக்கு, அந்யாம் - வேறாயிருக் கிற, அதிதேவதாம் - அதிஷ்டான தேவதையாக, மந்யே - எண்ணுகிறேன்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் முத்து இழைத்தி ருக்கிறது. அந்த காந்திகள் ரொம்ப இன்பமாயிருக்கின்றன. இன் பமாய் சப்திக்கிறாய். உன்பேரில் கருப்பு செகப்பு முதலான அநேக ரூபங்களிருக்கின்றன. தாமரைப்பூவை விட்டு வண்டு பிரி யாததுபோலே பெருமாள் திருவடியைவிட்டு நீ க்ஷணங்கூடப் பிரிகிறதில்லை. உன்னைப் பார்த்தால் வேதங்களுக்கு அதிஷ்டாந தேவதைமாதிரி இருக்கிறது. அதாவது உன்னிடத்தில் ஸகல வேதங்களும் குடிகொண்டிருக்கின்றன.

ஆழ்வார் முதலான ஆசார்யர்கள் எல்லா வேதங்களினுடைய உண்மையான அர்த்தங்களை அறிந்து பெருமாள் திருவடிகளை க்ஷணங்கூட மறக்காமல் பகவானுடைய குணங்களையே இன்பமாகச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். (18)

(௩௧௯) ப்ராப்ய கைகயஸுதாவரதாநஹேதும்
காலம் ப்ரதோஷமநிரீக்ஷ்ய ஸராமஸஹாயம் |
மஞ்ஜுஸ்வநாதரஹிதா மணிபாதரக்ஷே
மௌநவ்ரதம் கிமபி நூநமந்வதிஷ்டஸ்த்வம் ||

மணிபாதரக்ஷே - கல்லிழைத்த பாதுகையே! கைகயஸுதா - கைகேயிக்கு, வரதாநஹேதும் - வரங்கொடுத்தற்குக் காரணமாயிருக்கிறதும், அநிரீக்ஷ்ய-பார்க்கத்தகாதவராயிருக்கிற, ஸராமஸஹாயம் - (ஸீதையோடு கூடின ராமனை உடைத்தாயிருக்கிற) பெருமாளை உடைத்தாயிருக்கிறதுமான, ப்ரதோஷம் - ரொம்பதோஷத்தை உடைத்தாயிருக்கிற, காலம்-காலத்தை (பிரதோஷகாலத்தை) ப்ராப்ய-அடைந்து, மஞ்ஜுஸ்வநாதரஹிதா-இன்பமான சப்தமில்லாதவளாய்க்கொண்டு, (வார்த்தை சொல்லாதவளாய்க்கொண்டு) கிமபி - இன்னது என்று சொல்லமுடியாத, மௌநவ்ரதம் - வார்த்தை சொல்லாமலிருக்கிற வ்ரதத்தை, அந்வதிஷ்ட: - அனுஷ்டித்தாய்.

(கருத்து) ஏ பாதுகையே! கைகேயிக்கு வரம் கொடுத்த ஸமயத்தில் ஸ்ரீராமன் ஸீதையோடுகூட காட்டுக்கு எழுந்தருளினபடியால், ஸீதையோடுகூட ராமனை ஸேவிக்கமுடியவில்லை. ஸ்ரீராமனைவிட்டு அயோத்திக்கு எழுந்தருளிவிட்டபடியால் 14-வருஷகாலம் சப்தமில்லாமலிருந்தாய். த்ரயோதசி தினத்தில் ஸாயங்காலத்தில் மஹாப்ரதோஷம் என்று சொல்லியிருக்கிறது. அப்போது (உத்ஸவத்தில் தவிர) பெருமாளை ஸேவிக்கக்கூடாது; வார்த்தை சொல்லக்கூடாது. அப்படிப்பட்ட ப்ரதோஷகாலத்தில் நீ மௌனமாய்இருந்தாய் என்று ஒருஅர்த்தம் ஏற்படுகிறது.(19)

(௮௫0) தைவாத்ப்ரஸந்நஸலிலா ஸஹிதா மருத்பி:
ச்சாயாவதீ ஹரிதோபலரஶ்மிஜாலை: ।
ஸம்ஸாரகோரபதவீபதிகஸ்ய ஜந்தோ
விஶ்ராந்திபூமிரிவ ஶௌரிபதாவநி அஸி ॥

மருத்பி: - தேவதைகளாலே, குளிர்ந்த காற்றுக்களாலே, ஸஹிதா - கொண்டாடப்பட்டும், ஹரிதோபல - பச்சைரத்தினங்களுடைய, ரஶ்மி - கிரணங்களுடைய, ஜாலை: - கூட்டங்களாலே, ச்சாயாவதீ - காந்தியுள்ளதாயும், நிழலையுடைத்தாயுமிருக்கிற, த்வம் - நீ, ஸம்ஸாரகோரபதவீபதிகஸ்ய - விஷயங்களைக் கண்டு மயங்குவதாகிற வழியிலே ஓய்வில்லாமல் நடந்துகொண்டிருக்கிற, ஜந்தோ: - பிராணிகளுக்கு, விஶ்ராந்திபூமிரிவ - சிரமத்தைப் போக்குகிற இடம்போலே, அஸி - ஆகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்பேரில் ரத்நங்கள் இழைத்திருக்கின்றன. அவைகளின் காந்திகளைப் பார்க்கும்போது ஜலம் மாதிரி இருக்கிறது. உன்னைத் தேவதைகளெல்லாரும் கொண்டாடுகிறார்கள். உன்பேரில் இழைத்திருக்கும் பச்சை ரத்நங்களின் காந்திகளைப் பார்த்தால் நிழல்போலிருக்கின்றன. ரொம்ப கடுமையான வெய்யிலில் போகிறவர்களுக்கு ஜலமும், காற்றும் நிழலும் கூடின இடமானது எப்படிச் சிரமத்தைப் போக்குகிறபடியால் தங்குகிற இடமாக இருக்குமோ, அதுபோல் பிள்ளை பெண்டாட்டி பணம் முதலியவைகளில் எப்போதும் மயங்கியிருக்கிறவர்களுக்கு அந்த மயக்கத்தைத் தெளிவித்து அந்தச் சிரமத்தைப் போக்குகிறபடியால் நீ அவர்களால் அடையக்கூடிய இடமாயிருக்கிறாய்.

ஜீவபரமாத்மாக்களின் உண்மையை அறியாமல் பிள்ளை, பெண்டாட்டி முதலான ஸங்கதிகளை எப்போதும் நினைத்துக் கொண்டு எல்லையில்லாமல் படும் கஷ்டத்தை நல்ல ஆசார்யர்கள் இன்பமான வார்த்தைகளைச் சொல்லிப் போக்குகிறார்கள். (20)

(௮௫௧) ஆஷ்டாரஸ்யாஸ்திதிஸமாஜஹரிவிஷண்ணபத்ம
ராகஸ்ய தஸ்ய பதாவநி ரஶ்மிஜாலை: ।

மந்தீசகார தபநோ வ்யபநீதபீதி:
மந்தோதரீவதநசந்த்ரமஸோ மயூகாந் ॥

பதாவநி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ரகுக்ஷிதிபாநாம் - ரகுவம்சத்து ராஜாக்களுக்கு, ஆத்ய: - முந்தினவராயும், அதாவது கூடஸ்தராயும், அபிஷேக - பட்டாபிஷேகத்தாலே, தீப்தை: - பிரகாசித்துக்கொண்டிருக்கிற, தவ - உன்னுடைய, ரத்ந - ரத்தினகாந்திகளுடைய, ஜாலை: , கூட்டங்களாலே, ஆப்யாயித: - விருத்திபண்ணப்பட்டவராயும் இருக்கிற, தபந: - ஸூர்யனானவன், வ்யபநீத - போக்கடிக்கப்பட்டிருக்கிற, பீதி:-பயத்தை உடைத்தானவனாய்க்கொண்டு, மந்தோதரீ - ராவணன் பெண்டாட்டியினுடைய, வதந - முகமாகிற, சந்த்ரமஸ: - சந்திரனுடைய, மயூகாந் - காந்திகளை மந்தீசகார - மங்கும்படி பண்ணினார்.

(கருத்து) ஏ பாதுகையே! ரகுவம்சத்துக்கு ஸூர்யவம்சம் என்று பெயர். அந்த வம்சத்துக்கு முதல் புருஷன் ஸூர்யன். அவர், பட்டாபிஷேகம் பண்ணினதால் பிரகாசித்துக்கொண்டிருக்கிற உன் ரத்தினகாந்திகளால் விருத்தி பண்ணப்பட்டார். அதாவது அவர் காந்தியோடு உன் காந்தியும் கலந்ததனால் அவர் பயமில்லாமல் மந்தோதரியினுடைய முகமாகிற சந்திரனை மங்கப் பண்ணினார். அதாவது ராவணன் செத்தான், மந்தோதரி வெய்யிலில் வந்து வீழ்ந்தாள், முகமெல்லாம் கன்னிவிட்டது.

ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்களுடைய உபதேசங்களாலும் அநுக்கிரஹங்களாலும் தெளிந்தபுத்தியுள்ளவர்களுக்கு, காமம், கோபம், லோபம், கர்வம், பொறாமை முதலான கெட்ட குணங்களை ஸூர்யன் போன்ற பகவான் அடியோடே போக்கடிக்கிறார். (21)

(அருஉ) ஶாந்த்யா ஸமக்ரஜகதாம் ஶமிதாந்தராயா
பாதே நிவேஶ்யபவதீம் ஶமிநாம் ப்ரகேஷு |
அந்த:த்விஷோ ஜிதாநி மதாமதாநி
ஸாயேவ ரங்கநிலயேஶ நாதக்ஷேஷு ॥

மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! ஸகல ஜகதாம் - எல்லா லோகங்களாலேயும், மாந்யா - கொண்டாடத் தகுந்தவளாயும், மணி - இந்திரநீலக்கற்களுடைய, ஸம்ப - துணுக்கைகளாலே, துணுக்கைகள்போலே, நீலா - கருப்பாயும், ரங்கநாதபதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, பாதே - திருவடியில், நிஸர்க்க - ஸ்வபாவத்தினாலே, ஸக்தா - சேர்ந்தவளாயுமிருக்கிற, த்வம் - நீ, சுத்தாந்தேஷு - அந்தப்புரங்களிலே, தாயார் ஸந்நிதிகளிலே, ராஜஸ்திரீகளிருக்கும் இடங்களில், ரங்கநாதபதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, ஸுகிதானி - இன்பமாயிருக்கிற, கதாகதானி - போக்குவரத்துக்களை, அநுவர்த்தஸே - அநுஸரிக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ பெருமாள் அந்தப்புரத்துக்கு எழுந்தருளும்போதும் திரும்பி வரும்போதும் நிழல்மாதிரி கூடவே இருக்கிறாய். இந்திரநீலக்கல்லுக்களால் நீ நிழல்போல் கருப்பாயிருக்கிறாய். பெருமாள் திருவடியில் எப்பொழுது மிருக்கிறாய்.

ஆழ்வார் முதலான ஆசார்யாள் பெருமானுக்கு நிழல்போலிருக்கிறார்கள். ஒருகாலும் பகவானை விட்டுப்பிரிகிறதே இல்லை. அவர்களை ஸகலமான லோகங்களும் கொண்டாடுகின்றன. (22)

(அ௨௩) ரங்காதிராஜபதபங்கஜஸம்ஶ்ரயந்தீ
ஹைமீ ஸ்வயம் கசிதா ஹரிநீலரத்நை: ।
ஸம்ஸாவ்யஸே ஸமகலம் மணிபாதுகே த்வம்
ஸாகரநந்தினிவஸுந்தராவேணீ ॥

மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! ரங்காதிராஜ - ஸ்ரீரங்கநாதனுடைய, பத - திருவடியாகிற, பங்கஜ - தாமரைப்பூவை, ஸம்ஶ்ரயந்தீ - அடையாநின்றும், ஸ்வயம் - உருவத்தினாலே, ஹைமீ - தங்கமயமாயும், ஹரிநீலரத்நை: - இந்திரநீலக்கல்லுக்களாலே, கசிதா - இழைக்கப்பட்டுமிருக்கிற, த்வம் - நீ, ஸிந்துஸுதா - ஸமுத்ரத்துக்குப் பெண்ணை மஹாலக்ஷ்மியென்ன, வஸுந்தரா:- பூதேவியென்ன, இவர்களுக்கு,

**ஸாரோந்நதிபிரிவ** - பொதுசரீரம்போலே, **ஸத்பிஃ** புண்யவான்களாலே, **ஸம்பாவ்யஸே** - எண்ணப்படுகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ தங்கமயமாயிருக்கிறாய். உன்மேரில் இந்திரநீலக்கற்கள் இழைத்திருக்கின்றன. அதனாலே நீ சிகப்பாயும் கருப்பாயும் இருக்கிறாய். அதனால் மஹாலக்ஷ்மி பூதேவி இரண்டு உருவமாயுமிருக்கிறாய். மஹாலக்ஷ்மி சிகப்பு, பூதேவி கருப்பு.

நல்ல ஆசார்யர்கள் தயை பொறுமை இரண்டும் வடிவு கொண்டாற்போலிருக்கிறார்கள். (23)

**(அருச) ஸம்பூஜிதா ஸுமநஸாம் நிவஹைஸ் ஸதா த்வம்**
**முக்தாருணோபலநகாங்குலிபல்லவஸ்ரீஃ |**
**க்ஷேமங்கரீம் முரரிபோஶ் சரணாவிவ காந்திம்**
**ஸமாஶ்ரயஸி காஞ்சநபாதுகே த்வம் ||**

**காஞ்சந பாதுகே** - தங்கமயமான பாதுகையே! **ஸுமநஸாம்** - புஷ்பங்களுடைய, தேவதைகளுடைய, **நிவஹைஃ** - கூட்டங்களாலே, **ஸதா** - எப்பொழுதும், **ஸம்பூஜிதா** - பூஜிக்கப்பட்டும், **முக்தா** - முத்துக்களென்ன, **அருணோபல** - செகப்புக் கல்லுக்களென்ன இவைகளாகிற, **நக** - நகங்களென்ன, **அங்குலிபல்லவ** - தளிர்போன்ற விரல்களென்ன, இவைகளுடைய, **ஸ்ரீஃ** - சோபையையுடைத்தாயிருக்கிற, **த்வம்** - நீ, **முரரிபோஃ** - பெருமாளுடைய, **சரணாவிவ** - இரண்டுதிருவடிபோல், **க்ஷேமங்கரீம்** - க்ஷேமத்தைப் (மோக்ஷத்தை) பண்ணுகிறதாயிருக்கிற, **காந்திம்** - காந்தியை, **ஸமாஶ்ரயஸி** - அடைகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ பெருமாளுடைய திருவடிபோலிருந்து உன்னுடைய காந்தியினால் எல்லாருக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கிறாய். எல்லா தேவதைகளும் உயர்ந்த புஷ்பங்களாலே உன்னை எப்பொழுதும் பூஜிக்கிறார்கள். உன்னிடத்தில் இழைத்திருக்கிற முத்துக்களைப் பார்த்தால் நகம் மாதிரியிருக்கிறது. சிகப்பு ரத்னங்களைப் பார்த்தால் தளிர்போன்ற விரல்கள் மாதிரி இருக்கிறது.

ஆசார்யாள் பெருமாள் திருவடிகள்தான். லோகத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ணவனைப் பார்த்து நீர் யார் திருவடி என்று கேட்டால், அவர்கள் ஒரு ஆசார்யன் திருநாமத்தைச் சொல்லி அவர் திருவடி என்று சொல்லுகிறார். ஆனதால் சிஷ்யர் ஆசார்யன் திருவடி. அதுபோல் ஆசார்யாள் பகவான் திருவடி. (24)

**(௩௨௫) நிர்ம்ருஷ்டகாந்த்யா ருசிரா மணிபாதுகே த்வம்**
**ஸ்நாதா சந்தநமுகைஸ்ஸுரபிர் நவமால்யசித்ரா ।**
**ப்ராப்தே விஹாரஸமயே பஜஸே ரங்கபதே:**
**பாதாரவிந்தபரிமோதமநந்யலப்யம் ॥**

மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! நிர்ம்ருஷ்ட - துடைக்கப்பட்டிருக்கிற, காந்த்யா - திருமேனியாலே, ருசிரா - அழகாயும், ஸ்நாதா - அலம்பப்பட்டவளாயும் (ஸ்நாநம் பண்ணினவளாயும்) சந்தநமுகை - சந்தனம் முதலானவைகளாலே, ஸுரபி: - வாஸனையுள்ளதாயும், நவ - புதிதான, மால்ய - மாலைகளினாலே, சித்ரா - ஆச்சர்யத்தைப் பண்ணுகிறவளாயுமிருக்கிற, த்வம் - நீ, விஹாரஸமயே - ஸஞ்சாரகாலமானது (விளையாடுகிற காலமானது) ப்ராப்தேஸதி - வந்தபோது, அநந்யலப்யம் - வேறு ஒருவராலே அடையமுடியாமலிருக்கிற, ரங்கபதே: - பெருமாளுடைய, பாதாரவிந்த - தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியினுடைய, பரிமோதம் - அனுபவத்தினால் உண்டான ஸுகத்தை, பஜஸே - அடைகிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! பெருமாள் வெளியில் எழுந்தருளும் ஸமயத்தில் உன்னை அலம்பி நன்றாய்த் துடைத்து சந்தனம் புஷ்பங்களைச்சாற்றி உன்னைத் திருவடியில் சாற்றிக்கொள்ளுகிறார். அந்த திருவடிஸுகத்தை நீ அனுபவிக்கிறாய். அந்த ஸுகம் உன்னைத்தவிர வேறு ஒருவருக்கும் அகப்படாது. இதில் ஒரு ஸ்திரீ ஸ்நாநம் செய்து சந்தனம் பூசிக்கொண்டு புஷ்பம், சூட்டிக்கொண்டு, ஒரு புருஷனோடு சேர்ந்து ஸுகத்தை அனுபவிக்கிறாள் என்கிற ஒரு அர்த்தம் தோன்றுகிறது. ஒரு ஸங்கதியைப்பற்றிப் பேசும்போது இன்னொரு ஸங்கதி தோன்றும்படி சொல்லுகிறது சொல்லுகிறவர்களுக்கு ரொம்பப் பெருமை.

ஆழ்வார் பெருமாளை ஒரு புருஷனைப்போலவும், பெருமாள் ஆழ்வாரை ஒரு உயர்ந்த ஸ்திரீயைப்போலவும் அனுபவிக்கிறார்கள். உலகத்தில் உறவுகளுக்குள் ஆமண்டையான் பெண்டாட்டி உறவுதான் உயர்ந்தது. ஆனால் இரண்டும் நேராயிருக்கிறதில்லை. பெருமாளுக்கும் மஹாலக்ஷ்மிக்கும்தான் அந்த உரவு ஒத்தது. அதைக் காட்டிலும் உயர்ந்தது பெருமாளுக்கும் ஆழ்வார் போன்ற பக்தர்களுக்கும். (25)

(அருகா) நாதே பதாவநி ததா தவ ஸம்நிவேஶே
நிர்விஶத꞉ க்ரமமஸஹ்யமபாசிகீர்ஷு꞉ ।
யைரேவ லோசநஸஹஸ்ரைஸ்ஸமீக்ஷதே த்வாம்
தைரேவ புஜகபதி꞉ ஶ்ருதிஶாலீ பபூவ ॥

பதாவநி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! தவ - உன்னுடைய, நாதே - சப்தத்திலும், ததா - அப்படியே, ஸம்நிவேஶே - உன்னுடைய திருமேனி அமைப்பிலும், அஸஹ்யம் - பொறுக்கமுடியாத, நிர்விஶத - அநுபவிக்கிறதினுடைய, க்ரமம் - வரிசையை அதாவது முன்பின்னுயிருப்பதை, அபாசிகீர்ஷு꞉ - போக்கடிக்கவேணும் என்ற எண்ணமுள்ளவராயிருக்கிற, புஜகபதி꞉ - பாம்புகளுக்கு ராஜாவான ஆதிசேஷனைவர், யை꞉ - எந்த, லோசந - கண்களுடைய, ஸஹஸ்ரைரேவ - ஆயிரங்களாலேயே, த்வாம் - உன்னை, ஸமீக்ஷதே - பார்க்கிறாரோ, தைரேவ - அவைகளினாலேயே, ஶ்ருதிஶாலீ - காதுகளை உடைத்தானவராக, பபூவ - ஆனார்.

(கருத்து) ஏ பாதுகையே! ஆதிசேஷனுக்கு உன்னுடைய உருவத்தைப் பார்க்கிறதிலும், உன்னுடைய சப்தத்தைக் கேட்கிறதிலும் ரொம்ப ஆசை. ஆனால் இவை இரண்டும் முன்பின்னாக இருக்கக்கூடாது. இரண்டையும் ஒரேகாலத்தில் செய்யவேணும். ஒரேகாலத்தில் கண் காது இரண்டுகளால் இரண்டு வேலை செய்யமுடியாது. அதற்காகக் கண்ணையே காதாக வைத்துக்கொண்டார். பாம்புகளுக்குக் கண்ணும் காதும் ஒன்று.

ஆழ்வார் முதலான நல்ல ஆசார்யர்களை நித்யஸூரிகளுக்கு கூட எவ்வளவு காலம் அனுபவித்தாலும் ஆசை அடங்காது. (26)

(௮௫௭) பாதாவநி ஸ்புடமயூகஸஹஸ்ரத்ருஶ்யா
விஷ்ணோ: பதேந பவதீ விஹிதப்ரசாரா ।
த்வத்பக்தியந்த்ரிதஜநப்ரதமஸ்ய ஶம்போ:
ஸௌரீம் தநூமநுகரோஷி விஹாரக்லுப்தாம் ॥

பாதாவநி - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ஸ்புட - பிரகாசியாநிற்கிற, மயூக - கிரணங்களுடைய, ஸஹஸ்ர - ஆயிரங்களாலே, த்ருஶ்யா - பார்க்கத் தகுந்தவளாயும், விஷ்ணோ: - பெருமானுடைய, பதேந - திருவடியினாலே, (ஆகாசத்தினாலே) விஹித - பண்ணப்பட்டிருக்கிற, ப்ரசாரா - ஸஞ்சாரத்தைஉடைத்தாயுமிருக்கிற, பவதீ - நீயானவள், த்வத் - உன்னிடத்தில், பக்தி - பக்தியினால், யந்த்ரித - கட்டப்பட்டிருக்கிற, ஜந - ஜநங்களுக்குள்ளே, ப்ரதமஸ்ய - முதலாயிருக்கிற, ஶம்போ: - சிவனுடைய, ஸௌரீம் - ஸூர்யஸ்வரூபமாயிருக்கிற, விஹாரக்லுப்தாம் - விளையாட்டுக்காக இருக்கிற சரீரத்தை, அநுகரோஷி - அநுகரிக்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! நீ பக்தர்களுக்கு முந்தினவராயிருக்கிற சிவனுடைய ஸூர்யன் என்கிற சரீரம் போலிருக்கிறாய். உன்னிடத்தில் ஆயிரக்கணக்காய் ரத்நகாந்திகளிருக்கின்றன. நீ விஷ்ணுபதத்தாலே, பெருமாள் திருவடியால் ஸஞ்சரிக்கிறாய். ஸூர்யன் விஷ்ணுபதத்திலே ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிறார்.

ஆசார்யர்கள் காந்தியும் எல்லாருக்கும் இருட்டைப்போக்குகிறது. விஷ்ணுபதத்தையே பிடித்துக்கொண்டிருக்கிறது. இவை முதலியவைகளால் ஆசாரியர்கள் ஸூர்யனைப்போலிருக்கிறார்கள்.

(௮௫௮) ராஜ்யே பதேமபி ப்ரபாவீரபதோஷிதாயா:
ஸம்ஸூச்யதே மணிதலப்ரதிபிம்பவீக்ஷணம் தே ।
மந்யே ஸமாதியயோ மணிபாதுகே த்வாம்
மத்யேஸ்த ஸஜ்ஜ்யாநதீநம் முநிபத்நீதாரா: ॥

மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! முநிபத்நீதாரா: - ருஷிபத்நீகள், ராஜ்யே - அயோத்தியாபட்டணத்தி

னும், வநேஷ்வபி - காட்டிலும், ராகவ - ஸ்ரீராமனுடைய, பத - திருவடிக்கும் பட்டத்துக்கும், உசிதாயாஃ - தகுந்தவளாயிருக்கிற, தே - உன்னுடைய அதாவது உன்னாலே செய்யப்பட்ட, கௌதமபத்ந்யாஃ - கௌதமருடைய பத்னியான அஹல்யையினுடைய, பரித்ராணம் - காப்பாற்றினதை, ஸம்ஸ்ம்ருத்ய - நினைத்து, ஸமாஹித - வேறு விஷயங்களில் போகாமல் செய்யப்பட்டிருக்கிற, தியஃ - புத்தியை உடைத்தானவர்களாய்க்கொண்டு, மூர்த்நா - தலையினாலே, த்வாம் - உன்னை, பஜந்தி - அடைகிறார்கள்.

(கருத்து) ஏ பாதுகையே! ருஷிபத்னிகள் எல்லாரும், எந்த இடத்திலும் ஸ்ரீராமனுடைய பதத்தை விடாத நீ, முன்னே அகல்யையைக் காப்பாற்றினதை நினைத்து ரொம்ப பக்தியுடன் எப்பொழுதும் தலையில் வைத்துக்கொள்கிறார்கள்.

பரமைகாந்திகள் அதாவது பெருமாளைத் தவிர வேறு தேவதையையும் வேறு பிரயோஜநத்தையும் நினைக்காதவர்கள், தங்களுக்கு இந்த நிலைமை வருகிறதற்கும் அது நிலையாயிருப்பதற்கும் ஆழ்வாரையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

**(அருகக) த்வாமாச்ரிதா மணிமயூகஸஹஸ்ரத்ருச்யாம்**
**த்வச்சிஞ்ஜிதேந ஸஹ ரங்கபதிஸ் ஸஞ்சரந்து |**
**ஸம்ஸ்மர்யதே ஸுதீபிர் மணிபாதரக்ஷே**
**த்ரய்யாஸஹஸ் ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ ||**

மணிபாதரக்ஷே - கல்லிழைத்த பாதுகையே! ஸுதீபிஃ - வித்வான்களாலே, த்ருச்யாம் - பார்க்கத்தகுந்தவளாயிருக்கிற, த்வாம் - உன்னை, ஆச்ரித - அடைந்திருக்கிற, தவ - உன்னுடைய, சிஞ்ஜிதேந ஸஹ - சப்தத்தோடேகூட, ஸஞ்சரந்து - புறப்படாநிற்கிற, ரங்கபதிஃ - ஸ்ரீரங்கநாதனுனவர், த்ரய்யாஸஹஃ - மூன்று வேதங்களோடு கூடிக்கொண்டிருக்கிற, ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ - ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருக்கிற ஸூர்யனாக, ஸம்ஸ்மர்யதே - நினைக்கப்படுகிறார்.

(கருத்து) ஆயிரக்கணக்கான ரத்நகிரணங்களோடும் இன்பமான சப்தத்தோடும் கூடின உன்னிடத்திலிருக்கிற ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்கிற பெரியோர்கள், ஆயிரங்கிரணங்களோடும் காலைவேளை, மத்யான்னம், ஸாயங்காலம் இவைகளில் ருக்யஜுஸ்ஸாமம் என்கிற மூன்று வேதங்களோடு கூடின ஸூர்யமண்டலத்திலிருக்கும் ஸூர்யனைப்போல் நினைக்கிறார்கள்.

ஸூர்யன் எப்பொழுதும் வேதத்தோடே கூடியிருப்பது போல், ஸ்ரீபெருமாளும் உபநிஷத்துக்கள்போலிருக்கிற ஆழ்வார் முதலான ஆசார்யாளுடனே எழுந்தருளியிருக்கிறார். (29)

(அநு௦) ரத்நாச்ரிதைர் ஹரிபதம் மணிபாதுகே த்வம்
ஸம்ஸ்ப்ருச்ய கரைச்ச்ருதிரஸாயநமஞ்ஜுநாதா ।
தத்த்வம் ததேததிதி போதயஸீவ ஸம்யக்
வேதாந் விஸ்தாரிதவதோ விவிதாந் குத்ருஷ்டீந் ॥

மணிபாதுகே - கல்லிழைத்த பாதுகையே! த்வம் - நீ, ரத்நாச்ரிதை: - ரத்நங்களை அடைந்திருக்கிற, கரை: - கிரணங்களாகிற கைகளாலே, ஹரி - பெருமாளுடைய, பதம் - திருவடியை, ஸம்ஸ்ப்ருச்ய - தொட்டு, ச்ருதி - வேதங்களுக்கு, ரஸாயந - இன்பமாயிருக்கிற, மஞ்ஜுநாதா - இன்பமான சப்தத்தை உடைத்தானவளாய்க்கொண்டு, வேதாந் - வேதங்களை, விஸ்தாரிதவத: - ஏய்க்கிறவர்களான அதாவது அதன் உண்மையான அர்த்தத்தை அறியாமல் தப்பு அர்த்தத்தைச் சொல்லினவர்களான, விவிதாந் - அநேகவிதமான, குத்ருஷ்டீந் - தப்புமதக்காரர்களை, தத் - வேதங்களாலே சொல்லப்பட்டதும், ஏதத் - கண்ணாலே பார்க்கப்படுகிறதுமான ரங்கநாதனானவர், தத்த்வம் - உண்மையான வஸ்து, இதி - என்று, ஸம்யக் - நன்றாக, போதயஸீவ - தெரியப்படுத்துகிறாய்போலே.

(கருத்து) ஏ பாதுகையே! உன்மேலில் இழைத்திருக்கிற ரத்நகாந்திகள் பெருமாள் திருவடிகளில் படுகிறது. நீ இன்பமாய் சப்திக்கிறாய். அந்த இரண்டையும் பார்த்தால் வேதங்களுக்குத் தப்பாக அர்த்தம் சொல்லுகிற சில மதக்காரர்களைப் பார்த்து ஸ்ரீரங்கநாதனென்பவர்தான் எல்லா வேதங்களுக்கும் உண்மையான பொருள். அவரையே நம்புங்கள். நீங்கள் சொல்லுகிறது ஸரியான அர்த்தம் அன்று என்று பெருமாள் திருவடியைத் தொட்டுக்கொண்டு இன்பமாக ஆணையிட்டுச் சொல்லுகிறதுபோல் இருக்கிறது.

ஆழ்வார் எல்லா ஜநங்களையும் பார்த்து ரொம்ப தயவுடன் பெருமாள் முதலான நல்ல ஸங்கதிகளை உபதேசிக்கிறார். (30)

---

ஸ்ரீ ஆண்டவனென்று பிரஸித்தியடைந்த ஸ்ரீநிவாஸ மஹா
தேசிகன் திருவடியான ஸ்ரீபாதுகாஸேவக ராமாநுஜ
மஹாதேசிகன் பாதுகையான
ஸ்ரீவேதாந்த ராமாநுஜ மஹாதேசிகனால் அருளிச்செய்யப்பட்ட
மணிப்ரவாள வியாக்யாநம் முற்றிற்று.

---

ஸ்ரீமதே பாதுகாஸேவக ராமாநுஜ
மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸ மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

ஸ்ரீமதே வகுளபூஷண மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகாப்யாம் நம: ॥

---

படவில்லை. சூத்ரப்பெண்ணின்புத்ரன் (பிரிக்கப்பட்டபித்ருதனத்தில்) பத்தில்ஒருபங்கை எடுத்துக்கொள்ளலாம். அதுவும் தன்பிதாவினால் கொடுக்கப்பட்டதை எடுத்துக்கொள்ளலாமேயன்றிக் கொடுக்கப்படாததை எடுத்துக்கொள்ளத்தகாது. பாரதனே! பிதாவானவன் சூத்திரப்பெண்ணின்பிள்ளைக்கும் தனத்தை அவசியம் கொடுக்கவேவேண்டும். அருளேமுக்யமானதர்மமென்பதனால் அவனுக்குக்கொடுப்பது. எவனிடத்தில்உண்டாகும்ஸந்ததியும் நன்மைக்கேஆகும். பாரதனே! ஒருவன் புத்திரனுள்ளவனாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் சூத்திரப்பெண்ணின்பிள்ளைக்குப் பத்தில்ஒருபாகத்திற்குமேல் கொடுக்கத்தகாது. பெண்ணுக்கு நாலில்ஒருபாகம் தர்மசாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஸகோதரனில்லாதபெண் முழுச்சொத்துக்கும் உரியவளென்று சிலரும் பாதிச்சொத்துக்குரியவளென்று மற்றும்சிலரும் நினைக்கின்றனர். பிராம்மணனுக்கு மூன்றுவருஷத்திற்குச் சாப்பாட்டிற்குவேண்டியதற்குமேல் அதிகதிரவியமிருக்குமானால் அந்தத்திரவியத்தைக்கொண்டு யாகம்செய்துவிடவேண்டும். வீணாகப் பொருளைச் சேர்க்கலாகாது. ஒருவன் மனைவிக்குத் தன்பொருளில் மூவாயிரத்துக்குமேற்பட்ட தாயபாகத்தைக் கொடுக்கவேண்டும். அவள் தன்பர்த்தாவினால் கொடுக்கப்பட்ட அந்தத்தனத்தை ஸ்வதந்திரமாக அனுபவிக்கலாம். பெண்களுக்குப் புருஷன்கொடுத்த தாயபாகமுதலிய தனத்திற்கு அவர்கள் அனுபவிப்பதே பலனென்றுசொல்லப்படுகிறது. பெண்கள் பிதாவின்சொத்தைஅபகரிப்பது எவ்வகையிலும் கூடாது. யுதிஷ்டிர! பிராம்மணப்பெண்ணுக்குத் தந்தையினால்கொடுக்கப்பட்ட திரவியத்தை அவள்பெண் எடுத்துக்கொள்ளவேண்டும். அவள் தன்தந்தைக்குப் புத்ரன்போன்றவளே. கௌரவனே! அரசனே! அவளைப் புத்ரனுக்குச்சமமென்றே தர்மசாஸ்திரம் விதிக்கிறது. பரதஸ்ரேஷ்டனே! இந்தத்தர்மம் இவ்வாறுதான் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு தர்மத்தைநினைத்துப் பணத்தை ஒருவன் வீணாகச் சேர்க்கலாகாது' என்றார்.

யுதிஷ்டிரர், "பிராம்மணனுக்குச் சூத்திரப்பெண்ணிடம்பிறந்த பிள்ளைக்குச் சொத்துக்கொடுப்பது அவசியமில்லையென்று சொல்லப்பட்டிருந்தால் எந்தவிசேஷஅன்பினால் பத்தில் ஒருபங்காவது அவனுக்குக் கொடுக்கப்படும்? பிராம்மணனுக்குப் பிராம்மணப்பெண்ணினிடத்தில்பிறந்தவன் பிராம்மணனென்பதில் ஸந்தேகமில்லை. க்ஷத்திரியப்பெண்ணினிடத்திலும் வைசியப்பெண்ணினிடத்திலும் பிறந்தவரும் பிராம்மணர்தாமே? ராஜஸிரேஷ்டரே! மூன்றுவர்ணத்திற்

பிறந்தவரும் பிராம்மணரென்று நீரே சொன்னீரன்றோ ? இவர்கள் ஏற்றக்குறைவாகப் பாகம்எடுத்துக்கொள்வது ஏன் ?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"வீரனே ! உலகத்தில் மனைவியைத் தாரம்என்ற ஒருபெயரினால் வழங்குகின்றனர். ஒரேபெயரால் சொன்னாலும் அவர்களுள் வேறுபாடு மிகஅதிகமாயிருக்கிறது. முதலில் மற்றமூன்று ஜாதிப்பெண்களை விவாகம்செய்துகொண்டு கடைசியில் பிராம்மணஜாதிப்பெண்ணை ஒருவன் விவாகம்செய்வனாயினும் அந்தப்பிராம்மணஜாதிப்பெண்ணே அவர்களில் மூத்தவளும் மற்றவர்களால் பூஜிக்கப்படத்தக்கவளும் மற்றவரிலும் மிகச்சிறந்தவளுமாவாள். அந்தப் பிராம்மணப்பெண்ணிருக்கும்போது புருஷனுக்கு ஸ்நானத்தையும் அலங்காரத்தையும் பல்துலக்கும் ஸாதனத்தையும் அப்யங்கத்தையும் ஹவ்யகவ்யங்களையும் கிருகஸ்தாஸ்ரமதர்மத்திற்குரிய மற்றஎவற்றையும் வேறு ஒருத்தியும் செய்யத்தகாது. யுதிஷ்டிர ! பிராம்மணனுக்குப் பிராம்மணப்பெண்தான் எல்லாம் செய்யவேண்டும். அன்னம் பானம் புஷ்பம் ஆடைஆபரணம் இவற்றைக் கணவனுக்குப் பிராம்மணப்பெண்ணே கொடுக்கவேண்டும். அவள்தான் மிகச்சிறந்தவள். கௌரவனே ! மகாராஜனே ! மனுவினால் சொல்லப்பட்ட தர்மசாஸ்திரத்திலும் இதுதான் எப்போதுமுள்ளதர்மமென்று சொல்லப்படுகிறது. யுதிஷ்டிர ! ஒருவன் காமத்தினால் இதற்குமாறாக நடத்துவனாயின் அவன் பிராம்மணஜாதியிற்பிறந்த சண்டாளன்போலவே முன்னோரால் நினைக்கப்படுகிறான். அரசனே ! பிராம்மணப்பெண்ணுக்கும் க்ஷத்ரியப்பெண்ணுக்கும் பிறந்தபுத்ரர்கள் ஸமமாயிருந்தபோதிலும் இரண்டுவர்ணங்களுக்குமுள்ள வேறுபாடு இவர்களுக்கும் இருக்கிறது. உலகத்தில் க்ஷத்திரியப்பெண் ஜாதியில்பிராம்மணப்பெண்ணுக்குச்சமமாகமாட்டாளன்றோ ? ராஜஸ்ரேஷ்டனே! ஆதலால், பிராம்மணப்பெண்ணின் புத்ரன்தான் முதன்மையும் சிறந்தவனும் ஆவான். யுதிஷ்டிர! அவன்தான் பிதாவின்தனத்தில் மிகஅதிகமாகப்பாகமெடுத்துக்கொள்ளத்தக்கவன். எப்படி க்ஷத்திரியப்பெண் ஒருகாலும் பிராம்மணப்பெண்ணுக்குச்சமமாகாளோ அப்படியே வைசியப்பெண்ணும் க்ஷத்திரியப்பெண்ணுக்குச் சமமாவது எப்பொழுதுமில்லை. யுதிஷ்டிர ! ராஜனே ! லக்ஷ்மி ராஜ்யம் பொக்கசம் கடல்சூழ்ந்தபுவனி இவையெல்லாம் க்ஷத்திரியர்களுக்கு ஏற்படுத்தப்பட்டவையாகக் காணப்படுகின்றன. க்ஷத்திரியன் தன்தர்மத்தினால் மிகப்பெரிய ஐசுவரியத்தை அடைகிறான். ராஜனே ! தண்டத்தைவகிப்பவன் அரசன்தான். க்ஷத்திரிய

ன்றி ரக்ஷணமில்லை. மகானுபாவர்களான பிராம்மணர்களோ தேவருக்குந்தேவர். அவர்களிடத்தில் அரசன் முறைப்படிபூஜித்து நடந்துகொள்ளவேண்டும். அரசனானவன் ரிஷிகளால்விதிக்கப்பட்டதும் நெடுங்காலமாயுள்ளதுமான தர்மத்தையறிந்து அதுகெடும்போது கெடாமலிருக்கும்படி க்ஷத்திரியதர்மத்தினால் பிரஜாபரிபாலனம் செய்யவேண்டும். எல்லாவர்ணத்தாருடையதனம் தாரமுதலியவையனைத்தும் பறிப்பவர்களால் பறிக்கப்படுவனவற்றை அரசன் காப்பாற்றுகிறான். ஆதலால், க்ஷத்திரியப்பெண்ணின் புத்திரன் வைசியப்பெண்ணின் புத்திரனைவிடச் சிறந்தவனென்பதில் ஸந்தேகமில்லை. யுதிஷ்டிர! அவனும் பிதாவின்சொத்தில் வைசியப்பெண்ணின் புத்ரனைவிட அதிகபாகம் எடுத்துக்கொள்ளத்தக்கவன்" என்றார்.

யுதிஷ்டிரர், "ராஜாவானபிதாமஹரே! பிராம்மணனைப்பற்றிச் சாஸ்திரப்பிரகாரம் நீர்சொன்னீர். மற்றவர்ணங்களுக்குப் பாகவியவஸ்தை எப்படியாம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"கௌரவனே! க்ஷத்திரியனுக்கு [1] இரண்டு ஜாதிப்பெண்கள் பாரியைகளாக விதிக்கப்பட்டிருக்கின்றனர். மூன்றாவது மனைவி சூத்திரப்பெண்ணும் இருக்கலாம். ஆனால், அதை ஆசாரத்தில்கண்டதும் தர்மசாஸ்திரத்தில் கேட்டதுமில்லை. யுதிஷ்டிர! க்ஷத்திரியர்களுக்கும் பிராம்மணர்களுக்குச் சொன்னமுறைதான். ராஜனே! க்ஷத்திரியன் சொத்தை எண்பகுதிகளாகப் பகுக்கவேண்டும். க்ஷத்திரியப்பெண்ணின்பிள்ளை அந்தப்பிதாவின் சொத்தின்பாகங்களில் நாலுபங்கு எடுத்துக்கொள்ளவேண்டும். பிதா யுத்தத்தில் ஸம்பாதித்தஸொத்து எதுவாயிருந்தாலும் அதை அவனே எடுத்துக்கொள்ளவேண்டும். வைசியப்பெண்ணின்மகன் மூன்றுபாகங்களையும் சூத்திரப்பெண்ணின்மகன் மிச்சமுள்ள ஒருபாகத்தையும் எடுத்துக்கொள்ளவேண்டும். அந்தச்சூத்திரப்பெண்ணின் மகனும் பிதாகொடுத்ததைத்தான் பெற்றுக்கொள்ளலாம்; கொடாமல் எடுத்துக்கொள்ளத்தகாது. கௌரவனே! வைசியனுக்கு வைசியஜாதிப்பெண் ஒருத்தியே பார்யையாயிருக்கவேண்டும். சூத்திரப்பெண் இரண்டாவது மனைவியாயிருக்கலாம். ஆனால் அதை ஆசாரத்திற்கண்டதும் தர்மசாஸ்திரத்திற் கேட்டதுமில்லை. பாரதஸ்ரேஷ்டனே! குந்திபுத்ரனே! வைசியப்பெண்ணினிடத்திலும் சூத்திரப்பெண்ணினிடத்திலும் சேருகிறவைசியனுக்கு அவ்விரண்டு புத்ரர்கள் விஷயத்திலும் பாகவியவஸ்தை சொல்லப்பட்டிருக்கிறது. பாரதஸ்ரேஷ்

---

[1] க்ஷத்திரியவைசியஜாதிப்பெண்கள்.

டனே! வைசியனுடைய சொத்தை ஐந்து பாகங்களாகச்செய்யவேண்டும். ராஜனே! அவ்விரண்டுபெண்களின் பிள்ளைகளுக்கும் தாயபாகத்தைப்பற்றிச்சொல்வேன். வைசியப்பெண்ணின் மகன் பிதாவின்தனத்தில் ஐந்தில்நாலுபாகங்களை எடுத்துக் கொள்ளவேண்டும். பாரதனே! சூத்திரப்பெண்ணின் புதல்வனுக்கு ஐந்திலொருபாகந்தான் விதிக்கப்பட்டது. அவனும் தந்தைகொடுத்துத்தான் எடுத்துக்கொள்ளவேண்டும்; கொடாமல் எடுத்துக்கொள்ளத்தகாது. மூன்றுவர்ணத்தாருக்கும் பிறந்தசூத்திரனும் எப்போதும் பிதா தனம்கொடுப்பதற்குத்தான் உரியவன். (தானாகஎடுத்துக்கொள்ளத்தகாது.) சூத்திரனுக்குத் தன்வர்ணத்தில் பிறந்தவள்தான் மனைவியாகலாம். மற்றவர்ணத்தில்பிறந்தவள் எவ்வகையிலும் மனைவியாகத்தகாள். அவனுக்கு நூறுபுத்ரர்கள் இருந்தாலும் அவர்களுக்கு ஸொத்து ஸமபாகமாக வேண்டும். எல்லாவர்ணங்களிலுமே தனக்குச்சரியான வர்ணத்துப்பெண்ணுக்குப் பிறந்த புத்ரர்களுக்குச்சொத்தில் ஏற்றத்தாழ்வில்லாமல் ஸமபாகம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், மூத்தபுத்ரனுக்குப் பொதுச்சொத்திலிருந்து ஒருபாகம் ஜ்யேஷ்டாம்சமென்று சொல்லப்படுகிறது. குந்திபுத்ரனே! தாயபாகத்தைப்பற்றிய இந்தவிதி முன்னர் பிரம்மதேவரால் சொல்லப்பட்டது. ராஜனே! ஒரேவர்ணத்தாரான பெண்களிடத்தில் பிறந்தபிள்ளைகளுக்கும் வேறுஒருவிசேஷமுண்டு. அதாவது, 'முன்னேசொன்ன விவாகங்களில் முன்முன்விவாகங்களின் சிறப்பினால் அந்த அந்தப்புத்ரர்களுக்கும் விசேஷமிருக்கிறது. ஒரு மனைவிக்குப்பிறந்த புத்ரர்களிலும் ஜ்யேஷ்டன் அதிகபாகத்தையும் நடுவானவன் அதற்குக்குறைந்த பாகத்தையும் கடைசியவன் அதற்கும் குறைவானபாகத்தையும் எடுத்துக்கொள்ளவேண்டும்' என்பது. இவ்வாறு எல்லாஜாதிகளிலும் அதேவர்ணத்துப்பெண்ணுக்குப்பிறந்த புத்ரன் சிறந்தவன். மரீசியின் புத்ரரானகாசியபமகரிஷியும் இதைப்பற்றி இப்படியே சொல்லியிருக்கிறார்" என்றார்.

---

## எண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்கரஜாதிகளின் வரலாறு முதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! மனிதர்கள் பொருளையும் காமத்தையும் பற்றியிருப்பதனாலும் இன்னார் இன்னவர்ணமென்று நிச்சயிக்கக்கூடாமையினாலும், வர்ணத்தார்களின் தெரியாமையினாலும்

வர்ணங்கள் கலந்துபோகின்றனவே. மேற்சொன்னகாரணங்களினால் வர்ணங்கள் கலந்தவர்ணங்களிற்பிறந்தவர்களுக்குத் தர்மம்என்ன ? கர்மங்கள் எவை ? அவற்றை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பிரஜைகளைப்படைத்த பிரமமதேவர் முதலில் யாகத்திற்காக நாலுவர்ணங்களையும் நாலுவர்ணங்களுக்குமுரியகர்மங்களையும் படைத்தார். பிராம்மணனுக்கு நாலுவர்ணத்தவரும் பாரியைகள். [1] இரண்டு வர்ணத்தவரிடத்தில்தான் பிராம்மணனாகவே பிறக்கிறான். மற்ற இரண்டு வர்ணத்தவரிடத்திலும் கிரமமாகக்குறைந்து தாயின்ஜாதியாகவே புத்ரர்கள் பிறக்கிறார்கள். பிராம்மணனுக்குச் சூத்திரப்பெண்ணினிடத்தில் பிறந்த புத்திரன் சவனென்னப்பட்ட சூத்திரனைத் [2] தாண்டினவனாக இருப்பதனால் அவனைப் பாரசவனென்று சொல்லுகின்றனர். அவன் தன் குலத்திற்கேற்றபடி மற்றமூன்றுவர்ணங்களுக்கும் பணிசெய்துகொண்டிருக்கவேண்டும்; தன் ஒழுக்கத்தை எப்போதும் விடாமலிருக்கவேண்டும்; எல்லாவிதத்தொழில்களையும் தெரிந்துகொண்டு தன் குலத்தொழிலையே கைப்பற்றவேண்டும். மூத்தவனாயிருந்தாலும் இளையவனாயிருந்தாலும் அவன் பிராம்மணர்பணிவிடையும் தானமும் செய்துகொண்டிருக்கவேண்டும். க்ஷத்திரியன் சேரக்கூடியவர்கள் [3] மூன்று வர்ணத்துப்பெண்கள். அவர்களில் முதலிருவரிடத்தில் இவன் க்ஷத்திரியனாகவேபிறக்கிறான். மூன்றாவது வர்ணமாகிய சூத்திரப்பெண்ணினிடம் தாழ்ந்தஜாதியான உக்ரர்களென்னப்படும் சூத்திரர்கள் பிறக்கின்றனரென்பது தர்மசாஸ்திரம். வைசியனுக்கு [4] இரண்டுபாரியைகள். அவ்விருவரிடத்திலும் வைசியனாகவே பிறக்கிறான். சூத்திரனுக்குச் சூத்திரப்பெண்ணாகிய ஒருபாரியைதான். அவள் சூத்திரனையேபெறுகிறாள். இதற்கு [5] மாறாயிருப்பவன் மேல்வர்ணத்து ஸ்த்ரீகளைக்கெடுப்பவனாதலின் இழிவானவன். அவன் நாலுவர்ணங்களுக்கும் விலக்கானதும் நாலுவர்ணங்களாலும் இகழப்பட்டதுமாகிய ஜாதியை உண்டுபண்ணுகிறான். பிராம்மணஸ்த்ரீயினிடம் க்ஷத்திரியன் யாகத்திற்கும் உபநயனத்திற்கும் தகாததும் அரசர்களிடத்தில் ஸ்தோத்திரம்செய்வதே தொழிலாகவுடையதுமான ஸூதஜாதியையும், வைசியன் எல்லாராலும் ஒதுக்கப்பட்ட மௌத்கல்யமென்று

[1] பிரம்மக்ஷத்ரிய. [2] சூத்திரனுக்கு மேற்பட்டிருப்பதனால்.

[3] க்ஷத்திரி வைசிய சூத்திரப்பெண்கள்.

[4] வைசியப்பெண்ணும் சூத்திரப்பெண்ணும்.

[5] மேல்வர்ணத்துப்பெண்ணைப்புணரும் கீழ்வர்ணத்தோன்.

சொல்லப்பட்ட வைதேஹகஜாதியையும் சூத்திரன் மிகக்கொடியதும் கொலைத்தொழிலிலிருப்பதும் ஊருக்குவெளியில்வஸிப்பதுமாகியசண்டாளஜாதியையும் உத்பத்திசெய்கின்றனர். இதனால் இவர்கள் குலத்தைக்கெடுப்பவர்கள். புத்திமான்களிற்சிறந்தவனே! பிரபுவே! இப்போதுசொல்லப்பட்டவர்கள் வர்ணம்கெட்டுப்பிறந்தவர்கள். க்ஷத்திரியப்பெண்ணினிடம், வைசியனுக்கு வந்தியாக அரசர்களைத்துதிசெய்து ஜீவிக்கும்மாகதரும் சூத்திரனுக்கு மச்சங்களைக்கொல்லும் நிஷாதரென்னும்செம்படவரும் முறைதவறுதலினால் உண்டாகின்றனர். வைசியப்பெண்ணினிடம் ஸம்பந்தப்பட்டசூத்திரனுக்குத் தான் ஸம்பாதிக்கும்தனத்தினால்ஜீவிப்பவனும் பிராம்மணர்கள்தக்ஷிணைமுதலியவை வாங்கத்தகாதவனுமாகிய ஆயோகவனென்றுசொல்லப்பட்ட தச்சஜாதியான் பிறக்கிறான். இவர்களும் தங்கள்ஜாதிப்பெண்களிடத்தில் தங்கள்ஜாதிப்பிள்ளைகளையே உண்டாக்குகின்றனர். கீழ்ஜாதிப் பெண்களிடத்தில் தாய்ஜாதியைக்கொண்டு கீழ்ஜாதிப்பிள்ளைகளே பிறக்கின்றனர். நான்குவர்ணங்களுள்ளும் [1] இரண்டுவர்ணத்துப்பெண்களிடத்தில் தம்வர்ணத்துப்புத்திரனே பிறப்பதுபோலவே நான்குவர்ணத்திலும்சேராதவர்களுக்கும் தம்ஜாதிப்பெண்ணினிடத்திலும் அடுத்தகீழ்ஜாதிப்பெண்ணினிடத்திலும் பிறக்கும்புத்ரர்கள் தம்ஜாதிகளேயாகிறார்கள். யாவரும் தம்மினமானபெண்களிடத்தில் தம் ஜாதிப்புத்ரர்களையே உண்டாக்குகின்றனர். ஒருவன்மனைவியிடத்தில் மற்றொருவன் சேருவதனால் இகழப்படும்புத்ரர்களை உண்டுபண்ணுகிறான். சூத்திரன் பிராம்மணப்பெண்ணினிடத்தில் நான்குஜாதிகளிலும்சேராதசண்டாளஜாதியை உண்டாக்குவதெப்படியோ அப்படியேதான் நான்குஜாதிகளுக்கும்விலக்கானவன் இன்னும்விலக்கான புத்ரனையுண்டுபண்ணுகிறான். இப்படி விலக்கானவர்களாலும் விலக்கானவர்க்கும்விலக்கானவர்களாலும் பிரதிலோமஜாதிகள் அதிகப்படுகின்றன. ஈனர்களிலும்ஈனர்கள் பிறக்கின்றனர். அதனால், வர்ணங்கள் [2] பதினைந்து. சேரத்தகாதபெண்ணை ஒருவன்சேருவதனால் ஜாதி

---

[1] தன்வர்ணம், அதற்கடுத்தகீழ்வர்ணம்.

[2] க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்கும் சூத்திரனுக்கும் மேற்குலத்துப் பெண்களிடம்பிறந்தவைகள் மூன்று. ஆயோகவனுக்கும் வைதேஹகனுக்கும் நிஷாதனுக்கும் சண்டாளனுக்கும் க்ஷத்திரியஜாதிப்பெண்களிடம்பிறந்தவை நான்கு. வைதேஹகனுக்கும் நிஷாதனுக்கும் சண்டாளனுக்கும் மாகதஜாதிப்பெண்களிடம் பிறந்தவை மூன்று. வைதேஹகனுக்கு ஆயோகவப் பெண்ணினிடமும் நிஷாதஜாதிப்பெண்ணினிடமும் பிறந்தவை இரண்டு. சண்டாளனுக்கு நிஷாதஜாதிப்பெண்ணினிடம் பிறந்தது ஒன்று. நிஷாத

கள் கலந்துபோகின்றன. நான்குஜாதியிலும்சேராதவர்களில் மாக தர்களுக்கு ஸைரந்திரிகளிடம் அரசர்களுக்கு அலங்காரங்களும் கைகால்பிடிப்பதுமுதலான உபசாரங்களும் செய்யத்தெரிந்தவனும் அடிமையில்லாமலிருந்தும் அடிமைத்தன்மையினால் ஜீவிப்பவனுமான வன் பிறக்கிறான். ஆயோகவனுக்கு [1]க்ஷத்திரியஜாதிப்பெண்ணிடம் வலைபோட்டுஜீவிப்பவன் பிறக்கிறான். வைதேஹகனுக்கு மைரேயக னென்றுசொல்லப்பட்ட கள்விற்றுப்பிழைப்பவன் பிறக்கிறான். நிஷா தனுக்கு ஓடத்தினால் ஜீவிப்பவனும் அடிமையுமாகிய மத்குரான் உண் டாகிறான். சண்டாளனுக்குப் பிணங்காப்பவனாகிய [2] ச்வபாகன் பிறக் கிறான். பாபியானமாகதஜாதிப்பெண் வைதேஹகனிடம் கொடிய வர்களும் கபடத்தினால் ஜீவிப்பவர்களுமாகிய [3]மாம்ஸன், [4] ஸ்வாது கரன், [5]க்ஷௌத்ரன், [6]ஸௌகந்தன் என்று பெயர்பெற்றநால்வரைப் பெறுகிறாள். நிஷாதனுக்குக் கொடியவனும் கபடத்தினால் ஜீவிப்பவ னும் கழுதைகட்டினவாகனங்களில் செல்லுகிறவனுமாகியமத்ரநாபன் பிறக்கிறான். சண்டாளனுக்குக் கழுதை குதிரை யானைகளைப்புசிப்ப வனும் பிணங்களின் ஆடையுடுப்பவனும் உடைந்தஓடுகளில்புசிப்ப வனுமாகியபுல்கஸன் பிறக்கிறான். வைதேஹகனுக்கு ஆயோகவ ஜாதிப்பெண்களிடத்தில் க்ஷத்ரன் அந்திரன் ஊருக்குவெளியில் வஸிப்பவனாகிய [7]காராவரன் இம்மூன்றுஈனஜாதிகள் பிறக்கின்றன. நிஷாதஜாதிப்பெண்ணிடத்தில் வைதேஹகனுக்குத் [8] தோல்வேலைக் காரன் பிறக்கிறான். சண்டாளனுக்கு மூங்கில்வேலைசெய்பவனாகிய பாண்டுஸௌபாகனென்னும்ஜாதி உண்டாகிறது. நிஷாதனுக்கு

---

னுக்கும் சண்டாளனுக்கும் வைதேஹகஜாதிப்பெண்ணினிடம்பிறந்தவை இர ண்டு. 'ஸைரந்த்ரியினிடம், ஆயோகவனுக்கு வலைபோட்டுஜீவிப்பவனும் வைதேஹகனுக்கு மாதுகனும் நிஷாதனுக்கு மத்குரனும் சண்டாளனுக்கு ஶ்வபாகனும், ஆயோகவியினிடம், வைதேஹகனுக்கு க்ரூரனும் நிஷாத னுக்கு மத்ரநாபனும் சண்டாளனுக்குப் புல்கஸனும், நிஷாதியினிடம், சண் டாளனுக்குப் பாண்டுஸௌபாகனும் அந்தேவஸாயியும் வைதேஹகனுக்குக்ஷ த்ரனும், வைதேஹகஜாதிப்பெண்ணினிடம், சண்டாளனுக்கு ஸௌபாகனும் நிஷாதனுக்கு ஆஹிண்டகனும், நிஷாதியினிடம் சூத்திரனுக்குக் குக்குடகனும், அம்பஷ்டையினிடம் வைதேஹகனுக்கு வேனனும் வ்ராத்யனும் பிறக்கின் றனர்' எனப்பதினைந்தாகக்கூறுவது பழையஉரை.

[1] வேறுபாடங்கொண்டு, 'ஸைரந்த்ரியினிடம்' என்பது பழையஉரை. [2] நாயைச்சமைப்பவன். [3] மாம்ஸம்விற்பவன். [4] ருசிபதார்த்தம்செய்பவன். [5] தேனெடுப்பவன். [6] வாசனைப்பொருள்செய்பவன். [7] சிறைகாப்பவன். [8] சக்கிலியன்.

வைதேஹகஜாதிப்பெண்ணிடத்தில் [1] ஆஹிண்டகனென்பவன் உண்டாகிறான். சண்டாளனுக்குச் சண்டாளத்தொழிலையே செய்பவனாகிய ஸௌபாகன் உண்டாகிறான். நிஷாதஜாதிப்பெண்ணுக்குச் சண்டாளனிடம் ஶ்மசானத்திலிருப்பவனும் ஜாதியில் சேராதவர்களாலும் சேர்க்கப்படாதவனுமாகிய [2] அந்தேவஸாயி என்பவன் பிறக்கிறான். இவ்வாறு தாய்தந்தையர்கள் வரைகடந்து நடப்பதனால் ஜாதிகள்கலந்து உண்டாகிறவர்கள் மறைவாயிருந்தாலும் வெளிப்படையாயிருந்தாலும் அவரவர்தொழில்களினால் அறியக்கூடியவர்கள். இவற்றுள் நான்குவர்ணங்களுக்குத்தாம் வர்ணதர்மங்கள் உள்ளன; மற்றவர்ணங்களுக்கில்லை. வர்ணதர்மங்கள் விட்டஜாதிகள் எண்ணில்லாதவை. யாகங்களில்லாமலும் ஸாதுக்களால் சேர்க்கப்படாமலுமிருப்பவர்கள் வர்ணங்களுக்கு வெளிப்பட்டவர்களாகி இஷ்டப்படி ஆண்பெண்கள் சேருவதனால் அவரவர்தொழிலுக்குத்தக்கபடியும் இருக்குமிடங்களுக்குத்தக்கபடியும் அநேகஇழிசனர் உண்டாகின்றனர்; நாற்சந்திகளிலும் ஶ்மசானங்களிலும் சிலமலைகளிலும் மரங்களினடிகளிலும் இருப்பு அணிகளைப் பூண்டுகொண்டும் தங்கள்தொழில்களைச் செய்துகொண்டும் வெளிப்படையாகவாசம்செய்வார்கள்; அலங்காரங்களையும் மற்றுமுள்ள கருவிகளையும்செய்து பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் உதவிசெய்வார்கள்; ஸந்தேகமில்லை. ஆண்மையிற்சிறந்தவனே! கொல்லாமை தயை பொய்யாமை பொறுமை தங்கள் சரீரத்தைவிட்டும் பிறரைக்காப்பது இவைதாம் ஜாதியிற்சேராதவர்களுக்கு நற்கதிக்குக்காரணமாகின்றன; அதில் எனக்கு ஸந்தேகமில்லை. புத்திசாலியானமனிதன் சாஸ்திரத்திலுபதேசித்தபடி ஆராய்ந்து தனக்குவிதிக்கப்பட்ட பெண்களிடத்தில் ஸந்ததிகளை உண்டாக்கவேண்டும். ஈனஜாதிகளிற்பிறந்தபுத்ரன் ஜலத்தில் நீந்தப்போகிறவனைக் கல்லமிழ்த்துவதுபோல அமிழ்த்திவிடுவான். உலகத்தில் தெரியாதவனையும் தெரிந்தவனையும் பெண்கள் காமத்துக்கும் குரோதத்திற்கும் உட்படுத்திக் கெட்டவழியில்கொண்டுபோகத் திறமையுள்ளவர்கள். புருஷர்களைக்கெடுப்பதென்பது பெண்களின் இயற்கை. தெரிந்தவர்கள் பெண்களிடத்தில் மிகப்பற்றுவைப்பதில்லை" என்றார்.

யுதிஷ்டிரர், "கலந்தஜாதியிற்பிறந்து வர்ணங்களிற் சேராதமனிதன் ஆரியனாயில்லாமலிருந்தும் ஆரியனைப்போலிருந்தால் நாம் எப்படி அவனை அறியலாம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார். "கலந்தஜாதியில்பிறந்தவன் பலஇயற்கைகளுள்ளவனாயிருப்பான். பெரியோர்

[1] சமாசாரம்கொண்டுபோகிறவன்.

[2] எல்லைக்கோடியில் வஸிப்பவன்; இவனே பாண்டுஸௌபாகன்.

களால் அனுஷ்டிக்கப்பட்ட கர்மங்களைக்கொண்டு சுத்தஜாதியிற்பிறந்தவர்களை அறியலாம். தகுதியில்லாமையும் ஆசாரத்தவறுதலும் கொடிய செய்கையும் சாஸ்திரோக்தகர்மங்களில் மனமில்லாமையும் இவ்வுலகத்தில் கலந்தஜாதியிற்பிறந்தமனிதனைத் தெரிவிக்கின்றன. கலந்தஜாதியிற்பிறந்தவன் தகப்பன்குணங்கள் தாயின்குணங்கள் இரண்டையும் அடைந்திருப்பான். அவன் தன்னியற்கையை எவ்வகையிலும் அடக்க முடியாது. ஒருவன் வடிவத்தில் எப்படியோ அப்படியேதான் குணங்களிலுமிருப்பான்; தாய்தந்தைகள் இருவரையும்போலவே பிறக்கிறான். புலியின் வீரியத்திற்குப்பிறந்தது புலியாவதுபோல மனிதன் தனது காரணத்தின் குணத்தைத்தான் அடைவான். குலமென்னும்பிரவாகமானது மறைந்துதான் ஜாதிஸங்கரமுண்டாகிறது. அந்தஜாதிஸங்கரத்தின்குணம் சிறிதோ பெரிதோ மனிதனுக்கு வந்தேசேருகிறது. ஆரியனைப்போலவே உருவமும் நடக்கையுமுள்ளவனாகக் கபடவழியிலிருப்பவனை ஸரியானவர்ணமென்றும் வேறுவர்ணமென்றும் அவனுடையகுணமே நிச்சயமாகத்தெரிவிக்கும். பலநடக்கைகளும் பலவிதத்தொழிலில் ஊக்கங்களுமுள்ள மனிதர்களுக்கு அவர்களின் ஒழுக்கத்திற்குத்தகுதியான ஜாதியானது உலகத்தில் மிகப்பொருந்துகிறது. அது மாறுவதில்லை. இவ்வுலகத்தில் அவன்தேகமானது இயற்கைக்குவிலக்காவதில்லை. உயர்ந்ததும் நடுத்தரமும் தாழ்ந்ததுமான இயற்கைகள் உண்டாகின்றன. ஸமமானகுணங்களுள்ள தேகந்தான் விருத்தியாகிறது. ஒழுக்கமில்லாதவன் மேல்வர்ணமாயிருந்தாலும் அவனைப் பூஜிக்கலாகாது. தர்மந்தெரிந்து நல்லொழுக்கத்தோடிருக்கும் சூத்திரனையும் பூஜித்தல்வேண்டும். ஒருமனிதன் நல்லவையும் கெட்டவையுமான கர்மங்களினால் தன்னுடைய குணத்தையும் நடக்கையையும் குலத்தையும் தெரிவிக்கிறான். அப்படியே மறைந்துபோன தன்குலத்தையும் ஒருமனிதன் தன்செய்கைகளினால் பிரகாசப்படுத்துகிறான். கலந்தவையும் கலவாதவையுமான இந்தஎல்லாச்சாதிகளிலும் மனிதன் தான் புத்ரோத்பத்தி செய்யத்தகாதஜாதியை விலக்கவேண்டும்” என்றார்.

---

## எண்பத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(பன்னிருவகைப் பிள்ளைகளைப்பற்றியவை முதலியன.)

யுதிஷ்டிரர், “பிதாமஹரே! கௌரவர்தலைவரே! வர்ணங்களைப் பற்றித் தனித்தனியாக நீர் சொல்லவேண்டும். எந்தப்பெண்ணிடத்தில் யாருக்கு என்னவிதமாகப் புத்ரர்கள் பிறக்கிறார்கள்? அவர்கள் யார்? புத்திரோத்பத்தி செய்கிறவர்களைப்பற்றிச் சொல்வேறுபாடுகள்

பலவகைகளாகக் கேட்கப்படுகின்றன. அரசரே! இந்தவிஷயத்தில் தெளிவில்லாத எங்களுக்கிருக்கும் ஸந்தேகத்தை நீர் போக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானர்.

"முக்கியமானபுத்ரன் தானாகவேயிருப்பவனென்று தெரிந்து கொள்ளவேண்டும். மற்றப்புத்ரர்கள் பலவகையாகிறார்கள். மந்திரத்தினால் நிஷேகஸம்ஸ்காரம்பெற்ற தனதுமனைவியினிடத்தில் தனக்குண்டாகும்புத்ரன் முதன்மையாகவிதிக்கப்பட்ட ஔரஸபுத்ரனென்று அறியவேண்டும். அக்நியையும் பிரம்மதேவரையும்பூஜித்து இவள் புத்திரிகையாயிருக்கவேண்டுமென்று சொல்லியாவது நினைத்தாவது ஒருவானுக்குக் கொடுக்கப்பட்ட பெண்ணின்வயிற்றிற் பிறந்தபுத்ரன் அந்தப்பெண்ணின்பிதாவுக்குப் புத்ரிகாபுத்ரனாகிறான். இறந்துபோனவன் ஆண்மையில்லாதவன் ஜாதிதவறினவன் இவர்களின்மனைவிகளிடத்தில் அந்தப்புருஷன் அனுமதியினால் தர்மத்தை யனுஸரித்து உண்டாக்கப்பட்டபுத்ரன் க்ஷேத்ரஜனென்னப்படுகிறான். ஒருவனுக்குப் புத்திரனில்லாமற்போனகாலத்தில் ஒரேஜாதியிற்பிறந்தஎந்தப்புத்ரனைத் தாய்தந்தையர்கள் அன்புடன் தாரைவார்த்துக் கொடுக்கின்றனரோ அவன் வாங்கினவர்களுக்குத் தத்தபுத்திரனென்று அறியவேண்டும். [1] குணமும் குற்றமுந்தெரிந்தவனும் புத்ரனுக்குரியகுணங்களுடையவனும் ஒரேஜாதியிற்பிறந்தவனுமாகிய ஒருவனைத் தனக்குப்புத்ரனென்று ஒருவன் அபிமானித்து எடுத்துக் கொள்வானாயின் அவன் அவனுக்கு க்ருத்ரிமபுத்ரனென்றறியத்தக்கவன். ஒருத்திக்கு ரகஸ்யமாக ஒருபுத்ரன்பிறந்து இன்னவனுக்குப் பிறந்தானென்று தெரியாமலிருந்தால் அவன் எவனுடையமனைவிக்குப் பிறந்தானே அவனுக்கே கூடஜனென்னும் புத்ரனாவான். தாய்தந்தையிருவரினாலுமாவது இருவரில் ஒருவரால்மட்டிலுமாவது விட்டுவிடப்பட்டவனை மற்றொருவன் புத்ரனாக எடுத்துக்கொள்வானாயின் அவனுக்கு அந்தப்புத்ரன் அபவித்தபுத்ரனென்றுசொல்லப்படுகிறான். விவாகமாகாதபெண் தன்தந்தையின்வீட்டிலிருக்கும்போதே ரகஸ்யமாகப்புத்ரனைப்பெறுவாளாயின் அந்தக் கன்னிகைக்குப் பிறந்தபுத்ரனை அவளைமணம்செய்பவனுக்குக் கானீனபுத்ரனென்று சொல்லுவார். கர்ப்பமாயிருக்கும் ஒருத்தி தெரிந்தோ தெரியாமலோ விவாகம்செய்யப்பட்டால் அந்தப்புத்ரன் அவளைவிவாகம்செய்தவனுக்கு ஸஹோடபுத்ரனென்று சொல்லப்படுகிறான். ஒருவன் தனக்குப்புத்ரன்வேண்டுமென்று ஒருபிள்ளையைத்

[1] புண்ணியபாபங்கள்.

தாய்தகப்பன்களிடமிருந்து விலைக்குவாங்குவானாயின் அந்தப்புத்ரன் அவனுக்கு இனமாயிருந்தாலும் இராவிட்டாலும் க்ரீதபுத்ரனென்று சொல்லப்படுகிறான். கணவனால்விடப்பட்டோ விதவையாயோ இருக்கும் ஒருத்தி தன்னிச்சையாய்த் திரும்பவும் மற்றொருவனுக்கு மனைவியாகிப் புத்ரனைப்பெறுவாளாயின் அந்தப்புத்ரன் பௌனர்ப்பவனென்று சொல்லப்படுகிறான். அவள் [1] அக்ஷதயோனியாயிருந்து மற்றொருவனையடைந்தால் [2] அப்புதிய கணவனோடு அவளுக்கு விவாகஸம்ஸ்காரங்கூடும். அவள் வேறொருவனைச்சேர்ந்தபிறகு திரும்பவும் முன் கணவனிடமேவந்தால் அவளுக்கு அவனுடன் திரும்பவும் விவாகஸம்ஸ்காரம்கூடும். தாய்தந்தையர் இல்லாமலாவது தாய்தந்தையர்களால் குற்றமின்றிவிடப்பட்டாவது தன்னையே ஒருவனுக்குப்புத்ரனாகக்கொடுப்பவன் ஸ்வயந்தத்தனென்றுசொல்லப்படுகிறான். பிராம்மணன் காமத்தினால் சூத்திரப் பெண்ணினிடம் உண்டாக்கினபுத்ரன் உயிருடனிருக்கும்பிணம்போன்றவனாதலின் பாரசவனென்றுசொல்லப்படுகிறான். தாஸியினிடத்திலும் தாஸனுடையதாஸியினிடத்திலும் சூத்ரனுக்குப்பிறக்கும்புத்ரன் பிதாவின்அனுமதிபெற்றானாயின் ஸொந்தப்புத்திரர்களுடன் ஸமபாகம் எடுத்துக்கொள்ளலாமென்று தர்மம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. க்ஷேத்ரஜன் முதலாகச் சொல்லப்பட்ட இப்பதினொருபுத்ரர்களையும் சிராத்தமுதலானகிரியைகள் லோபியாமலிருக்கிறதற்காகப் புத்ரனுக்குப்பிரதிநிதிகளென்று தெரிந்தவர்கள் கூறுகின்றனர். ஒரு பிதாவுக்குப்பிறந்த ஸகோதரர்களில் ஒருவனுக்குப்புத்ரனிருப்பானாயின் அவனாலேயே அந்தச்சகோதரர்களனைவரும் புத்ரனுள்ளவராவாரென்று மனு சொல்லியிருக்கிறார். ஒருவனைக்கணவனாக அடைந்த அநேகம்பெண்களில் ஒருத்திக்குப்புத்ரனிருந்தால் அவர்களனைவருக்கும் அவனே புத்ரனாகிறானென்றும் மனு சொல்லியிருக்கிறார். ஔரஸன், தன்பாரியையினிடத்தில் தன்அனுமதியினால் பிறந்தவனாகிய நிருக்தஜன், அனுமதியில்லாமலே அன்னியனுக்குப் பிறந்த ப்ரஸ்ருதஜன், பதிதனுக்குத் தன்னோடுகூடவேசேர்ந்திருக்கும் மனைவியினிடத்திற்பிறந்தபுத்ரன், தத்தபுத்ரன், க்ருத்ரிமபுத்ரன், ஸஹோடன், ஆறு அபத்வம்ஸஜர்கள், கானீனர்கள், அபஸதர்கள் ஆகிய இவர்கள் புத்ரர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றனர். பாரதனே! அவர்களைத் தெரிந்துகொள்" என்றார்.

---

[1] புருஷஸம்பந்தமில்லாதவள். [2] 'பௌநர்ப்பவேந' என்பது மூலம்.

